உ

ஸ்ரீராமஜெயம்.

# ஜானகிபரிணய நாடகம்.



---

இஃது திருநெல்வேலிஜில்லா அம்பாசமுத்திரந்தாலூகா அரிகேச கல்லூரியிலிருக்கும் புனல்வேலி மக-ா-ா-ஸ்ரீ முத்துசுப்பபாரதியவர்களின் பௌத்திரரும் மக-ா-ா-ஸ்ரீ வரதராஜய்யரவர்களின் புத்திரருமான

பு. வ. முத்துசுப்பய்யரால்

இயற்றி,

---

புனல்வேலி மக-ா-ா-ஸ்ரீ இராமசுவாமிபாரதியவர்களாலும், அம்பாசமுத்திரம் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதரு மக-ா-ா-ஸ்ரீ அரி. ரா. அரிகரபாரதியவர்களாலும், திருநெல்வேலி மகாவித்வான் மக-ா-ா-ஸ்ரீ கவிராஜநெல்லையப்பபிள்ளையவர்களாலும்பார்வையிடப்பட்டு, ஷெயார்களுடையவும், இந்நூலரங்கேற்றிய ஸரஸ்வதிவிலாஸமஹாசபையின் காரியதரிசி மக-ா-ா-ஸ்ரீ எஸ். பால்வண்ணமுதலியாரவர்களுடையவும் மக-ா-ா-ஸ்ரீ ஏ. வி. திருமலையப்பபிள்ளையவர்களுடையவும், அரிகேசகல்லூரி மக-ா-ா-ஸ்ரீ ஏ. டி. சேதுராமலிங்கம்பிள்ளையவர்களுடையவும் வேண்டுகோளின்படி,

---

திருநெல்வேலி ரெயில்வேஸ்டேஷன் ஆரியப்பிரகாசினி அச்சியந்திரசாலையிற் பதிப்பிக்கப்பெற்றது.

இதன் விலை ரூ 2"

1901

# நோட்டீஸ்.

---

இப்புத்தகம் வேண்டியவர்கள் அடியிற்கண்ட விலாசங்களில் எந்த விலாசத்திற்காவது எழுதிப்பெற்றுக்கொள்ளலாம்.

இதன் விலை ரூ 2

தபால் ஜார்ஜ் பிரத்தியேகம்.

பு. வ. முத்துசுப்பய்யர்,
அரிகேசநல்லூர்,
ஸ்ரீவைகுண்டம் போஸ்டு.

எஸ் பால்வண்ணமுதலியார்,
தெற்குப்புதுத்தெரு,
திருநெல்வேலி.

சா. அரிகரபாரதி,
தமிழ்முன்ஷி, ஹைஸ்கூல்,
அம்பாசமுத்திரம்.



உ

# ஜானகிபரிணய நாடகம்.

## முகவுரை.

---

இந்நூல், சில நூற்றாண்டுகளுக்கு முன்னரே, வடநூல் வல்ல வித்துவ சிரோரத்தின விப்பிரகுல சுப்பிரதீபரான, ப்ரம்மஸ்ரீ, இராமபத்திர தீக்ஷிதரவர்களால், வடமொழியிற்றமது, பேரறிவாலாய்ந்து தெளிந்து, நவரஸமுறு நாடகமாக நவின்றருளப் பெற்றுலகிற் பரவியிருக்கின்றது. அதன்பொருளைத் தமிழ்நாட்டார் யாவரும் எளிதிலுணர்ந் தானந்தத்தை அனுபவிக்க இடமில்லாததுபற்றி, கசடறக்கல்லாச்சிறியேனெனினும், யான், கருதரியசிற்சுகோதயக்கடலான இராமசரிதமென்பதிலுண்டாம் பேரவாவினை வுதலைக்கொண்டு, என்சிற்றறிவுக்கெட்டியபடி, செந்தமிழின்மொழி பெயர்த்தம்முறைவழாது, சந்தமுறுநாடகமாய்ப், பற்பலதினுசுதினுசான, செய்யுட்களும், கீர்த்தனை, தரு, பத-ஜாவளிகளும், கண்ணிகளும், கேட்போர், படிப்போர் மனத்தைக்கவரும்படியான, நன்னயந்தருஞ் சொன்னயம்பெறும் உசிதாலங்கார வசனசிங்காரங்களுமா யியற்றியிருக்கின்றேன். இதனை யாவரும் எளிதிலுணர்ந் தத்தியானந்தத்தை அநுபவிப்பார்களென்பதிற் சந்தேகமில்லை. மற்றப்பிரபந்தங்களிற் காண்டம், சர்க்கம், அத்தியாயமென ஏற்படுத்தியிருப்பதுபோ லிந்நூலும், வடசொல் ஆரியரா லேழங்கங்களா யமைக்கப்பெற்றபடியே, தமிழிலும், ஏழங்கங்களாய்ப் பொருந்தி யிருக்கின்றது. பொதுவாகவே, பரமயோகியருள்ளம், எந்தவஸ்துவினிடத்திற் பொருந்தாமிக்கின்றதோ அந்தவஸ்துவே, இராமனெனப் பொருள்படலாலும், இந்நாடகத்தினொவ்வொரு பாடல்களிலும், ஒவ்வொருவாக்கியங்களிலும், பதங்கடோறும், யுக்தியும், ரசமும், பொருந்தியிருத்தலானும், இதைப்படிக்க வாரம்பவிக்கும்போதே, படிப்போர், கேட்போர்களின், சித்தாலவாலத்திலுற்சாகவித்தங்குரித்து, மென்மேலும், சந்தோடமாரிபொழியப்பொழியச், சாகோபசாகையாய்த்தருவாய்வளர்ந்து, அறம், பொருள், இன்பம், வீடு, என்னும்பலவர்க்கங்களைச் சொரியாநிற்கும். இந்நூல் அத்தகைப் பயனுடைத்தென்பதற்கறிகுறியாய் இந்நூலின் கதாநாயகனான இராமபிரானால், வனவாசிகளான தபோதனர்களெல்லாம், அரக்கர்களின்பயங்களற்று, தங்கடங்கடவப்பொருள்களை ரக்ஷிக்கப்பெற்றார்களென்றும். அவ்விராமபிரானாற் சுக்கிரீவ விபீடணர்கள், சத்துருபயங்களற்று, இராஜ்யாதி மகதைசுவரியங்களைப்பெற்றார்களென்றும், சுக்கிரீவன், தாராதிசுகபோகங்களையு மடைந்தானென்றும், அவ்விராம

பிராணைப் பரமென்று நம்பித்தொண்டுபுரிந்த, அனுமத்விபீஷணாதிகள், நித்தியானந்தச் சிரஞ்சீவி வாழ்வைப் பெற்றார்களென்றும், பிரத்தியக்ஷமாகவும், அப்பிரத்தியக்ஷமாகவும், இந்நாடகத்தில் விஸ்தரிக்கப்பட்டிருப்பதைக் காண்க. இன்னமும், இந்நூலின் கதாநாயகனான இராமபிரான், விஷயிகள், பக்தர்கள், முமுக்ஷுக்கள், ஆகிய மூவகை அதிகாரிகளான, இவ்வுலகத்தவர்களின், அறிவிற்கெட்டியபடியுள்ள, தியானத்திற்கிசைய, சாதாரணமனிதனாகவும், உபாசனைக்குரிய ஈஸ்வரனாகவும், நிர்விகாரச்சச்சிதானந்த ஆத்மசுரூபமாகவும், விளங்குகின்றனனென்பதற்கறிகுறியாய், இந்நாடகத்தில், ஸர்வசம்பன்னனான சாதாரணமனிதனாகச்சனனமெடுத்து, விவாகாதிசுகங்களும் வனசஞ்சாராதிகஷ்டநஷ்ட சோகமோகாதிகளுமடைந்தும், சிவதனுர்ப்பங்கமென்ன, அகலிகை சாபவிமோசனமென்ன, சேதுபந்தனமென்ன, வனவாசர்களான தாபஸர்களின் அபயப்பிரதான சம்ரக்ஷணைகளென்ன, கொடிய துன்மார்க்கர்களான தாடகை சுபாகு, கரானமாரீசர், விராதகரதூடணாதியர், வாலி, இராவண கும்பகர்ணாதி துஷ்டர்களின், சங்காரமென்ன, ஆகிய அமானுடப்பிரவிர்த்தியான, அருந்தொழில்சணடாத்தியும், நிர்விகார சச்சிதானந்தமாகிய ஆன்மாவே, மானுடப்படிவங்காட்டி, ஜீவபாவத்தைக்கண்டிக்கவேண்டி, காமக்குரோத அகங்காராதிகளால் வசீகரணமனத்தர்களான மூடர்கட்கெல்லாம், துக்கானுபவமே யெனவாங்காங்கே, சோகமோகாதிகளை நடிப்பித்து, ஆகந்துகமான இச்சீவத்துவத்தையொழித்தலே, சுகானுபவமென, அதற்குமுதலிற் குருகுலவாஸ குருவுபதேசங்கண்முக்கியமென, வசிஷ்டவிஸ்வாமித்திரர்பாலடுத்து மந்திரோபதேச வரிசைகளடைந்து, ஈடணை விலக்கல் நன்றென, இராச்சியாதி மகதைஸ்வரிய பரித்தியாகஞ்செய்து, வாதனாட்சயம்பெறலவசியமென, வனவாசஞ்செய்து, சாதனமன்றிச்சாதிப்பதரிதென, சுக்ரீவ சக்யஞ்செய்து, பவக்கடல்கடக்க, நூல்வழிநடத்தலே, சரியெனச்சேதுபந்தனஞ்செய்து, காமக்குரோதாதி சத்துருக்களுடன் சகவாசஞ்செய்வதாயினும், காமகுரோதாதிபதினறனுள், சிரத்தாபக்திகளைக்கைக்கொண்டு மற்றவைகளைக் கெடுத்தலுசிதமென, சத்துருவினுடன் பிறந்தவனாயினும் விடணனைக்கைக்கொண்டு இராவணாதி இராக்கதர்களைமடித்து, நிஷ்காமதபஸால், அவித்தையால் மூடப்பெற்றவந்தக்கரணத்தைச்சுத்திசெய்யவேண்டுமென, சிறையில்நின்றும், மாயாசொரூபிணியான சீதாபிராட்டியை, அக்கினிசுத்திசெய்து, தானேதானாய் நிர்விகார சச்சிதானந்த சொரூபியாய் அகண்டாதி பத்தியமுற்றிருந்தவனென இராச்சியாபிடேகப்பெற்றுச் சுகமுற்றிருந்தனன், என உருவகத்திற்கிசைய வையப்பெற்றிருக்கின்றது.

மேலும் அகிலாண்டகோடி பிரமாண்டநாயக சச்சிதானந்தமாகிய ஆதிபரப்பிரம்ம சொரூபமே, துட்டநிக்ரகசிட்டபரிபாலனஞ்செய்து, சத்திய

தன்மத்தை நிலைநாட்டுவதற்காக, ஸ்ரீராமனாய்வந்தவதரித்து, பிரபஞ்சமாயையின் விநோதங்களை விளக்கி, தமது பிரபாவசக்தியையுந்துலக்கி, சம்புமடியார்களின் பக்குவாபக்குவங்கட்குத்தக்கபடி, இஷ்டகாமிய நிட்காமிய பலதாதாவாயிருந்து, பரிபாலித்ததாகவேதான், வான்மீகமுதலிய இராமாயணங்களின் முக்கிய தாற்பரியமுமே. அங்ஙனமாயின், இதன்பெருமை, சகலகலக்கியானவல்ல, இரண்டாயிரநாவுடைய ஆதிசேடனாலும், அறையற்பாலதன்றன்றோ? அத்தகைய மகத்தான இவ்வற்புத திவ்விய சரித்திரத்தை, இவ்வற்பனேன் சொல்லப்புகுந்தது, தரையிலூருகின்ற வோர் சிற்றெறும்பானது, வான்மதியினமுதருந்த, இச்சித்தலொக்குமாயினும், அப்பிபீலிகையும், கொன்றை, தும்பை முதலிய புட்பஜாதிகளில், மதுவாசைகொண்டு பொருந்தியிருந்ததும், அப்புட்பங்கள், திருத்தொண்டர்களாற்கொய்து, சந்திரகலாதரனாகிய சாக்ஷாத்பரமசிவனது, திருமுடியிற் சூடப்பெற்றகாரணத்தால், அவ்வெறும்பும், அழகிய திங்களின் திவ்வியாமுதருந்தப் பெற்றதென்னுங் கதைபோல், ஏதோ, எனது புண்ணியவிசேடத்தானும், கற்றறிந்த பெரியோர்களினனுக்கிரகத்தினாலும், அருமையான இந்நாடகம், என்னாற் பூர்த்திசெய்யப்பெற்றதென்றறிக. அவ்விராமபிரானது சரித்திர வர்ணனையினால், பூவுடன்சேர்ந்தபழுதும் மணம்பெற்றதுபோல், புன்கவியாயினுமென்கவி நன்கமையப்பெற்றதாகவே பெரியோர்க ளன்புவைத்து மானிக்கக் கேட்டுக்கொள்கின்றனன்.

---

உ

## ஜானகிபரிணய நாடகம்.

# சாற்றுக்கவிகள்.

---

அம்பாசமுத்திரந்தாலூகா அரிகேசநல்லூரிலிருக்கும் மக-ள-ள-ஸ்ரீ மகா வித்வான் புனல்வேலி அ. இராமசுவாமி பாரதியவர்களியற்றியகவிகள்.

---

சதுரகவிகுருவிகருமதிபூஷிகனயோகிதழைக்குமாச த்
ததுரகவிதவிரவிதனைநேரும்பிரதாபசாலிகல் வி
முதுரகவிசேஷகலைஞானசேஷனுமகிழமொழியுந்திவ் ய
மதுரகவிவளமருவும்புனல்வேலிநகர்செய்தவத்தில்வந்தோ ன்.

கூடகமாதவர் புகழும்பிரமநிலை யறிஞானகுரு வேதாந் த
நாடகங்கீர்த்தனை செய்தமுத்துசுப்ப பாரதிபேர் நவிலும்போ ன்
மாடகயாழ் வல்லோர்களிசைபாடக் கேட்டமரர் மகிழவான்றோய்
ஆடகநன்மாட மலிஅரிகேசநல்லூர் வாழணி நாவல்லோ ன்.

தருவரதராஜனென்னு வேதியர்கள் குலதிலகன் றவத்தில்வந் த
உருவமதவேண் முத்துச்சுப்பவேள் தமிழ்க்கடலை யுண்டஞானப்
பருவமுகில் சானகிபரிணயமா மழைபொழிந்து பாவிற்றோர்க்கும்
திருவசன மாமழையாய்ப் பதமழையாய்க் குளமழையாய்ச் செழிக்கத்தானே

---

மேலப்பாவூரிலிருக்கும் ஆரியத்தமிழ் மகாவித்வான் மக-ா-ா-ஸ்ரீ புனல்வேலி வரதசாஸ்திரிகளியற்றிய சாற்றுக்கவிகள்.

---

சீதமணக்கும் பணியுமணிமீசர் தொண்டரித்திரளை வாக் கு
வாதமணக்கும்படி செய்முன்னூல் தேர்புனல்வேலி வாழுங்கல்வி
போதமணக்கும்ப முனிவேதாந்த நாடகஞ்செய் புனிதன்கோடி
காதமணக்கும்ப துமத்தாரணிபு முத்துசுப்பகவின் முன்னூலோன்.

அன்னவன்றன் பேரனரிகேசநகர் மும்மாடமதனில் வாழ்வோன்
சொன்னவனத்தென் வரதராஜனருள் முத்துசுப்பசுமுக னென்போன்
நன்னவரஸத்தொடு செய்ஜானகியின் பரிணயத்தை நன்றாய்க்கேட்கின்
இன்னமுதைப் பரமசிவஞானா மெனவுலகி லியம்புவா ரே.

---

அரிகேசநல்லூரிலிருக்கும் மக-ா-ா-ஸ்ரீ புனல்வேலி அனந்தசுப்பையரவர்கள் இயற்றிய சாற்றுக்கவி,

---

பொன்வளரரிகை நன்னகரதனிற் பொருந்திவாழ் பூசுரப்புனித ன்
சொன்மணிமாலை தொடுத்தருண் முத்துச்சுப்பநாவலவ னுஞ்சுமுக ன்
தன்மநற்றவத்தின் பயனெலாமுதவுஞ் ஜானகிபரிணயந் தமிழி ல்
நன்மைசேர்திவ்ய நாடகமாகவின்று நற்புகழைநாட்டின னே.

---

அரிகேசநல்லூரிலிருக்கும் ஸங்கீத வித்வ சிரோன்மணியான மக-ா-ா-ஸ்ரீ புனல்வேலி முத்தைய்யாபாகவதரவர்கள் இயற்றியது.

---

## ஆசிரியவிருத்தம்.

சீர்பெருங்கல்விநிறை திகழ்புனல்வேலி வாழ்சிலன்வேதாந்த வமுதைச்
சிறந்தநாடகமென வறைந்துலகர்பவ நோய்கடீர்க்கு நன்மருந்தாக்கினோன்
பாரிலுயரன்னதானத்தின் மிக்கோன்மிகப்பாக்கியவான் முத்துசுப்ப
பாரதியருள் புதல்வன்வரதராஜன் றவப்பயனென வுதித்தபாலன்
காரணையகையன் வெகுசீருடையனரிகைவாழ் கவிமுத்துசுப்ப வள்ளல்
கண்டுமொழிசெண்டுமுலை ககனவிடைகடல் விழிக்கமலை ஜானகிபரிணயம்
ஆரமுதமென்னவே செந்தமிழ்நன்னாடகமதா யியற்றினன் யாவரும்
ஆனந்தமதுவுண்ட வளியராய்க்களியரா யாச்சரியமாய்ப் புகழவே.

---

திருநெல்வேலி மக-ா-ா-ஸ்ரீ மகாவித்வான் கவிராஜநெல்லையப்பபிள்ளை யவர்கள் இயற்றிய கவிகள்.

---

திருமகளும் வெண்கமலத் தொருமகளுமகலாத செல்வமென்று
மருவுபுனல் வேலிநகர்வந்த முத்துச்சுப்பயமால் வரத்துதித்த
வொருவரதராசனெனு முயர்நாமந் தரித்திநெல்லு சிதனுமிவ்
விருவருக்கும் பேரன்மகனெனும் பெருமைபெற்று மகிழியல்பினோனே.

வேறு

மதனனும்பெண்மைய வாவுறுவனப்பன் வனசமாலிகை திகழ்மார்பன்
இதமுளவசனன் கருணைசால்விழியனிய லிசைநாடக மெனுமூ
விதமுறுதமிழும் வழுவறவுணர்ந்த விவேகவான்விமலனைப் பணியப்
புதமிகுபக்தியுடைய நன்மனத்தன்பொறுமையிற் பூமகள் போல்வான்.

எல்விதுவிழியார் தோழமையாக விருவரைக்கொண்டதை யேய்ப்பச்
செல்வமார் சேதுராமலிங்கேந்த்ர நிரனைச்செந்தமிழ் தேர்ந்த
வல்கவிலறிவனருந்தவர் திலகனரிகரப்பெயர் கொணம்மாசைச்
சொல்விருப்புடனிந் நாளிலன்பாகத் தோழமையெனக் கொளுந்தோன்றல்

தருமனையனையான் போகத்திலருளிற் சனகனைத்தவத்தினி னிகர்வான்
அருமறைபயிலும் நாவினனரிகை யம்பதிவாழ் தருமண்ணல்
கருமுகில்வெஃகும் வண்மையும்பொய்மை கனவிலுஞ்சொற்றிடாக்கனமும்
மருவியநம்தம் நிதிமுத்துசுப்ப மகிபதிதமிழ்க்கருள் வள்ளல்.

பனவர்தங்குலத்துற்ப வித்தவனிராம பத்திரதீக்ஷிதன் பண்பா
சொனவடமொழிச் சானகிபரிணயத்தைச் சொற்சுவை பொருட்சுவைதோ
வனமருவிய செந்தமிழ்நாடகமா வகுத்தனன் சீர்த்தியும்மரபுங் [ன்ற
னகவான்பொருப்புங் கயிலையும்போல நிலைக்கவெக்காலத்து மா தோ.

---

சேற்றூர்ஸமஸ்தானம் மகாவித்வான் முகவூர் மக-ா-ா-ஸ்ரீ இராமசாமிக்கவிராஜரவர்கள் இயற்றியகவிகள்.

---

பொன்சேரு நறுங்கமலப் பழனமெலாமுப்போகப் பொலிவைக்காட்டு ங்
தென்சேறைத் தலபுராணத்தை வடமொழியதனூற் றெளிவிற்செய் து
மின்சேருக்கத்தியர் பொன்னிலமொலா யிதனையெனும் வேதாந்தத்தை த்
தன்சேமநாடகங் கீர்த்தனைபதமென்றப் பெயராற்சாற்றும் வல்லோ ன்.

பொன்றாதசீர்த்தியையோர் கவிமாலையாத்திரட்டிப் புகன்றோன்வாய் மை
குன்றாதபுனல்வேலி முத்துசுப்பபாரதி யாங்கும்பன் றன்னை த்
தன்றாதைதன்றாதை யெனப்புகன் றன்றோன்பெயருந் தரித்தோன்வெள் ளி
மன்றாடியருள்பெருகும் வரதராஜயர் தவத்தால்வரு குமார ன்

இந்நாளிலரிகேச நல்லூரினுவந்து வசித்திருப்போன் மேலோ ர்
அந்நாளில் வடமொழியிலறை ஜனகிபரிணயநாடகத்தை வாய்மை ச்
சொன்னுமுகில் ராமசுவாமிபாரதி யெனச்சொல் சுழகன் றன்னை த்
தன்னவனுடன் ஞாதிசோதரனென் றுரைக்கும் நன்மைதனைப்பெற்றுள்ளான்.

அக்கரையாய்க்கற்றோர்க்குங் கல்லார்க்கும்பொருள்விளங்கவன்புட்கொண்டே
தக்கசத்தசுரகயஞ் சொன்னயப்பொருந்த நாடகமாத்தன் முன்னோர்போ ல்
மிக்கபுகழ்பெற்ற முத்துசுப்பய்பாரதி வாக்கால் விளம்பினனு ல்
எக்கலையுங்கற்ற நாவலருமா நாவலவனெனச் சொல்வா ரே.

---

திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனவித்வான் சேற்றூர் மக-ா-ா-ஸ்ரீ சுப்பிரமணியக்கவிராயரவர்கள் இயற்றியகவி.

---

அருந்தவர்மெச் சரிகேசனூர்வாழு முத்துச்சுப்பய்யன் செவ் வி
திருந்துஜானகிபரிணயந் தமிழ்நாடகமாகச் செய்தான் விண்ணோ ர்
மருந்தினும்நற் றமிழாகுமிதுவே நாடகமெனத்தமனடக்குக் கற்றோ ர்
பொருந்தஉரைத்துவப் பனிவிதன் பெருமையாமென்றே புகலுவா ரே.

---

திருநெல்வேலி, இந்நூலரங்கேற்றிய ஸரஸ்வதிவிலாச மகாசபையின் காரியதரிசியாயும் ஆரியப்பிரகாசினி அச்சியந்திரசாலையின் செக்கரட்டேரியாயுமிருக்கிற மகாவித்வான் மக-ா-ா-ஸ்ரீ எஸ். பால்வண்ணமுதலியாரவர்கள் இயற்றிய கவி.

---

மாணிநோக்கியர் தங்களுக்கெல்லாம் வாழ்வொடுதிருவினை வயக்குந்தன்மையாள், ஜானகிபரிணயந்தராதலம் புகழத்தமிழிலோர் நாடகமாகச்சாற்றினன், பானலக்கவியோ டொழுக்கமாசாரப் பண்புறவரன் கழல்பரவுசீர்த்தியான், ஈனிலம்புகழுந் திருமறைவாயால் நவில்முத்துசுப்பய்யனொனும்பேர் நாவலோனே.

---

ஸ்ரீவில்லிபுத்தூர் மகாவித்வான் மக-ா-ா-ஸ்ரீ பொன்னும்பெருமாள்செட்டியாரவர்கள் இயற்றியகவி.

---

சங்கநிறைதவழ் பழனப்புனல்வேலிப் பதிவரத ராசவேத ப்
புங்கவன்செய் புண்ணியத்தாற் புத்திரனுதித்து மிகுபோதமேவு ம்
பங்கமில்சீர் முத்துச்சுப்பபாரதிகள் செயுஞ்சீதாபரிணயத்தை த்
துங்கவுலகப் புலவருஞ்செவி வாய்க்கொண்டமிழ்தாய்த் துதிக்கின்றாரே.

---

திருநெல்வேலி டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டு பிளீடர் மக-ா-ா-ஸ்ரீ எஸ். எம். தையல்பாகம்பிள்ளையவர்கள் இயற்றிய கவிகள்.

---

பொன்மருவுமணி மாடகூடமேவு புனல்வேலிசெய்தவப் பொலிவினாலே, மின்மருவுசடைக்கடவுள் பாதம்போற்றும் விப்பிரிலெஞ்ஞான்று மேன்மையான, சொன்மருவுங்குணசீலன் வரதராஜத்துங்கன் வழித்தோன்றலெனுஞ் சுமுகனான, மன்மருவமரிகைவளர் முத்துச்சுப்ப வள்ளறமிழ்ப் பயிருலகில் வளரவென்றே.

வேறு.

செய்தனனிசைத்தமிழ் தெளிந்துதேன்ம ழை
பெய்தனவெனப்புகழ் பேர்பெற்றோங்க வே
பைதமிழ்ச்சானகி பரிணயப்பெ ய
ரெய்தியநாடக மென்னும்நூலை யே.

வேறு.

இப்புவனக்கடலமுதம் புலவோர்களுவினுக்கே இனிக்குமென்றும்,
அப்புவனப்புவனத் தெழில்வளஞ் சேரிசைமுத்துச் சுப்பமுகிலருமையாகச்
செப்புவனத்தமிழ்ப்புதிய நாடகத்தின் றெள்ளமுதந் தெவிட்டாதென்று ம்
முப்புவனப்புலவோர்கள் மனஞ்செவி யாவினிக்குமிது முகமனன் றே.

---

ஸ்ரீவைகுண்டம் மக-ா-ா-ஸ்ரீ தாசில்தாரவர்கள் வித்வசிரோண்மணி
வெங்கிடசாமிபிள்ளை அவர்கள் இயற்றிய கவிகள்.

---

சீர்பெருமுத்தமிழ்ப் பொலிவுந்திருவளரு மெஞ்ஞானத் திகழ்வும்வாய்ந் தே
ஏர்பெருமோரின்ப நூலிவ்வுலகில்யான் சாணவோர்க்குமோ வெ ன்
றேர்ப்பெரியநாதன் மனத்துற்றிட்ட திஃதினைமெய் யுணர்வாலோர்ந்தா ன்
ஊர்பெரியஅரிகேச உயர்நல்லூர் மறையவனு முரவோன்றானே. *

நான்மறையாறங்கமுத னவிலும்பல் கலையனைத்தும் நன்றாயோர்ந் து
வேன்மறவாப்புனல்வேலி வரதராஜப் புனிதன் மிகுதவத்தி ன்
கான்முளையாங்கார ணத்தால்முத்துச் சுப்பய்யனெனக் கவின்பேர்வாய்ந் [தோன்
மேன்மையுறுதவசீலன் மிகுங்கருணைக் கடலெனவே விளங்குமேலோன்.

வருதரியஜானகிப ரிணயநன் னாடகத்தைக் கவிஞர்போற்ற ப்
பொருதவிலா வடமொழியா விராமபத்திரப்புனிதன் புனைந்தான்முன்னாள்
இருதவிலாத்தினும் பல்லுயிர்களுங் கேட்டுவந்துகொடும் பவநோய்தீர த்
தருத்தகைய நாடகத்தைச் சாற்றினனெப்புவியுந் தழைக்கமாதோ. *

இயலிசை நன்னாடக மென்றியம்புதிரி புடையதனி னிறுதியாவு ஞ்
செயலுடையதாதலினற் றெய்வமொழியிற் றேன்மொழிசேர்த் திசைத்தான் [நங்கள்
மயலொழியமார்க்க மீதியாய்கொல்லோ வள்ளுவனார் வகுத்தசொல்லு க்
கயலாமோவின் புறுதலுலகென்றால் காமுறுவர் கரிவேறுண்டோ. *

செந்தமிழ்நற்கவிக்கு மலரவனேனும் வாணனுமுறையைச் செவ்விதா க
இந்தநூன் முகங் கண்டேனெவ்வாறோவென்றிடி லெம் மிறைவன்முன்னாள்
பந்தமறுபிரணவத்தின் பொருள்கேட்பப் பதுமன்மிகத் திகைத்தவாற்றா ல்
விந்தையதாய்த் தளையிட்ட வேலவன்பேரிக்கவிக்கு விதித்தவாறே. *

சாற்றுக்கவிகள் முற்றிற்று.

செய்மணக்கும்பூங் கரும்பின்றீன்பாலு முக்கனியுந் தேனும்பாலு ம்
நெய்மணக்குமாறு சுவைப்போனகமும் யாசகர்க்கு நிதமுநல்கி க்
கைமணக்கும்பெருவறமே திருவரதராசனுக்குக் கவின்கொண் டோங் கி
மெய்மணக்கவந்தருள் சற்புத்ரசிகாமணி யென்னவிளம்பு வோனு ம்.

அங்கமிருமூன்றுமறை நான்கறிந்தோனு பனிடதமாறும் நாலு ம்
சங்கரபாடியத்தினுங்கோர் சாயையென வடமொழியிற் றகைவதாக ப்
பங்கமுறா திவ்வுலகோர் பவப்பிணிக்கு மருந்தெனவே பரிந்துசொற் ற
பொங்குபுகழிலக்கு மணசாஸ்திரிகடைமையன் வரபுத்ர னென்று ம்.

தாண்டருந்தென்வடமொழிகள் கற்றருள் ஸ்ரீசுப்பய்யர் தமக்குநான்கா ய்
யீண்டமுதக்கவிபொழியும் அரிகரபாரதியெனச் சொல்லெனக்குங் கற்றோர்
வேண்டுவனவியந்தருளும் வேளாளர்வங்கிஷமாம் விரிகடற்கோ ர்
காண்டலைகயசந்திரனுங் கல்விடைச் சுப்பிரமணிய கனவானுக்கு ம்

வேயகமாயுதித்தருளி வடிவன்னை இடமன்னி விளங்கக்கொண் ட
தாயகராம் செல்லேசக ரனவரததானரிரு தாண்மலர்க் கே
தூயகமாப் பாட்டிசைக்கும் வேளாளர்மாலைசூடு துளங்கித்தோன்று ம்
நாயகமாமணி யெனச்சொல் கவிராஜநெல்லையப்ப நாவலோர்க்கு ம்.

சீர்விளங்குந்தென்னாட்டுச் சிவாலயங்கண் மென்மேலுஞ் சிறப்புற்றோங் கி
ஏர்விளங்கப்புரிசபைக்கண் நேர்விளங்கவீற்றருளு மிராஜசிங்க ங்
கார்விளங்குமகராணிச் சுப்பிலிஹாலினி தமைத்தோன் கங்கைவம்ச ப்
பேர்விளங்கப் பார்விளங்கும் பெரும்புகழ்சேர் திருமலையப்பேந்த்ரனுக்கு ந்.

தாபதர்கூ ரிகை திருப்புடைமருதூ ராலயங்கடழைப்பச் செய்வோ ன்
சோபைதருவீரை நகர்ச்சேர்மென்கற்ற கவிக்கிநிதிசொரியுஞ் சோ லை
கோபமிலிகார்காத்த மரபெனச்சொல் மாமேருக்கோட்டில் வைத் த
தீபமெனத்திகழ் சேதுராமலிங்க வள்ளலுக்குஞ் சினேகனென்று ம்.

சங்கநவிலருந்தமிழை வடமொழியினுடன் பயின்ற தன்மையாலு ம்
அங்கசவேள்வனப்பாலுங் கவிப்புலவருவப்ப வருள்வண்மை யாலு ம்
பங்கமிலாக்குலம் வாய்மைக்குணத்தாலும் நிகரற்றபான்மையா லே
பொங்குகடலுலகமெலாஞ் சீர்த்தியெனும் வெண்டுகிலாற் போர்த்தானெ
ன்றும்.

சொன்னமணிக்கோ புரமோடேழுநிலை யணிமாடத் தொடர்புஞ்செய் ய
கன்னலொடுசெந்நெல்வளர் பூஞ்சாலிதேன் சோலைகதுவச் சூழ் ந்
மன்னரிகைப்பொன்னகரே தாயகமாய் நாயகமாய் வாழ்வோனென்று ம்
பன்னுமவனபிதானம் முத்துச்சுப்பபாரதியாய்ப் பயில்வானன்றே ன்

குறையாருஞ் சிலையவுணர் மலைவிபுதர்கடையுமனுர் கொடுக்காதா ன
சுறையாரும்வடமொழியில் ராமபத்ரதீக்கதனுற் றொன்னூட்சொற் ற
கறையாரும்ஞானபரிணயமெனும் நாடகத்தைக் கடல்சூழ்வைய த்
திறையாரும்படித்துயச் செந்தமிழுறைக்கவேண்டு சிலர்க்கிசைந்து மன்றே

தேன்பாலிலான் பாலைக்கலந்ததெனப் பரிபாகச்செஞ்சொல் யாத்தா ங்
கூன்பாலிலுயிருக்கு மின்னிசைச்சாவளிப் பதங்களோ வியங்க ன்
கான்பாலிற்கற்சிலை கடலைதுளக்கும் பலதருக்கள் கனிகள்பூமே ல்
வான்பாலினின்ற பொருளவசமுறும் பலசந்தமலர்ந்த பாக்க ன்

மங்காதங்குறுவேடம் பொருத்தமுறத் தரித்தவர்கண் மன்றில்கா டி
அங்காருமகிழ்ந்திடச் சமயத்தினுக் கங்கியைந்தபடி யமையச்சொல்வா ன்
சிங்காரவாசக மிந்துஸ்தானிக் கீர்த்தனைக டெளிந்துபாரி ற்.
புங்கானுபுங்கமதாய் நாடகமாய் நவரஸமும் பொழியச்செய் தே

சாத்திரத்திற் சிறந்தநெல்லைச் சரஸ்வதிவிலாச மகாசபையின்மேவு ம்
பாத்திரத்திற்சிறந்த பலபுலவர்தலை துளக்கினர் சபாசென்றேத் த
கோத்திரத்திற்சிறந்திடு மாயிரத்தெழுபத்தொரு நான்காங் கொல்லந்திங்கள்
சேத்திரத்திற்சிறந்த சிங்கம்சித்திரைநாள் அரங்கேற்றல் செய்தான்மன்றே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.



உ

ஞானபரிணய நாடகம்.

# கதாசாரசங்கிரகம்.

(முதலாவதங்கம்).

நாந்தியந்தே (சூத்திரதாரன் அரங்கத்திற்றோன்றி, தான், நாடகம் நடத்துவதான, பிரவிர்த்தியைச்சொல்லிக்கொண்டு, நடிப்பெண்வரவை எதிர்பார்த்தலும், அன்னடிப்பெண்ணும், தோன்றினள், இவ்விருவரும், நாடகமுறையே, ரூப, நடன, நாட்டிய, ஸங்கீத, நடையுடைபாவனைகளுடன்,

நவரசங்களும் நன்குவிளங்கும்படி, நாடகம் நடத்துவதாய் நவின்றுகொண்டு, சங்கீத நடன நாட்டியவிசேஷங்களாற், சபையைச்சந்தோஷிக்கச் செய்துகொண்டு, அந்தப்பாத்திரப்பிரவேசங்களை, (அதாவது) அந்தந்த ரூபமான வேடதாரிகளைச் சந்தர்ப்பங்களுக்குத்தக்கபடி சபையிற்செலுத்தலாயினர், எங்ஙனமெனின், முதன்முதலில், இலங்காபுரியை ஆளுகின்ற இராக்கதகுலச்சக்ரவர்த்தியாகிய, இராவணேச்சுவரனுக்கு, மிதிலாபுரியையாளுகின்ற, ஜனகராஜனது தவப்புத்திரியாகிய ஜானகியென்னுங் கன்னியாரத்தினத்தை மணம்பொருத்தவேண்டி, அவனது ஏவுதலைக்கொண்டு, அம்மிதிலேசனிடம் யாசனைசெய்யப்போகின்ற விதமாய், அவனது சாரணை சாரணன்யென்னுமிராக்கதன், பிரவேசிக்கின்றனன், மேற்கண்ட காரியார்த்தமாய் முன்னமே, மிதிலாபுரிக்கிச்சென்று, அங்குள்ள வர்த்தமானங்களைக்கூடமாய்த்தெரிந்துகொண்டு, திரும்பவருகின்ற விதமாய் (சுகன்) என்னுமிராக்கதன், பிரவேசிக்கின்றனன், அவ்விருவரும் சந்தித்துக்கொண்டு, அமரமடந்தையர்களையும், சங்கையற்று நிராக்ஷேபணையாய்க் கவர்ந்துகொண்டு வந்து, சுரேசன்முதல் யாவரையுஞ்சிறையிட்டுத் தானே இன்பசுகமநுபவிக்கின்ற அவ்விராவணேச்சுரனுக்கிந்தப்புவிமடந்தையைப் பலவந்தத்திற்கவர்ந்துவந்து, சுகமநுபவிக்கக்கருதாது, ஜனகராஜனிடம் யாசனை செய்யும்படி கருத்துவந்ததெல்லாம், அவனுக்குந்தனக்குமுள்ள சைவநேயத்தாலென்றறிந்துகொண்டவர்களாய் மிதிலாபுரியில், முப்புவனத்தினும், ஒப்பற்ற வனப்பினளாகிய ஜானகியென்னுந் தைலர்க்கரசி, தனதுசொற்பனத்தில் மன்மதனுற்காண்பிக்கப்பெற்ற, அயோத்தியாபுரியையாளுகின்ற, தயரதசக்ரவர்த்தியின்றவப்புத்திரர்களில், முன்னவனான இராமனது திவ்வியசுந்தரத்திருமேனியைக்கண்ணுற்று, அவன்மீதடங்காக்காதல்கொண்டு, அவனையேமணம்புரியக்கருதினவளாய், விரகதாபத்தால் வருந்துகின்றனளென்றும், தனது சைவநேயனாகிய இராவணேசுவரன், அவள்மீததிகக் காதல்கொண்டு, மணம்புரியக்கருதி தன்னிடம்யாசனைசெய்ய எத்தனித்துக்கொண்டிருக்கிற சங்கதியைக் கர்ணா கன்னிகையாய்த்தெரிந்துகொண்ட ஜனகராஜன், கன்னிகாமணியின் காமாவஸ்தையைக்கண்ணுற்று, அவளது மனோபீஷ்ட்டம்போல், இராமனுக்குக்கலியாணஞ்செய்து கொடுக்கக்கருதினனாயினும், அதுவிஷயமாய், இராவணேச்சுவரனதுபகை, தன்னைச்சாராதிருக்கும்படிக்கும், அம்மணத்திலவனால் விகாதம் வாராதிருக்கும்படிக்கும், நிர்விக்கினமாய் ஜானகிக்கும் இராமனுக்கும், மன்றல்நடத்திவைக்கும் விஷயமாய், சுவர்க்கப்பிரதி சுவர்க்கஞ்செய்த, மகாதபோ நிஷ்டரான, விசுவாமித்திரமுனிவரை, மத்தியஸ்தராயிருந்து நடத்திவைக்கும்படி, வேண்டிக்கொண்டானென்றும், அம்முனிச் சிரேஷ்டனும், அங்ஙனமேசம்மதித் தயோத்தியாபுரிக்குச்சென்று, இராமனைத் தயரதன் முதலானவர்களுடனழைத்துவ

ந்து, தந்திரமாய்க்கல்யாணஞ்செய்து வைக்கக்கருத்துட்கொண்டு, தாமொரு வேள்விசெய்யப்போகின்றதாயும், அதற்காக, தனதிஷ்டரான, தயிரதன்முத லானவர்களை, அழைத்துவரச்செல்வதாயும், கபடமாய்ச் சொல்லிக்கொண்ட யோத்தியாபுரிக்குச்சென்றிருக்கின்றனனென்றும், அதற்கிணங்கிய, அச்சன கராசனும், தன் அரசசைத்தம்பியாகிய குசத்துஜனிடம், ஒப்புவித்துவிட்டுக் கௌசிகர்செய்யப்போகின்ற யாகத்தைக்கண்ணுற்றுவர, ஆவல்கொண்டவ ன்போற்கபடமாய்ச் சொல்லிக்கொண்டு, கன்னிகாமணியுடன் கௌசிகரது ஆச்சிரமத்தில், முன்னமேவந்திருக்கின்றனனென்றும், அறிந்துவந்துரைத்த சுகனுடன், சாரணன், ஆலோசனைபுரிந்ததாவது, இராவணனுக் கப்பெண் மணியின் மனத்தைப்பொருத்தி வைப்பதற்கு, சனகராஜனிடமினியாசனை செய்வதிற்பயனன்றென்றும், இராவணனுக்குச் சனகன்மீதுள்ள சைவமே யத்தானும், மனமில்லாப் பெண்டிரைப்பலவந்தத்தின், மருவிடக்கருதினல், மண்டை வெடிக்குமென்னும், வன்சாபமொன்றிருத்தலானும், வன்மையிற் கவர்தலொண்ணாதென்றும், ஆகையால், அவ்விராவணேச்சுரனே, அம்மாத ரசியின் மனதிற்கிசைந்த, அவ்விராமனது வடிவத்தை, மாயையாற்புனைந்து கொண்டு, அச்சனகன்பாற்சென்று, அவளைப்பரிணயஞ்செய்து கொண்டு வரவேண்டும், அங்ஙனமாயின், மணத்தின் பின்னர், இராவணனென்றறி ந்துகொண்டாலும் பாதகமில்லையென்றும், வித்திச்சிருவனென்றமந்திரியை விசுவாமித்திர வடிவந்தரிக்கச்செய்து, இராவணன் இராமவேடந்தரித்துக் கொண்டு, விசுவாமித்திரன் இராமனையழைத்து வரும்பான்மைபோல், ஜன கராஜன்பாற்செல்லவேண்டுமென்றும், ஆனால், அதற்கிடையில், அயோத்தி க்குச்சென்ற விசுவாமித்திரர் இராமாதிகளையழைத்துக்கொண்டு, இடையூ றுக வந்துவிடாமல், கொடியதாடகாதியரைக்கொண்டு, இராமாதிகளை மார்க் கத்தியிற்றடுத்து மாயையாற் கொல்லுவிக்கவேண்டுமென்றுந் தீர்மானித்துக் கொண்டவர்களாய், இராவணேசுரனுக்கறிவிப்பதற்குச்சுகனை அனுப்பினன். அப்பால் அங்ஙனம், தாடகையென்னுங்கொடியஇராக்ஷஸி, பிரவேசித்தனள், சாரணன், அவளது வரலாற்றைத் தெரிந்துகொண்டு விசுவாமித்திர முனிவ ரின் தந்திரோபாயத்தைவிளக்கித்தானும் சுகனுமாலோசித்தபடி இராமாதிக ளை இடைவழிக் கட்டிமாய்த்து விடும்படி மாரீசன் சுபாகு கரனன் இவர் களுடன் தாடகையை அனுப்பிவிட்டுச் சென்றனன். அப்பால், இலங்கா புரியில், வித்திச்சிருவ சாரணருடன் இராவணேசுரன் பிரவேசித்தாலோச னைபுரிந்து ஜானகியென்னுந் தையலாள்மீது க்ஷணம் பொறாக் காதல்கொ ண்டிருவிக்கின்றவனும் பிறனுயினும், இராமனென்னும்நரனது வடிவத்தைத்தரி ப்பதில் இலச்சையடைந்து காதல்ஒருபக்கம், இலச்சை ஒருபக்கம், கருக்கக்க னவருத்தமுற்றவனுய் கடைசியில்வெட்கந்துறந்துவேடந்தரிப்பதற்கிணங்கி அவ்விருவருடன் புட்பகவிமானத்திலேறிக்கொண்டு விசுவாமித்திர முனிவ

ரின் ஆச்சிரமவனத்தை அடைந்தங்கோர்பால் விமானத்தை மறைத்து வைத்துவிட்டு, திஸ்கரணி, யென்னும் மந்திரமகத்துவத்தால் மற்றவர்க ட்புலன்கட்கறியப் படாதவர்களாய் தங்களைமறைத்துக்கொண்டு அங்கு ள்ளவர்த்தமான வுதந்திகளைத் தெரிந்துகொள்ளும் நிமித்தமாய் சஞ்சரித்தன ர். அங்ஙனம், விசுவாமித்திரருடையவும். சதானந்தருடையவும் சீடர்களா ன சத்தியவிரதன், தேவவிரதன், என்ற இரண்டு வன்னியர் பிரவேசித்து, ஒருவருக்கொருவர் சம்பாஷித்துக்கொண்டு அவரவர்கள் தர்ப்பைமுதலியன வாய்ந்துகொண்டாச்சிரமத்திற் சென்றனர். அவர்களால் வர்த்தமானங்களை இரகசியத்திற் றெரிந்துகொண்டஇராவணேச்சுவரன் மற்றிருவருடன் சஞ் சரிக்கின்றனன்.

முதலாவதங்கம் முற்றிற்று.

இதில் 1-வது இலங்கையினின்று மிதிலாபுரிக்குச் செல்லுகின்ற வித மாய் சாரணன் பிரவேசம்.

2-வது மிதிலாபுரியினின்றும் வருகின்றவிதமாய் சுகன் பிரவேசம்.

3-வது தாடகையின் பிரவேசம்,

4-வது வித்திசிகுவனுடன் சாரணனுடன் இராவணேசுவரன்பிரவேசம்

5-வது புட்பகவிமானத்துடன் சாரணன் பிரவேசம்.

6-வது சத்தியவிரதன் தேவவிரதன் இவ்விருவரின் பிரவேசம்.

ஆக பாத்திரப்பிரவேசம் 9.

---

## உ-வது அங்கம்.

---

விசுவாமித்திரமுனிவரின் ஆச்சிரமப்பிரதேசத்தில், அத்திரிமுனிவ ரும் அவரதுபத்தினியாகிய அநசூயாதேவியும் பிரவேசித்து, அவர்கள் கௌ சிகர் ஆரம்பிவிக்கப்போகின்ற யாகதரிசனநிமித்தம் வந்தவர்களாய்ஸம்பாஷி த்துக்கொண்டு, அவ்வாச்சிரமத்தில் வந்திருக்கின்ற ஜனகராஜனிடஞ்செல்வ தாய்ச்சென்றனர், அப்பால், அங்ஙனம், திரஸ்கரணீ மந்திரமகுத்துவத்தால் பிறர்கட் புலன்கட்கறியப்படாதவர்களாய்த் தங்களை மறைத்துக்கொண்டு சஞ்சரிக்கின்ற இராவணவித்திச்சிகுவ சாரணர்கள் பிரவேசிக்கின்றனர், அவ்விருவருடன் இராவணேச்சுரன் அவ்வனத்தில் வந்திருக்கின்ற ஜான கியின் பேரழகைப்பார்க்க ஆவல்கொண்டு, சஞ்சரித்துக்கொண்டிருக்கையில் அங்ஙனம் ஓர்பால் திவ்வியமங்கள சுந்தராங்கியான ஜானகியென்னுந்தை லர்க்கரசி. காமாவஸ்த்தைக்காற்றுதவளாய்ப் பற்பலவிதமாய்ப் புலம்புகின்ற வளாய், தளிர்ச்சயனத்திற்சயனித்துக்கொண்டிருப்பவளாய், ஒருகாரணத்தா ல் அரக்கர் கட்புலன்கட்கறியப்படாதவளாய்த், தன்னந்தனியேபிரவேசித்த

னள். இராவணன், மற்றிருவருடன், அவளதுபுலப்பத்தைச் செவியார்ந்திரக்கமுற்று, அவளது இன்பமான சப்தத்தினால் அவள் திரிலோகசுந்தரியாயிருத்தல் வேண்டுமென நிதானித்துக்கொண்டவனாய், ஆதரத்துடன் அவடன்னெழிலுருவத்தைக் காணக்கருதி எவ்வளவெவ்வளவோ பிரயத்தனப்பட்டும் காணப்பெறாதவனாய், இவளின்னாளென்றே அறிய மார்க்கமற்றுப் பரதவித்துக்கொண்டிருந்தனன், அங்ஙனமிருக்க, சுசரிதை, என்னுந்தோழிப்பெண், தாமரைத்தண்டுமுதலிய சைத்தியோபசாரசாமான்கள் சகிதம்பிரவேசித்து, ஜானகிக்குப்பற்பலவிதமாய்சைத்தியோபசாரஞ்செய்தனள், சிலவந்தபெண்ணுஞ்சகி, சித்திரப்பலகைமுதலியசாமான்கள்சகிதம்பிரவேசித்தனள். அவ்விரண்டுதோழிப்பெண்களும்ஜானகிக்குப் பற்பலவிதங்களாய்விரகாக்கினியை ஆற்றுவித்துக்கொண்டிருக்கிற ரீதிகளையும், அந்தச்சகிமார்களையும், அந்தச்சித்திரப்பலகையையும் அதிற்சானகியால் தன்சொற்பனத்திற் கண்ட கணவனதுருவத்தை யெழுதப்படுகின்ற ரேகைகளையும், கண்குளிரப்பார்க்கின்ற இராவணாதி இராக்கதர், அத்தகைய ஜானகியினுருவத்தை மட்டும்பார்க்கமுடியாமற்றிகைத்துக்கொண்டிருக்குங்கால், அவளை அரக்கர் கட்புலன்கட்கறியப்படாமல் மறைத்துக்கொண்டிருப்பது, விசுவாமித்திர முனிவரின் றந்திரோபாயத்தாலேற்படுத்திய இராக்ஷஸாந்தங்கரணமென்னும் பேர்வாய்ந்த மணிமயமான கங்கணங்கள் அவள்கைகளிற்றரித்துக்கொண்டிருக்குமகத்துவமென்றும், அவள் ஜானகிதானென்றும், தோழிப்பெண்களின் வாய்மொழியின் வாறங்களாற்றெரிந்துகொண்ட, இராவணன், மாயையால், சாரணனை அயோத்தியினின்றும்வருகின்ற ஒரு பிராமணனைப்போல் வடிவந்தரிக்கச்செய்து, அவடரித்துக்கொண்டிருக்கிற அரக்கர கட்புலனடைக்குங்கங்கணங்களைத் தந்திரத்தாலபகரிக்கச்செய்தும், அவளது திவ்விய சுந்தராங்கத்தைத் இராவணனுக்கு நன்றாய்த்தரிசிக்க இடமில்லாமல், அத்திரிமுனியா அநசூயாதேவி, இவர்களின் பாதவந்தனத்திற்காக அழைக்கப்பெற்றவளாய், தோழிப்பெண்களுடன் ஜானகி, ஜனகராஜன்பாற் சென்றனள், அவளிடங் கங்கணங்கள் பெற்ற சாரணன், அவளெழுதிய இராமரூப சித்திரப்படத்தையும் கவர்ந்துகொண்டு இராவணனிடம் பிரவேசித்தனன். இராவணன் இதுவரைசெய்தும் அவளங்கத்தைத்திருப்தியாய்ப் பார்க்கப்பெறாதது பற்றி மனவருத்தமுற்றவனாய், மாயையால் இராமவேடத்தைத்தான் புனைந்துகொண்டு, வித்திச்சிகுவனை விசுவாமித்திரவேடமும், சாரணனை இலக்குவன்வடிவமும், தரிக்கச்செய்து, அவ்விருவருடன் வஞ்சனையாய் ஜானகியை விவாகஞ்செய்யும் நியித்தாய், ஜனகராஜன்பாற் செல்வதாய்ச்சென்றனன்.

இரண்டாவதங்கமுற்றிற்று.

II. அத்திரி, அநசூயை இவ்விருவரின் பிரவேசம்.

2. இராவணன், வித்திச்சிருவன், சாரணன், இம்மூவரின் பிரவேசம்.
3. காமஅவஸ்த்தைக்காற்றாதுதளிர்ச்சயனமுற்றஜானகியின்பிரவேசம்
4. தாமரைத்தண்டு மலர், இலை, இதுகள் சகிதம் சுசரிதையென்ற சகியின் பிரவேசம்.
5. சித்திர சாமான்கள் சகிதம் சிலவதியென்ற சகியின் பிரவேசம்.
6. ஸாரணப்பிராமணன் பிரவேசம்.
7. கங்கண சித்திரபடசகிதம் ஸாரணன்பிரவேசம்.

ஆகப்பாத்திரப்பிரவேசங்கள் 10.

---

## ௬-வது அங்கம்.

---

கடலில் விழுந்தெழுந்த விதமாய், மாரீசன் பிரவேசித்து, இராமாதியரை இடைவழிக்கட்டி மறிக்கப்போனதில், இராமபாணத்தால், தன்தாய் தாடகையென்ன, தன்தம்பி சுபாகுவென்ன, இவர்களிறந்தே போனார்களென்றும், தான் இராமபாணத்தாற் சாகரத்தில் வீழ்த்தப்பட்டு, விதிபலத்தாற்றப்பிப் பிழைத்ததாயும், தன் மற்றொருதம்பி கராளனென்பவனுடைய ஸ்திதி இன்னவிதமென்றறிய வில்லையென்றும் சொல்லிக் கலங்குறுமளவில், கராளனென்னுமரக்கன், இராமபாணத்திற்குத் தப்பிப் பிழைத்து மாரீசனைத் தேடிக்கொண்டு வருகின்றவிதமாய் பிரவேசித்தனன், அப்பால் கடலோரம் மகேந்திரகிரியின் சூழ்வுகறையில் மாரீசனை வந்தடைந்தனன். அவ்விருவரும் இராமனை மாயையால் வெல்ல நினைத்து, இராமாதியர் தங்கியிருக்கின்ற ஒருசோலையின்பாற் சென்று, இராமன், தன்னந்தனியே, வனத்தில் வேட்டைக்குச் சென்றிருக்கின்ற விதந் தெரிந்துகொண்டு இராமனுக்குயிர்ச்சகனான பிங்களனது வடிவத்துடன் வஞ்சகோபாயத்தால் விராமனை வனாந்தத்திற்குக் கூட்டிவரும்படி கராளனையனுப்பிவிட்டு, தான் காசிபனது வடிவத்துடன் மாயாசீதையைச் சிருஷ்டித்து, அவள் இராமனிமித்தமான காமநோய் சகிக்ககூடாவருத்தமுற்றவளாய்கடைசியில் விதனமொழிக்காற்றாது தக்கினிப்பிரவேசஞ்செய்வதுபோலும், மாயையாலிராமனுக்குக் காண்பித்து, அவண்மீதுள்ள மயக்கத்தினால் இராமன், தானாகவே அனலில்வீழ்ந்தி ஆவிஇறக்கும்படிசெய்கின்றேனென்று சொல்லிக்கொண்டு சென்றனன்.

அப்பால் வனத்தில் வேட்டையாடுகின்ற விதமாய் தனியாய் இராமன் பிரவேசித்தனன், சமீபதூரத்திற் பிங்களனுருப்புனைந்த கராளன், மாயையாற் காட்டுமனை, தன்னை இழுத்துக்கொண்டு போவதுபோலும், இராமனுக்

ளுத் தோற்றும்படி பிரவேசித்துப் பிரலாபித்தனன். அதனை நிஷ்கபட இராமன் மெய்யென நினைத்துத் தன்னுயிர்ச்சக பிங்களனை வனத்தந்தி பிடித்துக்கொண்டு போகின்ற கஷ்டஞ் சகிக்கமாட்டாதவனாய் அவனை விடுவிக்கும்பொருட்டாய் வெகுதூரம் பின்றொடர்ந்து போயினபோது, அங்கொரு சோலையிற் காட்டானையால் விடுபட்டுக் களைப்புற்றவன்போலும், பிங்களரூபனான காராளன் பிரவேசித்தனன். இராமன் அவனைப் பிங்களனென்ற பரமார்த்தபுத்தியுடன், அவனைக் களைப்புமாற்றி அவனுடன் முன்போல ஸரஸமாகப் பேசிக்கொண்டிருந்தனன். அவனும், இராமனுக்குத் தன்னிடத்திற் களங்கந்தோன்றா வண்ணம் சம்பிரதாயமாய் ஞானவிஷயமான பிரிய ஸமாசாரங்களாலே இராமனுஞ் சந்தோஷத்தையுண்டு பண்ணிக்கொண்டு மாரீசன் வரவை மனத்திலெதிர்பார்த்திருந்தனன். அங்ஙனம் ஓர்பால், மாயையின் திறத்தால், வாஸ்தவ சீதையைப்போலும், அவளது சகிகளைப்போலும் சிருஷ்டித்துப் பற்பல விநோதங்களுடன் வாஸ்தவ அக்கினியும், சிருஷ்டித்துக்கொண்டு [illegible] பிரவேசித்தனன். இராமனும் பிங்களனுருப்புனைந்த காராளனும் [illegible] [illegible]னுங் காசிப ரூபத்துட னிராமனிடம் வர எ[illegible] அவ்விருவருஞ் சம்பாஷித்துக் கொண்டிருக்கும் வார்த்தை [illegible] பிங்களனுருப்புனைந் திருக்கின்ற காராளனை, எதார்த்த [illegible] ண்டவனும் மேலும் மாயையாற் பற்பல விநோதங்க[illegible] கொண் டொதுங்கியிருக்கவும், அவனது மாயாவி[illegible]றுகின்ற மாயாசீதையும், சகிகளும், இவர்களது ரூபவசனப்பி[illegible]ங்களும், ஆங்கு இவைகள் மெய்போற்றோற்றிக்கொண் டிருக்கவும், இவைகளை, ஜனகராஜன் றவபுத்திரியாகிய ஜானகியும், அவளது தோழி பெண்களுமாம், என்றிராமனுக்குப் போதித்து விரகத்தை விர்த்திசெய்[illegible] பிங்களனுருப்புனைந்த காராளன் நிற்கவும், அதனை யதார்த்த புத்தியுடன் பார்த்துப்பார்த்து மோகபரவசனா யிராமன் நிற்கவும், ஆங்[illegible] தருணத்தில், அங்ஙனம் மற்றோர்பால், எதார்த்த காசிபர், தர்ச்சொலாய், இராமனைத் தேடிக்கொண்டு வருகின்றவிதமாய் பிரவேசித்தனர். அவரை இராமன்பால் நின்றுகொண்டிருக்கிற பிங்களனுருப்புனைந்த காராளன், சற்று தூரத்திற்பார்த்து, காசிபனுருப்புனைந்து வருவதாய்ச் சொல்லிய மாரீசனாமென்னக் கருதுட்கொண்டு, இராமனுக்குக் காசிபனை அழைத்துவருவதாய்ச் சொல்லிவிட்டுப்பிரிந்து காசிபனைத் தொடர்ந்துசென்றனன். அத்தருணத்தில், மாரீசன் மாயையால் காசிபனது வடிவம் புனைந்துகொண்டு, இராமன்பாற் பிரவேசித்தனன்.

இராமனவனைக் காசிபனென்ற பரமார்த்த புத்தியுடன், அம்மாரீசனுடன் சம்பாஷித்துக்கொண்டிருக்க, இராமனைத்தேடிக்கொண்டு வருகின்றவிதமாய், எதார்த்த பிங்களன் பிரவேசித்தனன்.

அவனிராமனிடம் வந்துசேரவும், அவனை எதார்த்த பிங்களனெனத் தெரிந்துகொண்ட மாரீசனால், இவனிராக்கதனென இராமனுக்குப் போதிக்கப்பட்டு, அதனால் இராமனிடம் தன் சொல்லொன்று மேறாமல், எதார்த்தபிங்களன் ஒதுங்கித் தலைகவிழ்ந்திருந்தனன். இங்ஙனமிருக்க, இராமனைத்தேடிக்கொண்டு மற்றொருபால் வந்த எதார்த்தகாசிபர், அங்கொருபால் நின்ற அம்மாயாசீதையைக்கண்டு திகைத்துக்கொண்டிருக்குங்கால், தன்னைத்தொடர்ந்துவந்த பிங்களனுருப்புனைந்த காளனைச்சந்திக்கவும், இவர் அவனை எதார்த்த பிங்களனெனவும் அவன் இவரை மாரீசனெனவுமாக, ஒருவர்க்கொருவர் பரமார்த்தபுத்தியுடன் சம்பாஷித்துக்கொண்டபோது, பிங்களனுருப்புனைந்திருக்கின்ற காளனை இராக்கதனெனத்தெரிந்துகொண்ட எதார்த்தகாசிபர், இராமனிருக்குந்திசைநோக்கி ஓடத்தொடுத்தனர். அத்தகைய காசிபரை மாரீசனென்றறிந்துகொண்ட காளன், மாரீசனென்னும் இராக்கதன் காசிபருபனாய், என்னைக்கொல்ல வருகின்றானென்றலறிக்கொண்டு, ஒரே ஓட்டத்தி லிராமனை வந்திருகத்தழுவிக்கொண்டனன். ஆகவே அம்மாயாகாசிபராகிய மாரீசனும், அம்மாயாபிங்களனாகிய காளனும், ஒருவருக்கொருவர் தெரிந்துகொண்டு, எதார்த்தமானமற்றிருவரையும், இராக்கதர்களென, இராமனுக்குப் போதிக்கவும், அவ்வண்ணம் இராமனும்நம்பவும், எதார்த்தகாசிபிங்களர், இருவரும், இராமனிடந்தங்கள்சொல்லொன்று மேறாமல் தவிக்கவுமாயினார். அங்ஙனம், பின்னும் மாரீசனது மாயையால், ஜனகராஜனை இராவணன் கொலைசெய்துவிட்டுச் சீதையை அபகரிக்கவருகின்றானென்று சொல்லிக்கொண்டு, சோக அவசரத்துடன், ஒருமாயாசகி, பிரவேசித்தனள். அவ்வித வார்த்தையைக்கேட்டு மாயாசீதை, அவ்விதனத்திற்கும், இராமன் விஷயமான விரகாக்கினிக்கு மாற்றாதவளாய், அக்கினிப்பிரவேசமானதைக் கண்டு, இராமன் அவண்மீதுள்ள மோகத்தினாற்றானும் அவ்வக்கினிக்கிடங்கிலேயே வீழ்ந்திறப்பதாய்ச்சொல்லிக்கொண்டு, சோகபரவசத்துடன் அவ்வக்கினிக்கிடங்கருகிலுள்ள ஒருகரும்பாறையிற் காலைவைக்கவே, அப்பாறையே ஒரு திவ்யமங்கள சொரூபமான பெண்ணுருவாய்ப் பிரவேசித்தனள். அவளை அகலிகையென்றறிந்துகொண்ட இராமன், அவளால் எதார்த்த பிங்களகாசிபர்களையும், மாரீசகாளர்களையும், இன்னாரின்னாரென்றறிந்துகொண்டதுமன்றி, அவ்வரக்கரின் மாயாவிலாசத்தையும் நன்கறிந்தனர், உடனே அவ்வரக்கரிருவரும், தக்கணமே மானுருப்புனைந் தோடத் துணிந்தனர். இராமபாணத்தாற் காளனிறந்தானாயினும், மாரீசன் தப்பி மாயமாய்விட்டான். அப்பால் இராமர் எதார்த்த காசிபபிங்களருடன் அகலிகையை அனுப்பிவிட்டுத்தயாரதர் சௌனிகர் முதலியோர் தங்கியிருக்கின்ற ஸ்கந்தாவாரத்தை அடைந்தனர்.

8-வது அங்கம் முற்றிற்று.

1. கடலில் வீழ்ந்தெழுந்தவிதமாய் மாரீசன் பிரவேசம்.
2. இராமபாணத்திற்குத் தப்பிப்பிழைத்த கராளன் பிரவேசம்.
3. வேட்டையாடுகின்றவிதமாய் இராமன் பிரவேசம்.
4. காட்டானையால் விடுபட்டு களைப்புற்றுக் கிடக்கின்ற விதமாய் பிங்களனுருப்புனைந்த கராளன் பிரவேசம்.
5. மாயையால் மறைந்துகொண்டு மாரீசன் பிரவேசம்.
6. தளிர்ச் சயனமுற்றிருக்கின்ற மாயாசீதையும்,சகிகளும் பிரவேசம்.
7. எதார்த்த காசிபர், பிரவேசம்.
8. காசிபவேடத்துடன் மாரீசன் பிரவேசம்.
9. எதார்த்த பிங்களன் பிரவேசம்.
10. சோக அவஸரத்துடன் மாயாசகி பிரவேசம்.
11. முனிபத்தினி பிரவேசம்.
12. கோதண்டத்தினின்றும் பாணத்தை இறக்கிக்கொண்டு இராமன் பிரவேசம்.

ஆக பாத்திரப் பிரவேசங்கள் 14.

---

## ௪-வது அங்கம்.

---

முதலில் சித்திராங்கதனென்ற கந்தருவன் பிரவேசித்தனன், அவன் இராமனால் தாடகாதியர் மடிந்துபோனபிறகு, சுவஜனவதத்தைச் சகியாதவனான இராவணன், திரும்பியாதுமுயர்ச்சை செய்கின்றானென்பதை அறிந்து வரும்படி, தேவராஜனா லனுப்பப்பட்டபடி, இலங்கைக்குச்செல்வதாய் மாயையால் ஒரு இராக்கதவடிவொடு செல்லுகையில், ஒட்டகமுகியென்ற ஓர் கோரஅரக்கி, எதிரேபிரவேசித்தனள். அவளால் இராவணனது இரகசியப்பிரவிர்த்தியைத் தெரிந்துகொண்ட கந்தருவன், தான்தெரிந்துகொண்ட இராவணேசுவரரகசிய வஞ்சனைப்பிரவிர்த்திகளை, முன்னர் மிதிலேசனுக்கறிவித்துவிட்டுப் பின்னர் தேவராஜனுக்கறிவிப்பதாய்ச்சொல்லிக்கொண்டு சென்றனன். அப்பால் ஜனகராஜனும் சதாநந்தரும் பிரவேசிக்கின்றனர். அவ்விருவரும் அயோத்திக்குச் சென்றிருக்கின்ற விசுவாமித்திரர், இராமாதிகளை அழைத்து வருகின்ற வரவையெதிர்பார்த்திருக்கின்றனர். அப்போது வாஸ்தவவிஸ்வாமித்திர இராமலெட்சுமணர்கள் போல் மாயையால் வடிவந்தரித்து வித்திச்சிகுவ இராவணஸாரணர் பிரவேசித்தனர். ஜனகராஜன் அவர்களை வாஸ்தவவிசுவாமித்திரராமலெட்சுமணர்களென்றபரமார்த்தபுத்தியுடன், அவர்களுக்குபசாரஞ்செய்து கல்யாணஸமாசாரஞ்சொல்லிக்கல்யாணம் ஆரம்பிக்கும்போது, கந்தருவன், வித்திச்சிகுவ ராவணஸாரணர்களான இராக்கதர்கள்,

விஸ்வாமித்திர ராமலெட்சுமணர்களாக, மாயையால் வேடந்தரித்து வஞ்சனையாய் ஜானகியைமணஞ்செய்யவந்தன ரென்றந்தரத்தினின்றைந்துவிட்டுச்சென்றனன். அதைப்பற்றி ஜனகரும் மற்றவருந் திகைத்துக்கொண்டிருக்கும்போது, வாஸ்தவராமலெட்சுமணருடன் வாஸ்தவவிஸ்வாமித்திரர் பக்கத்தில் வருகின்ற விதந்தெரிந்து, இராவணாதியர், திரஸ்கரிணியால், மறைந்துகொள்ள வாஸ்தவ இராமலெட்சுமணருடன் விசுவாமித்திரர், பிரவேசித்தனர். விசுவாமித்திராதிகளும் ஜனகராஜனும் ஸம்பாஷித்துக்கொண்டதில் இராமனால், தாடகாதியர் இறந்துபோன விபரங்களை, இராவணாதியர் தெரிந்துகொண்டு கவலையடைந்தனர். ஜனகராஜன் வாஸ்தவ இராமலெட்சுமண விசுவாமித்திரர்களிடம் இராக்ஷஸ சங்கைகொண்டவனாய் அரன்றனுவளைப்பவனுக்கக்கன்னியை மணஞ்செய்திவேனென்றறைந்தனன். அங்ஙனமே அவ்வில்லைக்கொண்டு வரச்செய்து அதை யாரோபணஞ்செய்யும்படி விசுவாமித்திரர் இராமனைவேவே, இராமன் அவ்வில்லின் பாற்சென்றனன். இராவணாதியர் திகைத்துக்கொண்டிருக்கின்றனர். அத்தருணம், மாண்டவி, ஊர்மிளை, சுருதிகீர்த்தி, யென்ற கன்னியருடன், சீதை, பிரவேசித்தனள்; அவர்கள் விசுவாமித்திர பாதவந்தனத்திற்காக வருகின்றதில், ஒருவருக்கொருவர் பரிகாசஞ்செய்துகொண்டு களிப்போடுவந்து, ஒருபாலொதுங்கியிருந்தனர். இராமர் அவ்வில்லைக் கையிலெடுத்ததும், நிறுத்தியதும், வளைத்ததும், ஒடித்தெறிந்ததும் எல்லாரும்பார்த்து சந்தோஷித்தனர். இராவணாதியர் இனி இங்கிருப்பதிற் பயனில்லை, இலங்கையிற்சென்று மந்திரிகளிடம் ஆலோசித்து, தந்திரமாய்ஜானகியை அபகரிப்போமென்று சொல்லிக்கொண்டு சென்றனர். ஜனகராஜன் அகமகிழ்ந் திராமனுக்கு ஜானகியையும், இலக்குவனுக்கூர் மிளையையும், பரதனுக்கு மாண்டவியையும், சத்ருருக்கனுக்கு சுருதிகீர்த்தியையும், விவாகஞ்செய்து கொடுத்தனர்.

4-வது அங்கம் முற்றிற்று.

1. கந்தருவன் பிரவேசம்.
2. ஒட்டகமுகியென்ற இராக்ஷஸிபிரவேசம்.
3. ஜனகராஜனும் சதானந்தரும் பிரவேசம்.
4. விசுவாமித்திர வடிவமாய் விச்திச்சிருவனும்,
   இராமவடிவமாய் இராவணனும்.
   இலக்குவன்வடிவமாய் சாரணனும் இவர்கள் பிரவேசம்.
5. கந்தருவன் பிரவேசம்.
6. விசுவாமித்திரர், இராமர் இலக்குவன் இவர்கள்பிரவேசம்.
7. வில்லுடன் சதானந்தர் பிரவேசம்.
8. சீதை, மாண்டவி, சுருதி கீர்த்தி ஊர்மிளை, இவர்கள் பிரவேசம்.
9. தேவவிரதன் பிரவேசம்.

ஆகப்பாத்திரப்பிரவேசங்கள் 17.

# ௫-வது அங்கம்.

---

முதலில் விராதன் பிரவேசிக்கின்றனன், பஞ்சவடிவனத்திற் பன்னசாலையிற்றம்பியுடன், தாரத்துடன் வசிக்கின்ற இராமனை, வதைசெய்து வரும்படி, ஜனஸ்தானத்தினின்றும், தனதுசினேகிதனை, கரனாலனுப்பப்பட்டவனாய்ச்சொல்லிக்கொண்டு, அவ்விதம்பிரவேசித்து, கோகிலவடிவனாய் ஓர் மரத்திலேறி, பன்னகுடிவாயிலில், இலக்குவன்ஆயுதபாணியாய்நிற்பதைக்கண்ணுற்று, அவனைக்கொல்லத் தன்னாலாகாதகாரியமென்று சிந்தித்து, ஜானகியின்பேரில் மையல்கொண்டு, சமையம்பார்த்து, ஜானகிதனிப்பட்டபோது இராமரூபத்துடனவளை அபகரித்துச்சென்றவளுடன் சுகிக்கவேண்டுமெனச்சமையம்பார்த்துக் கொண்டிருந்தனன், அப்பால் சூர்ப்பனகை, பிரவேசித்து, ஜானகியை அபகரித்து வரும்படி இராவணனாலனுப்பப்பட்டவளாய்ச்சொல்லிக்கொண்டு, கரிக்குருவி வடிவம் புனைந்து, பன்னகுடியில் இராமனும், சீதையும், இருப்பதைக்கண்ணுற்று, இராமன்மேலதிமோகங்கொண்டு, சமயம்பார்த்து, இராமன்றனிப்பட்டபோது தான் ஜானகிவடிவத்துடன், அவனுக்கு மோகத்தையுண்டுபண்ணி, தந்திரமாயவனை, அபகரித்துச்சென்றிஷ்டப்படி சுகிப்பேனென்று சொல்லிக்கொண்டுலாற்றுகின்றபோது, அங்கொருபால் விராதனும், சூர்ப்பனகையும் சந்தித்தொருவர்க்கொருவர், அந்தரங்கத்தை வெளியிடாமலே, இராவணேசுவரன், மந்திரோபாயத்தாலே வியமந்தனைப்பிசாசத்தால், அயோத்தியாபுரியினின்றும் இராமனை வனதிற்கு முடுக்கப்பட்டுப்பஞ்சவடியிற் பன்னசாலையில் வசிக்கின்றவனையுள்ளமற்ற வார்த்தைகளைப் பேசிக்கொண்டு, அவரவர் தததமிடஞ்செல்வதாய்க், கபடமாய்ச்சொல்லிக்கொண்டு தனித்தனியேசென்றனர். அப்பால் பர்னகுடியின்பக்கத்திலங்கொரு, பருப்பதத்தினின்று வனவேடிக்கை பார்க்கின்ற விதமாய், இராமர், சீதையுடன்பிரவேசிக்கின்றனர். அவ்விருவரும் ஒருவருக்கொருவர் பரிகாஸங்களொடு, வனத்தின் வளப்பங்களைப்பார்த்து ஸந்தோஷித்துக்கொண்டிருந்தபோது, அவ்வனத்தில் ஓர்பால் விராதனாகிய அரக்கனும் சூர்ப்பனகியாகிய அரக்கியும் ஒருவர்க்கொருவர் தாக்கலன்னியிற்றனித்தனியே பிரவேசித்தனர். அவர்களைப்பார்த்து சங்கித்துக்கொண்டிருக்கவும் அத்தருணத்திலேயே, அவ்வரக்கனே இராமனாகவும், அவ்வரக்கியே, சீதையாகவும், தனித்தனியேபிரவேசித்தனர். அவன் அரக்கனெனத்தெரிந்த இலக்குவன், ஆயுதபாணியனுப்புட்புலனறிபவேண்டி மறைந்துபார்த்துக்கொண்டிருந்தனன், இராமனும், சீதையும் மலைமேல்நின்று பார்த்துக்கொண்டிருந்தார்கள், சீதாரூப சூர்ப்பனகி இராமரூப விராதனைக்கண்ணுற்று, வாஸ்

த்தவ இராமனென்று நினைத்து, மோகங்கொண்டு அவனை மயக்குமாறு சண்பகாடவிக்குட் போதுகொய்யும்ஜாடையாய்ப்போய்ப் புகுந்தனள். அவளைச் சீதையென்ற பரமார்த்தபுத்தியுடன், அவண்மீது மோகங்கொண்டவனுமங்ஙனமே போய்ப்புகுந்தனன். இலக்குவன் அவ்வேடிக்கையைக்கண்பானுகி மறைந்து மறைந்து பின் சென்றனன். அவ்வரக்கனும், அவ்வரக்கியும், ஒருவர்க்கொருவர் பரமார்த்த புத்தியுடன், ஒருவர்க்கொருவர், அபசரித்து வஞ்சிக்கப்பட்டவர்களாய், அந்தரத்திற், களைப்பிச்செல்லுகையில் ஜடாயுவால் தடுக்கப்பட்டவர்களாய் ஒருவர்க்கொருவர், இனந்தெரிந்துகொண்டு, கீழிறங்கவே, இலக்குவனால் அவ்விராதனென்னும் அரக்கன் எமபுரிக்கனுப்பப்பட்டான். அந்தச்சூர்ப்பனகையும் மூக்கு, முலை அறுப்புண்டு சென்றனள். பின்னர், ஜடாயுவுடனிலக்குவன், பர்ணசாலை வந்துசேர்ந்தனன், இத்தனையும்பார்த்துக்கொண்டிருந்த இராமனும், சீதையுடன் கிரியினின்றுங் கீழிறங்கிப்பர்ணசாலைவந்துசேர்ந்தனர், அவ்வரக்கனும் அரக்கியும், விராதனும் சூர்ப்பனகியுமெனத் தெரிந்துகொண்ட இராமன், ஜடாயுவையுபசரித்தனுப்பிவிட்டு' தம்பியொடு களித்திருந்தனர், அங்ஙனமிருக்க, ஜனஸ்தானத்திற் கரனென்னுங் கொடிய இராக்கதன்றன் தங்கையாகிய சூர்ப்பனகியின் மூக்கு முலையரிபோன விபத்தினைச்சகிக்கமாட்டாதவனாய்க் கோபாவேசத்துடன், தனதுசேனைகளோடும்இராமனோடு யுத்தஞ்செய்யக்கருதி வந்துவளைந்துகொண்டனன். இராமனுடனே சீதையை இலக்குவனபாலொப்புவித்துவிட்டு, அரக்கனை அருஞ்செய்வதாய் கோதண்டபாணியாய்ச் சென்றனன்,

ஐந்தாவதங்கம் முற்றிற்று.

1. விராதன் பிரவேசம்.
2. சூர்ப்பனகையின் பிரவேசம்.
3. இராமனும் சீதையும் பிரவேசம்.
4. இலக்குவன் பிரவேசம்.
5. விராதன் சூர்ப்பனகையின் பிரவேசம்.
6. இராமரூப விராதன் சீதாரூப சூர்ப்பனகி பிரவேசம்.
7. விராதன், சூர்ப்பனகி, சொந்தரூபத்துடன் பிரவேசம்.
8. ஜடாயு பிரவேசம்.

ஆகப்பாத்திரப்பிரவேசம் 12.

## ௬-வது அங்கம்.

---

முதலில், அனலையென்னும் வீடணராஜகுமாரி பிரவேசிக்கின்றனள். அப்பால் ஸம்பாதியென்னும், வீடணராஜ மந்திரி, பிரவேசிக்கின்றனன். அவ்வனலை, இராவணனால் சீதையைக்கவர்ந்து வந்து அவளை அசோகவனச்சிறையில் வைத்திருக்கின்ற காலமுதல், எழுமாதகாலமாயவளுக்குத் துணையாயிருந்துகொண்டு, அவளது துக்கத்தை மாற்றித்தேருதல் செய்துகொண்டிருந்த சங்கதியைப்பற்றியும், சம்பாதி சீதைபிறிந்ததற்பின், இராமலக்ஷ்மணர் வனத்திற்றேடித்திரிந்து, சடாயுகடன்முடித்து, சுக்ரீவஸக்யமடைந்து வீரவாலியை வதைத்து அவ்விராச்சியத்தை நம்பிய சுக்ரீவனுக்களித்தனர் என்ற, விருத்தாந்தங்களையும், இராவணனைச்செயித்த அவ்வீரவாலியையும், இராமன் கொன்றனென்றவிபரம், இராவணனுக்கறிவிக்கும்பொருட்டு வீடணாதியரால் ஆலோசனை செய்து இராமன் சீதையைத்தேடவாரம்பித்தது முதல் வாலி வதைபரியந்தம் உள்ள ஸகல விருத்தாந்தங்களையும் சுக்கிராசாரியனைக்கொண்டு நாடகமாயமைக்கச்செய்து கந்தர்வப்பெண்களால் அந்நாடகத்தை இராவணசதசில் பாத்திரரூப நடையுடை பாவனைகளுடன் பிரத்தியக்ஷம்போல் முறையே நடத்தும்படி யேற்பாடுசெய்திருக்கின்ற ஸங்கதிகளையும், ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு அந்நாடகக்காரர்களை அழைத்துவருவதாய் சம்பாதி சென்றனன். அவ்வனலையும் பிரத்தியக்ஷத்தில் அந்நாடகத்தில் இராமரூபத்தைக்காட்டி சீதையை சந்தோஷிக்கச் செய்வதாய் சொல்லிக்கொண்டு சென்றனள். அப்பால் மகாபார்சனென்ற விநோத மந்திரியுடன் இராவணன் பிரவேசிக்கின்றனன். அப்பால், அந்த நாடிகை ஆரம்பஞ்செய்கின்றனர். அந்நாடகக்காரரில் ஒருவன் பிரவேசிக்கின்றனன்.

சூத்திரதாரன் பிரவேசிக்கின்றனன். நடி கானஞ்செய்கின்றனள். சூத்திரதாரன் அந்நாடக சூசகம் சொல்லுகின்றபோதே இராவணனுக்கு மிகக்குதூகலம் பிறந்தது. அந்நாடக அரங்கத்தில் இராக்கதாந்தங் கரணக்கங்கணம் ஒருகைக்கணிந்தசீதையும் அப்படியேஅனலையும்பிரவேசித்தனர். சீதை அவ்வனலையால் தேருதல்செய்யப்பட்டுக்கொண்டு இராக்கதர்கட்புலன் கட்கறியப்படாதவளாய் ஓர் பாலிருந்து நாடகம் பார்க்கின்றனள். அங்ஙனமிருக்க அந்நாடகத்திலேற்பட்ட வேஷ இராமலட்சுமணர்கள் பிரவேசிக்கின்றனர். அவர்கள் சீதையைக்காணாமல் பர்ணகுடில் சூனியமாயிருப்பதைப்பார்த்து அதிகமான சோகஸந்தாபத்துடன் வனமெங்குந்தேடித்தவித்து மதிமோகித்து காட்டிலுள்ள மரமுதலிய அசேதனங்களிடத்தும் அவளை

ப்பற்றிப் புலம்பிக்கொண்டும் தென்றிசையை நாடிச்செல்லலாயினர். அது
கண்டு இராவணன் சந்தோஷமடைகின்றனன். சீதை துக்கிக்கின்றனள்.
அனலை அவளது துக்கம் மாற்றுகின்றனள். ஆகவே தென்றிசை குறித்து
நாடிச்செல்கின்ற இராமலெட்சுமணர் இரதமுதலியன முறிந்து கிடக்கின்
ற சிற்சில அடையாளங்களைக்கண்ணுற்று அவ்வழிக்கொண்டே அங்ஙனம்
நிலைகுலைவுற்று இரத்தம்பெருகின்ற மலைபோன்ற காத்திரத்தோடு களைப்புற்று
க்கிடக்கின்ற விதமாய் ஜடாயுபிரவேசிக்கின்றனர். அவரைச்சடாயுவென
த்தெரிந்துகொண்டு அவரிடம் வினவ. ஜடாயு இராவணனென்ற இராக்க
தனால் ஜானகி அபகரிக்கப்பட்டாளென்றறைந்துவிட் டாவிதுறந்தனர். அ
வர்க்கீமத்தொழில் முடித்துவரும் இலக்குவனால் கவந்தனிறந்து சாபமொழி
ந்து திவ்விய தேகம்பெற்று சுக்கிரீவனைச் சேரும்படி இராமனுக்குறைத்துவி
ட்டுச் சென்றனன். அதுகண்டு இராவணன் மனவருத்தமுற்றனன். சீதை
களிப்புற்றனள். இராமலெட்சுமணர் பம்பா நதிக்கரைவழியாய் ரிசியமூக
கிரியைநாடி வருகையில் பிக்ஷாரூபனான அனுமான்பிரவேசிக்கின்றனன். அ
வன் அனுமானெனத்தெரிந்துகொண்டு அவனுடன் ரிசியமூககிரியின்பாற்
செல்லுகையில் பிக்ஷாரூபத்துடன் இருக்கின்றவன் வாலியென்று நினைத்து
க்கொண்டிருந்த இராவணன் இவன் அனுமானெனத்தெரிந்தவுடனே கோ
பத்துடன், அவனைக் கொலைசெய்வதாய் கட்கபாணியனாயெழுந்திருந்தனன்.
இது நாடகமென்றுணர்த்தி மஹாபார்சனாற் றடுக்கப்படாமற்போனாற் கொலை
செய்திருப்பான் நிற்க, துந்துபியின் எலும்புக்குவியலை பத்துயோசனைதூ
ரத்தில் விழும்படி எற்றிவிட்ட ரகுராமன் மராமரங்களை விழவெய்தனன். அ
துகண்டு அனுமான்சந்தோஷித்து அத்துஷ்டவாலியையடித்து சுக்கிரீவ
னைக் காக்கின்ற தெய்வம் இவனேயென மதித்தனன், ரிசியமூககிரியைவிட்
டு சுக்கிரீவனும் இதுவெல்லாங்கண்டு எம்மையாளுங் குலதெய்வமிவனே
யென் றகமகிழ்ந்து மந்திரிகளுடன் இராமனைவந்து வணங்கி நின்றனன்.
இராமன், சுக்கிரீவனுக்கபயங்கொடுத்து சீதையினணிகளை அவனாற் காண
பிக்கப்பெற்ற பின்னர் அக்கருணைத்திறல் இராமன்மீது, யுத்தஞ்செய்யக்கருதி
அட்டகாசஞ்செய்து வருகின்ற வீரவாலியின், சப்தங்கேட்டு வியப்படைந்
த ரகுராமன், வாலியுடன் யுத்தஞ்செய்யச் சென்றனன். அச்சமயமே இ
ராமபாணத்தால், வாலி இறந்தானென்றழுகின்ற அவனது பத்தினி தாரை
யினழுகைக்குரல்கேட்டு, சத்துருதுலைந்தானென்றுஞ் சந்தோஷத்துடன்
இராமபாதவந்தனத்திற்காகத் தனது பரிஜனங்களுடன் சுக்கிரீவன் சென்ற
னன். இதுவெல்லாம் பார்த்திருந்த இராவணன், இராமனால் வாலி யிறந்
தானென்பதைச் சற்றும் நம்பாதவனாய்க் கந்தர்வப்பெண்கள், பொய்நாடக
ஞ் சாற்றினரென்றெண்ணிக்கொண்டு, கந்தர்வப்பெண்களைக் கொலைசெய்ய
எத்தனித்தனன். அதைத்தடுத்த, மஹாபார்சன் சக்கிராகாரியமாலைக்கப்

பெற்ற, இன்னாடகம் பொய்யன்று, இராமனால் வாலி இறந்தது வாஸ்தவமே, அதனைத் தங்களுக்குத் தெரிவிக்கும்பொருட்டே இவர்களாலிங்ஙனம் நடத்தலாயிற்று என்னவே, இராவணனைத்தவிர மற்றனைவரும், வாலியிறந்ததுபற்றி கிலேசத்தை அடைந்தனன்.

வாலிஜெயப்பெற்ற இராமன் பிரவேசிக்கின்றனன். வாலிமகனங்கதனுக் கிளவரசுப் பட்டங்கட்டித் தம்பியாகிய சுக்கிரீவனுக்குக், கிட்கிந்தா ராஜ்யத்தை முடிசூட்டி வைத்தனன். பின்னர் சுக்கிரீவனாலனுப்பப்பட்ட வானரப்படைகள் சீதையைத்தேடச் சென்றனவென்பதைக் கேட்டு இராமலக்ஷ்மணர் களிப்புடன் பதிற்றெரியுமட்டும் பிரசிரவணகிரியில் வசிப்பதாய்ச் சென்றனர். சம்பாதியென்னுங் கழுகரசனால் சீதையிருப்புத் தெரிந்துகொண்ட அனுமார் இலங்காபுரிக்குப்போகக் கடல்கடக்கின்றாரென்ற சங்கதியை, சுசாரர்த்தூதர்களாற் றெரிந்துகொண்ட இராவணன், வானரம் வந்திலங்கையி னுழையாமலிருப்பதற் குண்டான பந்தோபஸ்து ஏற்பாடு செய்து கவலைகொண்டு மந்திரிகளிடம் ஆலோசிக்கச் சென்றனன். சீதையும், அனலையும் அதிகளிப்புடன் அசோகவனத்தை அடைந்தனர்.

ஆறாவதங்கம் முற்றிற்று.

1. அனலை, ஸம்பாதி, இவர்களின் பிரவேசம்.
2. மகாபார்சனுடன் இராவணேசுவரன் பிரவேசம்.
3. சூத்திரதாரன், விதூஷகன் கூடி பிரவேசம்.
4. ஒருகைக் கங்கணமணிந்த சீதையும், அனலையும் பிரவேசம்.
5. இராமலக்ஷ்மண வேடத்தோடு கந்தர்வப் பெண்கள் பிரவேசம்.
6. சிறைகளற்று இரத்தத்தைப் பெருக்கிக்கொண்டு கண்டகதப் பிராணனாய்க் கிடக்கின்ற ஜடாயுவின் பிரவேசம்.
7. ஜயப்பெற்ற இலக்குவன் பிரவேசம்.
8. பிக்ஷு பிரவேசம்.
9. அனுசாருடன் சுக்கிரீவன் பிரவேசம்.
10. வாலிவிஜய இராமன் பிரவேசம்.

ஆக பாத்திரப் பிரவேசங்கள் 13.

---

## ௭-வது அங்கம்.

---

முதலில் சோகஅவஸ்தையுடன் சூர்ப்பநகை பிரவேசிக்கின்றனள், இராமனாற் பங்கப்படுத்தப்பட்டதற்குச் சோகத்தையடைந்தவளான இராவணதங்கை

இராக்கதர்களின் மரணசோகத்திற் காற்றாதவளாய்விதனத்தை அடைந்து கொண்டிருந்தனள். அங்ஙனம் வீடண ராஜனது மந்திரி ஸம்பாதியென்பவர் பிரவேசிக்கின்றனர், இராவண கும்பகர்ணாதி கொடிய இராக்கதர்களைச்சங்கரித்ததிலும் தன் இராஜனான வீடணர்க்கிலங்காராஜ்யமளித்ததிலும் அத்தியானந்தபரிதனாய் இராமனைப்புகழ்ந்துகொண்டும், சூர்ப்பணகியைச்சிந்தித்து அவள் விதனாஸ்பதத்தையும் அவன் துர்நினைப்பையும் தெரிந்துகொண்டும், சற்று ஸம்பாஷித்துவிட்டுச்சென்றனன், இராவணாந்தகனான, இரகுராமன் புடத்தங்கமென அக்கினியிற் குதித்தெழுந்த கற்பலங்காரியான ஜானகியுடன், இலக்குவனுடன், மற்றப்பரிவாரங்களுடன் திருப்ப அயோத்திக்குப் பிரயாணஸன்னாஹனாய் பரதனுக்குத் தன் வரவை முன்னதாகவே சென்றறிவிக்கும்படி அனுமானை யேவிக்கொண்டிருக்கின்றானென்று, தெரிந்துகொண்ட சூர்ப்பணகி இராமன்மீதழுக்காறுகொண்டு, தன் இரண்டு சகோதரர்களான இராவண கும்பகர்ணர்களின் வதத்திற்கு பதிலாய் இராமனது சகோதரர்களான அப்பரத சத்துருக்கனரை இவ்வனுமான் இராமன்வரவைத்தெரிவிப்பதற்குச்செல்லுமுன்னமே யான் மாயையால் ஒரு தவ மடந்தையைப் போல் வேடங்கொண்டு, விரைவிற்சென்று, உசிதமான விதனவார்த்தைகளைச்சொல்லி அக்கினியில்விழுந்தாவியிறக்கும்படி செய்கின்றேனெனச்சென்றனள், அப்பால், பரதசத்துருக்கனர் பிரவேசிக்கின்றனர் வனாந்தரத்திற்றமது முன்னோனான இராமனதுமனைவி ஜானகிப்பிராட்டி அரக்கனாலபகரிக்கப்பட்டாளென்று, கேள்வியாய் அந்தத்திருட்டரக்கனை வதை செய்யும் பொருட்டு இராமனுக்குச் சகாயமாக அவரவர் தம்படையொடு மற்றச் சிற்றரசர்களை வரவழைத்துக்கொண்டு, இரதகஜதுரகபதாதி சேனைகளுடன் பிரயாணசன்னாஹனாய் இராமனை நினைத்து நினைத்து அவனதுபிரிவாற்றாமையினால் துக்கத்வைத அடைந்துகொண்டிருக்கின்றனர். அங்ஙனமிருக்க இராமனுக்கு வனாந்தரத்தில் சுக்ரீவசகாயங் கிடைத்ததென்றும் ஆகையாலொருவரும் உதவிக்குவரத்தேவையில்லையென்றும் சுக்ரீவ சஹாயத்தால் சீதையிருப்புந்தெரிந்துகொண்டு, கடலிற் சேதுபந்தனஞ்செய்து அதன்வழியாய்க் கவிப்படையொடு சத்துருவின் நிவாஸநகரடைந்தனனென்று, மாகவேடராஜனான குகனால் அனுப்பப்பெற்ற நிருபத்தைப்பார்வையிட்டு ஸந்தோஷங்கொண்டு, இலங்கைத்தீவில் இருதிறத்தவர்க்கும் கலகமுண்டிருக்குமென்று நிதானித்துக்கொண்டவர்களாய் ஒருவர்க்கொருவர் கவலைகொண்டிருக்கின்றனர், அத்தருணத்தில் தாபஸிவேடங்கொண்ட சூர்ப்பணகி பிரவேசிக்கின்றனள். அவள் இலங்கைத்தீவில் தனக்கு ஆப்தசிநேகிதர்களான சுக்ரீவாதிகள் அரக்கர் செருவிலழிந்துபோனார்களென்றும், இராமனுமிலக்குவனும், வல்லரக்கர் வஞ்சனையில் மாய்ந்தார்களென்றும், சீதாப்பிராட்டியும், நான்றுகொண்டாருயிர்நசித்தாளென்றும், உண்மைபோல் வஞ்சனையால், வழுத்திய பொய்மொழியை மெய்மொழியெனக்கொண்டு, அந்தச்சோகப

ரத்திற் காற்றாதவர்களாய் அந்தப்பரத சத்துருக்கனர், அக்கினியில் மூழ்க வெத்தனித்தபோது தன்றவப்புதல்வி ஜானகியை இராவணனபகரித்தனனென்று கேள்விப்பட்ட ஜனகராசன் பிரவேசித்தனர், பரதசத்துருக்கனரால், இராம லக்ஷமணர்களுடையவும் ஜானகியினுடையவும் துர்தெசைகளைக்கேள்விப்பட்ட ஜனகர் சோகத்திக்காற்றாது தானும் பரதசத்துருக்கனருடன் அக்கினிக்கிடங்கில் மூழ்குவதாய்ச்சொல்லிக்கொண்டு, அம்மூவரும், தீவலஞ்சுற்றுகின்றார்கள். அத்தருணத்தில் வன்னிவடிவனான அனுமார் பிரவேசிக்கின்றனர், சத்துருசங்காரஞ்செய்து சீதாலக்ஷமணசமேதராய் இராமனிதோ வந்தனன், பரதா நீயில்மூழ்காதே மூழ்காதேயெனச் சொல்லிக்கொண்டு, அவசரத்தில்வந்து பரதனைத்தடுத்து நிறுத்திக்கொண்டு, அவனுக்கு நம்பிக்கை வரும்படி, நடந்த நடைபிடிக்கைகளைச் சுருக்கமாய் நவிலும்போதே தென்றிசையினின்றும் ஆகாயமார்க்கமாய் கவிப்படைசூழ புட்பகவிமானத்தில் சீதாலக்ஷமண சமேதராய் இரவிகுல ராமச்சச்சந்திரன் வருகின்ற திருக்காக்ஷியைக்கண்ணுற்று, பரதர், சத்துருக்கனர், ஜனகர்முதலிய யாவரும் அத்தியானந்தபரிதர்களாய், எதிர்கொண்டுசென்றனர், சீதாலக்ஷமண சகிதராய், ஸ்ரீராமச்சந்திரர் புட்பக விமானத்தினின்றும், நந்திக்கிராமத்திலிறங்கினார், பரதசத்துருக்கனர் வந்துபணிந்தனர், மற்றவர்களும்முறையே யதோசிவந்தனோபசார குசலப்பிரஸ்நங்களொடு பரதராஜனுடையகோரிக்கைப்படி இராம பட்டாபிஷேக மகோற்சவம் நடத்தினார்கள், வாத்தியங்கள்கோஷித்ததுகள், பிராமணர்களுக் காடையாபரணாதி ஸகலமும் கொடுத்தனர்கள் தேவதுந்துபிதொனி முழங்கிற்று தேவர்புஷ்பமாரி பொழிந்தார்கள்.

எ-வது அங்கம் முற்றிற்று.

1. சோகஅவசரத்துடன் சூர்ப்பனகி பிரவேசம்.
2, ஸம்பாதி பிரவேசம்.
3. பரதசத்துருக்கனர் பிரவேசம்.
4. தாபசி பிரவேசம்.
5. ஜனகராஜன் பிரவேசம்.
6. வன்னிரூபனான அனுமான் பிரவேசம்.
7. புஷ்பகவிமானத்தில் சீதாலக்ஷமணசமேதரான இராமர் பிரவேசம்.
8. கௌசிகர் பிரவேசம்.
9. வசிட்டர் பிரவேசம்.

ஆகப்பாத்திரப்பிரவேசங்கள் 12.

---

ஆக கதாஸாரஸங்கிரகம் முற்றிற்று.

# குறிப்பு

---

இந்நாடகத்தைப் படிக்கின்றவர்கள், இதிற் கவனிக்கவேண்டும் விஷயங்களாவன:—

இதில் (——) திரை. என்று குறித்திருக்கிற அடையாளங்கள், நாடக ஆரம்பத்திலுள்ள, திரைச்சீலைகள் என்றும், இன்னான் பிரவேசிக்கின்றனன், என்ற இடங்களெல்லாம் அந்தந்த ரூபமான வேடக்காரர்களின் வரவுகள் என்றும். (தன்னுள்) என்று குறித்திருக்கிற அடையாளங்கள், அந்தந்த வேடக்காரர்கள் மனதில் நினைத்துக்கொள்கிற விஷயங்களென்றும். (வெளிப்படை) என்று குறித்திருக்கிற அடையாளங்கள், அவரவர் திறந்து பேசிக்கொள்கிற விஷயங்களென்றும், அர்த்தங்களாம். அன்றியும், பற்பல இடங்களில் ஆனந்தம், ஆச்சரியம், சோகம், தீனம், கோபம், ஆசை, சிநேகம், அநுராகம், தயவு, இதுமுதலான பதங்கள் வருகிற இடங்களெல்லாம், அந்தந்த ரூபமான பாவங்களென்று தெரிந்துகொள்ளவேண்டும். இன்னமும் சிற்சில பாடல்களில், ☞ இவ்வடையாளமிட்டிருக்கிற இடங்களைக் கவனிக்கவேண்டும். அந்தந்தச் செய்யுள்களில், ஒரே ஸந்தர்ப்பத்தில் பலபேர் பலவிதங்களாய்ப் பேசிக்கொள்ளுதலும், ஒரே ஸந்தர்ப்பத்தில் ஒருவன்றானே ஸமயோசிதம்போல் பலவிதங்களாய் ஸம்பாஷித்தலும், ஏற்படுகிறதினால் அந்தந்தச் செய்யுள்கள் அந்தந்த இடத்தில் முடிவு பெறாமல் பல இடங்களாய் முடிவுசெய்யப் பெற்றிருக்கின்றனவென்றறிந்துகொள்க.

---

# பிழைதிருத்தம்.

| அங்கம். | பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| 1 | 12 | 6 | ன் | ன |
| | 17 | 28 | வு | மு |
| | 17 | 22 | ள் | ள |
| | 22 | 2 | | ட |
| | 22 | 28 | ன | ன் |
| | 23 | 12 | னி | ணி |
| | 23 | 25 | தவ | வத |
| | 24 | 33 | தி | த |
| | 33 | 6 | | பு |
| | 37 | 13 | ன் | ர் |
| | 37 | 20 | ரி | றி |
| | 47 | 7 | ன் | ன |
| 2 | 65 | 14 | மூ | வி |
| | 68 | 8 | ற் | ர் |
| | 68 | 27 | னி | |
| | 71 | 9 | ழ | ழு |
| | 74 | 22 | ார | ரு |
| | 74 | 25 | ரே | ஜே |
| | 74 | 33 | [illegible] | க் |
| | 75 | 32 | ட | ட் |
| | 76 | 10 | ெரு | ெரா |
| | 78 | 12 | ெரு | ெரா |
| | 81 | 14 | பார்ர் | பார் |
| 3 | 86 | 2 | றி | ரி |
| | 89 | 29 | றி | ரி |
| | 92 | 13 | ர | ற |
| | 93 | 25 | | க்க |
| | 93 | 32 | கி | |
| | 96 | 6 | றி | ரி |
| | 96 | 6 | உ | ார |
| | 96 | 16 | | ம் |

ஸ்ரீராமஜெயம்.

# ஜானகிபரிணய நாடகம்.

## பாயிரம்.

### விநாயகர்துதி.

வெண்பா.

திருமணஞ்சேர் தாமரையாள் சீர்ஜா னகியாள்
பரிணயத்தை நாடகமாய்ப் பாரி—லுரைதருவாம்
முத்திவச மாகமுனைப்பிறைக் கோட்டும் பரனைப்
பத்திவச மாகப் பணிந்து.

செந்தமிழாற் சானகியின் சீரார் பரிணயத்தைச்
சந்தமுறு நாடகமாய்ச் சாற்றவே—தந்தி
முகவரையிற் பாரதத்தை முன்னாள் வரைந்தோய்
சகலவா முந்தாநீ தா.

தரு. இராகம் நாட்டை, சாப்பு தாளம்.

### பல்லவி.

கணநாயகா காத்தருள்வாய் (கணநாயகா)

### அனுபல்லவி.

குணபூஷணு குஞ்சரவதனு
துணைவந்தருள் சுகானந்தஸதனு. (கண)

### சரணங்கள்.

ஏகதந்தனே யீசர்மைந்த னே
ஆருவாகனு அன்பர்க்குகந்தோ னே
வாருமயிலேறும் வள்ளல்முன்வந்தோ னே. (கண)

அஸ்த்தமோதகா அருடாய கா
பக்த்தபாலகா பவமோச கா
சுத்தனே அநகா சுப்ரவிநாய கா. (கண)

ஜானகிபரிணயந் தமிழினன்னய ம்
ஆனநாடக மாகவுனைசெய் ய
வானோர்பெருமானே வந்தருள்வாயை ய. (கண)

## சரசுவதி வணக்கம்.

### விருத்தம்.

அலைகடலுலகின் மிக்க வரியசெந்தமிழால் யானும்
நலமுறு ஜனகிமன்ற னுடகந்தனை யியம்ப
மலரய னுவிற்றோன்றி மைந்தனென் னிதயப்பூவி
லுலவுபொற் கொடியேவாணி யுன்பதம் பணிகின்றேனே.

தரு. இராகம் கானடா. சாப்பு தாளம்.

### பல்லவி.

பதுமாஸனீ பாவமோசனீ
பரமார்த்தசொரூ பப்ரகாசனீ

### அனுபல்லவி.

மதுரம்பொழியும் வாக்விலாசினீ
மந்தகாசினீ மாதயாலோசனீ (பது)

### சரணங்கள்.

சந்ததம்பணிவேன் சாரதாகல்யா ணி
தமியேன்பாவில் தழைத்தருள்வா ணி
சுந்தரிசர சோதிபிரசச்சிரோ ணி
தொங்கெழில்வேணி சுமுகிவீணபா ணி (பது)

மதிதவளகாத்ரீ வளர்கலைநற்க்ஷேத் ரீ
வாக்கில்வந்தருள் மங்களசரித் ரீ
துதிபெருங்குணத்ரீ சுரமுனிகணஸ்தோத் ரீ
துங்ககாயத்ரீ பவித்ரீசாவித் ரீ (பது)

ஞானநன்னிலையே நம்பினேன்கலை யே
நாவில்வந்தருள் நானுன்மதலை யே
தேனேர்குதலையே தீர்ப்பாயென்கவலை யே
தேவிவிமலையே மலைநேர்முலை யே. (பது)

# ஞானசௌந்தரி நாடகம்.

## விஷ்ணு துதி.

### சந்தவிருத்தம்.

நாதமலி முரளியிசை காதுகொடு ப்சுவினின
நாடியொரு கணமதனி னனி யோடி
ஞாலமிசை மடுநிறைகொள் பால்சொரிய வினைவணுகி
நாளுமிடை யறவளரும் நலமான
வேதஉப நிடதசிவ காரணமிருமசு துவை
வேகமுட னுணலெனவும் விழை வோடு
மீறுகல வியினிலிடை மாதர்தன மலிகலவை
வீழ்பொடிகள் சிகுவைகொடு மெது வாக
ஆதரவொ டுவைவிலக வேபுரித லெனவுமிக
வாவலொடு பருகிமகிழ் வது வான
ஆதிநடு முடிவினெடு மாலனக பாவடிவ
மானவொரு பொருளகில மது வான
சோதிசக தலமதில்வி நோதமய வனுர்தமுறு
சூழிடையர் மாயில்வரு சுகு மாரன்
தோமருவு கொடியபவ நோயகல வருளினிய
தூயவிரு பதமலர்க டுணை யாமே.

---

## உமையவள் துதி.

### சந்தவிருத்தம்.

இதழிமக ரந்தநிறை கழுவியொளிர் பஞ்சதனை
இருசரணி லங்க நனை யேர்
கதுவுமிரு கொங்கைபடர் பொடிகழுவி விந்தைவரி
கவினுறவு கந்த ருளி னேன்
கதிதருகுன ன்பருடனி னிதலர்கொண் மஞ்சமிசை
கல்விபுரி யென்ற சகி னோர்
மதிமுகமி லங்குசிலை நுதல்விழிமு னிந்தமலை
மகளிருப தங்க டுணை யே.

---

## குருவணக்கம்.

### விருத்தம்.

சகத்துளா கவலைநீக்கி சந்தத மறிவைத்தேக்கி
அகத்துள விருளைப்போக்கி யன்புடன் றன்போலாக்கி
மிகுத்த சந்தேகந்தீர்த்து வேதமெய்ப் பொருள்விளக்கும்
மகுத்துவ குருவின்றிவ்விய மலரடி சென்னிசேர்ப்பாம்.

---

## பெரியோர்வணக்கம்.

### விருத்தம்.

சதிர்பெருஜனகன் மகளெனவுதித்த ஜானகிபரிணயந் தமிழின்
மதியிலிவகுத்தன் மதியினை மதலைவவ்விட மணமலர்க்கரத்தால்
எதிர்படவிகுத்த லெனத்தகும் புலவீரென்னைநீ யியம்பிணையென்னி
கதிதருராம மந்திரமுளதாற் கழறினேன் பிழைபலகருதேன். (ற்

தரு. இராகம் பந்துவராளி. ஆதி தாளம்.

### பல்லவி.

இந்தப்ரபந்தத்திலேதுதப்பிதம்விளைந் திட்டாலும்பொறுத்தருள்வீரே.

### அநுபல்லவி.

வந்தனஞ்செய்வேனிதன் பிழைதீர்த்துப்பெரியோரே
இந்தவிதமுறையென் றெனக்குமதிசொல்வீரே. (இந்)

### சரணங்கள்.

இலக்கணத்தினிலேயோர் ... ... அக்கரமாயினும்
இவ்விதமென்றறி ... ... ... ... வேறே
கலக்கமில்லாமலே ... ... இலக்கியத்தினிலேயான்
கடுகளவாயினுந் தெரி ... ... ... ... வேறே
பலத்தகிரணகதி ரோனுக்கெதி ... ... ... ராகப்
பார்க்கிற்சிறுமின்மினி யாமோவதுபோ ... லாக
துலக்கமாகக்கற்ற புலவீருங்கண்முன் ... ... பாகச்
சொல்வேன்மதலைச்சொற் கேட்குந்தாய்போலன் பாக. (இந்)

அந்தணவரன் ராம ... ... ... பத்ரகவீந்த்ரன்
அருளியவடமொழி ... ... ... ... யாய்ந்து

செந்தமிழாற்சானகி ... ... பரிணயநாடகஞ்
செப்புகின்றேனெழில் ... ... ... வாய்ந்து
சந்ததமாசையால் கோகிலந் ... ... ... தித்திக்கத்
தானேகூவிடவெதிர் தவளையுஞ் ... ... சத்திக்க
சிந்தைகொண்டதுபோலாம் ஆயினும்ப்ர ... ... வித்திக்க
தெளிவுற்றிசைந்தேனும தருட்கொண்டு... ... வர்த்திக்க. (இந்)

ஒருமதக்களிற்றினை நளினத்தந்துவிற்கட்ட
உள்ளந்துணிந்தாற்போல் ... ... ... நானே
அரியதானவிச்சரிதத்தை ... ... ... நாடக
மாகச்சொலத் துணிந் ... ... ... தேனே
கரியகாகமுஞ்சொன்னக் கிரியையடைந்த ... தாலே
கனகநிறமாமென்று கழறுவரது... ... ... போலே
திருவாஞ்சனகிமன்றற் பரிசுரைப்பத ... ... னாலே
சிறியன்புன்சொல்லுநன்றாய்ச் சிறந்தசொல்லாமென் மேலே. (இந்)

---

கதாஸங்கிரகம் விருத்தம்.

சீர்படைத்த ஜனகிமணஞ் செய்துராமன் தென்னிலங்கை வேந்துசெய்மந் திரத்தினாலே, கூர்படைத்த முட்கணிறை கானமெய்த குமரிதனை யரக்கர்கோன் மாயஞ்செய்து, பேர்படைத்த ரகுவீரன் ஜயப்ரதாபம் பின்னொருவந்தராகாடி கையினாற்கண்டு, தார்படைத்த விலங்கேசன் றவிக்காராமன் சத்துருவைத் தகர்த்ததிவிய சரிதந்தானே.

தோடயம் விருத்தம்.

சுரர்பதி முதலாயாருஞ் சூதராதியரு நல்ல
சரசிஜவயனும் போற்றுஞ் சானகி பரிணயத்தை
வருதினை பணிகொழிக்கும் வாரிதி சூழுமிந்தத்
தாரணியி னுடகத்து தயஞ்சொல் தோடயஞ்சொல்வேனே.

இராகம் நாட்டை. ஜம்பை தாளம்.

சீரார்தமிழாற்றிங்கண்முகி திவ்வியமங்களவடிவழகி
பாரார்திருவெனுமாஜனகி பரிணயநாடகம்பாட ஆ ஆ
காரார்மழைமதக்கரிராசக் கவின்முகன்பாசசராங்குசன்
ஏராரொருகோட்டுடையீசன் எழிற்கணேசன்றுணையே.

# பாயிரம்.

அந்தணராமபத்திரர்நயமே அருளினர்வடசொலாற்குவலயமேல்
சந்ததஞ்சானகிபரிணயமே தமிழ்நாடகமாய்ச்சாற்றிடவே ஆ ஆ
செந்திருவுமவள்சேர்மாலும் சிவனுமுமையுங்குகன்சீர்வேலும்
பைந்தொடிவாணியுமெக்காலும் பாலித்தருள்வதுகடனே.

சிந்திதபோகமெலாமுதவும் திவ்வியசரித்திரமானதுவும்
சந்தமுறுஜனகிமணமிதுவுஞ் தமிழ்நாடகமாய்ச்சாற்றிடவே ஆ ஆ
பந்தவினைத்தொடர்துயர்நீக்கும் பண்பொடுபணிபவர்தமைக்காக்கும்
சுந்தரமாங்கஞ்சத்தெழிலேர்க்கும் தூயசற்குருவின்றுணையே.

பாயிரம் முற்றிற்று.

உ

ஸ்ரீராமஜெயம்.

# ஜானகிபரிணயநாடகம்.

## க—வது அங்கம்.

## நூல்.

### விநாயகர்பிரவேசம்.

**விருத்தம்.**

பத்தியாய்த் தொழுவோர்க்கன்பன் பாரதந்தனை முன்சொன்ன
வத்திரி தன்னிற்றீட்டு மழகியகோட்டுப் பெம்மான்
நித்தமின் னாடகத்தை நிரந்தரங் காக்கவேண்டி
கர்த்தனைங் கரனூமூலக் கணபதி தோன்றினாரே.

தரு. இராகம் சுருட்டி. ஆதி தாளம்.

**பல்லவி.**

விநாயகர்வந்தார் ஜய ஜய விநாயகர்வந்தார்.

**அனுபல்லவி.**

அநாதரக்ஷகர் அம்புயநேத்திரர்
ஜநார்த்தனன்மருக சிங்காரகாத்திரர். (விநா)

**சரணங்கள்.**

மகரக்குழைகள்காதிலிலங்க தட மார்பினிற்பூணூற்றிலங்க
சிகையிற்கந்தமலர்கள்சூட்டி சீர்பாசாங்குசங்கையிற்காட்டி
குகசோதரன் மிகவேமன மகிழ்வாய்கல முறுவிக்கின. (விநா)

பத்தர்கள துகுற்றஞ்சகித்து அவர்கணல்ல பதத்தைச்சாரவே அனுக்ரகித்து
ஒற்றைக்கொம்புபளபளெனகன்னம் ஓடுமெதஜலத்தால்தளதளென
மெத்தமகிழ் வுற்றாருயா னைத்தேறிநட த்துஞ்சித்தி. (விநா)

அப்பம் எள்ளுருண்டையுமவியும் பொரிவகையும் அவலுமோதகமுமிட்டவி
நற்பலாவின்சுளையும்பரிந்து நன்றாயருந்தித்தொந்திசரிந்து [யும்
பற்பலவி தப்பிறப்பு முப்பாதெனைத் தப்புவிக்கும். (விநா)

## க-வது அங்கம்.

## சூத்திரதாரன் பிரவேசம்.

### விருத்தம்.

சீர்த்தியாம் பரதநூலின் சித்தாந்தங் களிலும்வேத
சாத்திரங்களிலுந் தேர்ந்து சாதுர்யவான் களாநற்
கீர்த்திபூடணர் நிறைந்து கெடிபெரும் மேலாம்ரங்கிற்
சூத்திரதார னென்போன் துரிதமாய்த் தோன்றினானே.

### இதுவுமது.

புகழ்பெரு சகலவித்வ பூடணர் நிறையரங்கிற்
றிகழ்மணி யாழிபூண்டு செவிகளிற் கடுக்கனிட்டு
சிகைதனி லுருமாற்சேர்த்து செவ்வையா முடுப்புமாட்டி
சொகுசுட னிநடந்து சூத்திரதாரன் வந்தான்.

### சூத்திரதாரன் சொல் விருத்தம்.

தரங்கவா லிலையராவிற் சாய்ந்துகண் டுயில்வோய்போற்றி
சரங்கடா வரங்களெங்குந் தனிநின்ற முதலேபோற்றி
கரங்குவித்திடு வோருள்ளக் கருத்தறிந்தவர்கள் வேண்டும்
வரங்கடந்திடு வோய்செங்கண் மாலேநின் மலர்த்தாள்போற்றி.

### சூத்திரதாரன் சபையை எதிர்நோக்கி சொல்.

### ஆசிரியவிருத்தம்.

கல்விக்களஞ்சியங் கசடறக்கலைகளைக் கற்பவர்களுக் குணர்த்துங்
கனவின்ப சரசமாங்கவிதை மங்கையர்கட்கு கந்தசுகமருணயகம்
பல்வர்த்தனைச் சொற்சமத்கார விவகாரபரமார்த்த ஞானதீபம்
பரமான நவரசப்பிரதான பரதமதபாரநூற் பாரங்கத
நல்வித்துவச் சிகாமணிகணிறை பொக்கிஷநற்புகழ்ப் பெரும்பாற்கடல்
நடுநிலையுரைத்திடுஞ் ஞாயத்தலம்பொழியு நனிபூற் றருட்ப்ரவாகந்
தொல்புண்ணியத்தி னலெளிதிற் பெரும்பதந் தொழுவதற்கருகமான
சுமுகமுளசபையிதே தேவசபைமாசபை தூயபெரியோர்கள் சபையே.

(வசனம்) ஆகையாலிச் சபையோர்கட்கு வந்தனஞ் செய்கின்றேன். எனது குலாசாரமாயிருக்கிற அபிநயவித்தையை பரதாசாரிய மதானுஸாரத்துடன் பிரகாசஞ்செய்வித் திப்போதான்மாவை கிருதார்த்தஞ் செய்யப்போகின்றேன். எங்ஙனமெனின்,

### ஆசிரியவிருத்தம்.

விரிமாநிலத்தி லெப்பிறவியுநிலையன்று மிகவிழிவு வீண்டுக்கமே
வினவியோர்ந்திடில் மாறிமாறிவருஜனனம் விடுவித்தலே மேன்மையெனவுந்

## ஜானகிபரிணய நாடகம்.

தருமாதிநூல்க ளாய்ந்தவித்தம் கட்டுரையினை [illegible]
சாற்றும்பிம்மானிடச் சன்மஞ்சிலாக்கியமிச்சடலம் வீழ்ந்திடுமெனக்கோ
ஒருமாமனத்தினை யொடுக்கிஞானந் திகழுவோர்க்கல் தூர்லபமென்னி
டற்றகுலபாண்டித்ய வாசாரமுறையதா யுயர்தெய்வபக்திசெய்தாற் [றும்
றிருமால்பதங்கிடைத் திடுமெனக்கருதியென் சீர்குலாபிகய [illegible]
திவ்யபுண்ணிய சரிதைரூபமாய் வாழ்த்தியிச்சென்ம மீடேற்றல்செய்வேன்

(வசனம்.) ஆகாயத்திற் செவி கொடுத்துக்கொண்டு ஓ ஓ பெரியோர்களே என்னென்ன கட்டளையிடுகிறீர்கள்.

### விருத்தம்.

பதங்கணன் முத்தாமென்னப் புகர்ந்திட வெள்ளையாயும்
அதிரதம் பெருகாநின்ற அர்த்தபந் தங்களாயும்
புதியகற் பிதமதாய்நற் புண்ணிய முளதாயிந்த
வித்மொரு நாடகத்தை விளம்பிட வேண்டுமென்றே.

(வசனம்.) ஆச்சரியம் ஆச்சரியம் என் மனதிற்கொண்ட எண்ணம் யாதோ அஃதே இச்சபையோர்களினுக்ஞாபனமாக இருக்கின்றது. ஆகவே இது வோர்நன்னிமித்தமாக தெய்வமிசைத்தது நன்று நன்று (திரையை எதிர்நோக்கி ஓஓ! நாடகாலங்காரியான நடிப்பெண்ணை எதிர்பார்க்கின்றேன்.

### பொது விருத்தம்.

விண்டலம் பரந்துலாவு மேகத்தினின மாங்கூந்தன்
மண்டல மதியாம்வட்ட வதனமந்தர மாங்கொங்கை
தொண்டலமா மரம்பைத் துடையெனு நடனப்பாவை
உண்டலங் கிருதாளாயு லாற்றினள் தோற்றினளே.

தரு. இராகம் தேசிகதோடி. ஆதிதாளம்.

### பல்லவி.

வந்தனள் நடி மாதரங்கினில்

### அனுபல்லவி.

சந்தமின்னற் றான்வந்ததென்ன

### சரணங்கள்.

## கலைந்தா அங்கம்.

சீதாமணாளா

சிற்றிடைமொய்க்குழல் மத்ததனத்தின ன்
வெற்றியயிற்கணை யொத்தவிழிச்சி ய
ளெற்றுதிரைக்கடல் முத்தினகைப்பி ன
ளூற்றத்திருவத்தின்ள்முக்கி ய

சீலவுத்தமகுண வதிலமிகு
ஞாலமெச்சிய அரசியல்மைதில
ஞலியற்றிடு தவமதில்மகளென
சாலிநற்றலமதில் வருதிருவெனும்

சீதாமணாளா தீனதயா ளா
தீதாஞ்சிலையைப் பெண்ணாய்ச்செய்மலர்த்தா ளா
மாதாபிதாவும்நீயே மனதுவைத்தெனையாளா ய். (அரி)

அகிலப்ரகாசா

அலைகடலொப்பென வுமைமடுவிற்க ரி
அலர்கொளவுற்றிடு பொழுதுபிடித்தி டு
மலமுதலைத்தலை துணிபடவிட்டி டு
வலமுறுசக்கர மணிதருவித்த க

ஆனதுர்ச்சனர் வலிமதமழியவும்
மானவுத்தமர் பயமறவளரவும்
மானிலத்தினில் வடிவொடுஜனனமாய்
தீனரக்ஷணை புரிபவவருளினல்

அகிலப்ரகாசா அருள்ஸ்ரீநிவா ஸா
புகழ்முத்துசுப்பன்றமிழ் பொருந்திடும்நே சா
சகலவுயிர்கட்கு மாதாரருணவிலா சா. (அரி)

நிந்தாஸ்துதி.

இராகம் காம்போதி. ஆதிதாளம்.

### பல்லவி.

ஆதிதேவனே யீதேதென்றுனைசெய்வேன்.

### அனுபல்லவி.

மாதவர்பணியும் வேதநாயகா ஸ்ரீ (ஆதி)

# ஞானசௌந்தரிய நாடகம்.

## சரணங்கள்.

அண்டமெல்லாம்நீண்டாய் ஆரமாய்ப்பொன்கொண்டாய்
துண்டரீகமாயேன் றனைவமாலைபூண்டாய். (ஆதி)

ஆயவுயிர்க்கெல்லாந் தாயேஉற்றதந்தாய்
நீயும்ஒருவர்க்கேன் சேயெனவும்வந்தாய். (ஆதி)

உலகெலாமுதவும் உந்திக்கமலத்தாய்
பலிமுன்னாகநீயேன் படிதனையாசித்தாய். (ஆதி)

நீயேஅகிலேசன் நினக்கும்நயமாம்
பாயலுமிலையோ படுக்கவும்பயமா. (ஆதி)

பத்தன்முத்துசுப்பன் நிததந்தொழுமெந்தாய்
சத்துச்சித்தானந்தத் தற்பராமுகுந்தா. (ஆதி)

## சூத்திரதரன் நடிக்குச்சொல்.

கலிவெண்பா.

வண்டார்குழல் மடவாய் வாரிருக்கு மென்முலையாய்க்
கண்டார் மனங்கவருங் கண்ணாளே அண்டரினம்
வானமுத மாமெனவே வாரியுண்போ மென்றுவருங்
கானரஸங் காட்டுங் கனிமொழியே மானே
மயிலே மரகதமே மாணிக்கமே மாங்
குயிலே அனமேமென் கொம்பே நயமான
தம்பூர்ச் சுதிகூட்டித் தாள ஞானத்துடனே
ஸொம்பாய்ச் சிலராகஞ் சொன்னதிலே அம்புவியிற்
கேட்டுச் சபையிற் கிளாரம்பை மாரெல்லாம்
நாட்டரம்பை யாய்த்தூணில் நாடிடவே பாட்டிரசம்
தெள்ளமுத மாந்தியுற்றோர் சித்திரமொப் பாவரொன்றால்
உள்ளபடி சொல்லுனக்கா ரொப்பாவார் வள்ளமுலைப்
பச்சைப் பசுங்கிளியோ பாவைநல்லா யுன்பாடன்
மெச்சினேன் மெச்சினேன் மேல்.

## அடுக்குமொழி.

பசுங்கிள்ளையேநடியே திசையெங்கும்புகழவையில்
வசந்தத்திறொடுமொழி ரசங்கத்தைச்செய்வாயே.

எப்படியென்றால்,

## க-வது அங்கம்

### கலி விருத்தம்.

பிக்க ளன்புள பேடெட‌ன் ஹுட‌ன்
உகந்து சிறைக்கால் வண்டினம் ஒட்டியே
மகிழ்ந்து மூக்கினுல் மாந்தளிர் கொத்தியே
மிகுந்த லீலை செய்வேளை வசந்தமே.

(வசனம்.) ஆகையால் இப்பேர்ப்பட்ட வசந்தகாலத்தை ஆரம்பமாகக் கானஞ்செய்துகொண்டு ஓர் அற்புதமான நாடகத்தை ஆரம்பஞ்செய்யவேண்டும் காலதாமதஞ்செய்யாதே நடிமாதே. (நடி) நல்லதப்படி செய்கின்றேன். (கணப்பொழுதாலோசித்து)

### சிங்காரக்கவி.

மதியுளசூத்ரதாரா சதிர்பெறுசபைகளிக்கும்
விதமொருநாடகந்தான் இதுவெனவறிகிலேனே.

வசனம். எவ்விதமான நாடகத்தை நடத்தும்படி இச்சபையோர்கள் நமக்குத்திரவுசெய்திருக்கின்றூர்களோ அவ்விதமான நாடகம் யாதெனச்சிந்திக்கின்றேன்.

(சூத்திரதாரன்) சிரித்துக்கொண்டு (வசனம்.) அடி மதிசாலினீ இப்பொழுது சமீபகாலத்தில் இயற்றி உன்றூற் கற்றுணர்ந்ததான.

### விருத்தம்.

சரளமாம் பதங்கள்வாய்ப்பு சந்தர்ப்பங்களுக் கொப்பாக
சரஸமாம் பொருளின்வாய்ப்பும் தாளராகத்தின் வாய்ப்பும்
பரதசாஸ்திர வல்லோர்நற் பாவலர்கான வல்லோர்
சரிசபா செனப்புகழுஞ் சானகி பரிணயந்தான்.

(வசனம்.) ஈதென்ன மறந்துவிட்டனேயா.

(நடி.) மனக்களிப்புடன் (வசனம்.) நன்று நன்று நன்குணர்த்தினீர்

### விருத்தம்.

நல்லதுசின்னூற் ருண்டின்முன்னர் பலகலைகளெலாம் நயந்துதேர்ந்த
வல்லவராம் ராமபத்ரதீக்கதரால் வடமொழியில் வளமேலோங்கச்
சொல்லியதைச் செந்தமிழான் முத்துசுப்பபாரதிக டொருத்துச்சொற்ற
மல்லிசைச்சானகி தேவிபரிணய நாடகந்தானே வாய்ப்பதாமே.

எங்ஙனமெனில்,

## விருத்தம்.

இங்குவாய்ப்பதனை யியம்புவன்கேண்மோ இலக்கணக்கவிப் பொருட்செறிவும், இங்கிதமொழியுந் தேசிகமெட்டில் இசைதருபதங்கள் ஜாவளியும், தங்கியவேட தாரிகளுலவத் தக்கவுீன் ஜோடனையழகும், பொங்கு சங்கீத நாட்டியச்சிறப்பும் புகழ்நவரஸ மிகப்பொழியும்.

(சூத்திரதாரன்.) அதுதான் அதுதான் அப்பேர்க்கொத்த அற்புதமான ஞானகிபரிணயநாடகந் தமிழினிற்றேனென உரைத்தோன் சிறப்பினைக்கேண்மோ.

## ஆசிரியவிருத்தம்.

செந்தமிழ் நல்வடமொழிகள் என்றகடல் பருகியித்
தேசத்தவர்க் குதவியாய்ச்
சீர்கொண்ட வேதாந்த நாடகமுதற் பனூற்
றேன்மாரி பொழியுமேகம்
வந்தவர்க் கனமுதல் வேண்டிற் றளித்திடும்
வான்சுரபி தனகுபேரன்
மறையவர் குலோத்துங்கன் மாக்ஷிமைப் புனல்வேலி
மால்முத்து சுப்பவள்ளல்
சொந்தமகன் மைந்தனென்றும் புகழ்பரம் புவித்
துவசிகாமணி ரத்தினம்
தூயலக்குமண சாஸ்திரிகட்கு முன்றோன் றிட்ட
தோன்றலெழில் வரதராஜ
அந்தண வரன்சுதன் என்றும்நனி புகழ்கின்ற
அரிகேசநகரில் வாழும்
அமுதரஸ பரிபூர்ன்ன உசிதபரி பாககவி
அணிமுத்து சுப்பவேளே.

## விருத்தம்.

இயற்றிடு கவிப்ரபந்தம் இராகவன் சரிதந்தன்னை
நயமுடன் வழுத்தலாலே ஞானமும் புகழுநல்குந்
துயரினை யொழிக்குமின்பச் சுகமெலாந் தந்துமேலாம்
உயர்பதமளிக்கும் வேண்டிற் றுதவிடுஞ் சாதந்தானே.

(வசனம்.) ஆகையால் அத்யந்தம் ஆனந்தகரமான ஞானகிபரிணயமென்ற நன்னாடகத்தை இச்சபையோர் களிக்கத்தக்கதாக வசந்தகாலப்புகழ்ச்சியை ஆரம்பமாக வைத்துக்கொண்டு கானஞ்செய்வாய் சங்கீதநடன சிங்கார ஓய்யாரியே.

## சரணங்கள்.

உச்சடங்காமலென் கனதனமீறுதே மெய்
பச்சப்பசந்துகைகால் சோருதே. (சாமியை)

செங்கரும்புபாலனம் தேனுங்கசந்தேனே என்
அங்கம்ஒரு துரும்பானேனே. (சாமியை)

பருவவயதில்யான் பரதவித்திடுவேனோ
மருவத்தருணமடி வாராரோ. (சாமியை)

பக்தன்முத்துசுப்பன் பதஞ்சொலிநடஞ்செய்வேன்
இவ்வுற்றதுரைத்தால் இருஷ்ணனுடன்வருவான். (சாமியை)

பொது நடனச்சிறப்பு.

இராகம் கமாஸ். ஆதிதாளம்.

## பல்லவி.

ஆடினள் நடியெனும்பெண்பாவை யாரும்
பிரமித்திடவே. (ஆடினள்)

## அனுபல்லவி.

எடணிக்குழலவிழ்ந் தாடமுடித்துக்கிட்டி
யோடிக்காதின்கனுற வாடியகண்சிமிட்டி. (ஆடினள்)

## சரணங்கள்.

அளியினங்குழல்மலர்மதுவுண்டு செய்கானத்தொனியும்
அம்புயக்கரவிரல்தம்பூர்த்தந்திகளின் ஸ்ரீதானந்தமாயாடுஞ்சொனியும்
களினமுகியின்கண்டத்தொனியிற் ப்ரவாகிக்க
நன்றாய்ப்பேதமறியாத வையோர்மோகிக்க (ஆடினள்)

மத்தளங்கின்னரிவாத்தியக்காரர்கட்கு வந்துதாளம்
மத்தகத்தனங்கள்பயிற்றிவைப்பனபோல் முழக்கமிகமனமகிழ்ந்து
அத்தமிரண்டிலொன்றை மத்தியில்நாட்டி
மற்றொன்றாலவைசித்திரம்போல் நிற்கச்சைகைகாட்டி. (ஆடினள்)

(வசனம்.) இவ்வாறு இன்னவும் பற்பலவிதங்களாய் சங்கிதநடன
கோலாகலமத்தியில் (அந்நடிப்பெண்) கிடுகிடென உடனடுக்கமுற்றனள்.

சூத்திரதாரன் (பார்த்து) ஆ ஆ! சங்கீதநடன சிங்கார ஓய்யாரியே மகான்களான இச்சபையோர் உனது அற்புத கானநடனங்களைக்கண்ணுற்று சித்திரத்துக்கொப்பானவர்களாயிருக்கின்றனர். அவ்விதமிருக்க அந்நடன சங்கிதங்களைவிட்டு குழல்சோரத் துகில்சோர ஆபரணங்கள்சோர மெய்யெல்லாம் வியர்க்க இப்படி நடுங்குதற்குக் காரணம் யாது யானறியச்சொல்வாய்பெண்ணே.

(நடி.) ஆ! இன்னும் நீர் பார்க்கவில்லையா; ஆ! என்னென்று சொல்வேன் இதுவென்ன பருவதமா.

சிங்காரக்கவி.

வாக்குநன்னயனே மேற்கினிநேக்குதி
தாக்குவெம்புலியென ராக்கதன்வருகிறான்.

ஆகையாற்றான் நடுங்குகின்றேனென்று வேறுபக்கந்திரும்புகின்றனள். சூத்திரதாரன் (பார்த்து) ஆச்சரியம் ஆச்சரியம்.

(வசனம்.) ஆ! நங்கையர்க்கரசி அஞ்சேலஞ்சேல் இதுவென்கொல் இப்படி நடுங்குகின்றாய். ஆனால் பெண்களுக்கபலையெனப் பெயர் உண்டென்பதும் சரியே, ஆ! இப்படித் திடச்சித்தமில்லாதவர்களுமுண்டோ, அதோ வருகின்றதாரென்று நினைத்தாய், தசமுகன்றன் அனுசரனாகிய சாரணன்றன் உருவத்தை வகித்துக்கொண்டு யெனது மைத்துனனன்றோ வருகின்றான் எது நாம் நாடகம் நடத்துகின்றோமென்பதை மறந்துவிட்டனையோ நன்று நன்று அவன் இந்நாடகச்சாலைக்கு வருகின்றவன் நாமும் இனிமேலுன் வேஷகிருத்தியத்தின்பொருட்டு தயாராகவேண்டும். ஆகையால் போகலாம் வா (நடி) யென்று சென்றனர்.

## அப்பால் சாரணப்பிரவேசம்.

பொது கலிவிருத்தம்.

வாரணிகொங்கையு மாவலசூத்திர தாரனுமப்புறஞ் சார்ந்தபினங்கனஞ்
சாரணகாதகன்சபையிலேமிகத்தோரணகதியாய்ச்சொகுசாய்த்தோன்றினன்.

தரு. இராகம் தனாசு. ஏகதாளம்.

### பல்லவி.

சாரணன்வந்தானே சபைதனில், (சாரணன்)

## அனுபல்லவி.

சாரணன்வந்தான்பொன் னாரமார்பிலணிந்து
வாரணம்போல்நடந்து படர்ந்து. (சாரணன்)

## சரணங்கள்.

நிர்மலநிலவிலாக் கங்குலெனுங்காயன்
நிறைந்ததுன்மதியன் துர்க்குணநேயன்
செம்மறிஅசத்தின் கொம்பெனமுறுக்கி
செம்பட்டைவீசைதிருக்கிச் சபைநெருக்கி. (சாரணன்)

வித்தாரநெற்றியிற் சந்தனப்பெட்டு
விளங்கவேவட்டச் சுளகளவிட்டு
அத்தங்களால விழுதெனத்தொங்க
அஞ்சனமலைவருவ தெனவிளங்க. (சாரணன்)

சாரணன் (எதிர்நோக்கி) களிப்புடன்.

## விருத்தம்.

உம்பர்க டொழும்பதத்த னுலகொரு மூன்றுமோச்சித்
தம்புய வலிசெலுத்துந் தசகண்ட னானை கொண்டு
தும்பி பூம்பொழிலார் மஞ்சுத்தொன்னகர் மிதிலைபுக்கு
வம்பறு செய்திகண்டு சுகனிதோ வருகின்றானல்.

சுகன் பிரவேசித்து ஆ! வாரும் வாரும் சாரணரே.

(சாரணன்) ஆம் ஆம்.

## அடுக்குமொழி.

இன்றெதிர்கண்டனன் நின்றிடுசுகனேநீ
சென்றிடுகாரியம் நன்றுகொல்நவில்வையே.

(சுகன் வசனம்.) யானிதை இயம்புகின்றேன்.

## விருத்தம்.

தங்குதார் வேந்தன்றூத சாரண திரைகள்வாரிச்
சங்கினம் மணிகொழிக்குஞ் சமுத்திரஞ் சூழ்ந்தபூமி
எங்கணும் புகழுநந்த மிலங்கைமா நகரைத்தாண்டி
இங்கனே வந்ததிப்போ தின்னதென் றியம்புவீரே.

## க-வது அங்கம்.

சாரணன் அடுக்குமொழி.

இராசராசனுமிலங் கேசனேவலாலேயுல்
லாசமாகவேபிர வேசித்தோமீதறிவையே.

(சுகன்.) அஃதெப்படி.

சாரணன் விருத்தம்.

வனப்பினிற் றிரிபுவனத்தினுஞ் சிறந்தாள்வளர்த்திடு மகத்தினில்வந்தாள்
அனப்பெடை சனகன்றவச்சுதை சீதையென் றகிலமு மறைகின்றதன்றோ
இனிப்புறும் அவளைமணஞ்செய வெமக்குசனகனை யெம்பொருட்டிணக்கி
நனிப்பெரு மகிழ்ச்சிதருகுவை நீயெனநாயகன் விடுத்திடவந்தேன்.

(சுகன் அகோவகோ வசனம்.) அகிலசுரா சுரவந்தித சரணாரவிந்த பிர தாப இலங்கேசுவரனுக்கும் கேவலம் ஓர் மானிடனிடம் இவ்வளவு வணக் கம்வந்த தற்புதமாயும் அபூர்வமாயுமிருக்கின்றது. அடடா.

எங்ஙனமெனின்,

விருத்தம்.

கற்பகநாட்டறிவையரைக் கைக்கொண்டு கடுகிவந்து காவல்வைக்கும்
சொற்பெருங்காரியங் கூடப்பிள்ளைக ளின்விளையாட்டாஞ் சுலபமாகும்
விற்பனனவ்விலங்கேசன் சீதையை வவ்விடுதன்மட்டு மேவாதென்னே
நற்புகழச்சனகனிடம் சைவயிஃதட்டத் தாக்ஷணியம் நாட்டினுறல்.

(சாரணன்.) ஆம் ஆம்.

(சுகன்.) கேட்கக்கடவீர் இன்பமுற்றிங்குள சங்கதியாவையும்.

(சாரணன்.) நல்லதுன்வரவைச் சொல்லக்கடவாய்.

சுகன் விருத்தம்.

வட்டநெடுங்கடல் சூழிவ்வுலகில்விந்தை வசனமொன்று வண்ணன்வ ண்ணத்திமேலே, இட்டம்வைத்தான் வண்ணாத்திகார்த்தபத்தி விட்டம்வை த்தாளெனச் சொல்வரிதுவேயொப்பாம், அட்டதிசையும் பரவுபுகழான் லங் கைக்கதிபனினைப்பும் மிதிலைக்கவனுற்சென்று, மட்டடங்காப் புதுமைக ளுங் கண்டுவெந்தவளப்பமெல்லாங் கேளாயென்வரிசைமாலே.

## நொண்டிச்சிந்து.

மிதிலாபுரிதனிலே நடந்த விந்தையைக் கண்டுவந்தேனையா
அதையோதிடல்வியப்பே ஆயினும் ஆதரத்துடன்கேள் நானுரைப்பேன்

ஆதிலாவண்யமுள்ளாள் நம்மள் அதிபஞைசைகொண்ட மாசனகி
மதிவாண்முகத்தழகி ஜனகன் மாதவத்தினில்வரு சீதையென்பாள்
வளர்கின்றாள் மயில்போல் நல்லெவ் வன்னப்பருவம்வந்து துன்னிடவே
ஒளிர்கன்னிமாடத்திலே ஒருநாள் ஒப்பிலாடியின்றனள். சொப்பனத்தில்
கடிமானகரயோத்தி ஆள்கின்ற கதிர்குலதசரத சக்ரவர்த்தி
படியிற்செய்மாதவத்தில் வந்த பாலகர்நால்வராம் பாக்கியத்தில்
ஓங்குமவரில்மூத்த புதல்வன் ஒப்புவமையிலாவ ணப்பினனும்
தாங்குமவன்றன்பேரோ ராமச் சந்திரனும்புய மந்தரனும்
மங்களகுணதீபனும் அந்த மானுபாவனைத் தானேகண்டு
நங்கைகண்விழித்துடனே அவனை நாடிமையல்கொண்டு வாடுவதை
நானுரைத்திடல்வசமோ அந்த நாண்முதல்விரகத்தால் மேன்மெலிந்தாள்
பானந்தவிர்த்தனளால் தேனும் பாலுங்கசக்குதென் றேங்கறிப்பாள்
சகிமாருபசரிப்பார் அவளைத் தழுவியணைத்திடுவ ளவர்சிரிப்பார்
துகிலொடுகைவளையும் நெகிழ்ந்தாள் தூக்கமென்பதொழித்தா ளேக்கியெல்
உருவெளிகளைக்கனவில் கண்ட உத்தமனென்று கைப்பற்றிடுவாள் [லா
கருகிறேனென்கணவா வந்து காத்திடுவாயெனத் தோத்திரிப்பாள்
காமன்வருத்துகின்றான் தென்றற் காற்றேநீகொடுங் கூற்றேதான்
இராமன்கொடுமையெல்லாம் ரவிகுல ராமன்வந்தாலுடன் நான்சொலுவேன்
ராமா ரகுராமா.

## விருத்தம்.

மடல்வரைந்து ரகுகுமரன் வடிவங்கண்டு மயல்பெருகி மயங்குகின்ற மகளைநோக்கி, கடமுலையாள் படுந்துயரங் கணக்குண்டோகாண் கதிர்குல ராமனையடையக் கருத்துட்கொண்டாள், தடம்புய மைநாங்குடையான் பகையுண்டாகும் தனயை மனப்படிசெய்தாற் சகியேனிந்த, இடைசிறியாள் மனப்படி செய்யாமற்போனு லிவள்சகியாள் ஜனகனிதற் கென்செய்வேனே.

(வசனம்.) எனப்பரிதபித்துத் திகைத்தனன். அச்சனகராஜன்

## விருத்தம்.

திகைத்தான்பத் தெட்டிலையோ ருமைப்பெண்ணும் சீதைமனப்படி செய்வோமெனவே தேர்ந்தான், முகம்பத்துளான் பகைபொலாதென்றஞ்சி முன்சுவர்க்கம் பதிலமைத்த முனிவன்றன்னை, மிகப்பலவா னெனக்கருதிச் சீதைமன்றல் விகாதமின்றி இசைத்திடவே வேண்டிக்கொண்டான், சகப்புரட்டன் குசிகன்மகன் நல்லதென்று தலைகுலுக்கிப் பதித்தான் சம்மதித்தான்மாதோ.

## க-வது அங்கம்.

(சாரணன்.) பொருமைச்சிரிப்புன்) அகோவகோ காலவிபரீதம் பென்னென்று கழறுவேன் என்னெனில் நம் மஹாராஜலங்கேசுவரனுடைய நேசக்கருத்தென்ன, அவ்விதேகாதிபனுடைய மோசக்கருத்தென்ன அடடா. அப்பால் மேலுளது விளம்பக்கடவாய்.

### சுகன் விருத்தம்.

மகமெனக் கபடங்கொண்டு மாமுனி விசுவாமித்திரன்
அகமகிழ்வுட னதற்காய் அழைத்திடப் போலயோத்தி
நகரினிற் றயரதேந்த்ரன் முதல்வனை நனிநயந்து
சகசமாய் மணச்சடங்கு தனக்கழைத்திடச் சென்றானல்.

(சாரணன்.) நல்லது நல்லது மேற்சொல்வாய்.

### சுகன் விருத்தம்.

கன்னியச் சனகியோடு காவலன் ஜனகராஜன்
மன்னுமக் கபடமான மகந்தனைக் காண்பான்போல
நன்னய வரசைமுற்றும் நம்பியாங் குசத்துவசன்பால்
முன்னதா யொப்புவித்து முறைமண நிமித்தஞ்சென்றான்.

(சாரணன்.) ஆ ஆ! கவனிக்குங்கால் விசுவாமித்திரனது கபடம் யாவராலுங் கடக்கமுடியாததாயிருக்கின்றது. ஆகவே இவனது தந்திரோபாய முயற்சியினால் சீதைக்கும் இராமனுக்கும் பாணிக்கிரகணோற்சவமும் நடத்தித்தீர்ப்பனென்றே நினைக்கின்றேன். ஈதிங்ஙனம் பெப்படியேனிருக்கட்டும்

இராகம் நாதநாமகிரியை. ஜம்பதாளம்.

### கண்ணிகள்.

ஆனாலுமதிபாவியானனிலங்கேசனையா இதுபொய்யா
அனியாயமிதைமனதினில்நினைத்திடவெனக்காங்காரமாகுது மெய்யா
தனைவணங்குவோனிடம்சைவவிஷ்டம்பாராட்டலாமோ அவன்றான் றள்ளப்போமோ
ஜனகிநம்அதிபனுக்கல்லால்மனிதனுக்குத்தான்கொடுத்திட விடுவோமோ
கெடிஇராவணனுறுபெருமைதெரியாதோஞாலம் யீதென்னகோலம்
கொடியிடையாளிவனைவிட்டுமனிதனமேலேகொண்டதென்ன இஷ்டஜாலம்
ஒருமகங்கோசிகன்சனகனுரைக்கப்பிணையேற்றான் ஒருவற்றான்
கிரியையெடுத்தெறிந்தஇருபதுகரனிதுகேட்டால்மிகவும் மனமாற்றான்

இருக்கட்டுஞ்சீதைமணமுறுக்கட்டும்நாமொருகைபார்ப்போம் வந்ததெல்லாமேற்போம்
சுருக்காய்நானுமிதிலைத்துரைக்கருகிற்போயுள்ளதோவறிந்ததின் பின்னூர்ப்போம்.

(சுகன்.) அங்ஙனம் செல்வதிற் பயனென்கொல்.

(சாரணன்.) ஆ! அங்ஙனஞ்செப்பலாகுமா.

## விருத்தம்.

நிலத்தினிற்பிரம குலத்தினிலுதித்தான் நிகரிலாத் தனத்திரண்படைத்தான்
தலைக்கணியாக வலாரியுஞ்சுமக்குஞ் சாசனனவ் விலங்கேசன்
சலத்தரைஇதிலோர் கனிதனைக்கேட்டால் யார்க்குத்தான் சம்மதியாகா

(சுகன்.) அவ்விதமாயினும் ஜனகராஜன் இங்ஙனம் இணங்கிச் சற்றுஞ்சம்மதியானென்பது திண்ணமேயாம். ஏனெனில் மேற்படி விருத்தக் கடையடி.

மூலத்தடங்கிரியாள் தன்மகனினைப்பை முடித்திட் முயல்கின்றான் முற்றும்

(சாரணன்.) சற்றுலோசித்து.

## விருத்தம்.

பேர்பெற்ற குலச்சிறப்பும் பவிஷுங்காணுப் பெற்றியின ளொன்னினுமப் பெண்ணினல்லாள், சீர்பெற்ற உலகனைத்துஞ் செயித்தவீர சிங்கனிராவணன் பெருமைச் செய்தியெல்லாம், ஏர்பெற்ற செவிகளிலுங் கேட்டிலாள்கொல் இணையற்ற இவ்வரசை விட்டுவிட்டுப், பாருற்ற சிறுமனிதன் றன்மேலாசை பதித்திட்ட தென்கொலிது பாவம்பாவம்.

பெருமூச்செறிந்து

## விருத்தம்.

சந்ததம் ராமன்மேற்கொள் ஜானகி காதறன்னைத்
தந்திரமாக முன்னந் தவிர்த்திட வேண்டும்பின்னர்
மந்தர புயனிலங்கை மன்னன்மேல் நாட்டல்வேண்டும்
எந்த உபாயஞ்செய்வோம் இங்ஙன மாதவர்க்கே.

(சுகன்.) ஏதேது இது நடக்கத்தக்கதன்று.

(சாரணன்.) அதற்கியாதுபாயமெனச் சிந்திக்கின்றனன்.

(சாரணன்.) சந்தோஷத்துடன்.

## விருத்தம்.

அரக்கர் வஞ்சனையினாலோ அல்லது வன்மையாலோ
வரப்பின்றி கன்னிமாரை வவ்வுதல் வழக்கமன்றே
வரைப்புய.னிலங்கேசன்றான் மாயையா லந்தராம
நரப்படி வம்புனைந்து நங்கையைக் கவறல்வேண்டும்.

தரு. இராகம் காம்போதி. தாளம் ரூபகம்.

## பல்லவி.

அளப்பிதுபோல்க் கிட்டாதே.

## அநுபல்லவி.

வளப்பமறிந்தசே வகனேயென்சுகனே. [அளப்]

## சரணங்கள்.

நங்கைஜனகிமேலே நம்மதிபன் மோகம்
நாட்டினனவட்குராம நரன்மேலதி தாகம்
சங்கடஞ்செய்வோமெனில் சனகன்பால்சைவ சிநேகம்
தகுதியல்லஆதலால் இதுவேநல்ல ஊகம். [அளப்]

கள்ளக்கோசிகனாக வித்திச்சிருவ னின்று
கனத்தராவணன்ராமன் கனியுருவாய் நன்று
விள்ளுஜனகனண்டை மெய்யானவர்போற் சென்று
மெல்லியலைமணந்திட வேண்டும்மிறைவா யின்று. [அளப்]

மின்னுளிதனைக்கண்டு விதனங்கொள்வாளோ பின்னர்
வேந்தன்பவிசுகண்டுமெகிழ்வாள் விதேக மன்னன்
கன்னிமனுளன்மிகக் கனத்தவான்வாய்த்தா னென்ன
கருத்தடங்காமகிழ்ச்சிகொண்டு புகழ்வான் றன்ன. [அளப்]

(வசனம்.) ஆகையால் விசுவாமித்திரனது வேடம்பூண்ட வித்திச்சிருவனுடன் இராமவேடம்பூண்டிலங்கேசன் ஜனகன்சமீபம் பிரவேசிக்கவேண்டியது.

(சுகன்.) களிப்புடன்.

## விருத்தம்.

நன்றுநன்று காணும்நீர் நவின்றிடுஞ் சொற்பாவினிற்
கின்றுகண்டு சீனிபோலி யம்புவே னயோத்தியிற்
சென்றகாதி மைந்த னச்சிறுவரோடு வருகையில்
குன்றெனத் தடுத்திறோனைக் கொன்றிடவும் வேண்டுமால்.

(சாரணன்.) ஸபாஸ் ஸபாஸ் நன்கு புகன்றனை. அதற்கு நமது தாடகையைத் தவிர மற்றவர்கள் சக்தியுள்ளவர்கள் அல்லர். எங்ஙனமெனில்,

### விருத்தம்.

ஆயிரமெண்ணமான யானையின் பலத்தைக்கொண்டு
மாயமாயவர்முன் சென்று வதைப்படப் பிடினோர்நின்று
வாயிற்பல்லாற் சுவைப்பள் வலுத்திடில் நரரொன்செய்வார்
நேயமா யபலையென்றே நீக்குவா ரிவளைக்கொல்லார்.

(சுகன்.) ஸபாஸ் மெத்தசந்தோஷம் அங்ஙனமெனில் அத்தகைய தாடகையை அதிசீக்கிரம் நீவிர் அனுப்பவேண்டும். யானே இந்த ஸமாசாரங்களை நமதரசனிடம் அறிவிக்கப்போகின்றேன். (என்று சென்றனன்.)

(சாரணன்.) எதிர்நோக்கி வியப்புடன் ஆ ஆ! நினைத்தவளவில் அதோ அத்தாடகையே வந்துவிட்டாள், ஆச்சரியம் ஆச்சரியம்.

எங்ஙனமெனின், இவளோ

### விருத்தம்.

ஆட்டமதில் முகிற்குலத்தையகற்றுவிக்குங் குயத்திணரம் பார்ந்தூன்றங்கு
மோட்டமதிற் பருந்துசண்மொய்த் திறகடிக்கும்பெருங்காற்றி லுயர்கிளம்பி
காட்டுகின்ற குழற்செறிவொடா வெனவாய்பிளந்து மட்டகாசத்தோடும்[க்
தாட்டிகமாய்ச் சுரர்நடுங்கத் தாராபதத்தினின்றுஞ் சார்கின்றாளே.

பொது தரு. இராகம் முகாரி. ஆதிதாளம்.

### பல்லவி.

வந்தாளேதாடகைப்பாவி சபைதனிலே. (வந்தாளே)

### அநுபல்லவி.

வந்தனள்மதவாரணங்களும்நடுங்க மகமேருமுதலானகிரிகள்கிடுகிடுங்க
அந்தகாரமீதையமிலையென ஆருஞ்சொலும்படிசீரவணப்புடன். (வந்)

### சரணங்கள்.

செக்கச்சிவந்தஇருவிழியும் , கோடைகாலத்திற்
சிறுமிடியைநிகர்மொழியும் யார்சொல்வாரப்பா
மிக்கவாய்நீரெங்கெங்கும்பொழியும் புன்புலால்கள்
விந்தைக்கடையுதட்டில்வழியும் இன்னமும்எட்டுத்
திக்குகிரியிலொன்றெனச்சொலுமூக்கும்சேடனெடும்படமெனத்தருநாக்கும்
மக்களிப்பாயவளிருகையைநீட்டி இருதாருபோரகனைநாமட்டுங்காட்டி. (வந்

கச்சைக்காயெனவொருமுலையும் கருமலைபோல்
காத்ரங்கொண்டமற்றொருமுலையும் உடைமரம்போல்
கொச்சைச்சடைச்செம்பட்டைத்தலையும் அரைதனிலே
கொண்டகருமையாந்துகிலையும் என்னென்றுசொல்ல [ரிய]
குச்சிபோலொருகாலுமற்றொன்றுபெரிய கொடிமரம்போலவும்யாருக்குந்தெ
அச்சமிலாமனடக்கையிற் பின்னலாகியபற்பலநரம்புகடுன்ன. (வந்)

அட்டகஜத்தைக்கூடவாட்டி ஒன்றாய்த்திரட்டி
அடிப்பல்லிடுக்கில்வைப்பாள்கூட்டி திக்கதிபரையுஞ்
சுட்டெடுத்துத்தின்னும்வெள்ளாட்டி இவள்செய்பழி
சொல்லக்கூடுமோதொகைகூட்டி ஐயையோஇவள் [ட்டு
கொட்டைப்பாக்குகளெனக்கைகளிலெட்டுக் குன்றுகளையுமெடுத்தாடுவெடொ
அட்டகாசத்துடன்பற்களைக்கடித்து அண்டர்நடுங்கியோட இடும்புகள்படித்து (வந்தாளே)

அப்பால், மேற்கூறியபடியுள்ள தாடகை பிரவேசிக்கின்றாள்.

(சாரணன்.) பக்கலணுகி, தாடகாய் சாரணன் வந்தனஞ்செய்கின்றேன்.

(தாடகை.) ஆ சாரணா சுகமாயிருக்கக்கடவை.

(சாரணன்.) ஆ தாடகாய் எங்ஙனஞ்சார்கின்றாய்.

(தாடகை.) சாரணா கேட்கக்கடவாய்.

## விருத்தம்.

தவமுனிகாதி தனையர்க்கன்புற்ற தாயகல்லுறவி னன்பரம
சிவபணிமறவாப் பார்க்கவனெய்திச் சீர்தசமுகவர்க்கு முகமன்
நவநவமாக நவின்றுவேண்டினனால் நற்சைவ நேயத்தைநாடும்
செவையுறு மனத்திராவணனென்பாற் றிரும்பி இவ்வாறுரைசெய்தான்
[எவ்வாறெனில்]

## விருத்தம்.

கோசிகன் மகத்தில்கம்மாற் கொஞ்சமுங் கெடுதல்வேண்டாம்
பூசல்மா ரீசனாதி பொல்லாத வருக்கிப்போதே
நீசென்று நிகழ்த்துவா யென்றெனை நிருபனுமனுப்ப
வேசடுதியினில் வந்தேன் சாரணா விளம்பினேனே.

(சாரணன்.) (நகையுடன்) நமது வீரசூரப்பிரதாப லங்கேச்சுவரனைக் கோசிகன் யானையைக் கொப்பத்தில் விழத்தட்டுவதுபோல, தன் அகாதகபடத்தில் வீழ்த்திவிட்டான்.

(நல்லதிருக்கட்டும் தாடகாய்.) அந்தக்ஷத்திரியகுல்காதி தனையன்றன் தந்திரமென்றறியக்கடவாய் யாகமென்ற கபடத்தைச் சொல்லிக்கொண்டு சீதைக்குமிராமனுக்கும் திருமணமுடித்துவைப்பதற்கான ஜனக்கௌசிகர்களின் எத்தனமிதுவாம்.

(தாடகை.) இதற்கித்தனைகபடமென்னை (சாரணன்,) நமதிலங்கேசன் அவளை விரும்புகின்றானென்றே இத்தனையேற்பாடு செய்திருக்கிறான்.

சாரணன் விருத்தம்.

மூதிர்மாயையிதுதானெனப்படியிலேயெதிர்மூளைத்ததாடகைப்பெணேகேள்
அதிரூபவதிசீதையவள்மேற்றசானனைடங்காமையற்கொள்ளவும்
மிதிலேசன்மகளெண்ணம்வேறென்றறிந்தந்தவிதமணஞ்செய்யவேதான்
சதிர்கோசிகனைவேண்ட அவன்நம்மைமகமெனச்சாற்றியேமாற்றினனே.

மேற்படி கொச்சகம்.

சுந்தரியாஞ் சானகியைத் தூயவபி ராமனுக்கு
கந்துமணஞ் செய்யக் கருதினது தான்றெரிந்தால்
வந்துகெடுத்திடுவான் மன்னனிலங்கேசுவரனென்
றிந்தவிதங் கோசிகனும் யாகமென்றான் தாடகையே.

தாடகை. ஆ ஆ.

கொச்சகம்.

இந்தவித மெண்ணினன் கொல்யாரு மற்றகோசிகனும்
எந்தைமன்ன னுசைகொள்ளு மெந்திழையாள் ஜானகியை
எந்தவிதமும் யானெடுத்து வருவேன் காண்
சந்தத மிலங்கேசன் றன்மனங் களித்திடவே.

(சாரணன்) ஆ. அது தகுதியன்று எனனில்.

விருத்தம்.

வன்மையிற் கவர்ந்தா லந்தமாதுநம் வள்ளறன்பால்
தன்மன மிருத்திடாளால் தவிரவுஞ்சைவ இஷ்டம்
பொன்மலி மிதிலேசன்பாற் பொருந்தின றதலாலே
உன்மனத் துதித்தசெய்கை ஒப்பிடான் வேந்தர்வேந்தே.

(அன்றியும்.)

## க-வது அங்கம்.

### விருத்தம்.

மலையிமவான்றன் பக்கல்மன்னன் முன்னரம்பை மாதைப்
பலபந்தஞ் செய்ததாலே பாவையர் மனமில்லாரேல்
குலவிடவவரைத் தொட்டால் குளிர்மணி மகுடந்தாங்கும்
தலைவெடித்திடக் கடவாயென வவள்சபித் திட்டாளால்.

ஆகையால், தாடகாய், நீ நினைத்தவாறு முயலுதல் தகுதியன்று, ஆனால் மேல்ச்செய்யவேண்டுவது யாதெனில்.

இன்னின்னபடி யெனக்கன்னத் தியம்பினேன்.

(தாடகை.) மனோற்சாகத்துடன் சாரணா, நின், தந்திராலோசனை, வெகு நிபுணமாயிருக்கின்றது. ஸபாஸ் மெத்தசந்தோஷம்.

### விருத்தம்.

வஞ்சகஞ் செய்வோர்தம்மை வஞ்சகத்தாலே வெல்ல
நெஞ்சினிற் கொண்டாய்நன்றே நிகழ்த்திய வண்ணமானால்
இஞ்சிசூ ழிலங்கைவேந்தன் யெழிற்கரத்தினிலே அந்த
வஞ்சியு முற்றாளென்றே வழுத்திட வையமுண்டோ.

நன்று நன்று. யானோ, நீ நிகழ்த்தியவண்ணம் செல்கின்றேன்.

### விருத்தம்.

திடம்பெரு மாயைவல்ல தீயமா ரீசனோடும்
நடுவழி தன்னில்நானும் நள்ளிருட் டுயிலாநின்ற
கொடியகோசிகனைக் கொல்வேன் கொற்றவர்தமையுங் கொல்வேன்
கடியிலங் கேசன்றன்னைக் கணத்தினிற் பயணஞ்செய்வாய்.

என்று சென்றனள்.

### (சாரணன்) வெண்பா.

தாடகைக்கி மக்கடமைத் துணையா யேவிடுவேஞ்
சாடியெதிர்த்தவரைத் தாம்வதைப்ப—நாடிதனில்
வெஞ்சமரின் மூண்டவர்கள் வெல்வதுவுந் தோற்பதுவு
நஞ்செய லொன்றில்லை யதனால்.

ஆகையால் மாரீசன்முதலான பேர்களைத் தாடகைக்கிச் சகாயமாக அனுப்பிவிட்டு, இலங்கையிற்சென்று மகராசனைப்பிரயாணஞ் செய்விக்கச்செல்கின்றனன் (என்று சென்றனன்.)

அப்பால், வித்திச்சிருவசாரணருடன் இராவணன் பிரவேசிக்கின்றான்.

(இராவணன்) மிதிலாபுரியிலுள்ள சகலவிர்த்தாந்தங்களும் நமதுசுகசாரணர்களின் முகாவழியாய் ஸாங்கோபாங்கமாய் தெரிந்துகொண்டேன். ஹா, ஹா, கஷ்டம், கஷ்டம்.

இராகம் உசேனி, சாப்பு தாளம்.

## பல்லவி.

எந்தன்பெருமையெல்லாம் இந்தச்சனகியாலே
யின்றேயொழித்தேனடா (அடசாரணா) (எந்தன்)

## அநுபல்லவி.

அந்தமும்மூர்த்தியுஞ் சிந்தைகலங்கத்தானே
ஆணைசெலுத்து மிராவணேசுரனெனும் நானே (எந்தன்)

## சரணங்கள்.

வாசவனும் நமதுவன் சிறைக்குடும்பியாய் வாழ்கின்றான் சாசுவதமாக
யீசனுடைய கயிலாசந்தனை வேரோடெடுத்தெறிந்தேனுயர்மா கம்
பேசரிய பிரதாபலங் கேசனெனப்பேர் வாங்கினேனதிமோ கப்
பாசவலையுட்சிக்கி மோசம்போனேன் விதே கப்
பார்த்திபனது சிநேகம் பழுதாச்சுதென்ன சோ கம். (எந்தன்)

காவியங்கண்ணாள்சீதாதேவிமேல்மையற்கொண்டுகரு கிறேன்காமவனல்வீச
பாவியவளெனை யெண்ணுதுமனிதன்றனைப் பரமவரனு யெண்ணிப்பே ச
பூவிலவளினெண்ணம்போலே மணம்பொருத்தப் போக்கிவிமுனிசெல்லவே
மேவியன்னரனுய் நான்கொள்ளவோ மிதிலேசன் (சம்
மேல்வைத்த சைவநேசம் வினையாச்சுதல்லோமோச ம். (எந்தன்)

கண்கணுலைந்து மவளைக்காணத்துடிக்குதென் கைகள்தழுவவென்கா தே
தண்கொள் அவளின்மொழிகேட்க விதழ்கனிய தாஞ்சுவைக்கத் தாள்களிப்
புண்கொண்டாலும் அவள்பாற் போகாதிரே னெனப்புலம்பல் போ (போதே
பெண்கள் சிகாமணிக்குப்பிரியங்கிடைக்காதே (ற்றுடிக்கிதிப்போதே
பிரேதமான வென்தேகம் பிரயோஜனமென்றீதே. (எந்தன்)

வசனம். ஹா ஹா கஷ்டங்கஷ்டம், கேவலம் புன்மையான ஒருமானிடனது வடிவத்தைப் புனையும்படி நேரிட்ட இதற்கென்செய்குவாம்.

## கொச்சகம்.

திகழ்சைவநட்பிதனைத் தேற்றுகின்ற தன்மையினு ற்
சகசமாங்கோபமதைச் சனகன்பாற் செய்யாம ற்
சகமதிலோர் பெண்ணிமித்தந் தரிக்கின்றபுன்வேட ம்
புகழெனது மானமதைப்போக்கின்ற தென்புகல்வே ன்

சாரணன். ஓ. மன்னர் மன்னவனே மானபங்கமென வழுத்துதல் வேண்டா, எனெனில்.

## விருத்தம்.

தங்கமாமலை நேர்தோளாய் தமயந்தி சுயம்வரத்தி ல்
நங்கைமேற்காதல்கொண்டு நாலிருதிசைமாமன்ன ர்
மங்கள நளராஜன்றன் வடிவத்தைப்புனைந்துசென்ற ர்
இங்ஙனம் அபூர்வமோகாண்ய ரவரும் நடந்தபா தை

## (அடுக்குமொழி.)

(ஆகையாற்றன்)

ஜானகியென்னுந்தையல்நிமித்தம், மானிடவடிவம்வகித்துநடந்தால்,
மானஹானியெங்ஙனம்வந்திடும், எனுளத்தினிலித்தனைசஞ்சலம்.

(வித்திச்சிருவன்.) தன்னுள் (புளகச்செறுக்குடன்) (வசனம்) திக்கதிபர்மிக்க மிக்க முயர்ச்சித்தும் தமயந்தியைக் கிட்டாதவராயினர். அத்தன்மையென, நமதரசனும் ஜானகிவிஷயத்தில் இலவுகாத்தகிளியென ஆகுவன் கொல். (வெளிப்படை.)

## விருத்தம்.

மண்ணில்ராகவன் மேல்வைத்த ஜனகிதன் வாஞ்சையைத்தடிந்திவனும் மே
நண்ணவைத்திடலரி தரிதாகுமா னட்பினுற் சனகனேவுந்தங் (ல்
கண்ணைபொத்தவனுகையால் வன்மையிற்கவர்தலு முதவாவே
றெண்ண மென்னையப் பெண்டனை யடைகுவானிவன் மொழிவழியாமால்.

## அடுக்குமொழி.

(இராவணன்.) (நல்லதிருக்கட்டும்)எமதுளக்கவலை எண்ணிப்பறிக்கும், உமதுரை மறுப்பதுசிதமன்றே.

ஆகையால், சாரணு, நமது புட்பகவிமானத்தை அதிவிரைவில் ஆஜர் செய்வாயாக.

[சாரணன்.] அங்ஙனஞ்செய்கின்றேன், எனவிரைந்துசென்று, புஷ்பகவிமானத்துடன் போந்துவந்து,

அரசருக்கரசே, தமது ஆக்ஞாபனப்பிரகாரம்.

சிங்காரக்கவி.

கல்லெனத்திரண்டதோளாய், நல்லதோர்புட்பகத்தைச்,
சொல்வழிப்படிக்குத்தானே, ஒல்லேயிற் கொணர்ந்தேன் சுவாமி.

வித்திச்சிருவன் சந்தவிருத்தம்.

திசைவிழைய மேயதற்கோர் கரியெனநிலாவுமிக்கார்
திரிபுவனமேவு நற்கோற்றொடி யாரை.
நசைகவறுவேளையுட்கா அவரெறிகொளாவிபட்டே
நனிகரியதாயமுத்தாற் புனைமாலை,
அசைவுறுவிமானநற்பூ விறையொடு பராவலெற்ருய்
அமைதருமெனு நடுக்கா ற்றுயர்வாதம்,
இசைதலறமாயைஅற்கா ரிடைமறைவிஞடிவிட்பா
லிமைநொடியின் மேயதைப்பார்த்திடுவாயே.

(இராவணன்.) நோக்கி, குடிலநகைப்புடன் அடடா, வித்திச்சிருவா, அவ்விதமன்று, யான்நினைக்கின்றேன், இவ்விலங்கேச்சுவரனும், சற்றம்பலமற்றவரைப்போல், எள்ளலான கள்ளவிர்த்தியைச் செய்யத்துணிந்தனனென்றென்மீதுள்ள நட்பினுல் இப்புட்பகமுமிதுகாறுமில்ல த தன்மையைக் கடைப்பிடித்ததென்றே நினைக்கின்றேன். எங்ஙனமெனின்.

விருத்தம்.

வழிசிறிது சென்றனுப்புஞ் சிறுவிமான வரிசையிலே சித்தவித்யாதரர் கைகூப்பி, மொழிதருதோத்திரபடனங்காணே மையன்மோகனஞ்சேரரம் பையர்சணடிப்பக்காணேம். தமுவுமிவை போலுளநற்சிறப்பையெல்லாந் தான்றழுவாதி வணடித்ததன்மைகண்டால், வழுமருவுமென்றனுக்கோர் புதுமையாக வயங்குதடாமந்திரஞ் சேர்வித்திச்சிருவா.

இராகம் பியாகு. ஆதி தாளம்.

பல்லவி.

பின்னமாய்க்காணுதே என்விமானம் நீ பிதற்றுகின்ருய்
வீண்பெருமையெல்லாம்.

அனுபல்லவி.

என்னசெய்வேனடா ஏதுசெய்வேனடா யெங்கணுமிதுவகையாகுமே
அன்னியாயமீதாருடன்சொல்லுவேனையையோபாவமிதுதெய்வமே. (பி)

## க-வது அங்கம்.

### சரணங்கள்.

மகிமைமறந்துதன்வடிவந்துறந்து மனிதனாகிக் கனிவுடன்போகி
தகையிலாத்தொழில் செய்யத் தாவினனிவன் முகந்தன்னில் விழிக்க
லாகாதென்னவே. [பி]

கானமுழக்கங் களானநடனங்கள் காண்கிலனீ தென்னகாரணமோ [வே
மானமிலாவரசன் வரிசைக்கிவ்வரிசையேவாய்ப்பெனவந்தஒருகோப்பன [பி

(வித்திச்சிகுவன்) வசனம். மகராஜனே, அங்ஙனமன்று, காரியசாதகத்தின் பின்களிப்படைய வேண்டுமென்றபடி காண்கின்றது, அதாவது, மனத்தினிற்குகந்த வடிவத்தினால் வசீகரணஞ்செய்யப்பெற்ற அம்மங்கையர் சிகாமணியின் மாமணத்தை முடிவுசெய்து, அகிலநாயகனான அரக்கர்பிரான் மருகனெனன வந்தமையப்பெற்றேனென, அத்தியானந்த பரிதனாகிய அவ்விதேகாதிபனால் ஆவலோடு அளிக்கப்பட்ட ஆடையாபரணாதி சகலபாக்கியத்தோடும் அம்மணமடந்தையொடும் மஹாராஜன் போந்திடுங்கால், அத்தகைய வரிசை அடையவேண்டுமென்று வந்திருக்கின்ற இப்புட்பகவிமானத்தில், பற்பலசங்கைவகிக்காது தயைசெய்து பிரயாணஞ்செய்யவேண்டுகின்றேன், சற்றுந் தாமதிக்கலாகாது.

### பொது.

[இராவணன்.] வித்திச்சிகுவனுடன் விமானத்திலேறுகின்றான்.

[சாரணன்.] ஓ மன்னர் நாயகமே இங்ஙனம் நோக்குக, நோக்குக.

### சந்தவிருத்தம்.

வானவர் கூர்பிரதாபமிகுந்தவ வீரவிஞ்ஞைவி சேடிதவிந்தைய மானவிமானம தானதிலங்கையி னெழவாரி, ஆனவனுமை சுருவருபஞ்சிலே யாவுமுளே புகவேமிகவஞ்சின ஞரனிலாவலேயாவுமிழந்தன னதுதானே, பானுதனுதொளியே மிகவுஞ்சிறிதாகின னாகியொர் சேயொளி தங்கிய பாழிகொளாடி யினுடியிலங்கின னரிதான, ஊனமில்வாயுப டீரநெடுங்கொடிமீமிசை கானமர் மாமுறியொன்றுவ ஓர்வலிமேயின னயினனிங்கிவையுணர்வாயே

வித்திச்சிகுவன். ஆ ஆ இதுவுமோர் ஆச்சரியமா.

### விருத்தம்.

கிலிகொண்டுசிவனைத்தேவி கெட்டியாய்த்தழுவுமாறு
பலமதாங்கயிலேதன்னைப் பந்துபோலெடுத்தெறிந்தான்
குலிசனைச்செயிற்கூடத்திற்குடும்பியாய்ச் செய்தான்மாயா
வலவனவ்விலங்கை வேந்துக்கிதுவோதான் மாவியப்பே.

இராவணன். சற்று நிதானித்து,

## விருத்தம்.

எம்புயங்களின்பல மவ்வீசர்வாழுமெழிற் கைலைக்குணர்த்தின் விம்மலடிசைவீரர்க்கெங், தெம்புபெருவில்வித்தைத் திரத்தைமுன்னந் தெரிவித்தேமவர்நாளுஞ் செப்புவாரால், வம்பெறுமாமாய வேடசாலமருவு மெம்வல்லமையை வரிசையாக, அம்புவியிற்சனகனிடம் புதிதாயிப்போ தறிவிக்கமுயல்கின்றேம் அறிவாயப்பா.

ஆகையால் சாரணு விரைசாக நடத்தடா.

(சாரணன்.) வேந்தருக்கரசே, இவ்விமானங்கிளம்பிய வேகத்தைநோக்கவில்லையோ, சற்றேநோக்க. எங்ஙனமெனின்,

## விருத்தம்.

சாற்றுமிவ்விமான மதிவேகத்தாற் செல்கின்ற தன்மையாலே
ஏற்றுகிரி நிகருவின் மண்டலவான்கீழ்நோக்கி யிறங்கலேபோல்
காற்றிசையின் மேகைகள்போற் காண்கடலுட்ப் பூதலங்கணழுவலேபோன்
மேற்றிசைகீழ்த்திசைம லைகள்சமரேகை யுற்றனபோல் விளங்கல்காணே.

(விக்கிரிச்சிருவன்) வசனம். அடடா நன்று நன்று, ஒருகுதியிற்கிளம்பிய வேகவிமானமானது சிவக்கக்கனிந்த கனிவருக்கங்கடம்மைச் சுமக்கமுடியாது கனத்துவளைவுற்றிலங்கும் கொம்புகளொடு குலாவும் பற்பல தருக்களினெருக்கமும், அதிசாந்தத்தையடைந்த விரோதமற்று விளையாடுகின்ற மிருகங்களின் பெருக்கமும் பக்ஷிகணங்களின் வளப்பமும் செழித்திலங்குகின்ற கோசிகமுனியின் இவ்வாச்சிரமத் தலத்திறங்குகின்றனபோலும். இவ்வாச்சிரமமோ அடடா.

## விருத்தம்.

கடகடெனக் கருஞ்சிலையிற் கடிந்துமோதி கடம்படுத்தகொடிமுழுதுநனைத்துச்செல்லும், கடகரிகள் கவர்ந்தெறிந்த கமலக்கோட்டுக் கௌசிகையாநதி யிவணிற்காண்பதாலே, கடலொலிப்பாற் பரவையினங்கத்துகின்ற கருதரிய மருத்துவஞ்சேரிவிடம்பீரார், கடமருவுநெடுங்கரத்துக் காதியீன்ற காதலன் வாழாச்சிரமமேயாகுமாதோ.

இராவணன். சாரணனைக்குறித்து (உற்சாகத்துடன்).

## விருத்தம்.

கண்டமட்டுஞ்சலத்தினின்று முனிவரெல்லாங்களிப்பினொடுநீர்குடையக்கனத்துமீண்டு, மண்டிவளர் சடையினைக்கண்டஞ்சிச் சக்ரவாகங்கள்

துணையொடுமேற் சுழன்றுபாய்ந்து, தொண்டைகிழிந்திடும்படி சத்திக்குமி ந்தத்தொல்வனத்திற் சானகிதன் சுவாசத்தென்றல், அண்டிவருவழியிலிந்தச் சார்பின்மெள்ள அரியவிமானமதிறங்கவேண்டுமோலோ.

(சாரணன்.) வசனம். எஜமானவர்களின் இஷ்டம்போல் இவ்விமான மிறங்கிற்று. ஆகையாலிதுநின்றும் இந்தரமணீயமான வெளிகீதிரத்திலிறங் குவோம். எல்லவரும் இறங்கினார்கள்.

(இராவணன்.) வசனம். யாம் திரும்பவந்து சேருமட்டும் இவ்விமான மிங்குதானே மறைவாயிருக்கக்கடவது.

(சாரணன்.) வசனம். இனிமேல், இவ்வனப்பிரதேசங்களில் திரஸ்கரி ணீமருத்துவத்தினால் ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதவர்களாய் சஞ்சரிக்க வேண்டுவது. ஏனெனில்,

விருத்தம்.

பாதவங்களி னடிகளிற் புலித்தோல்பகர் தருப்பாதனம்பரப்பி
சீதளங்கனிழற் றருக்களின் கிளையிற்சீரைகண் மிருகவசினங்கண்
மீதுறச்சேர்தது விளங்கிநிறைந்திறப்பும் வேதபாடங்களைக் கிளிகள்
ஓதிநிறைந்திறப்பு மிவ்வனமம்முனிக் குறைவிடமென்பன போலாம்.

(இராவணன்) வசனம். சாரணன் சொல்வது சாரந்தான். இங்ஙன முள்ள ரகசிய சமாசாரங்களை சங்கோபாங்கமாய் தெரிந்துகொள்ளவேண்டு வதவசியமாகையால் ஒருவர்கட் புலன்கட்கும் புலப்படாமலே சஞ்சரிக்கவே ண்டும்.

(வித்யுச்சிகுவன்.) கண்களைமூடிக்கொண்டு திரஸ்கரிணீ மந்திரத்தைத் தியானஞ்செய்கின்றனன்.

(இராவணன்) பக்கங்களில் நோக்கி (வசனம்.) ஓ இவர்கள் யார், ஸமி த்குசபாணியராய் பிரமசரியவிரதத்தினராய் இருவர் இங்ஙனம் நோக்கி வருகி ன்றனர்போலும்.

(சாரணன்.) ஓ இவர்கள் விசுவாமித்திரன்றன் சீடர்களாக இருத்தல் வேண்டும்.

அப்பால் இரண்டு பிரமசாரிகள் பிரவேசிக்கிறார்கள்.

(ஒருவன்) யானோ.

விருத்தம்.

திருவளர்மேவு நிர்மலகர்க்கணுநித திரும்பியிங்கெய்து மவ்வளவும்
பரிவொடுவென்னி பழுதுறுதலைப் பாதுகாத்திடுதி யென்றெந்தன்

குருவரர்காதி புதல்வர்தமைனைக் கொண்டிடப்பெற் றனனதனாற்
றெரிதருசமித்துத் தேடியோர்கணத்திற் றீதவைவளர்த்திடச் செல்வேன்.

என்று நடக்கின்றான்.
(மற்றொருவன்) யானோ.

விருத்தம்.

சனககுரு வரமுனிவர் மாதவகோதமதனயர் சதாநந்தர்
அனகரவரருட் படியேதருப்பை முதலானது களாய்ந்துகொண்டு
புனிதமிகு வனமிதனின் மிதிலேசன்வாசமது பொருந்துந்தான
நனிமகிழ்வாய் வினயமொடு விரைவணுகியடைகுவனு னடியானே.

என நடக்கின்றனன்.

(அடுக்குவசனம்) ஓ! மித்திரசிரோரத்தின, சத்தியவிரதனே; வெற்றி மிகுத்திடும், உத்தமஜனகர், எத்தனைநாட்கள், சத்தியவிசுவா, மித்திரர் ஆச்சிரமத்திலிருப்பார், சித்தமுவந்திவ், வுற்றதுரைப்பாய்.

(முன்னவன்) அடுக்குவசனம். எங்கள்குலகுரு, துங்ககோசிகர், இங்ஙனியற்று, மங்களவேள்வி, எங்ஙனமுடியும், அங்ஙனமளவே.

(இராவணன் வசனம்.) சாரணே, இங்ஙனம் ஸம்பாஷிக்கின்ற இச்சிறுவர் யாரென நினைக்கின்றாய், இவர்கள் விசுவாமித்திரனுடையவும் சதாநந்தனுடையவும் சிடர்களேயாம். ஆகையால் இவர்கள் ஒருவருக்கொருவர் நெருங்கி அதிக நேசவிசுவாசத்துடன் பேசிக்கொள்கிற வர்த்தமானங்களை யாம் கட்புலன்கட்குப் புலப்படாமலே நின்று கேட்கவேண்டும்.

(சாரணன்) வசனம். மகாராஜனே நமது வித்திச்சிறுவன்றன் திரஸ்கரிணீவித்தையின் மகத்துவம் சற்றுங்காண்கிலீர் போலும்.

(இராவணன்) களிப்புடன். அசோவகோ, அந்த திரஸ்கரிணீவித்தையின் மகத்துவமே, ஒருவராலுங்காணவொண்ணாது வசனங்களைக் கேட்கவுமொண்ணாவே, ஸபாஸ் மெத்த சந்தோஷம்.

(வித்திச்சிறுவன்) வசனம். இராஜாதிராஜனே வெகு விசுவாசத்துடன் சஞ்சரிப்போம்.

(பின்னவன்) சத்தியவிரதா (அடுக்குவசனம்.) செருக்கினில் மகத்தை, தினமுமழிக்கும், அரக்கர்சஞ்சரிசகும், அடவியிலிங்ஙன், உரத்தொடுகௌசிகர், ஒருமகஞ்செய்யக் கருததுட்கொண்ட, காரியமென்னே.

(சத்தியவிரதன்) ஓ ஓ எனதாவல், நண்பனே, தேவவிரதனே கேட்கக்கடவாய்,

# க-வது அங்கம்.

## விருத்தம்.

சினத்தொடுமுன் பதிற்சுவர்க்க மமைப்பனென நினைத்தளவிற்றேவ ரெல்லாம், அனர்த்தமது பவித்ததென்று முறைப்படுமெத் தொனிகாதிலடர்ந்துமுட்ட, கனத்தவுயனுளக்கவலை வகித்தவனுய்த் தனித்துவந்து கைப்பிடித்தும், இனித்தபுகழ் படித்ததனுல்வெகுளியற்ருர் முனிவர்பல மறைவர்யாரே.

(வசனம்.) அத்தகைய மஹா தபோநிஷ்டரான அந்த விசுவாமித்திரருக்கு இவ்விராக்கத நீசர்கள் எம்மாத்திரம், இவர்களால் என்செயக்கூடும்.

(வித்திச்சிகுவன்) சாரணு,

(அடுக்குமொழி.) இவ்விப்பிரவடுக்கள், செப்பிடுமொழிகள், தப்பிடாதுன்செவிக், குட்புகுந்தனவா.

(சாரணன்.) அதனுற்ருன், இக்கௌசிகனுக்கெதிரியாக விவிதமாயாவிகாரதுரந்தர மாரீசனை மஹாராஜனுல் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது.

(வித்திச்சிகுவன்.) நன்று, நன்று. அவ்வேற்பாடு சாலவும் நன்று நன்று.

எங்ஙனமெனில்,

## விருத்தம்.

கும்மெனப்பட நல்வினைத்தினைக் குழுறிடுங்கொண்ட லின்குலத்தை
செம்மியபுகையின் திரக்ஷியைமிகவுந் தெள்ளியபுழுதி மாமழையை
விம்முவெம்போரி லொவ்வொருசமையம் விதம்விதமிக மிகவிளைத்து
கம்மறைத்தமரர் நடுங்கிடச்செய்தான் கனத்தமாயாவி மாரீசன்.

(இராவணன்.) (சினேக வெகுமானத்துடன்) வித்திச்சிகுவா.

## வெண்பா.

மாயாவி நீயலவோ மாரீசன் றன்பெருமை
நீயே யறிவாயின் னீணிலத்தில்—வாயார்
விடமதனைச் சிந்துகின்ற வெவ்வரவின் காலப்
படவரவே கண்டிடு மென் பார்.

(தேவவிரதன்.) ஓ சத்தியவிரதா, (அடுக்குவசனம்). துதிபெறு, அதிதவ, நிதியென, ஓங்கிய, உனதுரை, பாங்கேயாம்.

(எங்ஙனமெனில்) வசனம். இந்த முனியினுச்சிரமத்தானங்களில், சிங்கங்கள் கொட்டாவியிடுகையில் இகற்றப்பற்களைத் தாமரைத்தண்டெனக் கள

பங்கள் துதிக்கரத்தாற் பிடித்திழுப்பதும், மான்குட்டிகள் பிடிகளின் மடுக்களிற் பாலுண்பதும், இப்படியே. அவிரோதமான வினியாஸங்களினோடு விளங்காநின்ற இவ்வனத்தைப் பார்த்தாலே துலங்கும்.

இன்னமும்

விருத்தம்.

பசுவினைப்போற் பெற்றோரால்விற்கப்பட்டுப் பாரிடத்துக்காப்பாளர் யாருமின்றி, கசிந்துமனநெகிழ்ந்துருகிக் கரைந்துவாடிக் கடுசௌவுந்தன்பலமுமில்லானாகி, நிசம்பரவுமகத்து நட்டயூபந்தன்னினெடுங்கயிற்றாற் பிணிப்புண்டுசாவானின்ற, வசமருவுசுனச் சேபனுய்யச்செய்த மாதவத்தார்மகிமையெவர்வழுத்துவாரோ.

(வித்திச்சிகுவன்.) வசனம். இப்பிராமணச்சிறுவர் நமது மாரீசனுடைய மாயாபலத்தை அறியமாட்டார்கள், ஆகையாலிப்படி உளறுகிறான்.

(சாரணன்.) வசனம். அதனாலென்ன பாதகம், யாவருந் தங்கடங்கள் ஜனங்களைப் புகழ்ச்சிசெய்வது வழக்கந்தானே.

(வித்திச்சிகுவன்.) நமது மகாமாயா துரந்தர மாரீசனது பிரதாபமே பிரதாபம். எங்ஙனமெனில்.

சந்தவிருத்தம்.

திகழுமிட்டி குயின்றிடுசாலையி லெளிதினற்றவர் கண்டறியாமலோர்
　　திரிவிதக் கனலுங் கெடுமாரிடர் புரிவானா　　ல்
மகிழிருத்து வெனும்பலர்கூவிட அறைவனப்புறம் நின்றபலானி　　றை
　　வதைபடுத்து வணங்கவி வாயிடை சொரிவானா　　ல்
பிகமொழிச்சிறு மங்கையர்மாதவர் சதிகளொக்க நடுங்கிடவேபு　　ரு
　　வமதுமிக்க நெரிந்திட வேபயில் மாரீச　　ன்
நிகழ்சுருக்கு வெனும்பெயர்கூர் கலனைவைநொறுக்குவன் வஞ்சகனேனயி
　　னெறிகளற்றவ னென்றெவர் தானிவ னறியா　　ரே.

(சத்தியவிரதன்.) வசனம். ஆகையினாலேதான் எனது குலகுரு விசுவாமித்திரர் சங்கையற்று யாகஞ்செய்யக்கருதினவராய் தனது ஆப்தசிநேகிதரான இட்சுவாகுகுலத் தயரதசக்கரவர்த்தியை அழைத்துவருவதற்காக அயோத்தியாபுரிக்குச் சென்றிருக்கின்றனர்.

(சாரணன்) குடிலநகையுடன்.

விருத்தம்.

சண்டனாமிலங்கேசன்பாற் சமதக்னி வந்துபோற்　　றி
பண்டயநேயங்காட்டிப் படித்துக்கொண் டதனாற்பீ　　தி

கொண்டிடா மற்றுணிந்தான் கோசிகன்மகத்திற்கென் று
விண்டிடுமெதைமறந்து விளம்பிய பெருமைகேளா ய்.

[வித்திச்சிருவன்) வசனம். இந்தச் சிறு முட்டாள்ப்பயல்களின் வா ர்த்தையினுலென்ன இருக்கின்றது, அக்கோசிகன் அகாத இருதயனன்றோ.

(சாரணன்) இதை இப்படிமறைத்துக்கொள்வதிற் பயனென்னே, அடா.

வெண்பா.

கோசிகனப்பார்க்கவனேக் கொற்றவன்பாற் றாதனுப்பி
யாசனேகள் செய்துகொண்ட விச்செய்தி—காசினியி
றன்னுடையசிடர்களுந் தாமுணரா மன்மறைத்த
தென்னவித மென்பே னெடுத்து.

(வித்திச்சிருவன்.)

வெண்பா.

எல்லா நடத்திவைப்போ னென்றெவர்க்குந் தன்னிடத்தில்
வல்லானெனும் நினைப்பு வந்தெய்த—தொல்லாரும்
சின்னத்தனமறைத்து சீர்பெருமை செப்புவரா
லன்னமுனி அப்படியேயாம்.

(வசனம்) அச்சனகராஜனும் தன்மகளின் கலியாணக்காரியத்தை முடித்துவைக்க வேண்டுமென்றம்முனிவனேயே பிரார்த்தித்திருக்கின்றுனென்று நின்றல் நிகழ்த்தப்பட்டதன்றோ, அதற்குக்காரணம் அதுவேதான்.

(சாரணன்.) நகைப்புடன் (வசனம்) அம்மூடஜனகனுல் அம்முனிவனே அதிகப்பலவானெனக்கருதி அவ்விதயேற்பாடு செய்யலாயிற்று.

அகோ அகோ! அம்முனிவனது வீண் விக்கிரமப்பிரதாபங்களே சற்று விளக்குவாம். கேட்கக்கடவீர்.

தரு. இராகம். எதுகுலகாம்போதி. தாளம் ஆதி.

பல்லவி.

விந்தையிதுவேசொல்லக்கேளாய்————அடா
வித்திச்சிருவா இவனோர் ஆளா.

அனுபல்லவி.

அந்தவிசுவாமித்திரன், அதிகருவத்தால்னல்ல,
மதிகெட்டதென்னசொல்ல (விந்தை)

## சரணங்கள்.

காசினியில் முனமிராஜனுமிருக்கின்றகா லே தன்து
கனத்ததளத்துடன் வனத்தினில்வர ஒருக்கா லே
நேசத்துடன் வசிட்டன் காமதேனுமகிமையா லே இவனுக்கு
நிகரில்விருந்துசெய்தான் அதுவருந்தியுடன் கைமே லே பாவி
கோசிகனிவன் மனப்புற கடத்தா லே
கொஞ்சமதியுள்ளவ னுகையினு லே
பாசங்கொண்டிழுத்திடப் பசு அவன்மே லே
பாய்ந்து கொம்பினுற்குத்த ஒய்ந்துகைகா லே
பதறிநடுநடுங்க கலங்கிப்
பயந்துடலுமொடுங்க தன்
பவிஷெலாம் பூனைவாயெலிபோலே
பரிகொடுத்தானய்யா கருவத்தினு லே [வி[

விடிந்துமிஞ்சின இருட்டெனப்பின்படைகள் வளைத்தாரே (ஆவை)
விரும்பியே வசஞ்செயமுடியாமற் சமர்விளைத்தாரே (ஆவின்)
கடிந்தபெருமூச்சினில் மிலேச்சர்களாய் முளைத்தாரே (அவர்கள்)
கடுகளவு முடலிலிட மறமிகத்துளைத்தா ரே (அதனுற்)
படிந்திரத்தநதிகள் கடலில்முட்டவும் பொல்லா ப்
பாவியிவன்றவிர மற்றப்படைகளெல்லா ம்
மடிந்திடக்கண்டுதானும் மறுபடியுஞ்சொல் ல
மலைந்துகொஞ்சச் சிவனுப்வந்ததென்னசொல் ல
மனதிடிந்தச்சத்தோடு ஆனுலுமிது
மிகவுமேலச்சைக்கேடு (எனநினைத்து]
வாடிபிராமணத்துவம் நாடித்தவஞ்செயவே
ஓடிவனத்திற்றுக்கம் பாடிச்சென்முனய்யா (வி)

## கலிவிருத்தம்.

மன்னுவாய்மையும் மானமும்விட்டதோர்
சின்னக்கோசிகன் றன்னையோர்தீரனென்
முன்னியோதினன் உற்றறியாப்பயல்
துன்னுமற்புதமற் புதஞ்சொல்லவே.

(தேவவிரதன்) ஓ அருமை நண்பே (அடுக்குமொழி.) புராவனத்தயா தர்க்கு, ஒருகலைசிருங்கமுனி, பெருமையொடியற்றுவித்த, வரமகமகத்தில் வந்த, சருவினதுபங்கினராய், வருபுதல்வர்நால்வர்மிக்க, விரிவுளநன்னூல்

கஞ்ச மென்போ தெனக்காந் தியுமங்குலி க்
குஞ்சவிரற்கர கோமளங்கண்டன ன்.

(இன்னமும்) அடட, என்சொல்வேன்.

விருத்தம்.

இருந்தென்னபோயென்னவென்வசத்திருக்கின்றவெழில்மன்னர்கன்னியர்யாவரும், விரிந்தவான்மடந்தையரிருக்கினுங்காவல்விட்டுயர்செல்லினுமென்னே, பரந்தமென்றனத்தினள்கமலம்போல்வனப்பினள்பாக்கியலக்குமிஇவடன், பொருந்துநற்சங்கணம்பூண்டசெங்கைகள்யான்புகழதாய்த்தீண்டிடப்பெற்றால்.

(வித்திச்சிகுவன்) மகராஜ், இராமவேடந்தரிக்கின்ற தங்களுக்கிதுவென்ன தூர்லபமா.

(இராவணன்) விருத்தம்.

மையலாய்மனங்கொண்டிட்ட வாரிசூழிலங்கைமன்யா ன்
நொய்யதாமனிதவேடமரிது கொனெடியிற்கொள்வே ன்
துய்யநன்மணிவிளக்காஞ் சோதியினொளிருமேனி ச்
செய்யவளாகின்ற சீதையைக்கொள்வதற்க் கே.

(வசனம்.) வித்திச்சிகுவா யானிப்பொழுது இராமவேடத்தைத் தரித்துக்கொண்டேன், நீயும், கௌசிகவேடத்தை அதிசீக்கிறம் அடைய்வாயாக.

(வித்திச்சிகுவன்) வசனம். யான் அந்த விசுவாமித்திரவேடம்பூணாந்துகொண்டாய்விட்டது, நமதுசாரணனும் இலக்குமணன் வேடத்தை தரிக்கப்போகிறான்.

(சாரணன்) ஆ, மகாமுனிவர்களின், மகத்துவம், மனதிற்களவிடப்படாததன்றோ. அடட, யென்னென்று சொல்வேன்.

விருத்தம்.

மகத்துவக்கங்கணங்கள் வாங்கினேமெனுஞ்சந்தோட ம்
அகத்திற்பூரித்ததப்போ தாகிலும்மிகவாச்சரிய ம்
சகத்தில்யானரக்கனென்ப தாலெனக்கேயன்றோற்ற ம்
திகைக்குதேவிசுவாமித்திரன் செய்கையென்னென்றுசொல்வே ன்.

(பக்கத்தில்நோக்கி) ஓ, ஓ! நன்று, நன்று, பந்துஜனங்களைப் பார்க்கப்போவதிலுண்டாகிய குதூஹலத்தினால், கன்னியர்கள், சித்திரபடத்தையெடுக்காமல் மறந்துவிட்டார்களோ, சரி, சரி, இப்படத்தையும் யெடுத்துக்கொண்டுபோய் நமதரசனிடம் கொடுக்கிறேன்.

(என்று, சித்திரப்படத்தையும் எடுத்துக்கொண்டு)

## விருத்தம்.

இவைகளவளுடகங்கணயுகளமே யீதவளெழுதியமடலே
(வித்திச்சிருவன்) மகராஜ், பார்க்கல் வேண்டும்.

குவளயங்கணியைக்காணவொட்டாமற் குறித்துநம்கண்களையடைத் த
நவமணிக்கடகத்தினையைப்பார்ராம நரனுருநாட்டியமடல்பா ர்
சிவனுடமலையையெடுத்தெரிந்திட்ட திண்புயாசலவிலங்கே சா.

## இராவணன்

அரவாபரணனே அபிராமிநேசனே என்றவர்ன மெட்டு.
இராகம் இந்துஸ்தான் நவரோஸ். தாளம் ரூபகம்.

அடடாவென் மனமனல் மெழுகாகுதே, ஆருடன், சொல்வேனடா
திடமும்மென் பெருமையும் புகழுமிழந்தேனே, சிறப்பெலாம்... டா
எழிற்சனகியைக்காண லபிக்காதகண்களேன் இருபதுகொண்...டா
பழிப்புக்கிடமாயவளை மறைத்திடுவளைபர்ர்க்கவும், படுமோடா
பேரழகைமறைத்த பெரும்பாவிக்கடகங்கள் பிரியமாய்க்காணலாமோ
தூரத்திலெடுத்தெறி சுடுசுடுவனலினிற் றுற்கடகங்களிதே
என்சீதவள்விரும்பா திடையூறுசெய்தபய விவன்முகம்விழிக்கலாமோ
துன்மதிப்பயல்ராமன் துலங்குமிப்படந்தனை சுடுசுடுகொணலாமோ

(சாரணன்.) அதிகமாய்ச்சொல்வதிலென்ன, மகராஜ், இக்கடங்களை, தாங்கள் வைத்திருக்கிறமட்டிலும் தங்களை யெங்களுக்குத் தோன்றப்படவில்லை.

(வித்திச்சிருவன் வசனம்.) நல்லதிருக்கட்டும் சாரணா, இவைகளை விமானசத்திற்கொண்டுபோய் மறைவாக பந்தோபஸ்த்துச் செய்யவேண்டும். இவைகளால் பின்றால் யேதேனும் உபகாரப்படக்கூடும்.

(சாரணன்) அப்படியே செய்கிறது.

(இராவணன் வசனம்.) சற்றுலோசித்து, எடுக்காதவேடமாயினும் எடுக்கவேண்டியதுதான் வஞ்சிக்கத்தகாத இஷ்டனெனிலும் வஞ்சிக்கப்படவேண்டியவன்தான் ஏன், யாதொரு என் இருதயேசுவரியின் பாணிக்கிரஹணசுகமும் இடைவிடாது யானனுபவிக்க வேண்டியதுதான்.

(என்று, எல்லவர்களும் போய்விட்டார்கள்)

2-வது அங்கம் முற்றிற்று.



# மூன்றாவதங்கம்.

## ஆரம்பம்.

(அப்பால்) மாரீசன் பிரவேசிக்கின்றனன்.

(மாரீசன்.) நினைத்து, நினைத்து.

### கட்டளைக்கலித்துறை.

வன்னியிரண் டெனுமன்னன் விடுகணை மாருதத்தா ற்
சின்னமழிந் துடர்ச்சந்திகள் போய்மிகச் சிர்குலைந் து
சுன்னஞ் சுழிப்பதெனக் ககனத்தினிற் சுற்றியிந்த க்
கன்னங் கருத்தகட லாழ்ந்தெழுந்தன னக்கணத் தே.

(வசனம்.) ஆ, நிகரற்ற அடங்காப்பலசாலி அந்தக்ஷத்திரியச்சிறுவன் ஹா, ஹா, எங்ஙனமெனில்.

### கட்டளைக்கலித்துறை.

குட்டிநரன்விடு பாணத்திறற் கும்பல் கும்பலதா ய்
முட்டிவிழுந்திடு சேனையைக் கண்டுமுகிற் குலத் தி
லொட்டியொளிந்து பயந்தோடி மாய்கையு பாயத்தினி ற்
கெட்டியென் றோதுஞ்சுபாகுவு மாண்டு கிடந்தன னே.

(ஹா, ஹா, கஷ்டங்கஷ்டம்) இன்னமும்,

### விருத்தம்.

சரவளியாலெவளவின்மாயாமண்மாரி, தனைக்கடிந்துக்ஷத்திரியத்தனயனென, திரமுடையவவனும்முன்றோன்றுனின்று, நித்தொழிற்றுடைகைதனைக்கண்ணுற்றுச்சிச்சீ, தெரிவையெனும்வெட்கத்தாற்செய்யார்நீர்க்கு, ந்திருக்காஞ்சோர்ந்திடப்பெற்றதற்குட்டாளுப், பரிவுடனேயிளம்பிறைப்பகழிதன்னாற், பகராக்கியவனுமுயிர்பரிந்திட்டானே.

(சோகவேகத்துடன் வசனம்.) ஆ, ஆ, எனை அருமையாய்ப்பெற்றெடுத்த அன்னாய், ஆ, ஆயிரம்யானைப்பலசாலி நீ, மக்களிடங்களில் வாற்

சல்லியமுள்ளவளே, உனக்கும் கேவலம், க்ஷத்திரியச்சிறுவனால் அத்தனைய துர்த்தெசைவரும்படி தெய்வமிசைத்ததே. அந்தோ, அந்தோ.

கொடு விருத்தம்.

ஈன்றெடுத்ததாயேயெங்ஙனஞ்சென்றாய்கொ ல்
எங்கியழுமெனக்குவதிற்சொல்வாயம்மா (கோபத்துடன்)
தோன்றிமுதல்முதல்வைரம்விளைவித்தாய் நீ
துட்டமானிடனுன்னைவிடுவதில்லை (கருணையுடன்)
ஆன்றவெனைச்சுடுசுடுவென்முன்பிற்ற னே
அனியாயமிக்கதியுற்றாய்சுபாகு (ஒருவிதநினைப்புப்பெருமூச்சுடன்)
கான்றனிலுன்போக்கறியேனின்னந்தானெ ன்
காராளசிறுமையையாவென்கழுறவே னே.

(அப்பால்) காராளன் பிரவேசிக்கின்றனன்.

(காராளன்) விருத்தம்.

பொருதலிற் பயமுமோடப் புத்திவந் தருவுந்தெய் வ
கிருபைதா னடடா மிக்கக்கெம்பீர ராமனேவு ம்
சரமதற்கிலக் காகாமற்றப் பிணேனுயி ரோடப் பா
கருதிடப் பயமோபெந்தன் காலமை கணமெங்குதந் தோ.

(பின்னும் வசனம்.) அந்த இராமாஸ்திரத்தால் பிடிபட்ட அம்மாரீசன் ஜீவனோடிருக்கின்றானோ இல்லையோ ஒன்றுமறிகிலேன்.

(எப்படியென்றால்,)

விருத்தம்.

மணிமகுடம் கழுவவிட்டுக் கத்திகேடயங்கள்விட்டு மகிமைகெட் டு
துணியெனக்கை காலயர்ந்து சுற்றிலுங்கேசங்குலைந்து சுழலவிட் டு
பிணிகொளுமாரீசனை யிராமன்பா—ணம் முகிலைப் பெருங்காற்றென் ன
துணிவுடனெங்கோ தொடர்ந்து துறந்திற்றெவ்வாறுகித் துன்புற்றா னோ.

இராகம் உசேனி. ரூபகதாளம்.

பல்லவி.

பிழைத்தானோ அல்லால் பிரேதமாயானானோ.

அநுபல்லவி.

கொழுத்ததேகப்ரகாசன் கோழைவிழிமாரீசன், (பிழை)

## சரணங்கள்.

அன்னையுடன்சபாகு தன்னையுங்கொன்றப்பா லே
அந்தராகவன்பாணம் அவனைத்தொடர்ந்ததா லே. (பிழை)

வேலைதனிலோமலைமேலே விழுந்தாயினு ம்
விசையவனம்புக்குத்தப்பித் திசையிற்சென்றாயினு ம். (பிழை)

அருமையண்ணன்மாரீசன் பெருமைகளெல்லாம்போச் சே
ஆனைக்குமிஞ்சுமோ ஒராட்டுக்குட்டியிதேச் சே. (பிழை)

(வசனம்.) அடடா, என்சொல்வேன் இங்கிருந்தழுதாலென்பயன் தேடிப்பார்க்கல்வேண்டும், கிரமமாய் இம்மஹேந்திர சைலத்தாழ்வு கணையிலாவது அலைகடலிலாவது வீழ்ந்திருக்கல்வேண்டும், அதைப்போய் தேடிப் பார்க்கின்றேன், அப்படியே மாரீசனைத் தேடிக்கொண்டிருக்கிற யென்றால் அம்மஹேந்திரகிரியே வந்தடையலாயிற்று.

அங்ஙனமன்றே,

### விருத்தம்.

இம்மலைச்சிகரக்குகைவருமருவியிருஞ்சிலைநெருக்கத்தின்மோ தி
கொம்மையினிரட்டுஞ்சாமரம்போன்றுகுளிர்ந்தநீர்க்கணம்விழுமலி தில்
செம்மைசேரிலதைச்செறிவுறுங்கரிகள்தின்றவாய்நழுஉ மலைக்கவளம்
கம்மெனும்வாசக்களைப்புறம்நான்குங்கதியுடனடப்பனவரிக ள்.
(இன்னமும்)

### விருத்தம்.

இபத்திரள் சிங்கக்கரத்தடிய தனிலெழிற்பெரு மத்தகமிழிந் தே
உபத்திரவத்தினால் வனத்தலஞ்சிவக்க உதிரங்கள் முத்திறொடொழுக் கி
விபத்தினைச்சகிக்க வசத்திகொண்டவைக ளாய்வீறிடப்பல்லு கவினங்கள்
தபித்தன உரோமஞ்சிலிர்த்தன கனைத்துத்தாவின அதிசயமிது வே.

(எதிர்நோக்கி வசனம்.) இதோதென்படுகின்றவன் நம்மாரீசன்கொல் ஆம், ஓ, இந்தச்சாகரத்தில் வீழ்ந்தெழுந்தவனுயக் காண்கின்றனன்.

(எங்ஙனமெனில்)

### விருத்தம்.

துகிலெலாம் நனைந்துசொட்டிடப் பாசித்துண்டுக ளதில்நனிதுலங் க
கிகையெலாம் வெளுத்த நரைமயமாகத் தெரிந்திடக்கண்சி வப்பெய் தி

திகழ்கைகாற்றலங்கள் வெளுத்ததிலிரத்தஞ் சிறிதுமிலாமலிங் கெதி ரே
புகழ்மஹேந்திரத்தி னடியினிற்காண்பான் பெருநாதாடகைபுதல்வ ன்.
(மாரீசன் காாளனைப்பார்த்து, ஆச்சரியத்துடன் வசனம்.) அட காா
ளா, நல்லுயிருற்றனையா, அட அய்யா, காாளா, எனை, இருகத்தழுவிக்கொள்
வாயாக.

(காாளன் வசனம்.) அண்ணா, மாரீசா, தெய்வச்செயலாய் இராமபா
ணத்தினின்றும் விடுபெட்டாருயிர்பெற்றீரே, என, கண்ணீர்ததும்ப இருகத்
தழுவிக்கொண்டனன்.

(மாரீசன்.) தம்பி காாளா, யான்மற்றென்னென்று சொல்வேன்.

## விருத்தம்.

நரனவன்வில் வளைத்திழுத்து டங்காரஞ்செய்நாணொலியை சரவேகத்தொ
னியவ்வம்பே, பரிவுடனிப்பாதகனை யீர்த்துக்கொண்டு பாக்குதெனக்களி
கொள் வித்யாதரர்தஞ்சொல்லே, விரிகடலினிறைச்சல் லெழுந்துவெவல்
லாம் வெவ்வடவாக்கினி விழுந்துருவுசத்தம், ஒருசமயத்திசைகளெல்லா
ஞ் செவியுற்றேன்காணுளம் நடுங்குதின்னமு மென்னுயிர்ககாாளா.

(மேலும்) தம்பிகாாளா,

## விருத்தம்.

என்விழவின் வேகத்தான்மொத்துண்டு பேரொலிசெய் யெழிற்கல்லோலம்
புன்மையுரு திவலைகளாய்ச்சிதறவும் நீர்பிளந்திடக்கீழ்ப் புயங்கலோக த்
தின்னடுவிற் புகுந்தேனை யக்கணத்தன்னீர்வேகத் தெனைமேலாக் கி
நன்மைசெய் ததம்போதியாம் மறக்கற்பாலதன்றன் னன்றிதா னே.
சாகரத்தைநோக்கி, (காாளன்) நன்று நன்று நதிபதியே, நன்று நன்று
சலநிதியே.

## கொச்சகம்.

நல்லவன்ம கோததியே நல்லவனீ நல்லவன்கா ண்
வல்லவலங் கேச்சுரன்றன் மாபிரதாபப் பயத்தா ல்
சொல்லவனைப் பின்றொடர்வான் றெல்லையிம்மாரீசனை நீ
சல்லியஞ்செய்யா திரக்ஷித்தாண்டனை காண் சத்திய மே.

(மாரீசன்) அனுசயத்துடன், காாளா, யென்சொல்கின்றாய்.

## விருத்தம்.

எப்படிவசுவதை கடல்வனகிரிக ளெனைக்கண்டுகெடு நடுங்கிடு மோ
அப்படியென்பாற் றசகண்டராஜன் அருமையாய்க் கருணை நாட்டினனு ல்

இப்படியினில் யான்றன்ன வறிழந்ததிலுமுதாசின ஞயிருந் து
செப்பியவேந்தர்க் கிடங்தொருந்தானே தீயவெங்களங்கஞ் சேர்க்கின்றேன்.

(கராளன் வசனம்.) ஆ, அண்ணு மாரீசா அப்படிவிளம்பல் வேண்டாம்.

விருத்தம்.

அதிபலசாலி ராமனுயினு மவனையிங் கே
எதிரினின் றுயிர்தஞ்செய்தால் யாவரும்ஜயிக்க மாட்டா ர்
இதமுடன் மாயையாலே இனிவெல்ல வேண்டுங்கண்டா ய்
சதிசெய் மாரீசாசும்மா சஞ்சலப்படத் தகா தே.

(வசனம்.) யாதொரு இராமனைக்கொல்லாமல், இலங்காபுரிக்குத் திரும்புவோமாகில், இலங்கேசன், நமக்கு, வெகுமதிதான் செய்வனு, தவிரவும், அக்கோசிகனும் அந்தச் சத்திரியப்பயலுடன்வந்து சீதா கல்யாணவிஷயமாய் அவனது ரூபங்கொண்டிருக்கின்ற, இராவணனுக்கு இடையூறுசெய்வானல்லவா, என், அம்மனிதரூபத்தை இராஜன் தாரனை செய்யப்போகின்ருனென்று, முன்னமே, தாடகையால்ச் சொல்லப்பட்டிருக்கின்றதன்ரே.

(மாரீசன் வசனம்.) ஆம், அதனுற்ருனே, தொடுத்துவராநின்ற அம்முனியின்கூட்டப் பிரயாணத்தை முறிக்கவேண்டியதாய் வந்த பிரவிர்த்தி.

(கராளன் வசனம்.) அதற்கு யாதுபாயமெனத் தமது ஞாபகம் சிந்திக்கின்றதோ,

(மாரீசன்.) சற்ருலோசித்து ஆம், ஆம்.

(கராளன்.) எப்படி.

பொது.

(மாரீசன்) சிங்காரக்கவி.

அன்னவிஷயத்தினிற், கென்னளப்பெண்ணெனில்
இன்னின்னபடியெனக், கன்னத்தியம்பினுன்.

(கராளன் சிரிப்புடன்.)

சிங்காரக்கவி.

அதிபலகாயன், சதிவினைமாயன்
மதமாரீசர்க், கிதுவொருமலையா.

(எப்படியென்ருல்,)

கொச்சகம்.

அப்பிரியக்கேள்வி யதனுலுடனனலி ற்
குப்புறவீழ்மாயக் கோலமரயாசி தை

• பொய்ப்படிவத்தாளைப் போய்த்துடர்வானன்னவண்மே ற்
செப்பிமெைமயற்பெருக்காற் சீர்குலைந்தசிராம ன்.

(வசனம்.) பேஷ், பேஷ், அப்பால் புத்திரசோகத்தால் மோகத்தை அடைந்த தயரதனை, ஆசுவாசஞ்செய்துகொண்டு, விசுவாமித்திரனும் அவனுடன் அயோத்திக்குத் திரும்பிவிடுவான், அப்பால், அம்முனி இல்லாவிடத்தில் மாயாப்பிரயோகஞ்செய்யவேண்டியது.

(மாரீசன் வசனம்.) ஸஹபாஸ், நீ சொல்லுவது யுக்தந்தான், ஆகையால் சீக்கிரஞ்செல்வோம், எவ்விடத்தில் இராமன் முதலானவர் இருக்கின்றார்களோ, அங்ஙனஞ்செல்வோம்.

(என நடக்கின்றனர்.)

(கராளன், எதிர்நோக்கி) வசனம். ஓ, கௌசிகாச்சிரமத்திற் கணையோஜனைதூரத்தில், கௌசிகீதீரத்திலேயே, அத்தயரதன் முதலினோர் தங்கியிருக்கின்றனர்போலும், அங்ஙனமன்றோ.

## விருத்தம்.

அடிக்கடியிரதப்புரவிகள் கனைப்பால் ஆற்றெறு வனமகிடங்க ள்
வெடுக்கெனப்புற்றுச்சிதறிடத்தாக்கி விளங்கிடுசிருங்கத்தலடிக்க
படக்கொடியரவங் கொடியதீயென்னப் பகர்விடங்கக் குபூத்கா ர
முடுக்கினுற்காதி மகணதிக்கணையின் முழுதுமேபயங்கரமுளவே.

## (இதுவுமது) விருத்தம்.

ஆடகப்பேரித்தொனியினுல்மதமாயறியகூன்மந்திகள்களித் து
நாடகம்நடிப்பத்தளமதவமாகணறுங்குசந்தின்றுமிழ்கபள ம்
காடகமுழுதுங்குறைவறநிறைந்துகாண்டகுகௌசிகீதீர ம்
தாடகைச்செற்றுன்றங்கிடமிங்கெனச்சாற்றல்போற்றழைக்குதுதா னே.

## அடுக்குமொழி.

நேராய்விளங்கின்ற, டோராயிதோவிறைவில்
வாராமன்றங்கிடம், பாராய்மாரீச னே.

(மாரீசன் வசனம்.) ஆம், ஆம், தம்பி கராளா, இப்பொழுதே இவ்விடத்தினின்றும் இராமனைத் தூரத்திற் கடத்திக்கொண்டுபோகவேண்டும்.

(——) (திரை)

## விருத்தம்.

வருவழிக்களைப்பாற் கண்வளர்தந்தை மன்னவன் வருதிபெறும ற்
சிரமமதகற்றவாங் கங்கேயினைஞர் சென்றனர்பாற் செப்பிடாம ற்

சரமுறுவில்லினேடோர் வனங்குறித்துத் தனிமையாய் வேட்டைநாடி
இருபதத்திலுமே தொடுதெறுப்பார்த்தே யேருமிப்பொழுதி னில்ராம ன்.

(வசனம்.) ஆகையால் யானும், எவ்வளவிற் பின்றொடர்கின்றேனே, அவ்வளவுக்குள், ஆங்கங்கே சென்றிருக்கின்ற, இராமப்பரிஜனங்களும் யாதொரு அரணியபாகத்திற்குப் பின்றொடரக்கடவன.

(கராளன் வசனம்.) ஓ, இங்ஙனஞ்செப்புவது, இராமனுக்கு, உயிர்ச்சினேகிதனை, பிங்களனென்ற பிராமணச் சிறுவனே, அவ்விதமேயாம்.

(மாரீசன் களிப்புடன் வசனம்.) தெய்வச்செயலாய் நமக்கோர், அந்தலாபம், கிடைத்தது, அட தம்பி கராளா.

## கட்டளைக்கலித்துறை.

இவன்வனத் தேகுமுனப்பா கராள யெழிலிவன்ற ன்
றயவுருக்கொண் டுவன்மாயை யினால்வனத் தந்திகைப்ப ட்
டவதியுற்றே னென்றறற்றிச் சினேகத்தி னைசயினு ற்
கவலையுற்றுத் துடர்ராமனைச் சேர்க்குதி கானிடை யே.

## (யானுமே) கொச்சகம்.

காதிமகன்றன்சிடன் காசிபரூபங்கலந் து
மேதகுராமன்நிமித்தம் விறகத்துயர்கொண் ட
சீதையைவன்மாயையினுற் சிருட்டிசெய்தின்னவனு க்
காதரத்துடனினைத்த அப்படியேசெய்வேனு ல்.

(எனச்சென்றனர்.)

(அப்பால்.) எவொடு தனுவு, மேவு செங்கரத்தி, ராமன் பிரவேசிக்கின்றனன்.

இராகம் இந்துஸ்தானி பியாகு. ஏகதாளம்.

## பல்லவி.

இந்தக்கானமே வேட்டைக்
கேற்றஸ்தானமே.

## அநுபல்லவி.

வந்தகுசிக நந்தனரொா டு
மைந்தரோடு தந்தளத்தொ டு
எந்தை, பொருந்து ம்
கந்தவா, ரந்தனி, விரு ந்
து, வந்தே, ழுந்து, வந்தே ன். (இந்த)

## சரணம்.

மெத்தநெருக்கமே இந்த
விருக்கவருக்க மே
மத்தகயங்கள், சுற்றுகின்ற ன
புத்திற்கோலங்கள், குத்துகின்ற ன
வெற்றி, சிங்கத்தி ன்
சத்தமி, குத்துப, யத் தை
மெத்த, விர்த்தி, செய்யு ம். (இந்த)

(இராமன் வசனம்.) ஆ எனது வின்னுேரைசை வியாபித்த இக்கானகத்தில், வெகுநேரம் வேட்டையாடுகின்ற என்னுல், விநோத விநோதமாய் பற்பல காக்ஷிகள் காணப்படுகின்றன.

எங்ஙனமெனில்.

### விருத்தம்.

எனதுவிற்குணத் தொனிநிரைவனத்தில் யானைகள்சீற்றத்தி னெழுந் து
கனமதத்தொடு நடக்கின்றநடையும் கனலெழுசினத்தொடு சிங்க ம்
நனிகளத்தினைக் குடிலமாய்வளைத்து நாடிடுகின்றதும் ஞம வி
இனஞ்சிறைவிரித்து நடனங்கள்புரியுமெழிற் பெருஞ்சிறப்புங் கண்ணுற்றேன்.

(இன்னமும்) இங்ஙனம்.

### விருத்தம்.

காட்டகமெங்கும் குவலையவடிவாய்க் கண்டிடவிளங்கு கின்றனவா ய்
மாட்டினின் றிடுவேடுவமூடர் மதித்திடாமகிமையை யுளவா ய்
வாட்டடங்கண்ணுர் கடைவிழிநோக்கம் வாஞ்சைகொள் குணமுடையனவாய், கூட்டமாய்ப்பயஞ்சேர் மானினச்சலனக் கோலமாவிழிகள் காண்கின்றேம்.

(ஆசையொடு)

### கட்டளைக்கலித்துறை.

மனத்திவிதாகுல மான்பிரட்ப் பார்வைம ஞேக்கியமா ம்
நினைத்திடுகின்றனன் அதனினுமோங்கன் னேறிழை மா ன்
கனத்த தனத்தினட்ப்பூ மகடன்சுழற் கண்ணிணை யி ன்
இனித்திடெழிற் பெருநோக்கங் கண்மிக்கவுமேற்ற மென் றே.

(——) (திரை.)

(வசனம்.) ஆ, ஆ, அந்தோ, அந்தோ, அருமைநண்பனே, ஆருயிர்ச்சகராமசந்திரனே, யான் அனியாயமாய், ஹதமாய்ப் போயினேன் ஹா கஷ்டங் கஷ்டம்.

(இராமர்) கேட்டு (பரபரப்போடு) வசனம். ஒ, ஓ இதுவென்கொல், ஜனஸஞ்சாரமில்லாத இவ்வருங்கானில், என்னைநோக்கிப்புலம்புகின்ற ஒருமனிதனுடைய தீனச்சுரம்போற் கேட்கப்படுகின்றது.

என, கணையுந்தனுவுங் காட்டெழிற்கரத்தனாகக் கடுக்கெனவெழுந்து நடக்கின்றான்.

(——) (அடுத்ததிரை.)

ஆ! ஆ! (வசனம்.) கஷ்டங்கஷ்டம், துஷ்டமதகஜத்தின் துதிக்கரத்திற் கட்டுண்டு, ஆவி துடிக்கின்றேன் அஃதென்னை யிழுத்தடிக்கின்றது, ஹ, ஹ, கஷ்டங்கஷ்டம்.

(இராமர் எப்படி! வசனம்.) பிங்களனுடைய சப்தம்போற்கேட்கப் படுகின்றதென்கொல் என, விரைவில், நடந்துகொண்டு, அடட, கஷ்டங் கஷ்டம்.

விருத்தம்.

பிரியமுளார்தமைப்பிரிந்து நலவேட்டையின் விழைவாற் பெருங்காட்டே
இருமொடு நிற்கின்றேன்பாற் சிகிரத்திலொருத்தனைத் தேடிவந்த
பரிவுளவெம்பிங்களனைக் காட்டானை சுண்டையெனும் பருத்ததண்டக்
கரமதனால்மெய்சுற்றிக் கொடியகத்திற்செகுதந்தோ கஷ்டங்கஷ்டம்.
கஷ்டங்கஷ்டம்.

(——) (அடுத்ததிரை.)

தரு இராகம் ரீதிகௌளை.

பல்லவி.

ஐயய்யோ அனியாயம், ஹரே ராமா (அய்ய)

அநுபல்லவி.

மையவனத்தினில் வந்ததபாயம்
செய்வதறியேனுபாயம், என்னமாயும் (அய்ய)

## சரணங்கள்.

காடைபிடிக்கப்போய் கக்கரப்பட்டாற்போ லே
கருதிவனவேடிக்கை காணவந்தொருக்கா லே
சாமெதகரியின் கைக்குளகப்பட்டே னே
தப்பவழிகாணேனே, பிங்களன்நரா னே. (ஐய்ய)

தவமிருந்தெனைப்பெற்ற தாய்சகிப்பா ளோ
தந்திக்கிரையாய்வந்து சார்ந்திடுநா ளோ
எவனின்றெனெதிர் முண்டமெனமுளைத்தா னோ
ஏன்னசகுனப்பலனோ, விதிதா னோ. (ஐய்ய)

சகனேயென்றுயர்கண்டால் சகித்திடாய்நீ யே
சமையத்திலெனைத்தேடித் தவித்திடுவா யே
புகழுடையோய்வெட்டை போதாதோயெங்க னே
போயினையோயிங்ஙனே, மயங்கினே ன். (ஐய்ய)

ஏழைப்பிராமணனென் பிடரியிற்றுதிக்கையா ல்
இருகப்பிடித்தெங்கோ இழுத்துக்கொண்டேகுதய் யா
நாழிகைஅரைகழித்தாலெனைக் காணலா மா
நாயகபலவீமா, அரோரா மா. (ஐய்ய)

(இராமர்) இதோ வந்துவிட்டேன், வந்துவிட்டேன் எனநடந்துகொண்டே)

தரு. இராகம் செஞ்சுருட்டி. ஆதிதாளம்.

## பல்லவி.

இதுவென்ன மோசம் ஆ தெய்வமே.

## அனுபல்லவி.

ததியிற்பிங்களநாசம், சாருமோகிலேசம். (இது)

## சரணங்கள்.

இவனையார்வரச்சொன்னார் என்வந்தா னோ
கவனமில்லாமல்வந்து, கரிபீடனத்தில்நொந் து
கானந்தனிலிறந்தேன், கைவிடுவா னோ. (இது)

என்னுயிரையென்கண்ணை கண்ணிற்காண்பே னோ
கன்னமதக்கரியின், கையகப்பட்டபோ தே
காண்பதேதப்பாதிதே, கருத்தழிந்தேனிப்போ தே. (இது)

(என, நடக்கின்றார்.)

# ௩-வது அங்கம்.

(———) (அடுத்ததிரை.)

இராகம் பியாகு. ஆதிதாளம். ஜாவளி.

## பல்லவி.

ஏ ரகுராமா, ஏ பலவீமா, ஏழையைக்காத்தருள், ரவிகுலசோமா.

## அனுபல்லவி.

பாரபுயாசல, தீரனேகோசலை
பாலா, சீலகு, ஞலா, லோலா. (ஏ ரகு)

## சரணங்கள்.

நானேவந்தணன், கானகம்வந்தன ன்
நடுவிற்கரிபீடனத், தால்மிக, நொந்தன ன். (ஏ ரகு)
இபத்தின்கையகப்பட்டேன், உபத்திரவமேவிட்டே ன்
இனியெப்படிப்பிழைப்பேன், இறந்திட்டேனிரந்திட்டே ன். (ஏ ரகு)
ஹா, ஹா, கஷ்டங்கஷ்டம்.

இராகம் இந்துஸ்தான் நவரோஸ். தாளம் ரூபகம். ஜாவளி.
அரவாபரணனேயென்றவர்னமெட்டு.

இதுவோவென்விதி, இனியென்னசெய்குவேன், எப்படியுயிருய்வே ன்
மதயானைக்கிறை, யாகவோ ராமனுடன், வந்தேன்வனந்தனி லே
வனந்தனில்வந்தாலும், மன்னவன்றன்ஸ்கந்தா, வாரத்திலிருக்காம ல்
தனந்தனியாயிங்கேன், சார்ந்தேன்விதிவசந், தப்புமோவதைக்காம ல்
தனியாய்வந்துநான், தந்திக்கிறையாகின்றேன், தப்பவழிகாணே னே
அனியாயமாயிங்கே, ஆருந்துணைகாணேன், அய்யோஅனாதையானே ன்.
ஆ, கஷ்டங்கஷ்டம்.

## விருத்தம்.

அய்யனேதனயனுசையையுடையாய் அதோகதியாகினனென் னை
வெய்யகூற்றன்வாய்வீழ்த்தவோபெற்ருய்விளைந்திடுதவமுருவன்று ய்
வையகத்தினிலுயிர்ச்சகராமமன்னவென்பால்நின்சினேக ஞ்
செய்யபக்குவசமையத்திற்பொல்லாத்தீமையாய்முடிந்ததென்செய்வே ன்.
(இராமர்) கருணையுந் தீரமுங்கொண்டு, அஞ்சேலஞ்சேல்.

## கலிவிருத்தம்.

அஞ்சலஞ்சலென் ருருயிர்ப்பிங்க ளா
மிஞ்சுவேகத்திதோ மேவிவந்தன ன்

(என) விரைவில் நடந்துகொண்டு, அகோவகோ, ஈதெங்ஙனமறைந்தது கொலோ.

 ஷை கலிவிருத்தம் பிற்பாதி.

குஞ்சரப்பெருங் குன்றுகடந்ததால்
எஞ்சரத்திர்க்கி லக்காகவில்லையே.

(தனுர்வேகத்தைத்தணித்துக்கொண்டு எதிர்நோக்கி) வசனம். ஆ, ஆ, மதகஜம்காணப்படவில்லையே, அதற்குண்மறைந்திட்டதா, சற்றுநிதானித்து,

விருத்தம்.

இதுநிற்க அம்மதக்கரிபோனவழியெங்கேயெனப்பார்க்கின்றேன்
சதிர்பெற்றவன்பனையிவ்வாறேகிவிடுவிப்பேன் றடத்தைக்காண்ப
ததிகஷ்டமெவ்விதமுமொளிர்பாறைத்தலமீதிலதுவுந்தானே
துதிபெற்றவண்டொழுங்கார்மததாரைக்குறியிதனூற்றேன் றப்பெற்றேன்.

(என நடந்துகொண்டங்கொருபாலுநோக்கி,)

விருத்தம்.

மருத்தலைத்திடமுகுளவாகுலநீர்வஞ்சியின்றுவளமதனுட்ப
பருத்தவோசைகொளருவிபாய்ந்திடக்கூப்பாட்டொடுமுழுகுநீர்க்காக்கை
வருக்கநற்கிளர்ச்சிகிளைகளோடுயர்ந்தவடதருப்பொந்தின்வாய்ப்பாந்தட்
செருக்கினூற்பயங்கொண்மான்களினீலத்திருக்கொளிதிகழ்தடச்சிறப்பே

(வசனம்.) ஆகையாலிங்ஙனமே, மதயானைகொண்டொளித்திருக்கல் வேண்டும், அதனைத் தேடிப்பார்க்கின்றேன்.

(எனப்பார்த்து களிப்புடன் வசனம்.) ஓ, ஓ, தெய்வாதீனமாய், இங்கு காட்டானையின் கையினின்றும் விடுபட்டுப் பிங்களன் மயங்கிக்கிடக்கின்றவன்போற்றென்படுகின்றான்.

(அப்பால்) பிங்களவேடத்துடன் பாறைத்தலத்தில் மயமுற்றுக்கிடக்கின்ற பான்மையாய் (கராளன்) பிரவேசிக்கின்றான்.

(இராமர் கிட்டவணுகி) ஆ, ஆ, எனதருமை நண்பே, ஆருயிர்ப்பிங்களா ஆயாசம்விடுத்தாச் சுவாஸம்பெறுவாயாக.

(என) மேன்முந்தியால், விசிறிக்கொண்டே.

இராகம் தோடி. கண்ணிகள்.

என்னசெய்குவேனென்னசெய்குவேன் என்சினேகிதபிங்களா
எதடாதெய்வசோதனைகொலோ இப்படிநீமயங்குகிறாய்

துன்னுனின்முகத்தின்னெழிற்பெருஞ் சோபைகாண்கிலன்ரேழ நீ
சொக்கினுய்போலிருக்கிறுயிந்தத்துன்பம்நீக்கடா அன்ப னே
அப்பனேயென துட்புறஞ்சோக அக்கினியெறிக்கின்ற தே
அந்தமோகம்யெந்தனை வளைந்தது தொந்தறிக்கின்ற தே
இப்படிமண்மேற்குப்புறவீழ்ந் திருப்பதென்பாலென்செய்ய வோ
இஷ்டனேமிகக்கஷ்டங்கஷ்டம் யேங்கியேங்கினான்கைய வோ.

(கராளன் தன்னுள்.) இராவணேசுவரனுக்கிதமான காரியம் யாதோ அதுவேயாம்.

(வெளிப்படை.) கண்களை மிகப்பிரயாசத்தினுல் விழிக்கமாட்டாது விழித்துக்கொண்டு, ஆ, என்னுயிர்ச்சகன் ராமபத்திரனு,

(இராமர்.) ஆம்.

(கராளன்.) ஆயாஸந்தெளிந்து.

விருத்தம்.

என்னுயிர்ச்சகனே ராமா இவ்வடவியினில் நீசெ ய்
நன்னய வேட்டங்காண ஆவலாய் நாடிவந் த
என்னைவெம்மத மாதங்கம் இடைவழி தனிற்றுடர்ந் து
மென்னியைச் சுண்டஞ்சுற்ற வேதைசெய் திட்டதந் தோ.

(அப்பால்)

கலிவிருத்தம்.

துங்கனின் ஞணிவன்றெனி யொப்பாக ஓ ர்
சிங்கநாதஞ் செவிப்புலன் சேர்ந்தி ட
இங்கெனைக் களைகொண்டிடத் தள்ளிவி ட்
டெங்கேயோ ஒளித்திட்டது யானை யே.

வசனம். யானுே களைப்புற்று வீழ்ந்தனன், மேல் ஒன்றுமறிகிலன்.

(இராமர்) வசனம். ஆகையால், நினைக்கின்றேன், எனது நாணுேசையால் சிங்கத்தின் கர்ச்சனையென்று நடுக்கங்கொண்ட அம்மா தங்கத்தின் கரத்தினின்றும் தெய்வாதீனமாய் நழுவினுயென்றே நன்று, நன்று, பிங்களா.

கலிவிருத்தம்.

நல்ல காலங்கை நாகத்திடஞ் சலா ம்
அல்லல் நீங்கினை அவ்வகுளத்த ரு
பல்லவத்தின் குளிர்நிழற் பாங்கிரு ந்
தொல்லை நின்களைப் பொழிக்கலாகுமா ல்.

# ஜானகிபரிணயநாடகம்·

(காரளன்) சிங்காரக்கவி.

நாட்டிகராகவ, வேட்டமதால்வரும்
வாட்டமுமிங்ஙனம், ஓட்டிடவொக்குமால்.

எங்ஙனமெனில்.

## விருத்தம்.

தருவின நெருக்கத்தாலே தனிக்கறுப்படர்வ ளுந்த ம்
பெருகின்ற தெதிர்ப்பிற்பூத்த பீடுதாமரைப் பேரா றே
விரிமலர்க் கந்தந்தோய்ந்து மிகக்குளிர்ந்தனில மே வி
பருவமாங் குயில்கள்சத்தம் படித்திடப்பரவு திங் கே.

## இராமர் அடுக்குமொழி.

ஆம் ஆம் அரணியமிதில்வகுளத், தருநிழல்ரமணீயம்
பரிசனம்வருமளவும், சரஸமதாயிருப்போம்.

(காரளன் தன்னுள்) மாரீசன் வருமளவும், எனவழுத்தல்வேண்டும்.

(வெளிப்படை) அவ்விதமே செய்வோம்.

(இராமர் வசனம்.) ஓ ஸரஸ, ஸல்லாப, உல்லாஸ, நேசனே, நின்னை இங்ஙனமாயினும், உயிருடன் காணப்பெற்றது தெய்வச்செயலேயாம்.

என் (அங்ஙனமன்றே)

## விருத்தம்.

என்னுயிர்ச்சக நீஇலையெனிற் சனகனெழிற் கனியின்கரம்பற்று ம்
நன்னயசுபமெற் கெய்துங்கொல் நழுவினதுவன்றே வதுநிற்கநிற் க
நின்னுடைமரணத் தினில்வருதுயரம் நிகழ்த்துமென் னிதயமன்மத்தை ப்
பின்னம்தாகப் பிளந்தெரியாது பிரியுங்கொல் பேசிடாய்நண் பே.

(காரளன் தன்னுள்) வசனம். இப்பையலிராமனும் அத்தையலர்க்கரசியின் திருக்கரம்பற்று மஹோற்சவத்தைத் தெரிந்துதானிருக்கின்றான்.

(வெளிப்படை) ஆ, எனதருமை நண்பே, அங்ஙனமன்று.

## விருத்தம்.

என்னுரு சோகத்தால்நீ எழிற்சனகியை வேட்கா து
சொன்னவாய் மொழிப்படிக்கித் தோகையை வெறுப்பையாகி ல்
உன்னது மோகத்தாலே உயிர்தவிர்ப்பாளல்லாம ல்
இன்னிலத் திருப்பாளென்றே எண்ணுராய தேஜிரா மா

(இராமர்.) ஆசையுடன், ஓ எனதாசை நேசனே.

## அடுக்குமொழி.

என்னிடம்நீசொல், அன்னகாசிபன்
பன்னிடுவார்த்தை, நன்னயமெய்கொல்.

## விருத்தம்.

சனகிதன் னேறிற்சித்த சன்சதிருயுன் றன்னைக்
கனவெனுங் கபடத்தாலே காட்டிடவெழிலைக் கண்ட
தினமுத லவண்மயங்கிச் செந்தளிர்ச் சயனந்தோய்ந்து
மனமகிழ் சகியர்தேற்று வார்த்தைகொண் டுய்கின்றாளால்.

(என்றே)
கராளன், செவிகளை வேறுசாய்த்து.

(தன்னுள்) வசனம். அடடா என் இன்னமும் மாரீசன் வரவு காண்கிலேன், (எனச்சிந்திக்கின்றனன்.)

(இராமர்.) பிங்களா, நீ என்முன்னுரைத்த, அக்காசிபன்சொல், மெய்மொழிகொல்.

என, திருபவினவினன்.

(கராளன், வெளிப்படை.) ஆ, காசிபனென்பவன் யாவன்.

(இராமர் வசனம்.) ஆ, நினைவுகெட்டனையா, யாவனொருவனைக்கௌசிகமுனிவரின் சீடனென்றன்று லென்பாலுரைக்கலாயிற்றே, அவனைமறந்துவிட்டனையா,

(கராளன்) பயமும் நடுக்கமுங்கொண்டு (தன்னுள்) வசனம். அகோவகோ, தீவினைவிளைந்ததே, யீதென்னமறதி, யாதொருமாரீசன்பாற்சென்றிருந்த மனத்தனாய், ஆரம்பிவித்தகாரியத்தில், தகவல்த்தப்பாய், மறதியினால் மதிமறந்துரைக்கலாயினேன். நல்லதிருக்கட்டும்.

(வெளிப்படை) அவனையார் மறந்தது, பின்னையோவெனில்.

## கலிவிருத்தம்.

கயத்தின் கைக்குளாய் நொந்தவென் ஞாபகம்
பயத்தினாற் பரிபோச்சுதன் பாமிக
ஜயத்திலோங்கிய சிற்றச்சிலை தழும்
புயத்துமன்னவர் போற்றுபுர வலா,

வசனம். ஆயின் அக்காசிபன் சொல்லிலுங்களங்கமுண்டோ.

(கேட்கக்கடவாய்)

## விருத்தம்.

செந்தளிர்ப் பஞ்சணை பங்கயத்தண்டினஞ் செங்கைத்திருப்பணி யே
சிந்தைகுளிர்ந்திட நின்புகழ்கேட்குதல் திவ்வியசங்கீத ம்
உந்தன் றிருநாமமோது தலன்னவளுட்கொளும் போஜனக மே
இந்தவிதமெழிற் சுந்தரியின்றௌசை யென்னென் றியம்புவ னே.

## ஷை விருத்தம்.

அன்னத்தூவிகொண் மெத்தையிருந்தும் அருணப்பல்லவ மெத்தையதா க
சொன்னச்சுடர்வளை மிக்கவிருந்துஞ் சொன்னளங்கைக் கங்கணமா க
உன்னர்க்ககமகிழ் கீதமிருந்தும் உன்புகழ்கேட்குதலே இசையா க
மன்னப்பெருவை தேகியுனலே வாடுகிருளெவ்வா றுரைசெய்வே ன்.

(இராமர்) தன்னுள்,

## அடுக்குமொழி.

ஹ ஹ, கன்னிகல்யாணியாள், என்னிமித்தத்திலோ
துன்னுமித்துயர்க, டன்னையுற்றுளரே.

(வெளிப்படை) வசனம். என்காதலுக்குகந்த சிநேகிதபிங்களா, யீதெ ன்ன பரிகாசம்.

(கராளன் தன்னுள்) வசனம். எனது பிரவிர்த்திக் கனுசரணையாயி ருக்கின்றதவனது மனோவிர்த்தி.

(நிரம்பச்சந்தோஷம்) நல்லதிருக்கட்டும், யானிவ்விதம்புகல்கின்றேன்.

(வெளிப்படை) தொடர்மொழி, ஓ எனதாவலுக்குரிய நாவலநண்ப ராமநாயகனே, நினக்கென்னுரையிலும் நம்புதலில்லையா,

(இப்பவும்) நின்னினைப்பினல் அந்நேரிழையாள் காமவெக்கைக்காற் ருது, இளந்தளிர்ச் சயனத்தில், சயனித்துக்கொண்டிருந்து வருந்துகின்ற னளென்றறிந்துகொள்.

## விருத்தம்.

குளித்திடாள் சந்தமப்பாள்குழல் மலர்மாலை சூடா ள்
களித்திடாள் விளையாடா ணற்கன்னியர் வதனம் நோக்கா ள்
தளிர்க்கர தலத்தில்வைத்த முகத்தின டாரைக்கண்ணு ள்.
வெளுத்து தடுலருயிர்ப்பாள் விழித்துக்கொண் டிருக்கின்றளே.

வசனம். ஓ மித்திரகுலசிரோரத்தின ராமபத்திரனே, நின்னினைப்பி னல், அதிமையற்கொண்டு, இன்னமும், அம்மடநல்லாள், மிகமிக வருத்தப் படுகின்றனள்.

# ௬-வது அங்கம்.

தரு. இராகம், செஞ்சுருட்டி. ஏகதாளம்.

## பல்லவி.

நான்சொல்லக்கேளாய் ரகுநாயகா.

## அநுபல்லவி.

தேன்சொல் சீதாதேவி தியக்கமயக்கமெல்லாம்.

## சரணங்கள்.

கனவிலுனை மன்மதனுங் காட்டி
கருப்புச்சிலையிற் கணை ௗள்பூட்டி
அனவரதமெய்திட வென்பிராட்டி
அதிகமையற்கொண்டு சீமாட்டி
அல்லும், பகலுமுனை, யல்லால், நினைப்புவே, றில்லாள், மயங்குசெய்கை,
எல்லாந், தெறிந்தமட்டும் (நான்)

மையலினி நான்சகியேனென்பாள்
மதிசுடுவனலோ வகியேனென்பாள்
அய்யய்யோ யென்செய்வேன் சகியேயென்பாள்
அனிலனல்லத்தென்றல் அரியேயென்பாள்.
அங்கந், தனிற்பனிநீர், கந்தங், களைச்சகிகா, ளெங்குந், தடவி
வீ, சுங்க ளெனப்புகல்வள். (நான்)

மயங்கிக்கிடப்பா ளொருசமயம்
வாய்துறந்தரற்றுவ ளொருசமயம்
பயந்துநாணடைவ தொருசமயம்
பிராணவலவாவென்ப தொருசமயம்
பாலும், பழமுமா, ஞுலுங், கசக்குதென்பள், மேலும், பசந்த
திரு, காலும, சர்ந்ததென்பாள். (நான்)

(இராமர்) தன்னுள்.

## விருத்தம்.

சந்தியானது சந்திரகிரணத்தாற் சாகரந்தளம்பிட வலைக்கு ம்
அந்தவாறெனதாருயிற்ரேழன் அறைதருவரிசை இம்மொழிகள்
கந்துலாங் கரத்திருணிறத்திலங்கு நாயகன் சேயெனப்பிறந் து
வந்தமானதனு லெனதுளத்தை மயங்குற வலைக்கின்றமா தோ.

(கராளன்) வசனம். இன்னமும் அக்காசிபனுல் மற்ருென்றும் வழுத்தல்ாயிற்று.

(இராமர்.) (அஃதென்னை.)

(காராளன்) விருத்தம்.

குமுதமாமலர்க் கோறகம்விரிந்திடக் குளிர்கந்தம பகரித்து க்
சமயமாலை வக்துலவிட யேழையாய்ச்சானகி சஞ்சலக்கண் ணி
நிமிடமாயினு மகல்வுறாச் சங்கர்ப்பநின்று லிங்கனசுகத்தா ல்
சுமதிமாதுகன் மதியி வெலாந் துலைக்கின்று ளென்னுத்துங்க னே.

இராமர். புளகாங்கிதங்கொண்டு தன்னுள்.

கொச்சகம்.

சாரமிகு காரிகையின் சங்கர்ப்பாலிங்க னஓய்
யாரமதைக் கேட்டவுடனுசையின் விளைவா லே
வீரமுள வென்மனது வெடிநெற்றுத் தேங்காய்போ ல்
நேரிற் பிளக்கப்பட்ட நேர்மையெனக் கீறினதா ல்

ஆகையாலிப்பொழுது,

விருத்தம்.

மனதினிலிடை வெளிதுறந்திட மாவில்ச்சையுந் தீரமு ம்
எனைவிட்டப்புறம் நழுவுகின்றன வேமுனம்பிர வேசி யா
சினமன்மதனுங் கொடியதாவமுஞ் சேர்ந்துவந்து நுழைந்த ன
இனியென்செய்வது சனகிவந்தெனக் கென்றுதான் சுகமீவளோ.

௨ கொச்சகம்.

பொன்மலிவி தேகமன்னன் புண்ணிய குமாரியினு ல்
என்மீதமர் செய்யவென்றே எண்ணினன் கொல்பாவிமத ன்
பன்மலர்கள் தூவிடவன் பாணங்களென்மேல் வீழ்ந்தா ல்
கன்மனத் தாளுேடு மல்லுக்கட் வொா ராகா தே.

௨ கொச்சகம்.

தேன்போலுஞ் சானகியின் செவ்வா யிதழ்ருந் தி
வான்பிறை போலேநக மும்வைத்து முலைநெரு டி
மான்போலுங் கண்ணுளுடன் மருவிநோய் தீர்ந் து
யான்போதனங் கனுடைக் கருவந்துலைப்ப் ென் றோ.

(காராளன்.) அன்புமிகுந்த நண்பர் நாயகமே.

கலிவிருத்தம்.

வாகனப் பெடைமா மயில்ச் சீதையி ன்
மோகம் யாவுமொழி ந்திடக் கேட்டு மை

நாகம் நேர்புய நாயக ராக வா
மூகமா யிருப்பா னேன்மொ ழிகுவா ய்.

(இராமர் தைரியத்தைக்கடைப்பிடித்து வெளிப்படை) வசனம். அட கேவலம் இக்கன்னியின் பிரஸ்தாபத்தாலென்பயன்.

(கராளன்.) கலீரென்று நகைத்து.

சந்தவிருத்தம்.

அடைவோமுன்பிலணிபணிகூர்விளங்கிழையினமுதாமருஞ்சரிதையது சொற்ருய், நடுவேபெரும்புளகவடையாளவன்பதுடன்நலமாமிரண்டுசெவி நனிபெற்ருய், கடையேநெருங்கிவெகுதடையேயுரிந்தனையொர்கடலேழு மொன்றஒருகலைசுற்றும், படிமீதிலெங்கெவர்கள்மதனல்வெலுந்தகைமை பலியாதிருந்தவர்கள்பரிவுற்றே.

(இராமர் இலச்சையுடன் தன்னுள்) வசனம். ஓ, ஓ, என்னிதய சஞ்சலத்தை இவனுந் தெரிந்துகொண்டனன்.

(அடட, எறிகின்ற கெட்டமனமே என்ன தவிக்கின்றனே.)

ஹ, ஹ, இப்பொழுது,

விருத்தம்.

வனப்பினட்பகவான்மானதனியற்றுமாயையொப்பாமந்தமயி லை
இனப்படிநனவிற்கனவிலுங்கண்டிலேனெனினு மவ்வவஸ்தையாடனைக்கே
டினித்தவானந்தமற்புதம்சோகமியம்பிடுகுதுகலம்பீதி [ட்
கனத்தமாவிலச்சையிவைகளென்மனத்திற்கலங்கியேகுழம்புகின்றனவால்.

(வெளிப்படை வசனம்.) ஓ, ஒப்பில்லாத, உயிர்ச்சக பிங்களா, உனக்குந் தெரியாததொன்றிருக்கின்றதா, ஆனல், எனக்கு அச்சுந்தரி கிட்டுதல் துர்லபமென்றெண்ணி, அங்ஙனமுரைத்தனன்.

(கராளன் தன்னுள் வசனம்.) இவனுக்கவள் விஷயமான ஆசையைச் சலியாவண்ணம் என்னுற்றிடஞ்செய்யலாயிற்று.

(வெளிப்படை வசனம்.) ஓ, ஓ, இரகுகுலதிலகா, நீ இப்படியா நினைக்கின்ருய்.

அடுக்குமொழி.

இத்தனைசந்தேகமேன், முத்தன்விசுவாமித்திரன்
எத்தனித்தகாரியம், வெற்றியாய்க்கைகூடுமால்.

(வசனம்.) அக்காரியத்தை நிறைவேற்றி வைப்பதற்கு விசுவாமித்திர மகரிஷியன்ருே பிணைப்பட்டிருக்கின்றனர்.

(இராமர், தன்னுள், இதுவென்சொல்.) பிங்களன் அஸம்பாவிதமாய்ப்பேசுகின்றனன்.

(வெளிப்படை வசனம்.) எனதருமை நண்பே, யீதெவ்வாறறிந்தனோ,

(கராளன்) தன்னுள், வசனம். இஃதிவனறியான்போலும்.

(வெளிப்படை வசனம்.) ஓ, ரவிகுலராமச்சந்திரா, யான் பேசியதெல்லாம், காசிபனுரையேயாம்.

(——) (திரை.)

விருத்தம்.

பாறுவாய் வாட்டுகின்றான் பாவியப் பனிக்கரன்று ன்
எனய்யாவன்ம மென்மீதிக்கு வில்லோய் முனியே ல்
யானினிச் சகியேனம்மா வென்சகிகோள் நளி ன
வான்மல ரிலையுந்தண்டும் வகையுடன் கொண்டுவாரீ ர்.

(கராளன் தன்னுள் வசனம்) ஓ, ஓ, மாரீசனுடைய மாயாப்பிரயோகமோ.

(அப்பால்) மாரீசன் மாயையில் மறைந்துகொண்டவனாய்ப் பிரவேசிக்கின்றனன்.

இராகம் செஞ்சுருட்டி. ஆதிதாளம்.

பல்லவி.

மாமாயம் மாரீசமாயம் மாமாயம்.

அநுபல்லவி.

கோமான் ராமனைக் கொல்லநினைத்த உபாயம். (மாமா)

சரணங்கள்.

மிதிலைவல்லியைப்போலே சதுரவென்மாயையா லே
மதனவல்லியைச்செய்தேன் மென்மே லே
கதிர்குலராமன்மேல் அதிமயலானவள்போ ல்
விதவிதமாய்ப்புலம்பி மதிமயங்கிடச்செய்தே ன். (மாமா)

சிவிச்சிங்காரிக்க ஏவற்பெண்களைச்செய்தே ன்
தாவிப்பொய்ப்பிதிர் வதத்தாலிறப்பவள்போ ல
பாவனைகாட்டியப் பாவிராமனிறக் க
வேமனல்நிஜமதாய்த் தாவித்திட்டே னே. (மாமா)

(மாரீசன்) விருத்தம்.

சீதைத்யெவ்விதமாய்த்திகழ்கின்றுளோவவள்சேடியரிருப்பதெப்படியோ மாதவனுடையகன்மங்களெவ்வாறோமாயையாலகிலமுமதுபோ ல் றுதினிற்படைத்தேன்பினும்பிதிர்வதப்பொய்ச்சொல்லினிற் ஜனகிமாய்வது போல், பேதமைகாட்டிராமனைவீழ்த்தப்போனல்மெய்யதாய்படைத்தேன்.

(வசனம்.) ஆகையால் இப்பொழுது தாடகாவதத்திற்கு பதிலும் இல ங்கேசுவரனுக்குமனோரதமும் முடிவுபெற்றதுபோலும்.

ஸபாஸ் நிரம்பசந்தோஷம்.

(நாற்புறமும் நோக்கி) ஓ இதோ, இங்ஙனம் இராமன், மாகந்தத்தரு நிழலில், மாயா, பிங்களனுய, நம்கராளனல், அழைத்துவரப் பெற்றவன்போ லுங்காணப்படுகின்றனன்.

(இராமர்) வசனம். காசிபனின் சொல் இங்ஙனமன்றோ.

வெண்பா.

காசிபனீ வேள்விதனைக் காக்கக் கருதினறு ய்
கோசிக ருன்னைக் கூட்டிக்கொண்டேக——————நேசமுடன்
வந்தன றென்றென்முன் வரிசையாச் சொல்லினது ம்
இந்த வித மன்றோ விசைந் து.

(மாரீசன்) ஆசங்கையுடன் தன்னுள் (வசனம்.) ஒ, இவன், காசிபனோ, எனெனில், யாவனொருவன், இவனுல் காசிபனீ யென்றழைக்கப்படுகின்று னோ, அக்காரணத்தினுலேதான், ஆனுல் இவனுக்கிப்பிங்களவேடமேற்பட்ட தெப்பயன்கருதியோ) நல்லதிருக்கட்டும், இப்பொழுது, யானோ, இதோ அடர்ந்து நெருங்கியிருக்கின்ற கதலீவனத்தில் மறைந்திருந்துகொண்டு எல் லாம் அடைவே தெரிந்துகொள்கின்றனன்.

என மறைந்திருந்து கொண்டனன்.

(கராளன்) தன்னுள் வசனம். யாகரக்ஷணைக்காக, அழைத்துக்கொ ண்டுபோவது நிமித்தமாகவே, கௌசிகன்றன்வரவு, என்றே, நிச்சயமாயிவ னெண்ணியிருக்கின்றனன்.

(வெளிப்படை) தொடர்மொழி.) கண்ணிற்சிறந்த, கருத்திற்குகந்த காதற்சிநேகித, காகுற்ச, ராகவா, இங்ஙனங்கழறுதல்வேண்டா.

அடுக்குமொழி.

மாதவமுனிவராம், காதிபுதல்வரின்,
சூதிதுவாகுமால், ஓதிடத்தகுதிகொல்.

(மாரீசன்) கேட்டு பயத்துடன் (வசனம்) ஆ ஆ, நன்குணர்த்தலாயிற்று, காசிபனீ யென்ற பதப்பிரயோகத்தை ஆக்ஷேபித்த இப்பையலால், இவனுக்கு இப்பிங்கள வேடதாரணம் அக்கௌசிகனது கபடமென்றே நன்குணர்த்தலாயிற்று.

ஆகையால் நினைக்கின்றேன், காசிபவேடத்தினால், வஞ்சகஞ்செய்யப் போகின்ற, என்னைக் காண்பித்துக்கொடுக்க, அக்கௌசிகனுடைய, ஆரம்பமென்றே.

(மாரீசனுடைய மாயாசிருஷ்டியில்.)

2-வது (——) (திரை.)

(வசனம்.) சகி, தாமரையிலே, தாமரைத்தண்டு, தாமரைமலர்கள் இவைகள் விரைவிற் கொய்துகொண்டு வந்தனன்.

(இராமர் வசனம்.) அடடா, ஈதென்ன, தென்பக்கத்திலோர்திவ்விய ஆலாபம்போற் கேட்கப்படுகின்றது. இதுவென்கொல்.

(கராளன் சுற்றிப்பார்த்து (தன்னுள் வசனம்.) இம்மட்டிலும், காசிப வேடதாரியான, நம்மாரீசனோ, தென்படவில்லை, ஆதலாலிது அவனது மாயாப்பிரயோகமென்று, நினைப்பதற்கிடமில்லை.

(வெளிப்படை வசனம்) ஓ, இராஜகுமாரா, இஃது இருண்டகாட்டுப் பிரதேசமாகையால், ஏதேனும் வனதேவதைகளின்விளையாடலாயிருக்கலாம்.

(மாரீசன் வசனம்.) இவன் நிச்சயமாய் காசிபனேயாம், அதற்கேதும் ஐயமில்லை, எங்ஙனமெனின், எனதுமாயையென்றறிந்த, இவனால் இது ஜானகிபரிஜனாலாபமென, எங்ஙனம் சாற்றப்படவில்லையோ, அங்ஙனமேயாம்.

(சற்று நிதானித்து) வசனம். எங்ஙனஞ்சென்றனனோ, நம் கராளனென்று, என்மனந்தவிக்கின்றது.

அந்தோ, அந்தோ.

விருத்தம்.

பூசல்ராமனை யுபாயப்போக் கிலேகூட்டி வரவெ ன்
றேசில புகன்றனுப்பித் தேன்கராளனைக் காணே னே
கோசிகன் கண்டரக்கன் கொல்லென விழையான்சீ றி
நாசமேசெய் திட்டான்கொல் நானென்று மறிகிலே னே.

விருத்தம்.

பிங்களவடிவம் புனைந்தகராளனைப் பிடித்துக்கொண் டிலக்குவன்வஞ்சம்
இங்கியற்றவோ வேடமாருடி எய்தினையினி விடேனென் றே

துங்கவன்பகழி யாலுயிர்துலைத்தான் றூய்முனிகௗை சிகன்சொல்லா. ல்
சங்கையொன்றில்லை யென்செய்வேனடடவென் றம்பிநீயெங்கடாசார்ந்தாய்

(இது நிற்க) வசனம். இவ்விருவரும், இராமனும் காசிபனுமேயாம். மாயையாலிவர்களை, ஹதஞ்செய்கின்றேன், அங்ஙனமாயின், சுபாகு கராளர்களின் துக்கசாந்தியதாகும்.

(இராமர் வசனம்.) ஓ, ஸரஸஸல்லாப, உல்லாசநேசனே, தழை, குழை, செறிந்தசெடி, கொடிபடர்ந்த இந்தக் கொம்பினங்களின் மறைவினில், மறைந்துசென்று என்னென நோக்குவாம், என வில்லுஞ்சரமும் விளங்குகரத்தனாய் எழுந்து நடக்கின்றனன்.

(கராளன்.) நல்லதென்று பின் நடக்கின்றனன்.

(மாரீசன்) விருத்தம்.

திடம்படுகணையும் வில்லும் செய்யதாமரைக் கரத்தி    ன்
இடங்கொண்ட யெழில்விராமன் யெறிதரு விடத்தைச்சிந்து    ம்
படங்கொண்ட நல்லகுட்டிப் பாம்பெனவெனக் கிப்போதி    ல்
அடர்ந்திடு பீதியோடு மாசையுந் தருகின்றானு    ல்.

(வசனம்.) நல்லதிருக்கட்டும், இவனுக்கென் மாயாவிலாஸங்களைத் தோன்றச்செய்கின்றேன் என, தியானஞ்செய்கின்றனன்.

(இராமர் எதிர்நோக்கி) வியப்புடன்.

இராகம் காபி.

கண்ணிகள்.

விந்தையானசயனமட்டும் விளங்கக்காணு    தே
விரகமாதுயிதிற்புறண்ட விதம்போற்றோனு    தே
சந்தனங்கள்ரசங்கள் வற்றித்தானுலர்ந்து    மே
சையைநடுமையமீதில்த் தானுதிர்ந்து    மே
அஞ்சனங்கலந்தகண்ணீர் அதிப்பிரவாக    மே
அண்டையில்வடிந்த தடையாளமாகு    மே
கஞ்சநாளஹாரமெல்லாம் கசங்கிவாடி    யே
காணுதுபார்நாலுபுறங் களிலும்நாடி    யே
இளந்தளிர்கள்புழுங்கிவெம்பி யேன்றுவண்ட    தோ
எவளுடையசுந்தராங்கம் யிதிற்புறண்ட    தோ
விளங்குதிந்தவிதம்பலவ விரிப்புமாத்திர    ம்
மெத்தவும்வியப்பதாக மேவும்நேத்திர    ம்

(காரளன்) வெண்பா.

சொல்லனங்க வாதையினால் கொம்பனையாளே வொருத்தி
பல்லவ யிப்பாயற் படுத்திருந்து—மெல்லெனவே
நம்முடைய சத்தமதை நாடியொளித் தனளா ல்
கொம்மை முலையாள் வெட்கங் கொண் டு.

(——) (அடுத்ததிரை.)

இராகம் கமாஸ். ஆதிதாளம்.

## பல்லவி.

மையல்சகியாமலே மிகமயங்கிறாளடி. (மையல்)

## அநுபல்லவி.

கொய்யும் மலர்சொரிந்தென் கையுஞ்சலித்தேன் சகி. (மையல்)

## சரணங்கள்.

சந்தணம்பூசினேன் சந்ததம்வீசினே ன்
எந்தனாலானமட்டும் தகுந்தபிரயாசைப்பட்டு ம். (மையல்)

தாமரைநாளங்களை தையறன் ஸ்தனங்களி ல்
க்ஷேமமுண்டாகும்படி செவ்வையாய்ச்சேர்த்துவைய டி. (மையல்)

தளிரில்பன்னீர்தெளித்து தையல்மேலொட்டவைத் து
குளிரும்படிசெய்தாலும் குழைந்துவாடுதாளு ம். (மையல்)

(இராமர்.) பிங்களா நன்குரைத்தனே.

(கராளன் தன்னுள்) வசனம். இஃதென்ன ஆச்சரியமாயிருக்கின்றது ஒருக்கால், நம்மாரீசன் எங்காயினும் சற்று மறைந்திருந்துகொண்டு செய்கின்ற மாயாப்பிரயோகமோ, அல்லது, எதார்த்தமானதுதானோ இருக்கட்டும் பார்க்கின்றேன்.

(வெளிப்படை) அடுக்குமொழி.

உற்றகினேகித, வெற்றியிராகவா,
சற்றுநடந்திடில், மற்றதுவெளியாம்.

(இராமர்) வசனம். நன்று, நன்று, அவ்விதமேசெய்வோம் என, பத்தடிநடந்து, எனதாசைக்குகந்த நேச பிங்களனே, இவளார் ஒருத்தி.

வெண்பா.

செய்யகலை யுடுத்தித் தேமற் பருத்தமுலை த்
தையலிவ ளாரொருத்தி சார்கின்றாள்—கையினி லே

மாத்தந்திக் கோடொடித்த வாறென வெண்ணுளமொ டு
பூத்தொளிர் அசோகலதை போ ல்.

(காளன் சோகத்துடன் தன்னுள்.)

கொச்சகம்.

என்றமயன் மாரீச னிங்குவரக் காணே னே
ஒன்று நினைக்கின்றேனு ளுருவத்தாற் காசிபனு ய்
நின்றவனைத் தானறிந்து நிகழ்த்து மிலக்குமனு ல்
கொன்றுவிடச் செய்தன னக்கோசிகனுங் கூற்றனென் றே.

(வசனம்.) நல்லதிருக்கட்டும், இப்பொழுது விதனப்பட ஸமயமன்று.

(வெளிப்படை) கலிவிருத்தம்.

பரகளத் திரப்பார் வையென் பய ன்
நரகம் வீழ்த்த லல்லாது நல்ல தோ
சரசர தலசாமி தன்னு ம ற்
றொருசுகுப் பினைப் பார்தி யுத்த ம.

(வசனம்.) அன்றியும், பரிஜனமுந் தேடப்போகின்றது, ஆகையால், வேறுபக்கந்திரும்புவோம்.

(மாரீசன் சோகத்துடன்) வசனம். இவன் நிச்சியமாய் காசிபனே தான், அதற்கேதும் ஐயமில்லை.

கலிவிருத்தம்.

இப்படித் திரும்பிடும் ரகு குமார னை
அப்படி யிழுத்தவ னுசை மாற்றலா ல்
செப்பிடு காசிப ன்றன் சந்தேக மோ
எப்படி யாவதிவன் மனமீர்க் கிறே ன்.

(என, தியானஞ்செய்கின்றனன்.)

(இராமர்) வசனம். ஆசைக்குகந்த, நேச பிங்களனே, இவ்வற்புதக்காக்ஷியை, அருமையாய்க் காண்க.

விருத்தம்.

புதுமைமலிலா வரையிதுபார் பொற்கதலிசூழ் தாழ்விதுபா ர்
இதனுக்கருகி லிலங்குகின்ற யெழில்ச்சேர் நளினநதியிதுபா ர்
சதிர்கொள தன்சமீபமதில்த் தழைத்தமா கந்தத்தடியி ல்
மதுரம்பொழியும் வண்டொலியின் வளப்பநிகுஞ் சமிதுபாரா ய்.

(வசனம்.) ஹ, ஹ, அதிகோமள ரமணீயமான இந்தப் பிரதேசங்களி லிருந்துதான் இக்குமரியாள் குளிர்ந்த மிருணாளங்களைக் கொய்துகொண்டு வருகின்றனள் போலும்.

(கராளன்) வசனம். இந்த ஸம்விதானம் (அதாவது) ஜோடனை அதி ரமணீயமாயிருக்கின்றது, இதை வளைந்து பார்க்கின்றேன்.

(என திரும்பினன்)

(மாரீசன் கர்வத்துடன்.)

அடுக்குமொழி.

வாடாகாபிப, மூடாஅடகுடி,
கேடாநின்னுயிர், ஓடஅடிக்கிறேன்.

(வசனம்.) பயலே, இன்றிம்மாரீசனுக்கிரையாகமுடியப்போகின்றாய்.

(——) (அடுத்ததிரை.)

இராகம் நாதநாமக்கிரியை. ஓரடிவைத்து மற்றோரடி என்ற மெட்டு.

கண்ணிகள்.

பொல்லாதுகாமம் கொல்லுமென்பாரது பொய்யன்றுநிசமா மே
மெல்லியற்சகியின் அல்லல்விகாரம் மெத்தப்பெரிதா மே
மாதிவளங்கம் போதெனவாடுதே மதனச்சுரத்தா லே
ஏதடியினிப்பொருக்கா திதிற்செய்வதென்னே இனிமே லே
என்ளிளையிவள்மே லள்ளித்தூவிடில் எல்லாம்பொறியு மடி
விள்ளுவதென்னே வெண்ணுளங்களும் வெம்பிக்கறியு தடி
கந்தமிகுஞ்சீதச் சந்தனரசத்தாற் காமத்தீயாறா தோ
பைந்தொடியிவண்மெய் நனைந்திடவூற்றடி பார்ப்போம்சுகம்வாரா தோ.

(கராளன் தன்னுள்) வசனம். மதுரமாகியபெண்களின் மொழிபோல் விளங்குகின்றன, கிட்டி வளைந்து அதைப் பார்க்கின்றேன், அடட, அதை ஏன்தான் பார்க்கின்றேன்.

கலிவிருத்தம்.

வஞ்ச மாயையில் வல்ல மாரீசனு ம்
எஞ்ச கோதரன் றன்னை யிழந்ததி ல்
சஞ்சலிப் புறுகின்ற தென்றன் மனம்
மிஞ்சு தைரிய மெங்ஙன மேவிடு ம்.

(வெளிப்படை.) ஓ, கதிர்குலசோம, காகுஸ்ஸ ராமா
இவ்வதிரமணீயசத்தம், யாதெனக்காண்குதி.

(இராமர் கிட்டவணுகி நோக்கி) பிங்களா, ஓ, வசனம். இவர் யாவர். ஸமானவயரூப ஸம்பன்னர்களான திவ்வியமங்கள காத்திரக்கன்னியீர் இவர் யாவர் கொல்.

(அப்பால்) தளிர்ச்சயன மாயாசீதையும் சகியர்களும் பிரவேசிக்கின்றனர்.

கலிவிருத்தம்.

(ஒருத்தி) சலசலோ சனிதையல் நோகா வணம்
இலைச ரோருக மெடுத்து வீச டி
(மற்றொருத்தி) கலச மாமுலை காயுதம் மாகுளி ர்
நலசந்தக் குழம்பூ ற்றுவை நங்கையே.

(காாளன் நோக்கி தன்னுள்.)

கலிவிருத்தம்.

நிகரில்வன்னமின் னேரிழையார்கொலோ
புகழுஞ்சீதையின் பொன்னுடற்றுங்கியே
மிகவுங்காம விகாரத்தைமேவலா ல்
தருமாரீசன்றன் ஜாலமாயங்களா ம்.

(இருக்கட்டுங்கண்டறிகின்றேன், வெளிப்படை.)

கொச்சகம்.

இன்னவர் மனோக்கியர்கள் யாவர்கொலோ யெழின்மிக்கா ர்
பொன்னுலக மின்னார்கொல் புயங்கருலப் பூவைய ரோ
இன்னிலத்தி லீலைசெய்ய யிளமைத் தருணியரா ய்
நன்னயவேள் ஜயக்கொடிக ளாடினவோ நானறியே ன்.

(இராமர் அதிவியப்புடன்) வசனம். ஆ, உத்தமசிநேகித, சத்தியபிங்களா, திவ்வியமங்களாகிரிதியர்களான, இவர்களின் மத்தியில், ஓர் ஜீவரத்தினம்போலும், ஓர் கன்னிகாமணியைப் பார், அடடா, என்னென்றுரைப்பேன்.

சிங்காரப்பத்தியம்.

வாளோஅளியினமோ வரிசைச்சைவலமோ இம்மங்கைசிகாமணியின் வாசக் கொண்டை
மானோநீலோற்பலந்தானோ வாளோவேலோ மாரன்றன்பாணமோ விழிகள் கெண்டை
மீனோவிதழ்பவழந்தானோ இவள்வசனம் மேலுலகத்தமுதமோ களினத்தண் டைத்
தானோகையாயன்செய்தானோ இவடனங்க டாளவாத்தியமோ பொற்குடமிரண்டைத்

தானேகற்பித்தாளோ யிடையுமிலையோ
சங்கிலிப்பின்னலோ மயிரொழுங் கோ
வானரம்பைகளோ துடைகள்தா னோ
வஞ்சியிவளின்னு ளென்றறிகிலேனே.

கட்டளைக்கலித்துறை.

வந்துந்திமேகமதைநீக்கிவிட்டிட்டவான்றடித் தே
சந்தந்தழைக்குஞ்சரீரஞ்சமைந்துதளிர்ச்சயன த்
திந்தத்தலத்திலிருக்கின்றதோயிந்திராணிகொ லோ
எந்தன்மனத்தையிழுத்திடவந்தயிவ்வேந்திழை யே.

(இல்லாமற் போனால்.)

கட்டளைக்கலித்துறை.

நொந்திங்ஙனம் வந்துநேரங் கழிக்கின்ற நுண்ணிடையாள்
கந்தந்தரும் பூங்குழனரி பாகன்முக்கண் ணனழ ற்
சிந்துங்குரோதத்தில்நாயகன்றன் னங்கந்தீய்ந்ததெண்ணி ப்
பந்தங்குலைந்து பரதவிக்கும் ரதிப்பாவை கொ லோ.

இராகம் காபி. ஆதிதாளம்.
மாயாகாணி என்ற வர்னமெட்டு.

பல்லவி.

ஆரோ இந்தமோகனங்கி ஆரோ அறியேன்.

அனுபல்லவி.

ஆரோ எந்த, ஊரோ என்ன, பேரோ அறியேன், பிங்களா. (ஆரோ)

சரணங்கள்.

இடையழகும்விழிக் கடையழகும் இவள்
உடையழகுமெனே யுருக்கு தே
துடையழகும்பின்னற் சடையழகுமென்று ற்
சொல்லவசமோடா, பிங்க ளா. (ஆரோ)

வஞ்சியிவள்விரகம் மிஞ்சிமிகவருந் தி
துஞ்சுருள்பாவிம தன்சரம்பா ய
அஞ்சுருள்பசப்பிக் கெஞ்சுருள டா
ஆயிளையாரோ, அன்ப னே. (ஆரோ)

(கராளன்.) ஆ, நன்றாய்ப்பார்த்தனன்.

விருத்தம்.

அச்சங்கொளு நோக்கத்தின ளங்கந்துவள் கின்று ள்
நச்சங்கமலத் தண்டெென நற்கன்னம் வெளுத்தா ள்
கச்சங்குச மெலிகின்றனள் கருதினிவள் தெசைக ள்
மெச்சங்கசன் வாகின்வலி விரிசெய்வன மிக வே.

(மாரீசன் களிப்புடன்) வசனம். இந்த க்ஷத்திரியப்பயல் இந்த காசிப ஞேடு, இந்த மாரீசன்றன் மாயாவலைக்குள் சிக்கிக்கொண்டனன்.

விருத்தம்.

துளையாமணிமுத்தாமின்சொற்சானகியைப்போ ல்
விளைமாயையில்வருபெண்ணிவள்மேன்மோகித்தனஞ ல்
இளையாதகராளனிளையாஞல்வதைபடலா ல்
களையாதில்மாருயிவர்களைமாய்த்திடுவேஞ ல்.
(என) திரும்பவும் தியானஞ்செய்கின்றனன்.

(இராமர்) வசனம். அபூர்வமான அற்புதக்காக்ஷி வேறு விதமாய்த்தெ ன்படுகின்றது, அடட, என்னென்று சொல்வேன் இக்தக் காக்ஷியை.

விருத்தம்.

சொன்னச் சிறுகிண்ணத் ததிதுளியுஞ் சாரிகை யே
மன்னுட்கொள விலைலீலையின் வளரஞ்சுக மதுர ம்
சொன்னற் கனிவிறை தின்றிடசுமுக ங்கிடையா தே
அன்னப்புளு மிறைநாடில அவள்கொள் துயரதஞ ல்.

(கராளன் தன்னுள்) வசனம். ஸரி, ஸரி, இஃதிப்பொழுது நன்கறியலாயிற்று. மாரீசனுடைய மாயாப்பிரயோகமென்றே நன்கறியலாயிற்று. இன்னும் பற்பல பக்ஷி பறவைகளும் இவளது சோகத்திற்காற்ருது விதனத்தை அடைகின்றன.

[வெளிப்படை] வசனம். அன்புமிகுந்த நண்பர் நாயகமே. அபிராம ராமபத்திரா, இவ்வடவிப்பிரதேசம், கௌசிகமகரிஷியினுச்சிரம ஸமீபமாகையால், இவள் ஜானகியாகவேயிருக்கலாம்.

[இராமர்] தன்னுள் வசனம். சரி சரி நன்குறைத்தனன், அவ்விதமிருக்கலாம், அவள் இவ்விதமான விரக அவஸ்தைகளனுபவிக்கின்ருளென்று காசிபனுற்சொல்லப்பட்டிருக்கிறதன்ரே, ஆகையாலிவனுரை ஒக்கும் ஒக்கும்.

[வெளிப்படை] அடட என் இல்லாதவார்த்தை இயம்புகின்ருய்.

[அப்பால்] காசிபர் பிரவேசிக்கின்றனர்.

காசிபர்.

### கொச்சகம்.

சானகியின் பாற்செல் மனந்தளராது பிங்களனு    ல்
மான ரகுராமனுக்கு வளர்த்தேன் நடுவோரு    ம்
வானகமும் மண்ணகமும் வாழ்த்து விசுவாமித்    ர
ஞானமுனி சொன்னபடி யெல்லாம் நனிபுரிந்தே    ன்.

[சற்றுநிதானித்து] வசனம். வேட்டையிற்சென்ற இராமன், தெ ன்படவில்லை, அவனைததேடிக்காணும் பொருட்டாய், என்னுடன்வந்தபிங்க ளனும் என்னைவிட்டுப்பிரிந்தனன்.

இருக்கட்டும் [வசனம்] பாருஇடமாகிய இந்த மாகந் தவனத்துட்புக் கி தேடிப்பார்க்கின்றேன். [என] நடக்கின்றனர்.

[கராளன்] காசிபரை நோக்கி மனக்களிப்புடன் [தன்னுள்] வசனம் இதோ காசிபவேடங்கொண்ட நம்மாரீசன், தென்படுகின்றான். இவனே இவ்விராமனுக்கு, இம்மாயாவிநோதங்களைத் தோற்றிவைக்கின்றான் ஸபாஷ் ஸபாஷ்.

[வெளிப்படை) வசனம். ஓ, ரகுகுலதிலகா, யான் இல்லாதவார்த்தை யோ இயம்புகின்றேன். நன்று நன்று.

இராகம் நாதநாமக்கிரியை. ரூபகதாளம்.

### பல்லவி.

நானெடுத்துரைத்ததில் ஐயமா ஓ ராமநாயகா    [நான்]

### அநுபல்லவி.

மானெனும்விழி, தேனெனும்மொழி,
சானகி, தானிவள், யானறிந்தமட்டும்.    [நான்]

### சரணங்கள்.

மாசற்ற, காசிபன், பேசியநல்லுரை, மோசமாமோ,    நேசனே
இராஜனே விசுவாச    னே
இவள், வாசம, லர்க்குழல், மாசன, கியென்    று.    (நான்)

### விருத்தம்.

சுந்தரனே புயமந்தரனே ரகுநந்தனவென் சொலயா    ன்
இந்தெழில்மாதுவை தேகியெனச்சொலு மென்னுரைபொய்யென்றாய்

விந்தையிதா முழுதுந்தெரி காசிபன்வெளியே காண்கின்றா ன்.
இந்த இடத்தினொடிக்கு ளழைத்திடு வேனெழி லென்னிறை யே.

(வசனம்.) சீதையினைவிர்த்தாந்தம், யாவுமறிந்த காசிபன், அதோ, தென்படலால், அவனை நின்பக்கல் அழைத்துவருகின்றேன்.

எனச்சென்றனன்.

இராமர் பெருமூச்செறிந்து.

கொச்சகம்.

மன்மதன்செய்வெஞ் செறுக்கால்வாடி மெலிந்த இந்த க்
கன்முலையாடன்னை யென்பாற் காசிபன் பூக்கன்னியென் றே
நன்மையதாய்ச் சொல்வான்கொல் நவிலுவன் கொல்வேறுவிதம்
என்மனதிற் கின்பசுக மெய்துமோயா னறியே ன்.

(மாரீசன்) ஓ ஓ [வசனம்.] பிங்களவேடகாசிபன், இராமனைவிட்டுப்பிரிந்து போய்விட்டான்போலும், இருக்கட்டும், நன்று, நன்று, யானோ, இப்பொழுது எவ்வண்ணம் நினைத்திருக்கின்றனனோ, அவ்வண்ணமே, காசிபருபத்தைப் புனைந்துகொண்டு, இராமன்பாற் செல்கின்றேன்.

என தியானஞ்செய்கின்றனன்.

மாயாசீதை.

கொச்சகம்.

உடுபதியைக் காணுதஉற் பலத்துக்கப் பிருந்தே ன்
கொடிய மதவாதைகொண்டு கொழுகொம்பிலா வெனக் கு
வடுக்கண் சகிமாரிருந்தென் அவர்செய் யுபசாரவ கை
தொடுத்திருந் தெனன்பா யென்றோன்றல் வரக்காண்கிலனே.

இராகம், பியாகு. ஸார்யகு மெறகாதனி என்றவர்ணமெட்டு.

## பல்லவி.

என்சகி, யென்செய்வனோ, ஓ (என்)

## அனுபல்லவி.

நான், பஞ்சுபடு, பாடடைந்துங் கொஞ்சமிறங்கானோ மதன். (என்)

## சரணங்கள்.

நெஞ்சம் பதைக்குதடி, கஞ்சமுகத்தா ளே,
மிஞ்சுமதன், வெஞ்சரங்கட், கஞ்சிமிகத்துஞ்சுமே னே,
கொஞ்சுமொ, ழியினளே, வஞ்சிய, பரஞ்சி யே. (என்சகி

மிக்கரஸந் தேனொழுகும் நற்கனிய ருத்தியென்ற ன்
பக்கலில்நீ, யுட்கார்ந்துதொண்டைக்குழியிற், கக்கிடா து,
கைக்கொடுரு, கிக்கொடுத்தும், அக்காஓங்க, ரிக்கின் ற (என்சகி)
போதினமென் மேல்விரித்து சீதபனிநீர் தெளித் . து
மாதயையோ, டாதரவாய்ச், சேதிபல, ஓதினலு ம்
பாதகவ, ணீதமத, வாதைபொருக், காத டி. (என்சகி)

(என) ரோதனஞ் செய்கின்றனள்.

(இராமர்.) அடட யீதென்ன, ஹ ஹ.

விருத்தம்.

மான்விழியாள் மொழியாழ்ப் பதிலோ நவவானுலகத்தமு தோ
தேன்மதுராதி ரதங்களத்தூரு தோசீர்மதா வேசமென த்
தான் மது பானமதிற்சனிதங் கோலோதையன் மென்சத்தமி தே
நான்மயங்கிட வென்மாமனந் தன்னையே நன்குகலக்குத டா.

(அப்பால்) காசிபவேடத்துடன் மாரீசன் பிரவேசிக்கின்றனன்.

(மாரீசன்.) இங்கிப்பொழுது செல்கின்றேன், [தன்னுள்] வசனம். பிங்களவேட காசிபனே, இவனைவிட்டுப்பிரிந்தனன். அவன் திரும்பவருவதற்குள், இப்பொழுதே, இராமனை யென்மாயையினால் வளைந்துகொண்டே மாற்றுகின்றேன்.

(எனச்) சிந்தித்துக்கொண்டே நடக்கின்றனன்.

[இராமர்] அகோவகோ ரூபத்தையனுஸரித்தவாக்கும், வாக்கையனுசரித்த ரூபஸம்பத்தும், என்னென்றுசொல்ல, அங்ஙனமன்றே.

விருத்தம்.

இன்னவள்மொய் குழலெண்ணிடில் வண்டினமென்ப னென்பய னே
மன்னிருசஞ்சலக் கண்களிருக்க வேள்வன்கணை வேண்டா வே
சொன்னநன்னளினமுகுளத்தாசையென்றுன்னுதனங்காணி ல்
உன்னிடில்மன்மதன்செய்சகன்மோகினியொண்டொடியிவடா மே.

(மாரீசன் நகையுடன் தன்னுள்) மாரீசனால் சிருஷ்டிக்கப்பட்டவளென்று வழுத்தல்வேண்டும்.

(இராமர் எதிர்நோக்கி) வசனம், ஓ, காசிபனிதோ எய்தினன்போலும் ஆனால் இவனைப் பார்ப்பதற்கும் என்மனது இலச்சையை அடைகின்றது என முகம் வணங்கியிருந்தனர்.

(மாரீசன் தன்னுள்.) ஓ, இவன் தாடகாவத மஹாபாதக க்ஷத்திரியப் பயல்.

விருத்தம்.

பெற்றியுளதைரியத்தன்மனத்தொளித்தவகங்காரப்பீடுபெற்றோ ன்
வெற்றிபெருவீரரஸமுருச்சமைந்தவிதமென்னவிளங்குமெய்ய ன்
குற்றமிலமுதமனையகல்யாணனெனினுமிவன்கொடும்புண்கட் க்
குற்றெதிரிற்சொலிக்கின்றவிளக்கமெனத்திகழ்கின்றான்உண்மையெர்க்கே.

(இருக்கட்டும். எப்பொழுதிவனை அக்கினியில் வீழ்த்துவிப்பேன்.

(வெளிப்படை.) கிட்டவணுகி ஜயாவிஜயீபவ, ஜயஜயராமபத்திரா.

விருத்தம்.

படைமிகுந்தடர் ந்தெங்கெங்கும் பரவிவந்தெதிர்க் கும்பொல் லா
அடையலர் கருவம்நீக்கி ஆண்மைசெய் வீரவா ழி
கொடையிற் கற்பகமேவாழி கொற்றவர்க் கரசேவா ழி
தொடையணி புயத்தோய் ராமசூரிய குலத்தோய்வா ழி.

(இராமர்.) முகத்தை நிமிர்த்திக்கொண்டு.

ஆ, காசிபனே,

(மாரீசன்.) ஆசங்கையுடன் [தன்னுள்] ஓ, இவனால் எனது பூர்வோத்திரம் அறிந்துகொள்ளப்பட்டதோ.

(வசனம்.) ஏதேது, ஒருக்காலும் இஃது ஸம்பவிக்கக்கூடியதன்று. பின்னையோவெனில் நினைக்கின்றேன், பரமார்த்த காசிபனென்று நினைத்து பிங்களவேடத்தைவிட்டு திரும்பவும் தன் வடிவத்தை தரித்துக்கொண்டதிற் பயனென்னென்று சாவும் சூசனையென்றே, இருக்கட்டும் எங்ஙனமாயினும் சரி.

(வெளிப்படை) அடுக்குமொழி.

மாதவசிடன், சூதறிவேனே,

(இராமர் தன்னுள்.)

அடுக்குமொழி.

அந்தணன்பிங்களன், சந்தித்திருக்கலாம்,
இந்தச்சொற்சீதையென், றெந்தர்க்கியம்புதே.

(வெளிப்படை) விருத்தம்.

ஓங்குபுகழ் வெண்டிங்கள்முகி உருக்கொண்டெழுந்த வான்மின்னே ள்
வீங்கிப்புடைத்து வட்டமிட்டு விம்மிவிரிந்து பொன்மார்பி ற்

ஞங்கிக்குவிந்து பரந்தெழுந்த தங்கக்கலச முலைமடவா ள்
பாங்கிப்பெண்கள் சூழும்நடப்பாவை நல்லாளார் சொல்லா ய்.

அடுக்குமொழி.

மாதிவள், சீதைகொல்.

(மாரீசன் தன்னுள் வசனம்.) ஓ, இங்ஙனம், பிங்களவேடத்துடனிருந்தவன் காசிபனன்றுகொல், அதனால்த்தான் இங்ஙனமிவனிப்படிச்செப்பிலன்.

எப்படியெனில், நீ சூது வாதற்றவனெனில் சற்றுமுன் பிங்களனாகத் தோற்றியதென்னென்றே.

(வெளிப்படை.) இராமவிபோ, அவள்தானிவள்.

இராகம் ரீதிகௌளை. ஆதிதாளம்.

பல்லவி.

நங்கையிவள்சாமி சனக நங்கையிவள்சாமி,

அநுபல்லவி.

தங்குபுகழ்துரை ச்சிங்கனேஸற்சன
சங்கனேராமா மங்களசீதையா ம். (நங்கை)

சரணங்கள்.

அன்னமெனும் நடையாள்
பசுஞ்சொன்ன, நிறமென்ன, ச்சொலும்வன்ன, முளநன்னயமட
வன்னமெனும் நடையாள்
அடிமேலடி வைத்திந்த ப்படிமிசையே பொருந்த
நடையிற்சிறந்த நல்ல வடிவினிலே மிகுந் த
வன்னமெனும் நடையாள் சோதி
மின்னலெனும் இடையாள் இவள்
அங்கமாயிர மாத்துள தங்கமாம் புடத்தினின்று
பொங்கமா யெழுந்தாலென மங்களவேள் வியில்வந்த (நங்கை)

மாதபிராமி
மிகவாகு, பெற்றமாகு, புகழ்பாகும், பழிப்பாகுமெனுஞ்சொல்
மாதபிராமி

இந்தவஞ்சியின் றனங்காணுங்க னஞ்சகியே னதனினும்
மிஞ்சுமத மீறிடாதிர் என்செய்வே னெனுஞ்சிற்றி டை
மாதபிராமி எழிற்
சீதையெனும்நாமி அந்த
மாமுனிகோசிகருந்தன் மாமணஞ்செய்தற்குமக
மாமெனக்கபடங்காட்டி நேமமாயழைத்துவந்த (நங்கை)

காமனேவேவி

பாலுங்கசந்து, அங்கம்பசந்து, கைகாலசந்து, வாடிசைந்துருகும்படி
காமனேவேவி

இந்தக்கண்டுமொழி சொற்பனத்தில் கண்டஉனேயே மனத்திற்
கொண்டுமையலால் வெதும்பச் சண்டப்ரசண்டமாய் நித்த ம்
காமனேவேவி வருத்தலால்
சோமமுகத்தேவி உனே
காலையுமாலையும்ரகு பாலனேலோலனேராமா
நீலவண்ணனேகாவென ஓலமிட்டுக்கொண்டிருக்கும் (நங்கை)

(இராமர்) களிப்புடன் தன்னுள்,

ஓ என்மனமே நீ மஹாபாக்கியசாலியாகின்றாய்.

[வெளிப்படை தொடர்மொழி.] ஆசைக்குகந்த நேசகாசிப நம் பிங்களன் இம்மங்கை சிரோன்மணியைக்குறித்து இங்ஙனமுறைத்தசொற் பங்கமன்றுள்ளதே.

(மாரீசன் தன்னுள் வசனம்.) அவன் எதார்த்த பிங்களன்றான், நம் காாளனே இலக்குமணுலிறந்தே போயினன். அதற்கேதும் ஐயமில்லை இனியென்செய்வது.

(வெளிப்படை.) ஓ, ரகு குலோத்துங்க எங்கணாயகமே, அப்பிங்களனெங்ஙனஞ்சென்றனன்.

(இராமர் தன்னுள்.) ஓ, ஓ, அவனிவனைச் சந்திக்கவில்லையென்பது திண்ணம் ஈதென்கொலோ.

(வெளிப்படை வசனம்.) மாசற்ற நேசகாசிப, நின் வரவை நாடிச்சென்றனன், நீ காண்டிலை கொல், ஹா, ஹா.

## விருத்தம்.

விண்டலம் பரந்துமேவி விளையாடித் திரிந்துலாவு ங்
கொண்டலைத் தடுக்குமுச்சிக் கொப்பினத்தருக்கள் சூழ்ந் து
மண்டிடுகானந் தன்னில்ப்பிங் களன்றனை மாதங்க ஞ்
சண்டத்தால் வளைந்துமுன் போற்றெருந்தரிக் கின்றதோ வே.

(மாரீசன் அத்யானந்தபரிதனுய் தன்னுள்) தொடர்மொழி. பிங்களனுருவாய் இங்ஙனமிருந்தது, நங்கராளன்றன் சங்கையொன்றில்லையால் எனங்ஙனமன்றோ.

விருத்தம்.

பிங்களன்றனை முன்போலப் பிடித்துத்தந் தாவளந்தான்
சங்கடஞ்செயுமோ வென்னச் சாற்றலால்மிகச் சந்தோடம்
பிங்களனெனை விருந்துபேசி ஜாலங்கள் செய்தோன்
சங்கையொன்றில்லைத்தம்பி தானிதிற்றளம் பேன்மாதோ.

களிப்படையவேண்டிய இடத்தில்க் கடுந்துயரடைந்தேனே.

(வெளிப்படை வசனம்.) ஓ, ரகுநாயக இந்தமாகந்தவனத்தில் அவ்விதபீதியில்லை, ஆகையால் சஞ்சலப்படவேண்டாம்.

(என) த்தியானஞ்செய்கின்றனன்.

(காசிபர்.) எதிர்ப்பில் கொஞ்சதூரம் எட்டிநோக்கி ஓ, ஓ,

விருத்தம்.

அல்லெனுங்குழலினள் வில்லெனும்நுதலின ளல்லியைப்பழித்தசெவ்வாயாள், கல்லெனுந்தனத்தினள் வல்லிமென்மருங்கினள் காவலன்ஜனகன்றன்பாவை, பல்லவச்சயனத்திற் பாங்கியர்சூழ்ந்திடப் படுத்துழன்றெழுந்து முட்கார்ந்தும், வல்லமன்மதன் கொல்வாதையை வகித்துவாட்டமாய் வருந்துகின்றனளோ.

(வசனம்.) அகோ, வகோ, இதுவென்கொல், அவளோ இதற்கணையோஜனைதூரத்தில் கௌசிகாச்சிரமத்தில் வசிக்கின்றனள், இவளோ அவட்கு ஸமானவதியான மற்றொருத்தியாக இருக்கல்வேண்டும். அடுத்தபக்கத்தில் நோக்கி,

(வசனம்.) பயத்துடன் அடட, அதோ அந்த பெரியவட்டப்பாறையடியில் மறைவாய் காய்ந்த இந்தனங்களிற்பற்றிய அக்கினிசொலிக்கின்றது ஆகையால் நினைக்கின்றேன், விரகச்சுரத்திற்காற்றாதிக் குமரி வீழ்ந்திறப்பதற்கு வளர்த்திருக்கின்ற விதம்போல் விளங்குகின்றதென்றே.

(அடட) இதெல்லாம் வாஸ்தவம்போலவே விளங்குகின்றதே.

இராகம் காம்போதி, ஆதிதாளம்.

பல்லவி.

இந்தவிதமெல்லாம் மிகச்சந்தேகமே இதிலுண்மை
எள்ளளவுங்கொள்ள்வில்லை யந்தராத்மா.

## அனுபல்லவி.

கந்தரக்குழற்சன கன் றவத்தெழுந்தமாது
இந்துமுகச்சுந்தரியாம் பைங்தொடி சீதையிங்கேது. (இந்த)

## சரணங்கள்.

அந்தகோசிகஞர்தம்வ னந்தனிலல்லவோயெழி ற்
பந்துமுலைச்சானகியும் சகிமார்களு ம்
வந்திருக்கின்ருர்களன்றி யிந்தவனத்தினிலே து
சந்ததமுமவளைப்போல் சுந்தரிவேறெருத்தி யோ. (இந்த)

காமவிகாரத்திஞலே ராமாராமாவென் றிவளு ம்
பூமகள்சானகியைப்போற் புலம்புகின்ரு ள்
சோமனையுந்தென் றலையும் மாமயலாலேசிச்சும் மா
தேமல்முலைதனிற்கண்ணீர் மாமழைபோலப்பொழிகின்ரு ள். (இந்த)

காயந்தனையேகாம நோயிதற்குச்சகியாம ல்
தீயின்முகம்விழவென்ருே நீவளர்த் து
நேயமாய்ச்சொலிக்கின்றது பாயமாய்ராகூதம க
மாயமோயிதென்னமோ அபாயமாயிருக்கின்ற தே. (இந்த)

(நல்லதிருக்கட்டும் வசனம்.) பிங்களனையாவது இராமனையாவது யான் காணுமட்டிலும் இங்ஙனம் இந்தக்கொம்புகளின் மறைவுகளிலிருந்துகொண்டு இதனைப் பார்த்துக்கொண்டிருக்கின்றேன்.

(என)ப்பார்த்துக்கொண்டிருக்கின்றனன்.

(அப்பால்) பிங்களன் பிரவேசிக்கின்றனன்.

(பிங்களன்.) வேட்டையை நாடிச்சென்ற எனதிஷ்டன் இராமச்சந்திரனை இன்னமும் எங்கென்று தான்றேடுவேன்.

(என்று) நாலுபுறத்திலுஞ் சுற்றிச் சுற்றிநோக்கி.

## (களியுடன்)விருத்தம்.

அடவியிற்சல்லியகரடிகள்புலிகள்அரிகள்வராகங்கண்முதலா ய்
திடவிலங்கினத்தினுடல்கள்வெஞ்சரத்தில்ச்சிதைபட்டிரத்தங்கள்சிறக்கு ம்
தடமதுபிடித்துவனந்தொருநடந்துசார்ந்திடத்தெய்வவசத்தா ல்
இடைதெரிகின்ருன்காசிபனதஞல்இராமனிங்கிருப்பதுமியல் பே.

(என்) அங்ஙனமன்ருே.

### விருத்தம்.

சொல்லினிற்பொருடென்சோலைத்துணரலர்வாசமாக ம்
புல்லியவுயிர்வசந்தம்பொருமந்தமாருதங்க ள்
எல்லைவிட்டகலாதேபோல்காசிபன் றனைவிட்டேகா ன்
வல்லவராமனிங்கேவளரிடம்நோக்குவேனு ல்.

அகோ அந்தக்காசிபனது பக்கத்தில் இலங்குகின்றனன்.
(எங்ஙனமெனில்,)

### வெண்பா.

தோள்கொண்டதூணியொடுதுய்யமலர்க்கையிடத்தில்
வாளியொடும்வில்லினெடும்மாமணிபோல்—கேளறுகு
வண்ணத்திருமேனிமால்ராமச்சந்திரனை க்
கண்ணுற்றேன்றேன்மாவின்க ண்.

(என) பக்கத்திற்சென்றனன்.

(மாரீசன் பார்த்து தன்னுள்.) பிங்களவேடங்கொண்ட நம் கராளனிதோ வந்துவிட்டான்.

(வெளிப்படை.) ஓ, நயனுபிராம, ரகுராமா, இதோ, இதோ, பிங்களன்ருனிங்கெய்தினன்.

(இராமர் நோக்கி ஸந்தோஷபரிதனுகி ஓ வசனம்.) என்னுயிர்ச்சக பிங்களா நின்சொல் எதார்த்தமாகப்பலித்தது, நீ என்பாற்புகன்றது மித்தையன்று, உண்மைச்சொல்லினுன்னை உறுதியாய்க்கொண்டனன்.

(பிங்களன் தன்னுள்] இதுவென்கொல். அகாரணமாயென்னை இவனிங்ஙனஞ்செப்புகின்றனன்.

இராகம் நாதநாமக்கிரியை. சாப்புத்தாளம்.

### பல்லவி.

உன்சொல் நிஜமென்றுறைப்பானேன் நானிவன்.

### அனுபல்லவி.

முன்சொன்னதென்ன கொஞ்சமுமறியேனே. (உன்)

### சரணங்கள்.

காடெல்லாந்திரிந் துடல்வேர்த்து இவனைக்
கண்டிடவந்தொன்றும் விண்டிலேனைப்பார்த் து (உன்)
காரணமொன்றுமிலாதே இராமனிப்படிக்
கழறுவதென்னவோ காண்போமிப்போ தே. (உன்)

(வெளிப்படை) அடுக்குமொழி.

விர்த்திசெய்வாக்ச்ச, மர்த்தவெண்ணுயிர்க்,
கர்த்தனேநின்சொல், அர்த்தமறிகிலேன்.

மாரீசன். பிங்களனைத் தழுவிக்கொண்டு இரகசியமாய்.

விருத்தம்.

பிங்களனெனவேவந்தோன் பேயன்காசிபன்றானென்று ம்
அங்குநீ யிளையோனம்பா லாவிமாய்ந்திட்டா யென்று ம்
சங்கையுற் றிதுகார்மட்டுந் தளம்பினே னென்கரா ளா
இங்குயிரு ளுய்க்கண்டே னீசுரா நினமப் பா.

பிங்களன சிரித்துக்கொண்டு தனக்குள்

அடுக்குமொழி.

மாசுகளொளித்த, காசிபமுனியும்,
வாசகப்புலம்பல், பேசுவதென்னே.

(வெளிப்படையாய்) அடுக்குமொழி.

என்னொருரகசியத், தென்னபுகன்றீர்,
இன்னமோர்தரம், பன்னிடுவீரே.

(மாரீசன்) பயத்துடன் பரக்கப்பரக்க விழித்துக்கொண்டிருக்கின்றனன்
(இராமர்.) பிங்களா, என்ன திகைக்கின்றனை.

அடுக்குமொழி.

கவலைப்படுகிறாய், குவளைக்கண்ணினாள், இவளைப்பற்றியே, விவரிக்கின்றனம், (என) ப்புருவம் நெரித்துக்காட்டினர்.

(பிங்களன் தன்னுள்) கட்டளைக்கலித்துறை.

கோங்கிளமாமுலைக்கோதைவிதேகன்குமாரிகொ லோ
பாங்கியர்சூழ்ந்து பணிசெயப் பூஞ்சினைப் பாங்கதி லே
யீங்கெழிற் பல்லவப் பாயலினிற் சாய்ந்திருக்கின்றன ள்
ஓங்கிவடன்றசை முன்சொலெனக்கிங் குணர்த்தின னே.

(சற்று நிதானித்து) அகோவகோ, யீதென்னபுதுமை, அவளோ, இதற்கரை யோஜனை தூரத்தில் கௌசிகாச்சிரமத்தில், வசிக்கின்றனள் (என) வியப்புடன், பார்த்துக்கொண்டிருக்கின்றனன்.

(மாரீசன் தன்னுள்.) இவன் நம்கராளனன்று பின்னையோ எதார்த்த பிங்களன்றான், அந்தோ, அந்தோ.

கலிவிருத்தம்.

எங்கராளனையெண்ணியெப்பாவ மோ
சங்கைகொண்டேன்சரியாய்முடிந்த தே
(அல்லால்,) பிங்களனுருப்பீடென்கொண்டவ ன்
எங்கனுவதொளிந்தலைவரன்கொ லோ.

(இருக்கட்டும்.)

கலிவிருத்தம்.

விதனமெய்திடவேளையிதாங்கொ லோ
சதிவன்மாய்கைச்சதுரசக்தியா ல்
கதிர்குலத்துருகாளையிராகவ ன்
கதைமுடித்திடக்கருதவேண்டுமோ ல்.

(வெளிப்படையாய்.) ஓ, அதிசுந்தர, புயமந்தர, ரகுநந்தன, இராமச்சந்திர. (சிங்காரக்கவி) இங்ஙனம் நோக்குக. தந்தபந்தியு, கந்தமாதிவள், சிந்தைநைந்து, வருந்துகின்றனள்.

(இராமர்.) பார்த்துக்கொண்டு தானிருக்கின்றேன். எங்ஙனமெனில்,

கட்டளைக்கலித்துறை.

கண்ணம்புயங்களின்வீழ்மகரந்தக்கணங்களென ப்
பெண்ணம்முகச்சந்திராமுதத்திர்த்தத்துப்பிந்துவெனக்
கிண்ணம்நிகர்த்ததனத்தாளிவளுதிர்க்கின்றகண்ணீ ர்
எண்ணங்குலைத்தென்மனத்தினையேஉறுக்கின்றதுவே

(மாரீசன்.) தியானம் செய்கின்றனன்.

[ஒருத்தி] இராகம் கேதாரம்.

கண்ணிகள்.

(ஒருத்தி) எதடியினிப்பொருக்காதிவள்தேகம் என்றெனக்குச்சுரம்விளம்புதே பனிநீர், சீதச்சந்தக்குழம்பைமாதங்கத்திற் றடவித்திரும்புமுன்பொறுக்காய் விளைம்புதே

இராஜன்வரநீல்சரோசமலர்கள் மலர்ந்திலகிங்களித்திடுந்தானே
(அதுபோல்) இராஜன்வந்தால்முகம்ப்ரகாசித்திடுவென் சுகமெய்துவளிந்தமடமானே
இராமனைக்கண்டவுடன்மாமலர்க்குவளைகள்யெழில்பெறவிளங்கிடுமெல்லவோ
(அதுபோல்) இராமனைக்கண்டாலுடன்காமநோய்தீர்ந்துசுகம் எய்துவளதைச்சொல்லவோ.

## இராமர் (ஜாவளி)

இராகம் கரகரப்பிரயை. சாப்புத்தாளம்.
எந்தநின்னுநெவடுதுரு யென்றமெட்டு.

### பல்லவி.

இந்தசகியர்மொழி யென்சொல்வேன் அய்யோ.

### அனுபல்லவி.

பைந்தொடிசிதையின் பக்கலிலிருக்கின்ற (இந்தசகி)

### சரணங்கள்.

சுந்தரியிவளுக்கு கந்தசுகமருளெ
எந்தன்பேரொடுத்தியம்பினளே அய்யோ
இந்தவசனத்தாலே சிந்தைகுளிர்ந்ததடோ (இந்தசகி)

மங்குலின்மழைகடம் பங்களைமுகுளித்தி
லங்கச்செய்கின்றவிதமென்னவே என்றன்
அங்கமெல்லாம்புள கங்கணிறம்பச்செய்த (இந்தசகி)

(பிங்களன் சற்றுலோசித்து தன்னுள்.) இவன் காசிபனன்று, ஆகையால், யானிவ்விதம் ஆலோசிக்கின்றேன்.

என்னெனில்,

### விருத்தம்.

வல்லமாயாவி யின்றேன் வஞ்சனே ரரக்கனுக்கும்
சல்லியுள் ளழுக்காருகித் தாடகா வதத்தனுலே
மெல்லியற் ஜனகியைப்போல் விந்தைமாயங்கள் காட்டி
வெல்லவே அல்லல்மிக்க விளைவிக்கவந்தான் கொல்லோ.

(என்றே) அதிற்சற்றும் ஐயமில்லை, அதனுல்த்தான், இவனென்பால் வந்த ஸம்பாவிதமாயுளறினன், அஃதென்னென்று சாவ, பதிலொன்றுஞ்

சொல்லாமல் திகைத்தான், பின்னும் பயந்துசஞ்சலித்துப் பரக்கப்பரக்கவிழி நான், இருக்கட்டும்.

(யானிங்ஙனஞ்செப்புகின்றனன்.) வெளிப்படை.

ஓ, ஓ, மித்திர சிரோரத்தின ராமபத்திரா.

விருத்தம்.

பூங்குழற் சனகமாது புங்கவயிவ ளோஅன் று
பாங்கியரிவ ரோவன்று பரிவுடனவர் வயிக்கு ம்
ஓங்கிட மிக்கானங்சொல் லொருக்காலு மில்லைரா ம்ரா
ஈங்கிவை யெல்லாம்மாயை என்னவே விளங்குதந் தோ.

(இராமர் தன்னுள்.) இதுவென்சொல், பூர்வாபரவிருத்தமாயிருக்கின் றதிவன்வசனம்.

விருத்தம்.

சானகியிவ ளென்றுன் சங்கதிநன்குணர்ந்தோ ன்
ஆனகாசிப னையிங்கே யழைக்கின்றே னெனவிரைந் து
போனவன் வந்தான் யெல்லாம்பொருந்து மாயங்களென்று ன்
ஏனிவை யெல்லாமாயை யெனநினைப்பது தகா தே.

(வெளிப்படை.) காசிபனால், பிங்களவசனம் கேட்கப்பட்டதோ.

(மாரீசன்.) இராமனிடத்தில் இரகசியத்தில்.

விருத்தம்.

நினைக்கின்றேன் மாய்கைவல்ல நிசிசரனொருவன் வஞ் ச
மனக்கப டத்திேைனாடு பிங்கள வடிவந்தாங் கி
சனக்கெடு தலையேசெய்த தாடகை தனைக்கடிந் த
நினைக்கொலை புரியவெண்ணி நேர்ந்தனனிவ னிங்கென் றே.

(இராமர்.) ஸரி, ஸரி, நன்குரைத்தனை, நீ சொல்வது யுக்தமேயாம். பிங்களனிங்ஙனம் போந்திடுங்காலிவன் யாதுகதியடைவனோ.

(மாரீசன்.) தாடகை சுபாகு இவர்கள் யாதுகதியை யடைந்தனரோ. அதுவேயாம்.

(இராமர்.) இஃதிப்படித்தான்,

பிங்களன் (தன்னுள்) அடுக்குவசனம் ஓ, ஓ, மோசம்விளைந்ததே, அன் பிற்சிறந்த, நண்பனிராகவன், நீசநிசாசர, மோசமிதென்று, நினைக்காமல், இவனை நேசகாசிபனென, நினைத்து இவன் பேசுமொழியாவையும் ஆசை யொடு கேட்கலாயினன்.

(வெளிப்படையாய்.) இஷ்டசிகாமணி இரகுகுலமாமணி.

அடுக்குமொழி.

என்னையலாதிவன், சொன்னதைக்கேட்கிறாய்,
நன்னயமாங்கொலோ, இன்னலென்றறிவையே.
(இராமர்.) புருவபங்கத்துடன், இதுவென்கொல், மொழிக்கிடையே,
இவ்விராக்கதனும்வந்து தடங்கல்செய்கின்றனன்.
(பிங்களன் தன்னுள்.) பயமும் துக்கமுங்கொண்டு.

இராகம் பியாகு. சாப்புதாளம்.

## பல்லவி.

இனியென்செய்வேன் எப்படியுய்வேன்.
ஈதென்னமாயம் யீதென்னவனியாயம்.

## அனுபல்லவி.

நனிஇராமனுயிர்க்குயிராய் நானிருந்தேனே அவன்
எனையிப்போது விமுகங்கொண்டு எதிர்த்துநின்றானே
எவனோ பயலென்றா னே. (இனியென்)

## சரணங்கள்.

அன்னியனென்றுமட்டுந்தானோ அரக்கனென்றானே அவன்
பின்னுமென்மேற் கோபஞ்செய்கின்றான் பிங்களனேனே
பேச்சென்னபுகல்வே னே (இனியென்)

காதகனிவன் காசிபனுமன் கள்ளராக்கதனே சூதா ய்
காதிற்கோள்கள்ஓதி ராமனைப்பேதித்திட்டா னே
இனிப்பிழைக்க ஒட்டா னே. (இனியென்)

விட்டுப்பிரியா னிப்போதென்னை விரட்டுகின்றானே இராமன்
துஷ்டஅரக்கன்சொற் கேழ்க்கின்றான் சுமுகமாய்த்தானே
துஷ்க்காலமோ அறியே னே. (இனியென்)

(வெளிப்படை) அடுக்குமொழி.

புவனமுதல்வீரனே விவரித்துரைப்பதேன்
இவனைமிகவுளமதிற் கவனிக்கவேண்டுமோல்.

(என) முகம்வணங்கியிருந்தனன்.

(மாரீசன்.) தியானஞ்செய்கின்றனன்.

(மாயாசீதை.) ஹா. சகிகாள்.

சவிவிருத்தம்.

குறைத்தவம்புரிந்தேற்குக்கோதிலா
நிறைத்தபாக்கியம் எங்ஙனம்நேர்ந்திடும்
உறைத்தவண்ணமவ் வுத்தமராமனென்
னிறைத்தனிச்சுகமெந்தனுக்கெய்துமோ.

(இராமர்.) ஹா. அடி. என்காதற்குறிய மாதுசிரோன்மணியே.

இராகம் நாதநாமக்கிரியை. ரூபகதாளம்.

அடிஅன்னமே அடிசொன்னமே என் ஆவி யே
இன்சுகவாவியே தேவி யே (அடி)
கொடி இடைமென்கொம்பே குடிகொளுமென்அன்பே
கடமுலைபொற்செம்பே வடிவுளகண்ணம் பே. (அடி)

ஷயிலே, எகுயிலே, உனக் கென்சுகமெய்துதலோ, அறிதென் றனை

கட்டளைக்கலித்துறை.

மானேநினக்கென் சுகமெய்தலோ மிகவன்மையென்று ய்
தேனேயதென்னடி செப்புதிமாரன் செறுக்குனை ந் து
கானேமெலிந்து வருந்துகின்றேனென்கணுண் மலர்க்க ண்
டானேகொடுக்கிலெளிதேபெறுவை யென்றன்சுக மே.

௸ கட்டளைக்கலித்துறை.

கட்டழகிசனகன்மகளே கனகாரவிந் த
மொட்டெழிற்கொங்கையின் மொய்குழலே உனை முத்தமிட்டுக்
கட்டியணைக்கக் குவளையங்கண்கள் கடாக்ஷிப்பையே ல்
துட்டமதன் பகைவிட்டுய்குவேனடி சுந்தரி யே.

[மாரீசன் தன்னுள்.] ஒ நிரம்பஸந்தோஷம், இவனுக்கிவளிடத்திலா சையை சலியாவண்ணம் ஸ்திரஞ்செய்துவிட்டேன், ஆனதால் யானினைத்த தெளிதில்முடிப்பேன்.

[வெளிப்படையாய்,] ஒ கோமளகாத்திரா, ஸ்ரீராமபத்திரா.

அடுக்குமொழி.

மாமயல்மிஞ்சுமிப், பூமகள்ஜானகி, காமமுற்றுப்பெற, நீமனம்வைப்பையே.

(இராமர்) அடுக்குமொழி.

ஓ நோக்கந்தெறிந்த, வாக்குநன்னய,
சிலாக்கியகாசிபா கேட்கக்கடவாய்,

விருத்தம்.

கானகத்தில்யானெவளைக்கண்ணுற்றேன்கொல் [ஆச்சரியத்துடன்]
காதலியென்னுயிர்ச் சனகியவளாய்க்கண்டேன்.
எனகமெய்யிளைத்தனளென்றுராயுங்கால் [களிப்பனுராகத்துடன்]
என்னிமித்தமதச்சுரத்தாலெனவறிந்தேன்.
பானகவின்மொழியாள் சந்தாபந்தீர்க்கப் [புளகங்கொண்டு]
படுவதென்னுலிங்கனமாம் பகரக்கேட்டேன்
யானகமகிழ்ச்சியொடு தழுவற்பாங்கே
என்றாலும்வதுவை இலாததஞ்சுறேனே.

[மாரீசன்.] தியானம்செய்கின்றனன்.

[மற்றொருசகி.] எனதாருயிர்க்கண்ணாட்டி.

கொச்சகக்கலிப்பா.

கட்டிக்கரும்பே கனதனமே கண்மணியே
வட்டிக்குந்தேனே மகராசி யுன்றனுக்கென்
கிட்டர்க்கறிதுன் கேழ்வனையே கோசிகனார்
இட்டுக்கொண்டுன்பாலிங் கெய்துவர்கா ணேந்திழையே.

[இராமர்.] ஆ, ஸரி, ஸரி, இம்மொழி பிங்களனுறைக்கக்கேட்டிருக்கின்றதுவே.

[பிங்களன்.] அகோவகோ எதார்த்தவர்த்தமானத்தையனுசரித்து சம்பாஷிக்கின்ற இம்மாயாவிலாஸம் ஆச்சரியமாச்சரியம்.

(மாரீசன்) ஓ புவனநாயகனே, இவனுறைகின்றன் செவிப்புக்கிற்றே.

(இராமர்) அடுக்குமொழி.

நீசனிவன், பேசுமொழி, காசிபனுக், கேசரியாம்
காசிபன்றான் கேட்கவேண்டும்,

(காசிபர்) வாஸ்தவமாய ஜானகிபரிஜனந்தானு, ஒன்றுக்கொன்று புலம்புகின்றது.

(பிங்களன்) என்மனது, கொஞ்சங்கூட விசுவாசிக்கிறதில்லை.
(மாரீசன்) தியானஞ் செய்கின்றனன்.
(ஒரு சகி) அடிசகி இது நிற்க.

## கலிவிருத்தம்.

கனத்தமென் முலைக்கன்னி நல்லாளிவ
ளனைத்த சகண்டன்றான் விரும்புறான்
எனத் தளம்பிமனங் கொதிக்கின்றனள்
அனர்த்தமா மஃதல்லால் மற்றில்லையே.

(காசிபர்) ஓ ஓ யீதொன்று பொய்யான சமாசாரம், ஜனகராஜன்பால், இதுமட்டிலும் தசக்கிரீவன் யாசனை செய்யாமலிருக்க, யீதேதுஸமாசாரம்.

## (இராமர்) அடுக்குமொழி.

ஓ ஓ இதுவென்கொல்,

ஐந்திருகந்தரனும் வந்துபிரார்த்திப்பதாய்
தந்தஇவ்வாசகம் விந்தைசந்தேகமாம்.

(பிங்களன்) ஈதொருக்காலும் இல்லவே இல்லை,

## கலிவிருத்தம்.

அன்னியாய மிதார்பொருப்பார் கொலோ
மன்னன் பாலிவையான் வசனித்திடல்
பின்னமாம் தக்கதன்று வீண்பேச்சதாம்
என்னையோ வல்லரக்க னென்றிட்டலால்.

(வெளிப்படையாய்) அவனிக்கரசே, இவனைப்பற்றிக் கவனிக்கவேண்டும்.

(இராமர்) செவிகளை வேறுசாய்த்து) ஐந்திருகந்தரனும் வந்து பிரார்த்திப்பதாய்த் தந்த இவ்வாசகம் விந்தை சந்தேகமாம். (என) திரும்பப்புகன்றனன்.

(மாரீசன்) அதிலென்ன பாதகம் ஸ்வதந்திர மிருந்தாலும், சிற்சிலவிடத்து பரதந்திரமும் வேண்டியிருக்குமல்லவோ.

(மாயாசீதை) கண்ணீர்ப்பெருக்குடன்) ஓ ஓ யெனைத் தசகந்தரனும் விரும்புகின்றான் கொல், ஹ ஹ.

இராகம் முகாரி ஆதிதாளம்.

## பல்லவி

இந்தவினைக்கென்னசெய்வேன் அந்தோ அந்தோ.

## அனுபல்லவி.

அந்ததசகந்தரனும் எந்தனையா சிக்கின்ருனே. (இந்த)

## சரணங்கள்.

பத்துத்தலையுமிருப துகையும் பிசாசுபோல்
சத்துருவந்தெனைவேட்கக் எத்தனிக்கின்ருனே. (இந்த)
சுந்தரனிராகவன் வந்துமணஞ் செய்துசுகம்
தந்திடப்பெருமுன்ளுகத் தொந்தரைவிளைந்து தானல் (இந்த)
அன்னவன்வந்துயாசிக்க என்னையென்றந்தைஜனக
மன்னவனீய்ந்திடுவாஞே கன்னிகாளிதென்னமாயம் (இந்த)

அடியே அடியே அவ்விதம் நடக்குமாயின் உடனே யென்சரீரத்தை மாய்த்து விடுவேன்.

இராகம் புன்னுகவராளி ஆதிதாளம்.

## பல்லவி,

ஈதுசரதந்தானே ராமனுக்கல்லா லெவர்க்குஞ்சம்மதியேனே.

## அனுபல்லவி

மேதினியில் வரலாகாது பெண்ஜன்மம்தீது
பாதகனுக்காளாவதேது மாதேயிப்போது [ஈது]

## சரணங்கள்.

சர்க்குணரகுபதியே	எனக்குகந்த
சாமியென்னதிபதியே	அவனேசு
சிக்கப்பொருந்துமல்லா	லெவர்க்குமென்றேகம்
அக்ரமமரய்த்தொடப்	பொருக்காதிதுசுபாகம். [ஈது]
எந்தையவனுக்கெனையே	பரிணயஞ்செய்
தீந்தாலுங்கர்மவினையே	இதுதானென்றே
செந்தழற்குழியினி	லந்தக்கணமேமாய்வேன்
கொந்துவிடத்தினை	யருந்தியாவதுமாய்வேன். [ஈது]

[இராமர்] ஆனந்தபரிதனுகி,

### கட்டளைக்கலித்துறை

மாணிக்கவல்லி மரகதவல்லி மதனவல்லி
ஏணிக்கண்ணுமாதிவள் ஏண்ணமெனிலூ மென்னுளிடத்தில்லூாற்

காணிக்கணக்களவும்மற்றிடத்திலேக்காமத்திஞ ல்
வாணிக்குயிலினேளென்மனத்தைவிலேவாங்கின_ ளே.

[என] ப்பார்த்துக்கொண்டிருந்தனென்.

[காஸிபர்.] கராளனேநோக்கி, (களிப்புடன்) இதோ பிங்களன் என்னே வந்தடைந்தனன், மிரம்ப சந்தோஷம்.

அடடா, இக்காட்டினிடமாய் வேட்டையை நாடிவந்த இராகவனேக் கண்ணுற்றனே கொல்.

[கராளன.] அவனேக்கண்ணுற்றது மட்டுமன்று, நின்சொல் வழிப்படியே என்றால் அவனே வஞெந்தரவனத்திற்கு, எத்துக்கடையாய் ஏமாற்றி யழைத்துவரலாயிற்று.

## விருத்தம்.

கண்டதன்றியுன் கட்டளேயின் வழிகருதியிக் கானவந்தத்தி ல்
ஒண்டியாய்வர விடுத்தனன்கணத்தே உன்னேயென் கண்ணிற்காணுதா ல்
வண்டன்கோஸிக னேவகொடி லக்குவன்சரமதற் கிலக்கா கி
விண்டனேவல்லுயி றென்றெருசங்கை மேவியென்மனங் கலங்கினதா ல்.

[காஸிபர்.] சற்றுலோசித்து [தன்னுள்,]

அப்பிங்களன் வடிவாகின ஞர்கொலிவ ஞர்கொ ல்
செப்புமிளே யான்பக்கலிற் சேர்ந்தோங்கிடு மென் னே
ஒப்புந்தன றுறவாய் நினேக்கின்று னென்னுருவ ம்
இப்பூவினிற் புனேந்திட்ட வன்யார்கொல் யார்கொல் லோ.

இருக்கட்டும், எல்லாம் அடைவே அறிகின்றேன்.

(வெளிப்படையாய்.) இராமனிப்பொழுதிலெவ்ணிருக்கின்றனன்.

(கராளன்.) தன்னுள்.

## விருத்தம்.

சிந்தை இராகவன்பாற் சென்றதா லெனேத்தேற்று து
வந்திரு புகன்றுனீதில் மற்றிலேத் திண்ணந்தா னே
(வெளிப்படையாய்)
பைந்தொடி ஜனகிதன்னேப் பரிந்தெதிர் பார்த்துக்கொண் டே
இந்தமாகந் தத்தோரம் இருக்கின்றுன் ரகுவீரன்று ன்.

(காஸிபர்.) இவள் சீதைதானெனத் தெரிந்தனேகொல்.

(கராளன்.) நகைப்புடன்.

அடுக்குமொழி.

அப்படிப்புகலினும் இப்பெரும்படியினில்
• செப்பிடென்மாயையென் றெப்பமாயறிவனால்.

விருத்தம்.

சதிமயன் வித்திச்சிக் வஞ்சம் பரனிந்திரா ரி
முதிர்வஞ்ச மாய்கைவல்லோர் இவரினும் முதன்மையாக த்
துதிபெருந் தாடகேயா சொல்லவுந் தரமோநின்ற ன்
விதவிதமாய ஜாலவிளை வினைத்தெரி வேன்மா தோ.

(காசிபர்.) உத்வேகத்துடன் (தன்னுள்) இவனோ, மாரீசானுசரன், இவனொரு அரக்கனாயிருத்தல்வேண்டும். *இதனால் அம்மாரீசனென்பவனும் மாயையாலெனதுருவத்தை வகித்துக்கொண்டு சற்றுமறைந்திருந்துகொண் டிமாயாப்பிரயோகஞ் செய்கின்றானென நன்கறியலாயிற்று.

விருத்தம்.

இனியென்ன பிழைப்போகோகோ என்னதான்செய்வேனந்தோ
தனிமையா யொருமான்போல் லாச்சார்த்தூலக் கரத்திற்சிக்கி
நனியுயிருய்வ தெங்ஙனம் அரக்கன்பால் நா னே
வனமதிலகப் பட்டிட்டேன் வாழ்வது குதிரைக்கொம் பே.

என மனதினால் நிர்த்தாரணை செய்து, மூர்ச்சைகெட்டு விழுந்தனர்.
(கராளன்.) ஹ, ஹ, களைப்புவிடுத்துக் கண்விழிப்பீராக.

கலிவிருத்தம்.

எண்ணி யெண்ணிச் சுமந்தீன் றெடுத்தாட னை
எண்ணி யெண்ணி யவளிறந்த கேட்டி னை
எண்ணி யெண்ணி ரகுவீரன் பலத்தி னை
எண்ணி யெண்ணி மனவேக்கமி தாங்கொலோ.

எனதம்தறறுனன.

• [காசிபர்.] சற்று களைப்புத்தீர்ந்து எழுந்திருந்து கைகால் நடுங்கக்கரை ந்து கரைந்து கண்ணீர்வடியக் கைகூப்பி அஞ்சலி செய்துகொண்டு.

இராகம் பியாகு. ஆதிதாளம்.

பல்லவி.

வல்லநிசாசரவந்தனம் வந்தனம்
மனதுவைத்தாண்டருள் ஆண்டருளே.

## அனுபல்லவி.

தொல்லைசெய்மாரீச னல்லநானெளியேன்
துன்பஞ்செய்திடில் வந்துசூழ்ந்திடும்பழியே
நல்லவார்த்தைசொல்லி நாடியைத்தாங்குறேன்
நம்பினேன்நானுனைக் கும்பிடுறேன் (வல்)

## சரணம்.

தயைபுரிவாயே சாசுவதமா யே
ஸாமிஸகலஸம் பன்னனுய்நீயே
நயமுடன்நற்புகழாய் வாழ்வாயே
நாயகராக்ஷத குலபதி யே. (வல்)

(காளன்.) சோகவேகத்துடன்.

## அடுக்குமொழி.

அண்ணன்மாரீசனை எண்ணிடும்பாவமே
திண்ணமதாச்சுதெவ் வண்ணம்யானுய்குவேன்.

ஹ, ஹ, கஷ்டங் கஷ்டம்.

இவன் பிராமணப்பயல்தான் மஹா மூடனுகிய நான் இவனை மாரீசனென்றெண்ணி உண்டானதெல்லாம் உளறிவிட்டேன்.

[வசனம] ஹா மாரீசா வித வித மஹா மயாதுரந்தரா எனப் புலம்பத்தொடுத்து, (அவ்வளவுக்குள்) அடட இப்பொழுதிப் புலப்பத்தாலென்பயன் இது தருணமல்ல இது நிற்க (கோபாடோபத்துடன்) அடடாக்ஷத்திரியச் சிறுபயலே சுமித்திரையினு தரத்தினின்றும் வெளிவந்த துஷ்டப்பயலே.

(என) உங்காரஞ்செய்து சற்றுலோசித்து, ஹ, ஹ, இவன் விஷயமாய் அளவுக்கு மிஞ்சுகின்றதென் பட படப்பு.

## விருத்தம்.

படுபயவிராமனைப்போலிலக்குமன்றுன் பலம்படைத்தோனவனை எட்டிப்பார்ப்பதற்கும், திடமுடையனல்லேன்யான் வீரம்பேசிச்செய்வதென்னையானையை வெள்ளாடென்செய்யும், அடல்மதமாரீசவதம் சகியேனந்தோ அனியாயமதற்குப்பதிலமைப்பதிந்தத், தடிமறையோன் றனைவதைத்தல்தகுதியாகும் தகுந்தகுமப்படித்தானே சரிசெய்வேனே.

(என) குபீரென்றெழுந்து காசிபனுடைய கண்டத்தை துண்டுசெய்ய ஆரம்பித்தனன்.

(காசிபர்.) தந்திரமாய் விடுவித்துக்கொண்டு இராமனிருக்கிற தேன் மாமரத்தை இலக்குவைத்து ஓடுகின்றனர்.

(காளன்.) பின்றொடர்ந்தோடுகின்றனன்.

(காசிபர்) இராகம் பியாகு. ஆதிதாளம்.
தேவாதிதேவனே என்றவர்ணமெட்டு.

புயபலவீமா ஜயஜயராமா ஒரு
பொல்லா அரக்கன்ருன், எனைக்கொல்லவருகின்ருன் ரகு
பூபா, பிர தாபா, இந்த ஆபத், திற்காப்பாய்சா மி [புய]
மோசநிசாசரன், மா ரீசனுக்கனுசரன் இவன்
முதிர்வஞ்சமாயாவி, அய்யோ சதிசெய்திடும்பாவி இந்த
மூர்க்கன், வந்து, தாக்காமல்நீ, காக்க வேணும் ஸாமி, [புய]
ராமாசரணம், ஜயபூமாசரணம், ரகு
நாதனேசரணம், மனு, நீதனேசரணம், உனே
நாடி, வந்தேன், தேடி, நொந்தேன், ஓடி, என்முன் வா. [புய]

(இராமர்.) ஆ, ஆ, காசிபனுடைய சப்தம்போல் கேட்கப்படுகின்றது. அன்பிற் சிறந்த, நண்பர் நாயகமே, அஞ்சேலஞ்சேல்.

என விரைந்தெழுந்து நடக்கின்ருன்.

(மாரீசன்.) இதுவென் சொல்.

விருத்தம்.

சொலித்திடு மணிமார்பா வென்சுந்தர வரனேபா னு
குலக்குண நிதியேராமா குறித்துன்பா லிடைவிடா து
துலக்கமா யிருக்கின்றேன் யான்காசிபன் ருேன்றல்காண் டி
அலக்கண்சேர் இந்தச்சத்தம் யாரதென் றெண்ணுகின்ற ய்.

(காளன்.) ஒருகுதியிற் காசிபனைத் தாவிக்கொண்டு, இராமனைக்குறித்து புலம்பிக்கொண்டு ஓடுகின்றனன்.

இராகம் பைரவி. ரூபகதாளம்.

## பல்லவி,

பரிபாலனஞ் செய்வாய் பரந்தாமனே ஸ்ரீராமனே

## அனுபல்லவி

கிருபாகர, இரவிகுல, நிருபாவெனக், கருள்வாயே (பரி)

## சரணங்கள்.

பொல்லாவொருவன் புலிமான்றோ லை
போர்த்திவந்தாற்போல் காசிபன்போ லே
வல்லரக்கனுருக் கொண்டென்பின்று லே
வந்திட்டானிதற் கென்செய்வோமே லே (பரி)

சூதுவாதற்ற வேதியன்நா னே
தூய்காசிபனென் றெண்ணினே னே
வேதைவிளைந்த தென்செய்வே னே
விபத்துத்தவிர்த்தாள் கதிநீதா னே (பரி)

(என)ப்படித்துக்கொண்டிராமனை வந்திருகத்தழுவிக்கொண்டனன்.

(இராமர்.) மாரீசனிடம் ஓ என தாசைநேச காசிபனே, உயிர்ச்சகபிங் களன் ஒடி இதோவந்தனன்.

(மாரீசன்.) களிப்புடன் (தன்னுள்) நமது கராளனிவனேயாம், காசி பன்றானிவனைத் தொடர்ந்துவருகின்றான்.

(வெளிப்படையாய்) அடுக்குமொழி.

பூசல்மாரீசனென் வேசம்புனைந்திதோ
மோசமிங்குற்றனன் நேசநீகாண்குதி

(காசிபர்) அடுக்குமொழி.

ஜயஜயபூமா, நயகுணசோமா
புயபலவீமா, இயல்புகேள்ராமா.

### விருத்தம்.

என்னுடைப் படிவங்கொண் டிராக்கத மாரீசன்று ன்
நின்னுடைப் பக்கல்வந்து நிற்கின்றான் சீதையென் று
தன்னுடை மாயஜாலந் தனையெதிர் காட்டியுன் னை
துன்னுமோ காழிவீழ்த்தத் துடிக்கின்றா னிவனிரா மா.

(கராளன்.) களிப்புடன் (தன்னுள்) ஓ சரி சரி இங்ஙனம் உயிருடன் காசிபவேஷமாரீசனைக் கண்டதும் ஈசன் செயலேயாம்.

### வெளிப்படை.

(வசனம்.) இன்னவன் யார்கொல், என்னுருவத்தைப்புனைந்துகொண் டு முகத்தைத் தூங்கவைத்துக்கொண்டிருக்கின்றவன் யார்கொலோ.

(மாரீசன்) கலிவிருத்தம்.

இன்ன வன்றனை யரக்க னென்ன வே
தன்னிக ரில்லாச் சதுர நாயக ன்
புன்னுனிக் கூர்மைப் புந்தியி ராகவ ன்
முன்னம் யோசனை முடித்திட்டான ரோ.

(பிங்களன்.) காசிபர் பாலனுகி,

தூயகாசிப வென்சொல்வேன் துங்கனின் னுருவங்கொண்டான்
நேயமாய் கராளாவென்றென் நேர்நிகழ்த் தினதாலின்று ன்
பேயன் கராளன்றுனென் பீடுடைப் படிவங்கொண்டா ன்
மாயமாரீசனன்றேன் வஞ்சனை விளைந்ததந் தோ.

(இராமர் வசனம்.) அகோவகோ, இவனே, பிரத்தியக்ஷ காசிபனே, மாரீசனெனவும் பிங்களனைக் கராளனெனவும் பரிவாரத்துடன் இச்சீதையை, மாயையென்றும் பேசுகின்றன்.

ஈதெங்ஙனம் இயம்புவது,

விருத்தம்.

காசிபனேமாரீசனெனவு மிப்பிங்களன்றனைக் கராளவல்லரக்கனென்று ம்
வாசமலர்க்குழலிபரிவாரத்தோடு வளர்சீதைமின்னரசை மாயையென்று ம்
பேசுகின்றனிவன்விந்தை இவ்விருவர்பிங்களராங் காசிபரிவ்விரண்டுபேரோ
நேசரின்னல்வரிலிருவர் நிச்சியந்தான்நிசரர்மற்றிருவர் மிகநேத்திநேத்தி.

(கராளமாரீசர், பிங்களகாசிபரைக்குறித்து இராமனிடம்.)

விருத்தம்.

பருத்ததிண்டோளாய் மிக்கபலம்படைத் திடுவெங்காளா ய்
உரத்தராகவனே கேளாயூருமுன் றுடைக்கல்வேண்டு ம்
தரித்திலகிடும் வேடங்கடமைக் கண்டுசலித்திடா தே
திரத்தஇவ்வரக்கர் தம்மைச்சிதைத்துமாய்த் திடுதியை யா.

இராமர் கோபத்துடன் (பொதுவ சனம்.) மூதண்டத்தையும் பிளக்கும் கோதண்டத்தில் நாணியிறுக்கி பாணத்தையேற்றுகின்றனர்.

[காசிபர்] ஓ ஓ ஆபத்பாந்தவ அனுதரக்ஷக அன்பர்க்குகர்தவ அபிராம ராமனே, ஆதரித்தருளல்வேண்டும்,

## விருத்தம்.

காட்டுவார் மறைப்பாயன்பர் கருத்துளவிருளையெல்லா ம்
ஒட்டுவாய் ராமச்சந்திரா நீயறியாதொன்றுண் டோ
தாட்டிக மாரீசன்றன் ஜாலமாயங்களிஃ தே
நீட்டுவாய் தனுவைவேண்டா நிலைத்துளம்யோசியை யா.

(இராமர்.) தன்னுள், இதுவென்கொல்.

## விருத்தம்.

ஏவரையென் னன்பராமென் றிசைந்திருக்கின் றேன்கொல் லோ
அவரிடமெ ன்மனந்தா னவளவுபொ ருந்தவில் லை
எவரைவல்லரக்கரா மென்றெண்ணியே வெடுக்கின்றேன் கொ ல்
அவரிடமென் னுேக்கத் திற்கானந்த மாகுதந் தோ.

(என) திகைத்துக்கொண்டிருக்கின்றனர்.

(மாரீசன் வசனம்) ஓ ஓ, இவரிடங்களில் பாணத்தை விடுகைக்கி இவன் சந்தேகப்படுகின்றனன். நன்று நன்று இதுநிற்க.

[என]த்தியானஞ் செய்கின்றனன்.

(ஒருத்தி) திரையைக் கையால்த்தள்ளிக்கொண்டு, பரபரப்புடன் (பிரவேசித்து) வயிற்றிலும் வாயிலும் அடித்துக்கொண்டு) ஹ ஹ அந்தோ! அந்தோ! அடியே அடியேயாம் அடியோடே, ஹதமாய்ப்போயினோமடி, அடியே போயினோமடி,

மற்றெல்லவரும்) அதிபரபரப்புக் கொண்டவர்களாய், ஹா சகி அது என்கொல், என்கொல், சொல்லுதி சொல்லுதி நமக்கு, யாதுசங்கடம் நேரிட்டது, அதைச்சொல்லக்கடவாய் (எனமன்றாடினர்.)

(மாயாசீதை.) உத்வேகத்துடன், படுக்கையினின்றும் கொஞ்சமெழுந்துகொண்டு, அடி சகி அதனை இன்னதென்று சொல்லக்கடவாய், என்மனதை வேருடன் கெல்லுவதுபோல் என்னவோ செய்கின்றது, அதனை இன்னதென்று சீக்கிரம் சொல்லடி,

(பிரவேசித்தவள்) அந்தோ வந்தோ அடியோடேபோயினோமடி
அவ்வமங்களத்தை எங்ஙனம் புகல்வேனடி.

(மற்றவர்கள்) அஃதென்ன அமங்களமடி அதைச்சொல்லு சொல்லு,
அதற்குமேற்செய்யவேண்டியதாவதுயோசிப்போமடி,
அதைச்சொல்லு, சொல்லு.

இராகம் பியாகு ஆதிதாளம்.

## பல்லவி.

என்னடிமாயம் யென்னடிஅனியாயம்
இன்னமுமியம்பிடாதேதடி யேசகி (என்)

## அனுபல்லவி.

சின்னபின்னமாய்மனந் தன்னை இவ்விசனம்
சிதறச்செய்கின்றதங்கம் பதறச்செய்கின்றதடி (என்)

## சரணங்கள்.

பட்டணம்பரிபோச்சோ நஷ்ட்டிகள் வரலாச்சோ
இஷ்டபந்துக்களுக் கேதேனுமுண்டாச்சோசகி (என்)
படபடெனநீவந்த உடனேயெங்கட்கென்னவோ
அடிவயிற்றைப்பிசைந்து குடலைப்பிடுங்குதடி (என்)
இன்னதென்றியம்பதற் கென்னமாவதளப்பு
முன்னமேதோதறிந்து முயன்றுகொள்வோமடி (என்)

(என) பிரலாபித்தனர்.

(பிரவேசித்தவள்) யான் வேறென் சொல்லப்போகின்றேன்.

(என) கண்ணீரைப்பெருக்கினள்.

## விருத்தம்.

கண்டம்பத் துள்ளான்வந்து கனபிரார்த்தனை கள்செய்து ம்
தொண்டுசெய் ஜனகனுலே சோதிமின் ரேகையா ன
ஒண்டொடி தன்னையீங்கெதற் குதவிடப்பெற்றே னல்லே ன்
தெண்டனைசெய் வேனென்னச் சீறியேமொழிந் திட்டானு ல்.

(மற்றவர்.) உத்வேகத்துடன் ஹா, ஸகி, அந்தப்பாவி தசகண்டனால் தாதை ஜனகராஜனிடம் ஏதேனும் தீங்குகள் புரியப்பட்டனவோ.

## (பிரவேசித்தவள்) விருத்தம்.

என்னென்று சொல்வேனந்தோ என்னுயிர்ச் சகிகாள்நம்ம ள்
மன்னவன் ஜனகராஜன் தலைதனைவா ளால்வெட் டி
பின்னுமம் மடநல்லாளைப் பிடித்துக்கொண் டெய்தவிங்கு ம்
துன்னுமைமலை போலன்னேன் துரிதமாய் வருகின்றானு ல்.

(மாயாசீதை.) ஹா, அந்தோவந்தோ என்செய்வே னென்செய்வேன்

இராகம் நீலாம்புரி சகாரு. சாப்புதாளம்.

## கண்ணிகள்.

அய்யய்யோதெய்வமே, அனியாயத்தெய்வமே, அவத்திற்சோதித்தா யே
தெய்வமே
எய்யாக்கவலைக்கடல், மைய்யத்திலாழ்ந்தேனே, இனியென்செய்வேன ய்
யோதெய்வமே
அருமைஅய்யாவே நீர்பெருமையாயெனைப்பெற் றனுபவித்ததிதுவோ விதி
யோ
தருமந்தழைத்திடாதெக் கருமமோவிளைந்ததே சண்டாள அரக்கன்செய்சதி
யோ
அய்யாவென்றினிநானே யாரையழைப்பேனோ, அஞ்சேலென்பதும் யெனக்
காரோ
ஒய்யாரமாயினி அம்மாயென்றழைத்தெனை உச்சிமுகந்திடுவாரா ரோ
கார்வண்ணராமர்க்கெனைக்கல்யாணஞ்செய்தீந்து காக்ஷிகண்டிருந்தாலாகாதா
பார்மீதிலவ்வளவு பாக்கியஞ்செய்திலேனோ பழிகாரியானேனேதா தா
பாவியிராவணன் தீவினைபுரிந்திங்கு படபடெனவருவதா லே
பூவிலிருக்கலாமோ ஆவிபொருந்தலாமோ பூவையரேயினிமே லே.

(என்றலறிக்கொண்டே எழுந்தோடுகின்றனள்.)

(சகியர்.) ஹா, இவ்வனியாயத்திற்கென்செய்வோம் எனப், பின்ரு டர்ந்தோடுகின்றனர்.

(இராமர்.) பரபரப்புடன், கிட்டவணுகி.

### விருத்தம்.

அஞ்சேலஞ்சேல் கண்ணாட்டி ஆருயிர்ச் சனகமா தே
வஞ்சராவ ணுபகாரம் வருமென்று நினைக்கவேண் டா
மிஞ்சுமிவ் வரக்கர்தம்மை வதைத்திடவேண்டி யென்று ல்
வெஞ்சரங் கோர்த்திலங்கு வென்றிவிற் சனத்தந்தா னே.

(கரானன்.) பயத்துடன், மாரீசனிடம், இரகசியத்தில், ஹா, மாரீசா, என்ன இவ்வாறு மொழிகின்றனன். இப்பொழுதிதற்கென்செய்வோம்.

[மாரீசன்.] இரகசியத்தில்.

### விருத்தம்.

கருத்துடன் பூசினிக்காய் களவுசெய்திட் டோன்றோனே த்
திருத்தமாய் வருடலென்னச் சிறுபிள்ளைத் தனமாய்ச்சொன்னாய்

உரத்தராகவனோ நம்மை உற்றவனென வுட்கொண்டா                    ன்
அரற்றிடா திருப்பாயிச்சொல் லவர்களைக் குறிப்பதா *          மே.

ஷ (இராமர்) விருத்தம்.

தீங்கிளைச் சனகன்பாற் செய்தசக்ரீவன் றன்னைச்சீ                    றி
யீங்குயிர் பறிப்பனிப்போ திருந்தவெம் பகழியா                    லே

(காசிபர் வசனம்.) அவ்விதேகன்பால் தீங்குபுரியயாதுகாரணம் ஏதே து நம்புதற்கிடமில்லை, எனெனில்.

ஷ ஷ விருத்தம்.

ஓங்குபெண் கேட்பதற்கும் உளமிலன் ஜனகன்பா                    லே
தாங்குநட் பதனாலந்தத் தசக்ரீவன் சதிசெய்வா                    னோ.

[கராளன்.] மாரீசனிடம், இரகசியத்தில், எல்லாவற்றிலும் விருத்த மேசெய்து வருகின்ற இப்பிராமணப்பயலை அதஞ்செய்யவேண்டும்.

[மாரீசன்.] இது நிற்க.

விருத்தம்.

வச்சிரக்கடினக்கைக் கொடுபுடைக்க வணங்கியமுகத்தைராவதத் தை
புச்சத்தைப்பருகியோட வொட்டாமற் புரிந்தும்பர் புகழினைத்துலைத்த
மெச்சிலங்கேசன் றனை வதைத்திடுதல் மிகவெளிதாய் நினைக்கின்றான்
இச்சிறுமனிதன் ராமனைச்சயிப்பர் யார்யேதுகாண் நாமெலாமிறந்தோம்

[பிங்களன்.] அதிற் சந்தேகமா.

[கராளமாரீசன்.] ஒருவருக்கொருவர் பயத்துடன், பிங்கள காசிபர்க ளின் வார்த்தையினால் ஒருவர்க்கொருவர் வர இறங்க விழித்தவர்களாய் இரா மனிடம்.

[வெளிப்படையாய்] மாரீசன்.

இராகம் அடாணா. ரூபகதாளம்.

பல்லவி.

சாமி யீதென்னயோசனை                    இவனைக்கொல்ல
தானோ மஹாராஜ                    னே.

அநுபல்லவி.

பூமிபுகழ் வீரர்க்குள் தலைமையா மாண்பிள்ளை
நேமமாய் ராமனென்று நீயிருந்தென்ன கொள்ளை.          [சாமி]

## சரணங்கள்.

ஏதுகாண் கொட்டினுற்றேள் கொட்டாட்டாற் பிள்ளைப்பூச் சி
என்பார்க ளறியாயோ யீதெல்லாமிக வேச்சு
பாதக அரக்கர்சொல் நீதியாய்க் கேட்கலாச் சு
பழமையா மெங்கள்சொற் பாலுங் கசப்பாச் சு. [சாமி]

வஞ்சகமாய் வந்தவர் நேரோபோவாரோ சாது
மயிலே ஓரிறகு தாவென்று லநுதாறு து
மிஞ்சுமிவர்மே லென்ன தாக்ஷணியமதை யோ து
விளையாட்டல்ல யிவரைக் கொல்லவேணு மிப்போ து. [சாமி]

கனைகடற் பொங்கினுற் கிணர்கொள்ளுமோ அனேக ங்
கடைக்கண் சிவந்தாலுனக் கெதிர்நிற்குமோ லோக ம்
மனமடமை யாலிவர் அறியாதுனது சினேக ம்
மனதிற் பாருட்டிவந்தார் அதிலுமுண்டோ சந்தேக ம். [சாமி]

[என] இராமனைத் துறைசெய்துகொண்டு (தியானஞ்செய்கின்றனன்.
[காசிபர்.] கிடுகிடெனை, உடல்கடுங்கிக்கொண்டு.

## விருத்தம்.

வையகம் புகழயோத்தி மன்னவ ராமச்சந்த் ரா
வெய்ய மாரீசமாயம் யிதனையொழிக்கல் வேண்டு ம்
தெய்வமே கண்கெட்டாயோ திக்குவேறுண்டோ உண் மை
பொய்யதாய்ப் பொய்கள்மெய்யாய்ப் போனதென் கலியின்கோ ளோ.

## (மாயாசிதை) விருத்தம்.

தலமிதி நெருக்கமான தருக்களினூடு தோன்று ம்
பலமதாய்ச் சொலிக்கா னின்றபாவகக் தன்னிலிந்த ச்
சிலையேறிப் பாய்ந்துதீர்ப்பேன் சீர்தந்தை யிழந்தசோக ம்
நலமகா புருடனாலே நான்கொள்வேள்ச் சுறமுந்தா னே.

## கலிவிருத்தம்.

ராம ராம நயனுபி ராம னே
எ மனாள ரவிகுல சோம னே
வேம னற்குழி வீழ்ந்துன் னிமித்தமாம்
காம வேட்பகை கனைத்திற் றீர்ப்பனால்.

என்று சென்றனள்.

[பிங்களகாசிபர்.] தன்னுள், ஹ, ஹ, மாரீச மாயாப்பிரயோகத்தால் நடக்கிற சங்கதிகள் அடட, என்னென்ன ஆபத்தோ, அதிசயமாயிருக்கின்றது.

(வெளிப்படையாய்) விருத்தம்.

ஏதய்யா ராமச்சந்த்ரா யித்தனைமோக மெல்லாம்
சூதய்யா அரக்கர்செய்கை துங்கநீயுறியா துண்டோ
ஓதய்யா அரக்கராமென் றெங்களையுளத்திற் கொண்டாய்
நீதய்யா யிதெல்லாம் நன்றுச்சிந்திக்க வேண்டும்சாமி

[இராமர்.] நல்லசிந்தனை, இதிற்சிந்தித்து யோசிக்கவேண்டியதுமிருக்கின்றதோ.

விருத்தம்.

தேகத்தைத் தீயில்வீழ்த்துஞ் செய்கையில் முயன்றுகொண்டே
ஆகத்தி லெனைநினைத்தென் மேலுள்ள ஆசையாலே
பாகொத்த மொழியாள்சீதை படித்திடுவார்த்தை யென்றுற்
சாகத்தைக் கெடுத்தென்மர்மம் தனையறுக்கின்ற தந்தோ.

காரளன் சிங்காரக்கவி.

அடிக்கடிமாயையென்று, படிக்குமிவ்வரக்கர்தம்மை,
நொடிக்குளுத்துங்கராமா, மடித்திடவேண்டுங்கண்டாய்.

[சகியர்.] பரபரப்பொடு.

விருத்தம்.

மாதரசேநமதையாவின்மரணவார்த்தையினில்வருசோகநமக்கெல்லோர்க்கும், பேதமிலாததுநாலேநீமுன்னாலேபிரயாணஞ்செய்திடுதலேன்பெண்பாவாய், வேதனைகொண்டுன்பின்றொடரொம்மையாளவேண்டுவதுன்கடமையன்றோவிதேகநங்கா, யேதடியுன்பிரிவும்வந்தெய்துமாகிலெம்மையுநம்பிடவேண்டாமிறப்பமந்தோ.

ஹா ஹா, சுடு சுடு, குடிகெட்டது குடிகெட்டது, அக்கினிச்சுவாலையிற் சானகி பாய்ந்துவிட்டனளோ.

இராகம் காப்பி.

கண்ணிகள்.

சானகியேமைதிலியே சகிஜனவாச்சலியே
மானவிதேகன்குல மாவிளக்கேபோனயோடி

வச்சிரமேமாணிக்கமே வாடாமருக்கொழுந் தே
உச்சிதமாரெத்தினமே ஓமணியேபோனாயோ டி.

[வசனம்.] ஹா, ஹா, அழுதென்ன கதை, இதில் நஞ்சோகமாறுமா, நம்மாருயிர்ச்சகி, எவ்வழிசென்று, எவ்விடத்தில், எப்படிப்பிராணனை, இழந்தனளோ, நாமுமவ்வழியேசென்று, அவ்வக்கினிக்குண்டத்திலேயே ஆவியிறப்போம்.

[எனச்] சென்றனர்.

[இராமர்.] வில்லைக் கீழேயெறிந்தனராய் வயிற்றிலும் வாயிலுமடித்துக்கொண்டு.

இராகம் காம்போதி. ஆதிதாளம்.

## பல்லவி.

என்னுயிர்க்குயிரான கண்ணாட்டியே அடி
எழிற்சீதையே நீயுமிறந்தா யோ.

## அனுபல்லவி.

அன்னியாயமிது சொன்னாலெவர்க்குமேச் சே
முன்னாட்செய்சற்பனையோ, யெண்ணியதெல்லாம்போச் சே. [என்]

## சரணங்கள்.

வடிவழகியேயுனை மனதிற்கொண்டுகன மே
மன்மதவிகாரத்தால் வாடுறேனேதின மே
பிடிஇடைச்சனகியே உன்றன்கனதன மே
பிடித்துமருவுமுன்னீ மடிந்ததென்னஅன மே. [என்]

எண்ணிக்கோசிகர்பினை யேற்றுக்கொண்டதும்போச் சே
இதுமட்டிலுமழைத்து வந்ததும்வீணாச் சே
வெண்ணை திரண்டுவரத் தாழியுடைந்தயேச் சே
வீண்மனப்பால்குடித்தது வெனஇதுமாச் சே. [என்]

மயிலேயுனையரக்கன் வந்துதொடுவா னோ
வஞ்சகஅரக்கனை வைத்துப்பார்த்திடுவே னோ
அயில்விழியேயவனைக் கொல்லாமல்விடுவே னோ
அனியாயமாயிறந்தா யதுசகித்திடுவே னோ. [என்]

ஹா, ஹா, இனியென்னகதி கஷ்டங்கஷ்டம்.

விருத்தம்.

என்மனோரதத்தருவேர் பரிந்தழிந்ததே யிப்புவிக்கெழிற் பெருஞ்சோலை
தின்மையேயாயின தயன்புகழ்குறைந்தது தீர்ந்தது திருக்குலனந்த ம்
வன்மைசேர்மாரன் மண்டலஞ்செயிக்கும் மதமெல்லாமிறந்த தம்மங் கை
தன்மனங்கொதித்து தந்தையின்மரணத் தாலழற்பாய்ந்த தக்ஷண மே,

[மாரீசன்.] தன்னுள், இவனுக்கு சோகாக்கினியை விருத்திசெய்கின்றேன்.

[வெளிப்படை.] ஆ, ஆ, தீயிலிவள் மூழ்கினளா.

ஹ, ஹ, அந்தோ வந்தோ ஹா, ஜானகி.

விருத்தம்.

உயர்மகமதனி லுற்பவித்தவளே உத்தமவிதேக நற்குலத்து ச்
சுயம்பிரகாசந் தொளிர்மணிவிளக்கே சொற்றிரிபுவன சுந்தரி யே
நயகுணராம மயமதாஞ்சீவ நங்கையேநீயுஞ் செந்தணற்பாய் ந்
துயிரிறந்தனை கொலுனக்கு மிவ்விதியோவோர் தெய்வவிபரிதம்லோகோ.

[எனப்] புலம்பி மூர்ச்சைகொட்டிக் கீழே விழுந்தனன்.

[கராளன்.] மாரீசனைக்குறித்து, ஹா, காசிபா ஆசுவாஸம்பெறுவாயாக, ஆசுவாஸம்பெருவாயாக, எனத்தேற்றினன்.

[இராமர்.] ஹா, காசிபன்றான் நமக்கு முந்தியே மோகத்தையடைந்தனன்.

[இராமர்.] சோகவேகத்துடன்.

☞ விருத்தம்.

மலையின் மீதேறிக்கீழே மடமடென்றுருள் வேன்கொல் லோ
அலைகடலாழ் வேன்கொல்லோ ஆலமுண்டிடு வேன்கொல் லோ
கொலைசெய்து கொள்வேன்கொல்லோ

[கராளன்.] தன்னுள், அடடா, க்ஷத்திரியப்பயலே, தாடகை சுபாகு இவர்களைப்போய்க் கேட்கக்கடவாய்.

[வெளிப்படை.] மாரீசனைக்குறித்து, ஓ, ஓ, காசிபா இங்ஙனம் மயங்கினல் நமக்கு கதியாது கொல்.

[மாரீசன்.] சற்று மயக்கந்தெளிந்து, நம் உயிர்ச்சகனுக்கு யாதுகதியோ அதுவேயாம்.

☞ (இராமர்) ஷை விருத்தம்.

குறித்தனல் தனில்வைதேகி
நிலமை யெய்துவன்கொல்

•[மாரீசன்.] தன்னுள், இதுவேசரி, எங்களுடைய கோரிக்கையெல்லாம் இதுவன்றி மற்றியாதுகொல்.

(வெளிப்படை.) ஓ, நண்பர் நாயகா அவளுன்மேல் நாட்டிய அடங்காத ஆசைவிசுவாச நேசத்திற்கீதெவ்வளவு.

(இராமர்) ஷெ விருத்தம்.

வேறுநிவிர்த்தியென் மனநோய்க்குண்டோ.

(பிங்களகாசிபர்.) இரகசியத்தில், அந்தோ வந்தோ இன்னிசிசரர்களின் மாயாவிநோதங்கள் அதிசயிக்க யோக்கியமாயிருக்கின்றன. எதார்த்தமான நாமே, நமதிஷ்டனுக்கு கொஞ்சமேனும் நம்புதலுக்கிடமில்லாதவர்களாக ஆய்விட்டோமல்லவோ எனக், கிலேசத்தை அடைந்தனர்.

(இராமர்.) சோக ஆச்சரியத்துடன்.

விருத்தம்.

செந்தளிர்ச்சயனத் திருந்துசேடியராற்சேவித்துப் பணிசெயப்பெற்று
சந்திரகலைபோற் றனுவிளைத்தொளிக டாங்கிக்கனு னந்தவடிவாய் ச்
சுந்தரமிலங்கயிருந்தவன்னங்கைதொல்லையிக்கதிகொண்டாளென்றால்
இந்தவன்றுயரம் சகித்திடவசமோ யென்னதானினிச் செய்குவேனே.

(நல்லதிருக்கட்டும்) யானே, இதோ இருக்கிற பெரியகரும்பாறையிலேறி அப்பாற் சொலிக்கின்ற அக்கினிக்குழியில் யென்மனோரதத்தைச்செய்கின்றேன்.

(என) பாறையின்மேல் பாதத்தை நாட்டுகின்றனர்.

(பிங்களகாசிபர்.) தங்களுக்குள், அந்தோ வந்தோ.

விருத்தம்.

அந்தோகோ இனியென்செய்வோ மரக்கரா லாவிபோக்
வந்தோமிப் பயல்களாலே வஞ்சிக்கப் பட்டோமிக்
நொந்தோமென் றுறைப்பபாார்கொல் நொடியினிற் பதிலமைத்துச்
சந்தோடம் நமக்குண்டாக்குந் தந்தைகோசிகர் பாற்று னே.

(எனப், புலம்பினராய் பார்த்துக்கொண்டிருந்தனர்.

(மாரீசன்.) தன்னுள், என்கோறிக்கை பலிதந்தான்.

என, ஆனந்தபரவசத்தை அடையலாகினன்.

(வெளிப்படை) விருத்தம்.

அனுசகராளா நம்மளன்னை தாடகையைக் கொன் ற
மனிதனிப் பாவிராமன் மாயைமைதிலி மாய்ந்திட் ட

கனவினில் வீழ்கவென்றே கல்லின்மேற் காலைவைத்தான்
இனியென்ன பயங்காண்டம்பி ஜயஞ்செய மிதனைப்பாராய்.

(கராளன்.) புருவங்களை நெறித்துங் காரத்துடன், இப்பொழுதொன்றுஞ் செப்பிடேலென்றியம்புமாறு முகத்தை அலைத்துச் சாடைசெய்தனன்.

(பிங்களன்.) காசிபனுடைய கையைத்தட்டி, நகைத்தனன்.

(காசிபர்.) ஓ, ஓ, வரசக, ரகுநாயகா, நுன்றன் உண்மைச்சிந்தைக்குகந்த, இந்த விசுவாசநேச காசிபன் பேசிய வாசகம் நுன்செவிக்சேறிற்றே.

(இராமர்.) ஆ சங்கையுடன், இதுவென்சொல், இவனிங்ஙனஞ்செப்பியது [என முகத்தைத் திருப்பினர்.

(மாரீசன்.) கராளனைக்குறித்து, இரகசியத்தில், தம்பி கராளா, அதிசந்தோஷபரவசத்தினால் அறிவிழந்தவனாகி ஆலோசியாதிங்ஙனம் உளறிவிட்டேன், இனியென் செய்குவாம்.

(கராளன்.) மற்றியாதிருக்கின்றது.

## விருத்தம்.

விரும்பி ஆக்கிடப்பொருத்து வெந்ததாமிடப் பொருக்கா
தருந்திநாப் பொத்தபின்னர் ஆஆவென் றலறுமாப்போல்
தரும்பிற யாசமெல்லாம் சதுரமாய்ப் புரிந்தந்தத்தில்
திரும்பி மூடத்தனத்திற் றியங்கினாற் செய்வதென்னே.

[இனி மான்வேடமெடுத்தோடவேண்டியதுதான்.]

(——) திரை.

இராகம் தனசு. ஆதிதாளம்.

## பல்லவி.

ராமா ரகுராமா ஜயஜய
ராமா ரகுராமா

## அனுபல்லவி.

ஸ்ரீமான்றசரத சோமானருள்தவ
பூமா பலவீமா ஜயஜய (ராமா)

## சரணங்கள்.

கோசலைபாலா குணநய சீலா
நேசருக்கனுகூலா ஜயஜய. (ராமா)
குவிபுயமந்தரா கோமளசுந்தரா
ரவிகுலராமச்சந்த்ரா ஜயஜய (ராமா)

எல்லவரும் வியப்புடன் நோக்குகின்றனர்.

(சராளமாரீசர்.) இரகசியத்தில், இதுவென்கொல்.

### விருத்தம்.

சீதானுகமனஞ் செய்திடவெண் ணிராகவன்சிலையி லோரடிவைக்கவு ம்
நீதாக்கிடந்த வப்பாறையே ஓர்பெண்ணாய்த் திவ்யமங்களரூபமா ய்
போதாம்பற் கண்முகிற்குழல்கனதனங்களாய்ப்புகழ்சிறையுடையங்கமாய்
ஈதாரொருத்தி முனிநாரியாய்க்காண்கிறு ளினியென்னசெய்வமந் தோ.

(இதுவென்கொல்) எனச் சிந்திக்கின்றனர்.

(இராமர்.) இவர் ஆரோ, தாயார் கௌசலையைப்போலழைக்கின்றனர்

(அப்பால், முனிபத்தினி பிரவேசிக்கின்றனள்.

### (முனிபத்தினி) விருத்தம்.

அருந்தவக் கொழுநரிட்ட சாபத்தாற் கருங்கலா கி
வருந்தினேன் வெகுநாளாக மனுகுல மணியிரா ம
பரிந்துன் பொற்பதத்தூளாலே பரிசுத்த மானேன்கண்டா ய்
தெரிந்திடா யெனைக்குழந்தாய் தேவியகலிகை யென் றே.

(இராமர்.) தன்னுள், இவ்வம்மணியை, கௌசிக முனிவரால், அடிக்கடி சொல்லக் கேள்விப்பட்டிருக்கின்றோம்.

(வெளிப்படை.) ஓ ஜனநீ, ஓ பகவதி, தாசரதியாகிய இந்தராமன் சாஷ்டாங்கமாக நமஸ்கரிக்கின்றனன்.

### (முனிபத்தினி) சிங்காரக்கவி.

நேசமாயெனது, மாசெலாந்தீர்த்த
கோசலகுலப்பிர, காசனேவாழி.

(பிங்கள காபேர்.) கிட்டவணுகி, ஓ அம்மணி பகவதி, சதானந்தஜனநீ, அனந்தவந்தனம், அன்புடன்றந்தனம் [எனப்பணிந்தனர்.

(அகலிகை.) குழந்தைகாள், சிந்தித்தகாரிய முந்திக் கைகூடுமால்.

(இராமர்.) அன்னாய், இன்னவர் யார்கொல்.

(அகலிகை.) குழந்தாய், கோசலை தனயா.

### விருத்தம்.

இவன்றாய முனிவர்சீடன் எழிற்பெரு காசிபன்று ன்
இவனுன்ற னுயிற்குயிரா யிருக்கின்ற பிங்களன்று ன்
இவனே மாரீசப்பாவி யிவனே சராளத்துரோ கி
இவையெலா முனைமோகிக்க வியற்றிடு மாயையை யா.

(என) கைநீட்டிக் காண்பிக்கின்றனள்.

(கராளமாரீசர்.) பயத்துடன், மான்வேடங்கொண்டு ஓட்டமெடுத்தனர்.

(அகலிகை.). குழந்தாய், ராமபத்திரா.

விருத்தம்.

பாவிவல் லரக்கரந்தோ பரிந்துமா னுருவங்கொண் டு
தாவியே யோடுகின்றார் சதிசெய்யிப் பயல்கடம் மை
ஏவெடுத் தென்முன்பாக யெமபுரிக் கேவிவிட் டு
வாவிரைந் தொருநொடிக்குள் மனுகுல மணிவிளக் கே.

(இராமர்.) கோபமூர்த்தன்னியத்துடன், அடடா, குடிகேடர்காள் பதிதராக்ஷஸ நீசர்காள், எங்ஙனம் ஓடுகின்றீர்கள், எனப்பின்றொடர்ந்துசென்றனர்.

(பிங்கள காசிபர்) ஆசிரியவிருத்தம்.

பஞ்சசதகோடிப் பிரபஞ்சச்சொரூபச் சுபாவதத்துவங்களெல்லா ம்
பரிவோடும்அசளங்க வறிவினாலறிகின்ற பகவதி பராத்பரத்தி ல்
நெஞ்சார்ந்தகம்நீங்கி நிஷ்டைபரிபூர்ணராய் நித்யராய்த் தானதா கி
நிமலரா யாதிகுருவான கௌதமபத்தினி யுனதுசாபம்நீங் கி
கஞ்சானனி னின்சொரூபம் அடைந்ததுங் கருதியுன் சொலினாலிவ ன்
கள்ளராக்கதனைக் கடிந்திடச்சென்றதுங் காட்டிலுயிர் போய்த்திரும்பி
அஞ்சாதுயாங்களு முவந்திருக்கின்றது மாதிதெய் வா நீன மே
அகிலபுவனங்கட்கு மனுகூலம் தெய்வமல்லாது வேறேதன்னை யே.

(அகலிகை.) பாலர்காள், நன்று நன்று யுக்தமாகச் சொல்லினீர்கள், பாலர்காள், கொஞ்சம் எட்டிநடந்து இங்ஙனம் நோக்குக நோக்குக.

விருத்தம்.

சக்கரம்போற்றனுவளைத்து நாணிபூட்டி சாமிரகுராமன்விடுசரத்துனாலே வக்கிரதந்தக்கராளன்றன்கண்டமறுபட்டுப்புனைதருமான்வடிவம்நீங்கி உக்கிரமாந்தன்னுருவோடிறந்துவீழ்ந்தானுயர்ந்தோங்கிவளர்ந்து சொலித்தெழும்புவெங்காட், டக்கினியாலெறிபட்டுவிழுந்தாளம்போலதிசயம்பாரீரமரர்ஆர்க்கின்றாரால்.

[வசனம்] ஓ, ஓ, இன்னமும் மாரீசனோ, மாயையால் நயனமார்க்கத்திற்குப் புலப்படாமலே மாயமாய்விட்டான்.

ஆகவே, அம்மாரீசனைமட்டும் வதைசெய்யாமல் விட்டுவிட்டு சாரரோபதனு வுடைக்கையனாய் குழந்தை இரகுவீரன் திருப்பிவருகின்றனன்.

(அப்பால்) சராரோபதனுவுடைக்கை ராமன் பிரவேசிக்கின்றனன்.

(இராமர் வசனம்.) அம்மணி, தெய்வத்தன்மைபொருந்திய மஹா பரிசுத்தமுள்ள பகவதிதெய்வாதீனமாய் யாம் நின்னாலனுக்கிரிக்கப்பெற்றனம்.

(அலிகை.) குழந்தாய் கௌசல் யானந்தவர்த்தனு,.

இராகம பூபாளம ஆதிதாளம.

அய்யாரகுராமா, ஆதித்தியகுலராமா, ஆனந்தராமா, அபிரா மா
வையகம்புகழ்ந்திடும்செய்யசெங்குமுதவாயனேமங்களகுணராமா
சிந்தையிற்சினத்தாலே எந்தன்கணவர்கருஞ்சிலையாய்ச் சபித்தாரெனைசெய்ய
ஊன்றன்பதாம்புயத்திற்சிந்தும்பராகத்தாலென்னுடையவடிவங்கொண் டே னய்யா
பத்தியாயுன்பதபதுமம்பணிவோர்க்கெந்தப்பதங்கிடைக்குமோஅறியே னே
குற்றந்தீர்ந்தேனருள்கொண்டேனுன்மகிமைகூறயாராலுண்டுபெறியோனே
கணவர்க்குப்பணிவிடைசருதிமுன்போற்செய்யக்காதல்மிகுந்தேன்விடைதா
குணபூடணரகுகுலநாயகவருள்கூராய்விடைதாராய். [ராய்

(இராமர்.) அம்மணி, இவ்வளவு செப்பல்வேண்டுமோ, நல்லதப்படியே ஆகட்டும் நமஸ்கரிக்கின்றனன்.

(அகலிகை) விருத்தம்.

பங்கயப் பதிக்குலத் துற்பன்னனே ஜனகிதன் னை
மங்கள மணம்புரிந்து வல்லரக்கரை மடித் து
தங்குமுப் புவனங்கட்குந் தானதிபதியா யார்க்கு ந்
துங்கநாயகனாய் நாளும் சுகமொடு வாழிவா ழி.

என, ஆசீர்வதித்துச் சென்றனள்.

(இராமர் ஆதரத்துடன்) பிங்களகாசிபர்களைக்குறித்து, [வசனம்] உயிரிற்சிறந்து, ஒளிபெற்றிலங்கும், உத்தமநண்பர்காள், உமதுமுகாரவிந்தங்களில் ஏறிட்டுநோக்குவதற்குக்கூட என்மனதிலச்சையை அடைகின்றது.

இராகம் எதுகுலகாம்போதி. சாப்புத்தாளம்.

## பல்லவி.

வஞ்சகஅரக்கன்செய் மாயத்திற்குள்ளாகி
மயங்கிமிகவருந்தினேனே.

## அனுபல்லவி.

அஞ்சலென்றுங் களையாளாமல் நான்
கொஞ்சமுமுங்கள் சொற்கேளாமல், [வஞ்சக]

## சரணங்கள்.

எதிரிலுங்களைப்போல் மாயையாலுருக்கொண்      டு
இராக்கதரொன்று னென்றுமுனங்களைக்கண்      டு
மதிமோசத்தால்நானும் மெய்யென்றெண்ணிக்கொண்      டு
மயங்கிக்கிடந்தேனே யென்னைப்போலெங்குண்      டு.      [வஞ்சக]

உளத்திற்கபடங்கொண்டு ஜனகியைப்போ      லே
ஒருத்தியைக்காட்டினான் மாயையினா      லே
வெளுத்ததெல்லாம்பாலென் றெண்ணினேன்தீயின்மேலே
வீழ்ந்தவளுடனானும் விழமுயன்றேன்மென்மே      லே.      [வஞ்சக]

உள்ளத்திலரக்கரை மெய்யென்றெண்ணினே      னே
உங்களையரக்கரென்றெண்ணிக் கொண்டிருந்தே      னே
கள்ளனைப்பிள்ளையென்று பிள்ளையைமறந்தே      னே
காக்காச்சிப்பியைவைத்து வெள்ளியைத்துறந்தே      னே.      [வஞ்சக]

(பிங்கள காசிபர்.) ரகுதிலகா, இதில் வருத்தப்படுவதென், மாரீசன் மாயையன்றோ இவ்வளவு விரோதஞ்செய்தது.

(இராமர்.) வாஸ்தவமே, ஆயினும்.

### விருத்தம்.

அன்னைதாடகை யைக்கொன்ற அடத்தினாற் சீதையென்      று
மன்னுராக்கத ரென்பாற்செய் மாயையில் மயங்கிட்டாலு      ம்
இன்னவர் நண்பரென்ன யினந்தெரியாத தல்லா      ல்
பன்னுமப் பேர்களான பதங்களில் மயக்கமுண்      டோ.

(ஆகையால், எனதாசை நேசர்காள்.)

### அடுக்குமொழி.

இங்ஙனம்நடந்த, சங்கதியாவும்,
நுங்கண்மனம்விட், டெங்கும்விடாதீர்.

(காசிபர்.) வசனம். அங்ஙனம் சரியே, இஃது இளையவள்ளலிலக்குவனிடத்தும், பகவான் கௌசிகரிடத்தும் தெரிவிக்கவேண்டுவதுதான், ஏனெனில், இம்மாயாப்பிரயோகங்களுக்குப் பதில் விளைவிக்கக்கூடியவராகையால்த்தான்.

(இராமர்.) ஆனால் சரியே.

(——) திரை.

ஓ, ஓ, சேனாதிபர்காள்.

### விருத்தம்.

வேட்டம்நாடிய ராமன்செல்வழி யிதுவிலங்கினப் பிணங்களாலறிவீர்
ஓட்டமாய் வருகண்டீரவங் கண்டீரோரடியா லிதைமாய்ப்பீ      ர்

கோட்டுவெங் கரிகளோடநற்பிடி பின்கொண்டலிற் குமரிநொந்தே க
ஆட்டங்கொ ணயனமானினமிணை விட்டகன்றிடுங் கூச்சலிடாநீ ர்.

(இராமர்) ஓ என்னைத் தேடிக்கொண்டு வருகின்ற நமது பரிஜனங்க ளின் ஆரவாரம்போலும் கேட்கப்படுகின்றது.

(பிங்களன்) ஆம் ஆம் வாஸ்தவமே,

எங்ஙனமெனில்.

விருத்தம்.

படைபுரியும்பேரொலியிற்சிங்கங்கர்ச்சனைசெய்யும்பதறியேங்கு ம்
நடைமலைகள்பல்லுகங்களோடிமிகத்தத்தளிக்கும்நயனங்கோட் டி
கடைமுதற்பற்காட்டிவலிக்குங்கவிகள்மரத்திலங்குங்கனகுந்தத்தா ல்
அடிபொருபுல்வாயிழந்தகுட்டிதனைமான்முகக்குமணியார்கான ம்.

(காசிபர்) ஆம் ஆம் இதுவாஸ்தவமேயாம்.

(பிங்களன்) இஷ்டன், இரவிகுலசிங்கன், வேட்டைக்கு வந்து வெகுநேரமாயிற்று.

(இராமர்) சுற்றி நாற்புறமும் நோக்கி, ஓ ஓ நமெத்தியானகாலம், அதிகடோரமாய் விளைந்திட்டது போலும்.

விருத்தம்.

சஞ்சரிப்போர்தஞ்சரண் கடஞ்சமென்னச்சாயைகள் யாசிப்பதெனத்தாளிற்சார, வுஞ்சகத்துமண்டலங் கண்டிடப்போற்பானு உச்சியின்மாகத்தேறப்பிகங்கடாகம், மிஞ்சிடத்தங்கொழுனர் தருதளிர்களுண்ணுவேதைகொள வளியினங்கடம்பெண்டிற்குத், தஞ்சிறைகள்விரித்துநிழற்றந்து வீசித்தாபமதை நீக்குபகற்றருணந்தானே.

ஆகையினாலே இனித்தாமதிப்பது தகாது, அதிசீக்கிரம் நமது ஜாகையில் ஸகந்தவார்த்தைச் சேருவோம்.

(என) எல்லவரும் சென்றனர்.

மூன்றாவதங்கம் முற்றிற்று.

---



# நாலாவது அங்கம்

## ஆரம்பம்.

(அப்பால்) கந்தருவன் பிரவேசிக்கின்றனன்.

(கந்தருவன்) இப்பொழுது,

### விருத்தம்.

குமர்தளத்தொடு தாடகைப்பெணைக் கொல்கரான சுபாகு வை
சமரினிற்கூலே செய்தனுப்பினன் சாமிராமனென் னுட்டிற்கென்
றெமனனுப்பிடு வாசகந்னே இந்திரன் கேட்டெண்ணுரு ன்
அமரரக்கரை வதைசெய்நாடகமதில் முன்வேடம தென்ன வே.

ஆகையினுற்றுன்,

### விருத்தம்.

அகிலசுரவந்தித பதராவிந்தன் அமராவதிக்கரசனுகண்டல ன்
மகிழ்வுடனெனேச்சித்திராங்கதா நீவதைபடைக்கதை கேட்டிலங்கைதன்னில்
முகமிரண்டைந்துளா னின்னம்வேறுமுயல்கின்றகுதறிந்தொருநொடிக்குள்
மிகவிரைவில்வந்தெனக்கறிவித்திடவேண்டுமென்றேவினுன்மேவிவந்தேன்.

சற்றுநிதானித்து,

### விருத்தம்.

சதமகபதிதனக்குச் சதிர்குணராமன்மீ தி
லதிகமாய்ப்பொருந்துவாஞ்சை அதனினுங்கடி யிலங்கைப்
பதிதசக்ரீவன்மீது பத்துப்பங் கதிகமூ க
முதுபகைத்துவேஷந்தானே மூண்டிருக்கின்ற தந் தோ.

(இருக்கட்டும்) யானே மாயையாற்றரிக்கப்பட்டிருக்கின்ற இவ்விராக்கதவேஷத்தொடு. அதிகக்கட்டுக்காவலோடிருக்கினும், அன்னிசாசரர்ராஜதானியில் சர்வ சாதாரணமாய்ப் பிரவேசிக்கத்தகும், ஆகையாலங்ஙனஞ்செய்கின்றனன்.

(எதிர்நோக்கி) ஓ, ஓ, இவளார் ஓரரக்கி என்னேயே, நோக்கித்திரும்புகின்றனள். ஆ! இவளோ என்னரூபம், என்ன அலங்காரம் அடடா.

இராகம் காம்போதி சாப்புதாளம்.

## பல்லவி.

அதிரூபவதியிந்தமாதே அடடா ஆனாலும் பேரழகி
அதுசொல்லொண்ணாதே . . (அதி)

## அனுபல்லவி.

சதிர்பெருகு நீளமோ ரொட்டைச்
சாணளவு அதிலுஞ் சுருட்டை சுருட்டை
குதிரைரோமம்போற் செம்பட்டை உள்ள
குழலாடுகின்ற தலங்கோலஞ் சப்பட்டை (அதி)

## சரணங்கள்.

ஒட்டகமுகம்போல் வதனமும் இவட்
கொருசிறுகிளாக்காயள வாயோர்தனமும்
வட்டமாமலைபோலோர் தனமும் துந்துபி
வாத்தியம்போலேவயிறும் வண்டிபோற்சகனமும் (அதி)

வாருகள்மலம் பாம்புபோலும் மத்த
மதகரியின்கால்கள்போலே இரண்டுகாலும்
தேகமிசைதொங்குகின்ற தோலும் எந்தச்
சீமையிலுங்கண்டதில்லை இப்படியானாலும். (அதி)

### (இன்னமும்) விருத்தம்.

உருவமிப்படித் திகழ்கின்றதிலு முதட்டிற் குண்டலந்தூங் க
இருசெவிகளி னத்துப்புல்லக்குக ளிலங்கச்சுட்டி மூக்கிசை ய
கரமிரண்டிலும் பதசரங்களுங் கண்டத்திற் பாடகங்கலிக் க
வருமரக்கியின்பணியலங்காரவைபவ மென்னென்றுவரைவேன்.

(அப்பால், இராக்ஷஸி பிரவேசிக்கின்றனள்.)

(அரக்கி.) நீ, யாவனடா, கராளனா, அல்லதன்னியன்கொல்.

(கந்தருவன்.) தன்னுள், இவளுடன் ஸம்பாஷிப்பதற்கு இவன்தானே வழிகாட்டுகின்றனள்.

(வெளிப்படை.) ஆம், கராளனேதான்.

(அரக்கி.) வியப்புடன், ஆ, இங்ஙனங் கல்லுப்போல் விளங்குகின்றனையே.

### விருத்தம்.

கனக்குறல்வா யரக்கியர்கள் கட்டியழவவர்நடுவிற் கணவாஉன்னை ச்
சினக்கொடிய ராமசரம்செற்றது கொலந்தோவென் செய்வதென்னை த்

தனிக்கவிட்டுச் சென்றனையென் சாமிதுயர்சகியனெனத் தாரைக்கண்ணுள்
உனக்குரியாள் கழுகுமுகியாரி லடித்தழுவதின்ன மொழிந்தாளல்லவ்ள்

(கந்தருவன்.) தன்னுள், ஆ, கராளனென்பவனுடைய கணவியோ அக்கழுகுமுகியென்பவள், ஸரி, ஸரி மிகவுமழகாயிருக்கின்றது, ஆனாலும் வெகு பொருத்தந்தான்.

(வெளிப்படை.) அன்னவட்கிங்ஙனம் இயம்பியதார் சொல்.

## (அரக்கி) விருத்தம்.

தாடகைசுபாகுவுங் கராளனுந்தான் சாமிரகுராமனெனுந் தனியனாலே
கேடடைந்தார் நமனுலகுசார்ந்தாரென்னக் கீழ்மூச்சுமேல்மூச்சோடலறியா
வென், ரேடிவந்திலங்கேசன் றனைக்காணுமனுற்றபிரகஸ்தன்முதலோர்
பாலோதி, நாடினன்கோகர்ன்ன மிசைத்தவஞ்செய்தற்கு நவில்சோகமா
மனமாரீசனய்யா.

(ஆகையாலிந்த ஸமாசாரம் இங்குள்ளயாவருமறிவார்கள்.)

(கந்தருவன்.) ஓ, ஆனால் இலங்காபுரியில் இலங்கேசனில்லையோ.

[இராக்ஷஸி.] அன்றன்று, அதனால்த்தான்.

## அகவல்.

என்றன்கணாளனை இன்புளமணாளனை
மந்திரிவித்திச் சிக்குவன்மனையில்
எங்குற்றனனென் றெதார்த்தமறிந்து
இங்கெனக்குவந் தியம்புவையென்றே
அந்தமந்தோதரி அனுப்பினளென்னையே
வந்தனனன்னவன் மனையிற்காண்கிலன்
அன்னவன்மனைமா யாவதியென்பவள்
யென்னிடம்சில தெடுத்தியம்பிட்டனள்
போந்திவணுற்றேன் புதுமையறிந்துநான்
நேர்ந்தநின்காக்ஷியை நினைத்தெதிர்நிற்கிறேன்.

[கந்தருவன்.] மாயாவதி, வழுத்தியதென்சொல்.

[அரக்கி வசனம்.] அது மிகரகசியம், அதை யெப்படிச்செப்பலாகும், ஆயினும் இங்ஙனம் ஜனகராஜன் பக்கத்தைச் சார்ந்தவரொருமிலரே, அவர்கள் தீபாந்தரத்திலன்றோ, இருக்கின்றனர், ஆகையாற் சொல்லக்கூடும், கேட்கக்கடவாய்.

## விருத்தம்.

மணிதனிராமன்மீதி லடங்காக்காதல் வகித்திட்டஜானகியை மணஞ்
செய்தற்கு, சனகனிடம் தசக்ரீவன்ராமவேடஞ் சாரணனிலக்குமண வடி

வங்காதி, முனிமகன்றனுருவித்திச்சிகுவன்பூண்டு முதிர்மாயையாலவனை மோசஞ்செய்ய, கனிவுடன்சென்றனனொன்ன வறைந்தாளென்பாற் காரிகை மாயாவதியாள்காண்கராளா.

[கந்தருவன் வசனம்.] நன்று, நன்று, வெகு இணக்கமாயிருக்கின்றது. அந்த ஜானகியினுசை இராமனிடமென்பது உலகம் யாவும் பரம்பிய சமாசாரமன்றோ.

[அரக்கி களிப்புடன்.]

வல்லநீ கராளனுகில் மயங்குநின் மனைவிபக்கல்
ஒல்லையிலோடி நீதானுற்ற தோர்க்ஷேமந் தன்னைச்
சொல்லியாங் கவடான்கொண்ட துயரொலா மாற்றிப்பின்னர்
நல்லபற்பல சம்மானம் நயம்பெறப் பெறுவன்மாதோ.

[கந்தருவன் வசனம்.] என், துக்கப்படவேண்டிய இடத்தில், சந்தோஷிக்கின்றாய், யானோ, கராளனன்று, அன்னியன்றான்.

[அரக்கி.] திடுக்கிட்டு நடுங்கிக்கொண்டு, ஆனால் கராளன்கதி அவ்விதமே முடிந்ததுதானோ.

(கந்தருவன்.) அதிலுஞ் சந்தேகமா.

(அரக்கி.) அந்தோவந்தோ, என் மனோரதம் வீணாய்முடிந்தது, நீ அன்னியனென்றால் யாவன்.

(கந்தருவன்.) யான் வீபீஷணனுக்கனுசரன்.

(அரக்கி வசனம்.) நல்லதிருக்கட்டும், யானோ மஹா ராஜாத்தியாகிய மந்தோதரியின்பால் ஏவல்கேட்கச் செல்கின்றேன்.

[எனச்] சென்றனள்.

(கந்தருவன் ) யானோ.

தசமுகன் கபடமெல்லாஞ் சனகன்பால் முன்புணர்த்தி
விசையுடன் விண்ணடைய்தி விளங்கிடு குலிசக்கையான்
சசிமண வாளர்க்குப் பின்சாற்றுவேன் ஜானகிப்பெண்
நசைமணம் விரோதமின்றி நலம்பெற விசைப்பேன்நானே.

(எனச்சென்றனன்.)

(அப்பால், ஜனகராஜனும், சதானந்தரும் பிரவேசிக்கின்றனர்.

(ஜனகர்) விருத்தம்.

நிசிசரர்பதி வந்தென்பாற் கேட்குமுன் னிருபனு ன
தசரதன் புதல்வனுக்குச் சனகியை மணஞ்செய்தீ ய
நிசமென தாஷசயிதை நிறைவேற்றி வைப்பார்சொல் லோ
குசிக நந்தனராலுந் தான்கூடாத கொள்கைதா னே.

இராகம் ஆரபி. ஆதிதாளம்.

## பல்லவி.

என்னவாகுமோ அறியேன் சதானந்தரே.

## அனுபல்லவி.

தன்னமையாம் சதானந்தமுனியே இங்கு
கன்னிமாமணத்தினிற் றெய்வம்நமதுபங்கி ல். [என்]

## சரணங்கள்.

அந்தஅரக்கனென்ன செய்வானோமாய ம்
அவன்வந்துகேட்கி லதைவிடவுண்டோ அபாயம்
இந்தஜனகிதன்னை அதற்குமுன்னேநேய ம்
இராமன்றனக்குமணஞ் செய்யவென்னபிப்பிராய ம். [என்]

எனதபிப்பிராயம்போற் பினைகொண்டமாமு னி
எந்தைகோசிகர் இராமனையழைத்துந னி
இனிநாய்வருவேனென்று சென்றூர்காண்கிலன்ற னி
இராக்கதமோசமின்றிச் செய்வாரோயோநாவி னி. [என்]

கன்னியெழிற்ஜனகி தானேராகவன்மே லே
காதல்மிகமிகக்கொண் டிருக்கையினு லே
நன்னயமாமணமென் நளினக்கண்ணு லே
நான்காணக்கிடைக்குமோ யாதோயினிமே லே. [என்]

(சதானந்தர் வசனம்.) ஓ, மஹாராஜனே இதுவென்கொல், விசாரப்படவேண்டுவதில்லை, குசிககுலபயோநிதி பாரிஜாதராயிருக்கின்ற அந்த விசுவாமித்திர மஹாமுனிவரின் மகிமையென்ன, தெரியாததா, ஹ, ஹ, வீண்கவலை வேண்டுவதில்லை.

இராகம் கல்யாணி. ஆதிதாளம்.

## பல்லவி.

சிந்தைக்கவலைவிடுவீர் மனச்சந்தேகங்கள்போக்கிடுவீர்

## அநுபல்லவி.

விந்தைநரிக்கஃபயந்தே விலகிப்போமோ
அந்தராவணனிங்கு வந்தாலதனுலாமோ. [சிந்]

## சரணங்கள்.

வாகாயுமதுகன்னி யோகமென்சொலவோவ ன்
பாகக்கோசிகர்பிணை யாகயேற்றுக்கொண்டதா ல்
மோகமையலொழித் தேகத்தைப்பணிசெய் ய
னேகயோகிமகிழ்வி தேகமன்னுவும து. [சிந்]

சொற்களுஞ்செய்யவுஞ் சுரர்வர்க்கம்வர்க்கமாய்வந் தெ
திர்க்கமுடியாமலே வெட்கமுற்றும்உடல் ன
டுக்கமுற்றுந்துதித்து நிற்கவருள்செய்தவ ர்
மிக்கவன்பாய்ப்பிணை யிருக்கையிலேஉமக்கே ன். [சிந்]

வண்டேயெனுங்குழற் பூச்செண்டேயெனுந்தனங்க ற்
கண்டேயெனுஞ்சொல்சீதை பண்டேசெய்நற்றவந் தி
ரண்டேயிங்ஙனேவருக் கொண்டேவந்ததெனப்பி ர
சண்டவிஜயகோ தண்டராமன்வருவா ன். [சிந்]

## விருத்தம்.

சித்தமே காக்ரமாகச் செய்தவாக் கினியிற்று னே
க்ஷத்திரிய த்வமென்னுந் தங்கநற் கட்டிதன் னை
வைத் துருக்கிப் பிராமணத்துவ அணியதா க
நித்தியந் திகழானின்ற நிர்மல விசுவாமித்திர ர்.

(வசனம்.) ஆகையால் கவலையடையவேண்டுவதில்லை, ஜானகிக்கும் இராமனுக்கும் கரக்கிரஹண மங்களம் நிறைவேறிடினும் திரிபுவன ஜயவீர னை, இராவணன் வந்தென்செய்வானே என்ற கவலையும்வேண்டுவதில்லை.
(ஏனெனில்.)

## விருத்தம்.

இயல்பினிற்சிரம் பகமுதலத்திர சத்திரவேற்ற மந்திரங்க ள்
உயர்முனிகௌசிகர் கற்பிக்கக் கற்றுணர்ந்தோங்கு முதாரகம்பீரச்
சுயபலத்தினும் பதின்மடங்காகித் துலங்கிடு ராமனைக்கொண் டு
புயமலையரக்கர்பதியினைச்செயிக்கப் பொருந்திடுமைய்யமேனையா.

(அப்பால், கௌசிகவேஷங்கொண்ட வித்திச்சிருவனோடும், இலக்கும

ணவடிவங்கொண்ட சாரணனோடும், இராமவேடங்கொண்ட இராவணன் பிரவேசிக்கின்றனன்.)

(இராவணன்) விருத்தம்.

வன்சுபாகுவினொடு வலியமாரீசனை மாயைசேர் தாடகையிவ ளை
என்சொலிவிடுத்தனம் அன்னவரதனையியற்றுவனொன்றிருந்தாலு ம்
இன்சொலச்சனகியின்கரம்பிடித்திடவேயியல்நரவடிவத்தைப்புனைந்து ம்
என்செய்வேம்மனதுதான்கொஞ்சமுஞ்சலியா திருத்தலைவகித்திலவென்னே

(வித்திச்சிருவன் வசனம்.) ஓ, ராஜாதிராஜா மஹாராஜா இதுவென்கொல், நிர்னிமித்தமாய் இவ்வளவு கோழைத்தனம் வகிக்கலாகுமா.

விருத்தம்.

நலந்திகழ்களினச்சோலைகொண்ணயனநாட்டமும்நாணிவிற்சரங்கொள்
பலங்கொளுங்கரமும்நீலவம்புதம்போற்படிவமுந்திகழுவனைப்பார்த்து க்
கலந்தொளிர்கருடமணிமுத்தாரம்போற்கதிர்பசும்புல்லருகமைந் த
மலர்ந்திடுமிலுப்பைமாலைசூட்டிடுவள்மங்கைராகவனெனமகிழ்ந் தே.

(இராவணன்.) அதிற்கூட அவ்வளவாத்திரமில்லை.
(பின்னையோவெனில்,)

விருத்தம்.

முன்னர்பொற் குறியிட்டநற் கரங்களும் முகில்போன் ற
பின்னிவிட்ட தோர்பின்னலுங் கண்டனன் பேரா சை
துன்னுகின்றது மென்னெனி லங்கவள் சுபமேவு ம்
நன்னயந் திகழவயவ முழுவதும் நாடுற வே.

(சாரணன்.) இராஜாதிராஜா, மஹாராஜா ஒரே ஒரு விண்ணப்பம்.

விருத்தம்.

இரதியைப் பழிக்குமந்த வெழிலுடை நங்கைநின்பா ல்
வரித்துநன் மாலைசூட்ட வந்தபோ திருகண்ணா லே
சிரமுத லங்கமெல்லாந் தெரிசித்து மணந்துபின்ன ர்
இருபது கண்களாலு மிலங்கைபோய்க் காண்டல்வேண்டு ம்.

(இராவணன்.) முகத்தைச்சுளுக்கி, மிதிலேசன திருப்பிடத்தையடுத்தனம்.

(இராவணன்) விருத்தம்.

சங்கரர் சடையிலங்குஞ் சந்திர ரேகைபோ ல
தங்கநற் கேதகைப் பூந்தனிநிறந் தழைக்குமே னி

மங்கைதேன் மொழியாளந்த வனமுலைச் சனகன்பா வை
எங்ஙனங் காண்கின்றாள் சொலங்ஙன மெய்திட்டோமா ல்.

(வாசற்காப்போன்.) பிரவேசித்து, ஜயஜய மஹாராஜா, விஜயீபவ.

(ஜனகர் வசனம்.) ரே, ரே, உஜார ஸேவகா, தெரிவிக்கவேண்டிய தைத் தெரிவித்துக்கொள்வாயாக.

(வாசற்காப்போன்) விருத்தம்.

மகிபனே போற்றிபோற்றி வள்ளல்விதேகா போற் றி
பகலவன் குலத்தில்வந்த பாலகர் யிருவரோடு ம்
இகபர முணர்ந்து மாயையென்பதைத் துலைத்தமுத்த ர்
மகமுனி விசுவாமித்திரர் வாயில்வந் தணுகினரா ல்.

(ஜனகர், அத்தியானந்தபரிதனுகி வசனம்.) பகவன், சதானந்தரோ திரிசங்குச்சுவர்க்க சிருஷ்டிகர்த்தரான நூதன பரமேஷ்டியாகிய விசுவாமித்திரமுனிவர் இரகுபாலர்களோடு விஜயமாவதால் தாமே அதிசீக்கிரத்தில்யெழுந்தருளியாகி அர்க்கமுதலிய உபசாரங்கள்செய்து அழைத்துவரவேண்டும் சதானந்தரே.

(சதானந்தர்.) நல்லதப்படியே செய்கின்றேன்.

(எனச்சென்றனர்.)

(சனகர்.) இதுவென்கொல்.

வெண்பா.

இல்லிடத் திராகவரோ டெய்தியுமிக் கோசிகரு ர்
சல்லிய வென்சிந்தை சலிக்கின்ற—தெல்லையற் று
மீதுச பரங்களெனும் மீன்பற்றவே நளின ப்
போதாடு கின்றவிதம் போ ல்.

இதற்கென்செய்வாம்.

[அப்பால்] சதானந்தமுனிவரும், இராம லக்ஷ்மண கௌசிக வேடதாரிகளான இராவணன் முதலானபேர்களும், பிரவேசிக்கின்றனர்.

[சதானந்தர்.] ஜனகரிடத்திலே, விசுவாமித்திராதியரொன்று, வித்திச்சிகுவாதியரைக் காண்பித்தனர்.

[ஜனகர்.] ஆஸனத்தினின்றெழுந்துகொண்டு.

விருத்தம்.

அத்து விதத்தையன்றி யனித்தியமான வெல்லா ம்
மித்தை யென் றுணர்ந்து நான்குவேதத்தின் முடிவைச்சார்ந் த

தத்துவா தீதாபோற்றி சந்ததமகிமை தங்கும்
முத்தனே போற்றி விசுவாமித்திர முனியேபோற்றி.
[வீரத்துவஜனுகிய, விதேகன் நமஸ்கரிக்கின்றனன்.]

[வித்திச்சிகுவன்.] அனககுல, ஜனகராஜா, நினக்கனேகமங்களமுண்டாகுக.

[சாரணன்.] இரகசியத்தில், இராவணனைப்பார்த்து.

விருத்தம்.

புவனங்க ளெல்லாமிக்கப் புகழ்மக ராஜன்நீயே
தவமக டனைமணந்து ஜனகன்றன் மருகனுல்
அவன்மிகத் தன்யனன்றே அனேக மங்களமுண்டாமே
இவனது வாழ்த்தலாலோ எய்துவ திலங்கைவேந்தே.

(இராவணன்) களிப்புடன் ஆம், ஆம்.

(வித்திசிகுவன்) புருவத்தைநெரித்து, நயனபாஷையில், இராவணனை ஜனகராஜனுக்கு வந்தனஞ்செய்யும்படி யேவுகின்னறன்.

(இராவணன்) சாரணனிடம் இரகசியத்தில்..

விருத்தம்.

எண்டிசைக்கதிபர் தாமுமென்பதம் பணியவேண்டி
கண்டுகொர்த்திருப்பர் நாளுங்காதல் மந்தோதரிப்பேர்
பெண்டிஞேடேல்வந்தாற் பேச்சினிற்கழிப்ப தல்லால்
தெண்டனிட்டறியேனின்ன மிவனுக்கோ சென்னிதாழ்ப்பேன்.

என்மனம் இலச்சையை அடைகின்றது, என்செய்குவேன்.

(சாரணன் தன்னுள்.) துர்அகங்காரத் துர்ப்புத்தி குடிகொண்ட இவனுக்கு, ஜானகிலாபமுஞ் சந்தேகந்தான்.

(இரகசியத்தில்) வெளிப்படை [வசனம்.] இராஜாதி ராஜமஹாராஜனே, எதிப்படி உத்திரவாகின்றது, காலத்திற்குத்தக்கபடி கோலமென்றுதையிலுங் கேட்டிருப்பதில்லையோ (எடுத்தவேடத்திற்குத்தக்கபடி நடக்கவேண்டும் மஹாராஜனே.)

☞ (இராவணன்) விருத்தம்.

தசரதர்புதல்வனுனே தாள்பணிகின்றேனையா.

☞ (சாரணன்) விருத்தம்.

தசரதர்புதல்வனுனே தாள்பணிகின்றேனையா.

☞ (ஜனகர்) ஷை விருத்தம்.

குசலமுற்றிருப்பீரின்பங் கொண்டெற்கீர்த்தி கொள்வீ ர்
திசையெலாங் கட்டியாள்வீர் செல்வர்காள் வாழிவா ழி.

[சதானந்தர்] பகவன் காதிமைந்தரே.

விருத்தம்.

ஈடிலாரெழிலின்மிக்கா ரிங்கிதப்பார்வையுஞ் சொ ற்
சாடைநன்னடை வளர்த்திச்சதைப்பற்றுஞ் சமமதாக ச்
சோடியாயிருத்தலாலே சொல்லிலக் குவனோர்கொல் லோ
நாடெலாம் புகழ்பெற்றோங்கும் ராமநாமன்றானோர்கொ ல்.

[வித்திசிகுவன் தன்னுள்,] இங்கொருவருமில்லை.

இராகம் கரகரப்பிரியை, ஆதிதாளம்.

பல்லவி.

இவனே இராமன், ரவிகுலசோமன்.
என்சதானந்தரே எழிற்காமன் [இவனே]

அநுபல்லவி.

அவனிபுகழ் நவமேகசாமளன்
ஆருயிரனுஜன்மீ தனுக்ரகமுள்ளான் [இவனே]

சரணம்.

உருக்கியதங்கம் ஒத்ததோர்தே க
ஒளியோடண்ணன்பணி யொழியாஉளத்தன க
இருக்கின்றானே இவனேஇலக்ஷ்மண ன்
எற்றகுணவிசேடம் வாய்த்தவிலக்ஷண ன். [இவனே]

[இராவணன்] சாரணனுக்கு தனித்துச்சொல்.

இராகம் இந்துஸதான் தண்டகம் ஜாவளி
ஸாமிக்கு ஸாரியேவாரீ என்றமெட்டு.

பல்லவி.

இன்னஞ்சானகி வரக்காணேனே

அநுபல்லவி.

அன்னவடனைக்காண ஆத்திரமாகுதே [இன்னம்]

## சரணங்கள்.

சகசண்டித்தனமெல்லாஞ் சாற்றுகின்றான்ஜனக ன்
மகடனையழைப்பியா வகையே தோ [இன்னம்]

எப்போதுகாண்பே னென்றென்மனந்துடிக்கி தே
மைப்படுவிழியினுள் வாரா ளோ. [இனனம்]

[சாரணன் தன்னுள்] அகோவகோ இம்மூடசிகாமணிக்கென்ன அவஸரம், அடட இப்போதுதானே ஜனகதரிசனமே.

இராகம் காம்போதி. ஸாலம்யாலரூன என்றமெட்டு

## பல்லவி

இத்தனை ஆத்திரம் சுத்தமோசமாமே.

## அநுபல்லவி

அத்தையலிவனுக்கமை வதைய்யமாமே [இத்தனை]

## சரணங்கள்.

க்ஷேமங்கேட்குமுன்னஞ் சேதிசொல்லுமுன்னம்
பூமிவந்திங்குநாம் பொருந்தமிதிக்குமுன்னம் [இத்தனை]

கருதிச்சனகனைக் கண்டதற்குள்ளாகப்
பரபரப்பேனங்கோ பாவமென்னமோகம் [இத்தனை]

மூர்க்கநாயகனிம் மூடசிகாமணிக்
கேற்குமோயேதேது யேந்திழையம்மணி. [இத்தனை]

(வெளிப்படை) இரகசியத்தில்.

அடுக்குமொழி.

வெற்றிலங்கேசா, கொற்றவமணியே
உற்றதுபொருந்தும், சற்றுபொருத்தருள்.

[சதானந்தர்] பகவன் கௌசிகரே.
[இராவணன்] சாரணனிடம் இரகசியத்தில்.

(கோபத்துடன்) விருத்தம்.

அம்முனிமாமாரீசனு விறந்தொழிந்த பின்னு ம்
இம்முனியியம்பானின்ற இந்தக்கௌசிக சப்தத்தா ல்

நம்மவ னவனுப்நாளும் கவின்றிடப் பெறுவனென் றே
எம்மனத் தெண்ணுகின்றே னினிஇதற்கென் செய்வோ மே.

[சாரணன் இரகசியத்தில்] மகராஜ் அது இந்தச்சானகியின் பாணிக் கிரகணோற்சவ பரியந்தந்தானே.

[சதானந்தர்]

விருத்தம்.

தரணிதனில் வயதறுபதாயிரங்கடாவிநடந்தன பிள்ளைத்தவஞ்செய்தந்த திருபதசரதன் வருந்திப்பின்புதாய நேயவிபண்டகசுதரால் நியமித்திட்ட ஒருமகத்தில்வி திரூணையாலுலகமூன்று மொளிர்கின்ற குணத்தினராயொப் பில்லாராய், அருமையதாயீரிரண்டு புதல்வர்கள்வந்தவதரித்தவித மெனக்கா னந்தமைய்யா.

[வித்துச்சிகுவன் தன்னுள்] வசனம். ஓ, இவன் அகலிகை மகனன் றோ, ஆனந்தாம்புதியில் ஆழ்கின்றனன்.

அடடா, அதிகக்களிப்பு, விதனக்குறிப்பு யென்னும் பழமொழியறியான் போலும்.

வெண்பா.

எவ்வளவிற சந்தோட மெய்தினன்சொல் ஜன்மத்தில்
அவ்வளவில் மாரீசனு லிறந்தான்—வெவ்வழிமே ற்
றுவிவரு ராமனெனச் சாற்றுமுறை கேட்குமு ன
மேவிடுவ னவ்வி தன மே.

[வெளிப்படை.] ஆனந்தம் உமக்குமட்டுமென்று, சதானந்தரோ அகில உலகத்திற்குமே ஆனந்தந்தான்.

[இராவணன்.] இரகசியத்தில், சாரணா.

விருத்தம்.

சனகிபரிணய மெனுஞ்சொல் வானமுதத்தை யென்செவியூற்றுரு ய்
அனுசரர்களுடன் முனிவன்கௌசிகன் அங்ஙனம் போந்திடுகின் ற
இனியவரவினைத் தடுத்தல்தாடகைக் கெளியதாகுங் கொலில்லைகொ ல்
எனவென்றன் மனங்கவலைகொண் டுறுகின்றதென் செய்வன்சாரணா.

(சற்றுலோசித்து.)

ஆசிரியவிருத்தம்.

உயர்மாமரத்தளிர்நுனியினீர்த்திவலைபோ ல்
ஒருகணமும் உறுதியற் ற
உயிர்வாழ்வு கொண்டனருனதுண வினுக்கா ன
உபகரண மொக்கின்றவ

துயர்மாந்தர் தம்மோடு பொரவெண்ண லுசித	மோ
தோள்வலியு யுத்தமதமு	ஞ்
சொல்லுனக் குபாதாயினீடித்த வாயுட்	ச்
சொலிக்கின்ற சுரர்களோ	டு
பயமானசமர் விளைப்பாயென்று சுரமு	னி
பரிந்துரைத்தாலு முன்ன	ம்
பாரிலத்தயரதனைவதை செய்திருப்பனே	ல்
படுபய விராமனிவ	னே
நயமாயுதித்திடுவ தெங்ஙனஞ் சனகியா	ம்
நங்கைதன் மனத்தாசையு	ம்
நாடிடுவ தெங்ஙனங் காரியாம்சங்களி	ல்
நான்மூடனுன் மூட	னே.

(சாரணன் இரகசியத்தில்) வசனம். மகராஜ் நாரதவாக்கினால், இராக்ஷதப்பிரபுவாகிய தம்மால் எதிர்த்து உயிர்தருஞ்செய்யத்தகாத மனிதனென்று அத்தயரதன் விடுபட்டானென்பது சரியே,

(கேட்கக்கடவீர்.)

துதிதவத்தா லீசனருளத்திர சத்திரப்பயிற்சைத் துணிவுமுள்ளா	ன்
அதிபலபராக்கிரமன் மந்திரதந்திர மிகுந்தோனடமே கொண்டோ	ன்
முதிர்பகையால் க்ஷத்திரியர்குல மறுப்பதாய்ச்சபதம் மூண்டுவந்தோ	ன்
சதிர்பரசுராம னவனுந்தானந்தத் தயரதனைக்கொல்லாமற் றவிர்த்திட்டானே.

(இராவணன் இரகசியத்தில்) ஆனந்தோற்சாகத்துடன்.

கலிவிருத்தம்.

நன்குணர்த்தினை ஞாபகம் சார	ஞை
தன்குமா ரரோடச சுதன்ற	னை
என்கருத்திற் கிசைந்த சினேகித	ன்
வன்கொடாறிக்கை ராமனால் மாய்ப்ப	னே.

(சாரணன் இரகசியத்தில்) மகராஜ் நமது தாடகா மாரீசருக்குத் தப்பினலன்றோ, இந்தயோஜனை யோசிக்கல்வேண்டும்.

(ஜனகர்.) பகவன் கௌசிகரே.

விருத்தம்.

தசரதனார்தனயருதித்திட்ட தன்மைதனைக்கேட்டுச் செவிக்கமுதந்தழைத்துநின்றேன், குசிகமுனிநந்தனருங்கருணை யாலேகுறித்தவரைக்கண்டுகண்

னந்தங்கொண்டேம், பசியசைவலமுடியாள் சனகிதன்னைப்பரிணயமு மவணினைப்பின்படிசெய்வித்தால், நிசமெமக்குமட்டுமென்று நித்தியானந்தம் நிமிகுலமெல்லாம்விளங்கும் நிமலமூர்த்தி.

(ஆகையால்) வசனம். விசுவாமித்திரரே இப்பொழுதே அதிசீக்கிற த்தில் யாகதீக்ஷையில் பிரவேசியுங்கள். நாங்களும் கன்னியின் கல்யாணக்கா ரியத்தில் எத்தனஞ்செய்கின்றனம்.

(சாரணன் வசனம்.) இரகசியத்தில், மகராஜ், திரிலோகாதிபதியான இவ்விலங்கேசுவரன் வந்து பரிணயஞ்செய்வதில் அதனினும் நித்தியோற்ச வமாகாதா.

(இராவணன்.) அதிலென்ன சந்தேகம், நித்தியோற்சவமென்பதற் கையமா.

(வித்திச்சிருவன் தன்னுள்.) இதுவென்கொல், வீண்சங்கடம்.
நல்லதிருக்கட்டும், அதிலென்னபாதகம்.

சலிவிருத்தம்.

கோசிக னரக்கராற் கொல்லப்பட்டா னெனிற்
மோசமாகாது நாமுயன்ற காரியம்
நாசமாகாதிவண் நாடிடில் நாப்பணே
வேசங் கொணுமறைந் தோடிட வேண்டுமால்.

(இராவணன்.) அவ்விதமேயாம், எனதெண்ணமும்.
(சதானந்தர்.) ஜனகமகாராஜனே.

விருத்தம்.

வேந்தருக் கரசேஞான விதேகரோ யுமதுகன்னி
மாந்தளிர்க் கரத்தாளான மங்கையூர் மிளையையன்பாய்
வாய்ந்தெழில் விலாஸனான வள்ளலிவ் விளையானுக்குப்
பாந்தமாய்க் கொடுக்கல்வேண்டும் பரிணயமிக நன்றாமால்.

(வித்திச்சிருவன்.) இரகசியத்தில், அட சாரணா.

விருத்தம்.

அடட சாரணநாம் நம்மளதிபனுக் குதவியாகத்
திடமுடன் வந்தோம் அஃதிற்சீர்த்தியுன் வரவுநன்றே
இடைவழி தனிற்புதைய லெதிரினிற் கிடைத்தல்போல
மடமயி லனையாணிற்கு வலுவிலே வாய்த்ததப்பா.

(ஆனால், என்வரவுதான் பிரயோஜனமில்லாமற் போச்சுது.
(சாரணன்.) இரகசியத்தில், ஆ, அங்ஙனமன்று.

(வசனம்.) எதுகாண், வித்திச்சிருவ, உமது வரவுதான் முதன்முதலிற் கைகண்டபலன், என்னெனில், நீர்இப்பொழுது யாகதீக்ஷை செய்வதில் அந்தக் கோசிகனுடைய மக்கள், சீடர்கள், பசுக்கள் முதலியன சகிதமாய் அவனது பாரியே உமக்குப்பாரியாகவிருந்து புற்பிடிக்கப்போகின்றனள் அல்லவோ, ஆகையாற்றான் உம்முடைய வரவே முதன்முதலில் நல்வரவென்றுரைக்கல்வேண்டும்.

(வித்திச்சிருவன்.) இரகசியத்தில், சாரணு.

## விருத்தம்.

ஆமடா மெய்தானப்பா ஆகிலுமெனக்கு வாய்த் த
மாமுனி நாரிமிக்க வன்கிழ டவடனங்க ள்
கூமடி புறனும்பைபோற் கூனலுங் கொண்டாளப் பா
நாமினிச் சொல்வதென்னே சாரணு நகைக்கின்று யோ.

(ஜனகர்.) வசனம். பகவன், சதானந்தரோ அதுமட்டு மன்று.

பின்னேயோவெனில், எனதனுஜன், குசத்துவஜன் மிதிலையினின்றும் தன்னுடைய கன்னிகைகள் மாண்டவி சுருதி கீர்த்திகளை பரத சத்துருக்னர்களுக்கும் கல்யாணஞ்செய்து கொடுக்கவேண்டியதென்று பெண்களை அனுப்பியிருக்கிறான்.

(இராவணன்.) சாரணனிடம், இரகசியத்தில்.

## விருத்தம்.

என்மூடத் தனத்துனலே யின்னமு மிருவர்தம்மை த்
தன்மாயஞ் சூட்டியந்தப் பரத சத்துருக்னராக ப்
பின்கூட்டிவந்தேனல்லேன்பிழைசெய்தேனினியென்செய்வேன்
துன்மார்க்கமுனிவனின்றேன் சொல்லெல்லாந்தொலைதானே.

(சாரணன் இரகசியத்தில்,) வசனம். வித்திச்சிருவன் விசுவாமித்திர வேடத்தோடு வந்தும் காரியத்தைக் கெடுத்துவிட்டனன், என்னசொல்லப் போகின்றேன்.

(சதானந்தர்.) பகவன், கௌசிகரோ, என்ன தசரதர் பரத சத்துருக்னர் இவர்களை அழைத்துவரவில்லையோ.

(சாரணன்.) இராவணனிடம், இரகசியத்தில்.

## விருத்தம்.

பெண்டுபிள்ளைக ளோடுற்ற தயரதன்றனைப் பின்கூட்டி க்
கொண்டுமோ முனியிங்கெய்தக் குறித்துச்சென்று னென்றேநான்
கண்டுவந் துரைத்தேன் முன்னம்கௌசிக னுருவந்தா னே
அண்டுமோ வித்திச்சிருவ னறிவிலனதை விட்டா னே.

(இராவணன் இரகசியத்தில்,) வசனம். இருக்கட்டும் இப்பொழுது ஜானகியைக்காண்டல் விஷயத்தைப்பற்றி யோசிக்கல்வேண்டியது.

(வித்திச்சிகுவன்.) பரிவார ஸகிதரான தசரதர் மார்க்கத்திலுண்டாய சிரமத்தினால், இடைவழியிற்றாமதிக்கின்றனர்.

(ஜனகர்) விருத்தம்.

ஆரடா சேர்வைக்காரா,

[வாயிற்காப்போன்] வசனம்:

மகராஜ், ஆக்ஞாபனம் உத்திரவாகட்டும்.

(ஜனகர்) ஷை விருத்தம்.

அதிவிரை வாகச்சென்று
சீர்பெறு கன்னிமாரைச் சீக்கிரமழைத்து வாரா ய்
கூர்தவத்தினி லுயர்ந்த கோசிக முனிவர்தம்இ ப்
பார்புகழ் நளினமொத்த பாதவந்தனத்திற் கின் றே.

(வாயிற்காப்போன்) அப்படியே ஆகட்டுமென்று சென்றனன்.

(இராவணன்.) சாரணனிடம் இரகசியத்தில், அடா சாரணு, என்விஷயத்தில் தெய்வானுகூலமுமிருக்கின்றது.

விருத்தம்.

பூமகளிப்போது வந்தாற் புயல்வண்ண ராமனுட ல்
ஆமெனு மென்னங்கங் கண்டாவ லலங்கரிக்கு ம்
தாமரை நற்பூவழகைத் தான்கவர்ந் திலங்குமி ரு
காமசிநேக ரஸங்காட்டுங் கடைக் கண்ணு லே.

(——) திரை.

விருத்தம்.

சதிர்ஜனகஉனதுமகடனைவிவாகந்தான்புரியமாயையினலரக்கர்வேந்தன், துதிஇரகுராமனுருப்புனைந்துகாதிசுதனுருவோடிலங்குவித்திச்சிகுவனேடும், மதமிகுத்தசாரணிலக்குவன்றன்வேடம்வகித்திடவன்னவனேடும் வந்திட்டானென், றிதுவிபரஞ்சடுதியினில்வாயிற்காப்போர்யாரேனுமிறைவன்பாலியம்பல்வேண்டும்.

எல்லவரும் கேட்கின்றனர்.

(இராவணன்.) வித்திச்சிகுவனிடம்) இரகசியத்தில், உத்வேகத்துடன்

விருத்தம்.

பேசுநாமின்றி இத்தைப் பிறருணர் வகையுமில் லை
வேசநம் கூடந்தன்னை வெளியிட்டதார் கொலந் தோ

(வித்திச்சிகுவன்.) இராஜியத்தில், பயநடுக்கத்துடன், மகராஜ், என்னென்றுசொல்வேன் ஆச்சிரியமாச்சிரியம்.

ஷை விருத்தம்.

ஆசைப் பெண்டாட்டி மாயாவதியன்றி யறியார்மற்றோர்

(சாரணன்.) தன்னுள், ஓ, ஓ, நம்பிரவிர்த்திகளே

ஷை விருத்தம்.

மோசஞ்செய் திட்டானெந்த மூண்டையின் மகனேமுற்றும்.

(வெளிப்படை.) பகவன், சதானந்தரோ இவ்விதஞ் சப்தங்கொடுத்தது யாரொன விசாரிக்கல்வேண்டும்.

(சதானந்தர்.) தன்னுள், ஓ, இவர்களே, இராம லக்ஷ்மண கௌசிக வேடதாரிகளாய்வந்த இராவண சாரண வித்திச்சிகுவர்களோ.

(வெளிப்படை.) இலக்ஷ்மணா, அஃதென்னென்று விசாரிப்போம்.

(ஜனகர் கவலையுடன் தன்னுள்.) அடட, இதுவென்கொல் விபரீதமாயிருக்கின்றது.

கலிவிருத்தம்.

எம்மனோ ரதம் யாவு மிசைத்திட
இம்மை தீர்முனி யெய்தின னென்றுமே
செம்மை யாய்மனந் தேர்ந்து களித்துடல்
விம்ம லுற்றனன் வேறாய் முடிந்ததே.

(வெளிப்படை.) அடா, அங்ஙனம் ஆரடா.

(வாயிற்காப்போன் ஓடிவந்து,)

அடுக்குமொழி.

ஒன்னார்பணிஸம், பன்னுவிளையும்,
பொன்னாய்மிதிலை, மன்னுபோற்றி.

ஆக்ஞாபனம், உத்திரவாகட்டும்.

(ஜனகர்.) அடா, சேவகா அங்ஙனமறைந்ததாரொன விசாரித்தல்வேண்டும்.

(வாயிற்காப்போன்.) மகராஜ், அதிலென்ன விசாரணை யிருக்கின்றது

விருத்தம்.

அண்ணலே திவ்யமேனி ஆனஓர் புருடன்வந்திவ்
வண்ணம் இங்கறைந்துவிட்டு வான்றனிற் கிளம்பிச்சென்றான்
மண்ணில் வேறிராமலக்கு மணர்களா மிருவரோடும்
கண்ணிய முடனேமற்றோர் கௌசிகர் வருகின்றாரே.

[ஜனகர்.] ஓ, இதுவென்கொல், சதானந்தரோ, இதுவென்னபுதுமை

(சதானந்தர். ஜனகரிடம் இரகசியத்தில், இங்ஙனஞ்செப்பிய திந்திரஜாதனுயிருத்தல்வேண்டும்.

விருத்தம்.

எய்தினர் தாங்கொலோ இங்கினிவரு கின்றார்தா னோ
பொய்திக ழரக்கரொன்னப் பொருத்தமா யறியல்வேண்டு ம்

(வெளிப்படை) வித்திச்சிகுவனிடம்.

ஷை விருத்தம்.

மெய்திகழ் தவம்நிறைந்த விசுவாமித்திரரோ இந்த ச்
செய்திகள் புதுமைத்தாகும் யாதிவை யென்செய்வோ மே.

(வித்திச்சிகுவன்.) தன்னுள்.

விருத்தம்.

காசினிதனிற் போலீசுக்காரன் சோரரைப் போலந்த க்
கோசிகனெமைத் தடுத்துக் கொண்டன னினியென்செய்வே ம்

[வெளிப்படை.]

ஷை விருத்தம்.

வேசமெம்மைப் போற்கொண்டு மேவுராக்கதர் வரட்டு ம்
மாசதானந்த நாங்கள் மற்றோர்பாற் செல்கின்றேமா ல்.

(இராவணன்.) சாரணனிடம், இரகசியத்தில்.

சாரணா, ஆனால் இந்த க்ஷத்திரியப்பயலால் தாடகாதியர் இறந்தேபோயிருப்பார்களோ.

(சாரணன்.) இராவணனிடம், இரகசியத்தில்,

அதேது, ஈதொருக்காலும் நடக்குமா.

விருத்தம்.

அலங்கனன் மார்பாவெங்க ளாண்டவ அதிபரே ரே
கலங்கிடா வல்லதாட காதியர்தமையுங் கொல்ல ப்
பலங்கொண்டா னெனிலோ அந்தப்பாலகன் றன்னால்கம் ம
ளிலங்கைமே வரக்கரெல்லா மிறந்தன ரெனக்கொள்வா யே.

(இராவணன்.) வித்திச்சிகுவனிடம், இரகசியத்தில் (இனிநாம்செய்வதென்னே?

[வித்திச்சிகுவன்] இராவணனுக்கு, இரகசியத்தில் (வசனம்.) மகராஜ், திரஸ்க்கரிணீ மகிமையால் நம்மை நாம் மறைத்துக்கொண்டு இங்கிருந்தே

நடக்கின்ற நடபிடிக்கைகளைக் கண்டறிந்து, உசிதம்போல் நடக்கவேண்டிய து.

[இராவணன் வசனம்.] ஸரி, ஸரி, உரைத்தது வெகு பொருத்தமா யிருக்கின்றது, அப்படிச்செய்கின்றது.

[ஜனகர்] சதானந்தரிடம், இரகசியத்தில், (வசனம்.) சதானந்தரே இவர்கள் நெருங்கி, நெருங்கி இரகசியம் பேசிக்கொள்கின்றார்கள். அதனால், நினைக்கின்றேன், இவர்களே இராக்கதர்கள், இவ்வித வேடத்துடன் வந்திருக்கின்றனரென்றே.

[சதானந்தர். அவ்வண்ணம் யானும் நினைக்கின்றேன், ஆகிலுங்கண் டறிவோம்.

[வித்திச்சிருவன்.] மகாராஜ ஜனகா.

விருத்தம்.

பார்த்திவ விசாரமென்கொல் பகர்தசக் ரீவன்றன்னை ச்
சீர்த்தியா யுசிதம்போலச் செய்யுபசாரஞ் செய் து
கோர்த்தியா யனுப்புவாயுன் னேரிழை யீவதா க
வார்த்தை யொன்றுரையேல் நாங்கள்மற்றோர்பாற் செல்கின்றோமால்

[ஜனகர்.] நல்லதென்றெழுந்திருந்து அஞ்சலிசெய்துகொண்டு (மார்க்கங் காட்டுகின்றனர்.)

இராவணன் முதலானவர்எழுந்திருந்து அடுத்தபக்கத்திற்சென்றனராகி திரஸ்கிரிணியால் மறைந்துகொண்டு ஸமீபத்தில் வந்திருந்துகொண்டார்கள்.

(சதானந்தர்) வசனம். மகாராஜ ஜனகா, வருகின்ற கௌசிகர் முதலானவர்களை அர்க்யமுதலிய உபசாரங்கள்செய்து அழைத்துவருகின்றேன், (எனச்சென்றனர்.

அப்பால், இராம லெக்ஷுமண ஸகிதராய், கௌசிகர் பிரவேசிக்கின்றனர்.

(கௌசிகர் தன்னுள்.)

விருத்தம்.

கனவினிலிந்த ராமனைக்கண்டு காமமுற்றி குழையர்பே ண
இனமுறுதளிரின மளியினிருந்தாங் கிரவொடு பகலையுங்கழிக்கு ம்
வனமுறுஜனகி மீதினில்ராமன் மாறிடாமயல் கொளவகுத்தே ம்
கனிவுள ரொருவர்க்கொருவ ரெவ்வனத்தர் காதல்கூர்சேர்க்கைதான்நன்றே.

இன்னமும் ஆசிரியவிருத்தம்.

உத்தமகுணத்தின ரிராமலக்குமணர்கள் ஓங்குபுய வீரரெனினும்
ஒளிர்சிரம்பகமாதிமந்திரப்படைகள்யாமுதவிடப்பெற்றனரதால்

மெத்தவனுகூலமேஎன்னெனிலிராவணன்மேவுதன்னவனையமரில்
வெவ்வுயிர்பறித்தவிஷயத்திலுங்காதல்சேர்மெல்லியற்சனகமாதை
நத்தியேநன்மணமியற்றுவிஷயத்திலும்நனிமனத்தடங்காச்சினம்
நவில்ராமன்மீதுகொண்டடல்மூளுவானெனில்நலியாது முப்புவனமு
இத்தனையில்வென்றவனெனினும்ராவணனையேஎமபுரிக்கேற்றுவிப்ப [ம்
வெவ்வளவுபலம்வேண்டுமெவ்வளவுமிராமனுக்கெய்தியதுநன்றுநன்றே.

(அன்றியும்) விருத்தம்.

மாயையிலிராக்கமனர்வல்லவொன்றே மாராபிராமலக்குமணர்களோடும்,
சேயமொடுகுமரியின்விவாகந்தன்னைநிர் விக்னமாகநிறைவேற்றவெண்ணி,
காய்கரியும்பாய்பரியுங்கனகத்தேருங்காலாளும்மேலாளுங்கணக்கில்லா து
மேயவனுந்தயாதனைப்பிரிந்துமுன்பே விரைவிலெமதரணியத்தில்மேவிவந்
தேன்.

(வெளிப்படை.) பாலர்காள்.

இராகம் பியாகு ரூபகதாளம்.

பொன்னூர்மேனியனே யென்ற வர்ணமெட்டு.

பூவலங்காரர்களே புகழ் புண்யகுமாரர்க ளே
மேவெழிற்சூரர்களே வினய மேவிடுவீரர்க ளே
உத்தமநற்குணர்காள் எங்கும் ஒப்பில்லாநிபுணர்கா ள்
வெற்றிநற்பூடணர்காள் விளங்கு மெய்ராமலக்ஷ்மணர்கா ள்
வாசகமீதொன்று மற்ற மனிபர்கள்போலன் று
பூசிதமாய்நின்று ஒழுக்கம் பூணுவீர்மிகநன் று
தவமுனியாக்ஞவல்க்கர் தம்மாற்றவிர்ந்துளம்ஸாரஞ்சக ம்
உபநிடம்யாவுமொக்க உணர்ந் தோங்குமகிமையிக்கா ன்
ஜனகமகாராஜன் சோடசகலைநிறைராஜ ன்
முனிவர்க்கெலாம்ராஜன் நிர்ந்தமுத்தன்ஞானராஜ ன்
ஆனபடியாலே நீவிர் அச்சனகன்பா லே
போனவுடன்மென்மேலே வணக்கம்பொருந்துவீரொருக்கா லே.

(இராமலக்ஷ்மணர்.) நல்லதப்படியே செய்கின்றோம்.

(இலக்ஷ்மணர் வசனம்.) பகவன் முனிநாதரோ, இவ்வரசனுடைய யாகபூமியில் உழுகின்ற கலப்பையினுனியினின்றும் சிதையென்றொரு கன்னிகாமணி உண்டாயிருக்கின்றுளென்றோர் ஆச்சரியசமாசாரங்கேட்கப்படுகின்றதன்றோ.

(கௌசிகர்.) ஆம், ஆம்.

(இராமர் தன்னுள்.) அனுஸ்மரணத்துடன்.

## ஆசிரியவிருத்தம்.

மாதனற்குழியில்வீழ்விழவப்படிச்செய்தமாயையென்றேதிண்ணமாய்
வரிசையாயோர்ந்தனனெனினுமாதங்கமும்வளர்கோபமும்எனித ய
மீதுபொழுதும்விட்டகன்றிலவிதேகனேஇன்னல்வதைசெய்ததா க
வெய்திடுசமாசாரமெய்யன்றனிசமாயியற்றிடுஞ்சாலமென் றே
பேதமையிலாதுதெளிவாயுணர்ந்தேனெனினும்பிசகிடாதோர்நொடிக்கு ட்
பேயன்நிசாசரன்கொடியமாபாதகன்பீடுபௌலஸ்தியன்ற ன்
ஓதிடுசிரங்களீரைந்தினையும் எவிஞலோர்பனங்காய்கள்போ ல
உருளும்படிக்கறுத்தெறிவதில்மிகவாசையுண்டாகுதுண்டாகு தே.

## (இன்னமும்) விருத்தம்.

தவதனகௌசிகர்மகமாமெனும்வியாஜஞ்சாற்றியெனைச்சகலபெந்துக்களோடும், அவனிகுமாரியின்மன்றல்முடிப்பவேண்டிஅழைத்துவருகின்றனவொன்றெனதுசொந்த, நவின்மனமெவ்வணம்வர்த்திக்கிறதென்றக்கால்நன்குநினைக்கின்றதாச்சுவாஸம்நல்கும், குவிதயைகொள்கின்றதப்படித்தான்மிக்கக்குளிரானந்தமடைந்துகுலவுதின்றே.

## (வெளிப்படை) விருத்தம்.

புதுமைவேறென்றுகேள்வி என்னெனிற் புராரியா லே
இதம்பெற வளித்ததென்றும் சுராசுரர் யாவராலு ம்
அதுவளைக் கொணுததென்றும் அவ்விதே காதிபன்று ன்
நிதமர்ச்சித் திடுவதென்றும் வில்லொன்றும் நிசந்தான்கொல்லோ.

(கௌசிகர்.) புன்னகையுடன், ஆம், ஆம், இதுவுமிருக்கின்றது, என எல்லவரும் நடக்கின்றார்கள்.

(சதானந்தர்.) பிரவேசித்து, மகராஜ ஜனக.

இவரோ, பகவான், குசிகநந்தனர் இவர்களே, தசரதகுமாரர்கள்.

(ஜனகர்.) தன்னுள்) எமது சதானந்தகுரு, இவர்களது வேடத்திற்கனுகுணமாய் ஸம்பாஷிக்கின்றனர்.

[வெளிப்படை.] நிரம்ப ஸந்தோஷம்.

(என, உசிதம்போலுபசரித் தெல்லவரையும் உசிதாதனங்களில் வீற்றிருக்கச்செய்தனர்.)

(சதானந்தர்.) தன்னுள்) இவர்களோ இராக்கதர்கள், இருக்கட்டும். ஆயினும் யான் இவ்விதம் புகல்கின்றேன்.

(வெளிப்படை.) இராமலக்ஷ்மணர்களோடும் கௌசிகபகவான் இங்ஙனம் வந்தருளியது தெய்வாதீனமேயாம்,

[ஜனகர்.] தன்னுள்) யானும் சதானந்தகுருவின் வார்த்தையைஅனுஸரித்தே பேசுகின்றேன்.

## (வெளிப்படை) விருத்தம்.

விதிவத்தாய் ரிசியசிருங்கர் தயரதர் வீட்டில்வந்தார்
விதிவத்தாய் அவராற்றனே வேள்விவை முடிக்கப்பெற்றார்
விதிவத்தாய் புதல்வர்நால்வர் விளக்கென வவதரித்தார்
விதிவத்தாய் தம்மாலென்பால் மேவின ரிருவர்தாமே.

(இராவணன்.) வித்திச்சிருவனைக்குறித்து,

இதுவென்கொல், அடடா, வித்திச்சிருவா, இச்சனகன் பரமார்த்த புத்தியுடன் பகர்கின்றான் கொல்.

(வித்திச்சிருவன்.) அதேது, மகராஜ நம்மிடங்களிலன்றோ இவனுக்கு வாஸ்தவபுத்தி.

(கௌசிகர்.) ஆம், ஆம், வர்த்தமானத்தைக் கேளுங்கள், குமாரசதானந்தராலும், இஷ்டரான ஜனகராஜனாலும் ஸாவதானமாகவிருந்து கேட்கக்கடவது.

[இருவரும்] நல்லதென்று, செவிகொடுக்கின்றனர்.

(இராவணன்) அடுக்குமொழி.

நாடியிச்கௌசிக, மூடன்றராத்துமா,
கேடென்புகன்றிடப், பீடிகைகள்போடுறான்.

[வித்திச்சிருவன்.] அடட, இதுவென்ன அறியாததா, அடைவே, மார்க்கமத்தியில் வந்து தடுத்துக்கொண்ட நமது பரிஜனங்களை வஞ்சித்துக் கடந்துவந்தோமென்றே புகல்வான்.

(சாரணன்.) அங்ஙனமவர்களை வஞ்சித்திடாமற்போனால் இவர்களிங்கெப்படி வரக்கூடும்.

## ☞ கௌசிகர் விருத்தம்.

மகமெனத்தாரங்களொடு மக்களோடு மகிபதயரதனைவர வழைத்துக்கொண்டு, மிகவிரைவில்வருகையில் மண்மாரிபெய்து மேவிடுதாடகையினாற்றடுக்கப்பெற்றோம்,

(இராவணன்.) களிப்பதிகரித்தவனாய்,

பல், தாடகாய், நல்ல நல்ல சம்பிரதாயமா யுன்னால்வந்து மறிக்கப்பட்டது.

(வித்திச்சிருவன்.) அவர்களெவ்வாறு அவளை வஞ்சித்து கடந்துவந்தார்களென்பதைக் கேட்கவேண்டுவது.

(இராவணன்.) விலக்ஷணக்குறிப்புடன்.

வெண்பா.

இந்தச்சிறுவ ரொடுமிம்முனி யிங்கெய்திய தோர்
விந்தைக்குறி யிதனைமெய் மறந்தேன்—சந்தோடத்
தான்மதுபான த்தில்வருதன் மையைப்போற் சாலவுமே
யான் வசமற்றிட்ட படியால்.

(கௌசிகர்) முன்விருத்தத்தொடர்ச்சி.

ரகுபுதல்வன் றிரிஇவனொன்றிருந்திட்டாலுமே வொன்றுகார்முகத்திலெழு
ம்பிற்றையா,

(இராவணன்.) இந்த க்ஷத்திரியப்பாலனிடத்துப் பெருமையை ஆரோ
பணஞ்செய்தற்குச்சீர்கெட்ட இம்முனி எத்தனை எத்தனஞ்செய்கின்றனன்.

(சாரணன்.) ஆ, சங்கையுடன்) மேல் என்னநடபடிக்கை நடந்திருக்கி
ன்றதென்பதைக் கேட்டறிதல்வேண்டும்.

(கௌசிகர்) முன்விருத்தத்தொடர்ச்சி.

புகுந்தநவன் மார்பிரண்டாய்வகிர்ந்துபூமியில்வீழ்த்தியதாவி பொன்றிட
னே.

(ஜனகர்.) சதானந்தரைக்குறித்து, இரகசியத்தில்.

விருத்தம்.

பரித்திடுமோயை வல்லபாவி வல்லரக்க னின்றோ ன்
தரித்திடு வேடந்தன்னைத் தளர்ச்சியுறாது நன்றாய் த்
திறப்படுத்திடவே திண்ணம் செப்பிடு கதையிதா மே

(சதானந்தர்.)

உரைப்பதென் முழுதுங்கேட்டா லுற்றதுபொருந்து மன் றே.

(ஜனகர்) வெளிப்படை வெண்பா.

இந்தச்சிறு பைய்ய னெவ்வளவு கன்னமதச்
சிந்துரத்தோராயிரங்கள்சேர்பலத்தாள்—அந்தத்
தொனியசனித்தீக்குறல்வாய்ச்சொற்றாடகைப்பேர்
சினவரக்கி யெவ்வளவு சீ.

(இராவணன்.) ஸரி ஸரி, ஜனகனால் நன்றாய் ஆக்ஷேபணை செய்யப்
பட்டது.

(சதானந்தர்) அடுக்குமொழி.

மதிகுலமகராஜா, அதிபதிமிதிலேசா,
விதிபலமுளதாகில், எதுவுமுடிந்திடுமால்.

(வித்திச்சிருவன்.) அதனைச் சம்மானித்துப்பேசுகின்றான் சதானந்தத்திமனத்தன்.

(சாரணன் வசனம்.) ஹா, தாடகாய் ஸ்திரீ என்றறியப்படும் இம்மூடனால் விடுபடாமற்போயினையா.

• (இராவணன்.) ஆ, சங்கையுடன்,

அவளது அனுசரர்கள் எவ்வகைபுரிந்தார்களோ அதுவறிந்திலம்.

(ஜனகர்.) மேல் மேல்.

(கௌசிகர் வசனம்.) அப்பால், கூற்றுநிகர்த்த சுபாகுமுதலிய கொடியராக்கதர்கள் குழந்தை இராகவனை வந்து வளைந்துகொண்டார்கள்.

(இராவணன்.) ஆம், தாடகாவதத்தை எப்படிச்சகிப்பார்கள்.

(சாரணன் வசனம்.) ஓ, ஓ, தானே வீரனென்று மானித்துக்கொண்டிருக்கிற இந்த ராமனால் அவர்களிடத்தும் என்ன என்ன அக்கிரமம் செய்யப்பட்டதோ.

(கௌசிகர்.) மற்றென்ன கேட்கக்கடவீர்.

கட்டளைக்கலித்துறை.

குலையுண்டிடுங் கபந்தங்களோ டேன்வாய்குடித் தெப்ப டி
நிலைகொண் டிடாதுகழுகின மாடினநீள் களத் தே
வலிகொண்ட நீசச்சுபாகுவைச் சேனையை மாய்த்துநெடுஞ்
சிலைகொண்ட ராமசரம் லீலையப்படிச் செய்தது வே.

(சதானந்தர்.) ஜனகரைக்குறித்து, இரகசியத்தில்) இவ்விதமிருக்க இவர்களிடம் என்னென்று நினைக்கின்றீர்.

(ஜனகர்.) சதானந்தரைக்குறித்து இரகசியத்தில்,

மேது கன்னி ஜானகி பல பரீக்ஷையின்பேரில் கொடுக்கவேண்டியவளென்று பிரதிக்ஞை செய்யவேண்டியது.

(சதானந்தர்.) இரகசியத்தில், அஃதெப்படிக்கொத்தது.

(ஜனகர்.) இரகசியத்தில், சிவதனுவை நாணியேற்றிடுவதே தான்.

(சதானந்தர்.) இரகசியத்தில், ஒவ்வாதினைப்போடு நகைத்து.

## விருத்தம்.

அமரகுலமடங்கலும் வந்திறைஞ்சிநிற்ப அசைந்திடுமோமேருவென வங்கங்கொண்டு, குமரிடுவெம்பூதகணம் நெருக்கமாகக் குலவிடவுமிலங்கிடு வக்கைலைதன்னை, தமது கரவிரனுனியாற் கெல்லிவானிற் சதிர்பெறப்பந்தாடு தசக்ரீவனுக்கே, உமையிடப்பாகன் றனுநாணேற்ற லென்னவோர் பெரிதா பணயமீதுதவாதன்றே.

(ஜனகர்.) இரகசியத்தில், பகவன் சதானந்தரோ அதிலிருக்கின்ற கூடார்த்தத்தைச் சொல்லுகின்றேன்.

## விருத்தம்.

சித்தகந் தருவராலுந் தேவதான வர்களாலும்
வித்தியா தரர்களாலும் மேவுவல் லரக்கராலும்
இச்சனுவளை க் கொணுதென்றியம்பி யீய்ந்திட்டார் முன்னம்
உருத்திர பகவானன தாவிகு துசிதந்தானே.

(சதானந்தர்.) இரகசியத்தில், அங்ஙனமாயின் இந்தப் பந்தயம் மிக நன்று.

(வித்திச்சிருவன்.) எல்லவரையும் வதைசெய்ததாய்த் தான் இயம்புகின்றானோ இக்கௌசிகன்.

(சாரணன்.) இம்மூறு வாஸ்தவமே, இல்லாமற்போனால் ஒருவராலுந் தடுக்கப்படாத மஹா மாயாதுரந்தர மாரீசன் முதலானவரைக் கடந்தெங்ஙனம் வரக்கூடும்.

## இலக்ஷ்மணன். விருத்தம்.

முதல்வரின் பகழிபாய்ந்து முனிந்துமா ரீசன்றன்னைக்
கதியுடன் றுறத்திற்றெங்கோ காண்கிலனின்னமுந்தான்
அதமதாய் மடிந்திட்டான்கொல் அல்லதுதப் பிட்டான்கொல்
விதமின்ன தெனவுணர்ந்திலம் யெங்கள் வெற்றிவேந்தே.

(இராவணன்.) கோபத்தோடு பெருமூச்செறிந்துகொண்டு,

## (இராவணன்) ஆசிரியவிருத்தம்.

நஞ்சனமெனிற் கிட்டவந்துலவ வஞ்சிடும்
ஞாயிறுதன்னொளி யுள்வாங்கும்
நற்றீச்சுடா மனப்பீதியா லகிலமும்
நடுநடுங்கிட வானையே

மிஞ்சிடுமிவ் விலங்கேச்சுர னின்னமு ம்
  வியனுலகு காக்கின்றன ன்
மேவுநம்மேவற் றெழிற்றுடைக்கப் பெண்ணெ ெ
  வீரபற்படை கடமையு ம்
வஞ்சமிகுமாயைச் சுபாகுவையும் வதைசெய் து
  வரிசையா யிவ்விராம ன்
வல்லுயிர்படைத் தினமும்வாழ்ந்திடவு மெண்ண மோ
  மாறும விவனையந்த ப்
பஞ்சைமுனி கோசிகனபயமது தந்துகா ப்
  பாற்றிடவு மெண்ணமோதா ன்
பற்கள்குடை கின்றதப்பா கடித்துமிழ்வதி ற்
  பழுதென்கொல் பழுதென்கொ லோ.

(என்று பற்களைக்கடித்து கண்கள்சிவந்து ஆக்கிரமித்தாரவாரித்து எழுந்திடவாரம்பித்தனன்.

(வித்திச்சிகுவன்.) தடுத்துக்கொண்டு, இராஜாதிராஜ மஹாராஜனே சற்றுப்பொருத்தருளல்வேண்டும், மேலும் பார்த்துக்கொள்வோம்.

(ஜனகர்.) தன்னுள்) என்னிதயம் தெளிவெய்துகின்றதுபோலும்.

(வெளிப்படை) ஆனால் மாரீசன் இந்த ரகுகுமாரனால் முடிக்கப்பட்டான் கொல்.

(கௌசிகர்.) ஆம், ஆம்.

(சாரணன்.) தன்னுள்) அந்தோவந்தோ.

## விருத்தம்.

இத்தனைகால மிவன்புயபலங்க ளிசைந்தனத் தனிநிறைவா கி
வெற்றியையடைந்து மேவினஓர்கால் விளம்பிடுதவறு தலா லே
மத்தியிலிவனைற்பின்னமதடைந்துவரிசையிற்குன்றினவிதனா ல்
எத்தன்மையெனில்ராகுவாற்கதிரோனெய்திடுதெசையெனவின்றே.

(இராவணன்.) பற்களோடு பற்களை நொறுங்கக்கடித்து ஹா, ஹா, இந்த க்ஷத்திரியப்பயலை இனியெளிதில் விடப்போகிறதில்லை.

## விருத்தம்.

உருத்திரன்கிரியை யெடுத்தவென்கைகளோ ரிருபதுமினமுள வே
பருத்ததிண்டோடிசை மன்னரைத்துளைத்தபகழிசேர் தூணிபத்துள வே
கருத்தமெய்யம்மயன் கொடுத்ததாங்கூற்றினுங்கடியதோர் சக்தியுமுள வே
உரைத்திடலென்பயந்தரிப்பதேனுயித்தத்திலோங்குவரெவரெங்ஙனுள ரே.

(வித்திச்சிகுவன்) விருத்தம்.

அங்குலித் தட்டினாலே அச்சிறு மனிதன்றானே
இங்குயிர்தரிக்குமோகாண் எலிவேட்டைக்கேன் டம்மாளம்
தங்கனக் கற்கடள்ளச் சதிர்கடப் பாறையேனோ
எங்கணும் புகழ்லங்கேச இத்தனைகோபம் வேண்டாம்.

(சதானந்தர்.) ஜகத்தினில் ராமன், மருத்துவமுடையான்.

(இலக்குமன்.) அசனுற்றான்.

விருத்தம்.

துங்கமா முனிவராமித் தூயகௌசிகராலென்றே
டெங்கணுயக னிராம னேற்றமந் திரங்களெல்லாம்
பொங்கமா யருளப்பெற்றார் பொருந்துமத் திரங்கடாமும்
தங்கையில் வாங்கப்பெற்றார் தைரியம் பெற்றாரன்றே.

(வித்திச்சிகுவன்.) மகராஜ் இலக்குமன்சொல் செவிக்கிலக்காயிற்றே.

(இராவணன்.) அடட, இந்தக் கொட்டுக்கெல்லா மிந்தப்பேயாடுமோ, இதற்கெல்லாம் பயப்படுவதும் நாமோ.

(சாரணன்.) ஆரம்பமுதலே அக்கௌசிகனே நமக்குக் கெடுதல்விளை வித்துக்கொண்டு வருகின்றான்.

[கௌசிகர்.] (தன்னுள்) வசனம் இந்த ஜனகராஜனும், சதானந்தரும், என்னையுமிப்பாலர்களையும் வேறாய்நினைக்கின்றார்களெனத்தோற்றுகின்றது.

அதனால் இவர்கள் முன்னதாகவே மாயாவியளாயிருக்கின்ற அரக்கரால் ஏதேனும் வஞ்சிக்கப்பட்டார்கள்போலும்.

[நல்லதிருக்கட்டும்.] வெளிப்படை.

வசனம் ஓ, ஓ, அனகருல ஜனகராஜனே, ஓ, ஓ, சதானந்தராய்விளங்காநின்ற சதானந்தரே என்பாலேதோ அன்பாற்சொல்ல இச்சிக்கின்றீர்கள்போலும்.

அதனை எடுத்துரைப்பதில் தடையென்கொல், அதனைச்சபாநடுவிளம்பல் செய்வீர்.

[ஜனகர்.] சதானந்தரை நயனபாஷையால் ஸமிக்ஞைசெய்தனர்.

(சதானந்தர்) விருத்தம்.

திரிபுவனத் திலுந்தான் திகழ்மன்னர் புதல்வருக்குள்
ஒருவன் யாரொனினு மீசனுயர் தனுவளைப்பனாகில்
அருமைநற் குணத்தொப்பில்லா ளற்புதக் கன்னிசீதை
வரசௌந்தரியை அன்னோன் மணந்திடப் பெறுவன்மாதோ.

[இவ்விதம் ஜனகராஜனுடைய கோறிக்கை.]

[கௌசிகர் வசனம்.] கலீரென நகைத்துக்கொண்டு, அகோவகோ, எம்மிடத்தும் உங்கட்கவநம்பிக்கை யெய்தியதென்கொலோ.

ஆம், இல்லாமற்போனால் யாவராலுந்தடுக்கப்படாதவர்களாயும் கொடிய மாயையின்றிறத்தால் எளிதிற்பெறும் நானாவிதவடிவினர்களாயும் இருக்கின்ற மோசநிசாசரர்களின் நெறுக்கத்தில், யார்க்குத்தான் யாரிடத்தில் நம்புதலுண்டாகும்.

ஆகையால், எங்கே அந்தத் திரிபுராந்தகனுடைய சராஸனத்தை வரவழையுங்கள், ஆரோபத்நிமித்தம் அதிசீக்கிரம்வரும்படி செய்யுங்கள்.

(ஜனகர் வசனம்.) பகவன், சதானந்தரோ தாமேசென்று சம்புவின்றனுவுக்குச் சம்பாவனைசெய்து க்ஷணத்திலிவண் சார்ந்திடச்செய்வீர்.

(சதானந்தர்.) நல்லதவ்விதமே செய்கின்றேன்.

எனச்சென்றனர்.

(இராவணன்) விருத்தம்.

ஈசன்கைலா யந்தன்னை யெடுத்தெரிந்தி ட்டவென் கை
கூசுமவ்வில் லின்பாலே கொஞ்சமும் நகட்டொணா தே
காசினிதனி லவ்வில்லைக் கைக்கொண்டு வளைப்பதற்கு ப்
பேசுமிச்சிறு வனுக்கென் பேதமை பலமுமுண் டோ.

(வித்திச்சிகுவன்.) அந்தோவந்தோ.

விருத்தம்.

ஈதென்ன சர்வமுட்டா ளிப்படிச் சபதஞ்செய்தா ன்
பூதலம் பாதலம்விண் பொருந்துமே தலத்திலுந்தா ன்
மாதுமை நாதன்வில்லை வளைத்திட ஒருவனுண் டோ
பேதமை கொண்டானிந்தச் சபதம்வீண் பெற்றியா மே.

[இராவணன்.] ஆகாயத்தில் லக்ஷியத்தை நாட்டிக்கொண்டு
ஹா வராகீ, ஹா ஜானகி அதிஷ்டவீனாய், அடட, என்சொல்வேன் கஷ்டங்கஷ்டம்.

இராகம் காபி.

பல்லவி.

மோசம்விளைந்ததடி முற்றும்வினையாச்சுதே.

## அநுபல்லவி.

வசனகிகின்ன திஷ்டம் எல்லாம்வெளியாச்சுதேடி.

## சரணங்கள்.

ஏனெனிலென்னிஷ்டன் பெண்ணா ம்
இவளையபகரிக் கொண் ணா
டென்றனை யெடுக்கவெண் ணா
திருந்தேனடி, என்கண்ணா ய். [மோசம்]

ஒருவன்மேலாசை கொண்டா ய்
உனக்கேட்கில் திண்டிமிண்டா ம்
ஒவ்வாதென்றோர்ந்தேன் கண்டா ய்
ஓகோபாவம் உரைகண்டா ய். [மோசம்]

பின்னும் உன்னாவலா லே
பேய்கொண்டான் செய்கைபோ லே
பேசன்னரன் வடிவா லே
பீடிழந்து வந்தும்மே லே. [மோசம்]

வேடம்பூண்டு வந்துநின்ற ம்
வினைவிளைந்தாற்போல ஒன்று
வில்வளைப்புச் சபதமென் று
விபரீதமாக யின் று. [மோசம்]

தனுவளைப்பாம் விவகார ம்
சாற்றலாமோ அதிபார ம்
தந்தைசெய்த திஷ்டூர ம்
தகாதடி யின்னேர ம். [மோசம்]

என்னாலாகாத வில் லை
யார்வளைப்பார் எவருமில் லை
ஏற்றமணா ளெங்குமில் லை
என்னசொல்வேன் மிகத்தொல் லை. [மோசம்]

மணமில்லா வகையா லே
மகிமையி லெவ்வனத்தா லே
வகைசொல்வார் புவிமே லே
மாதேசிதே, ஆதலா லே. [மோசம்]

## விருத்தம்.

மந்தர கிரியானாலு வளைக்கலா மதைவளைக் க
எந்தனா லாகாதென்றால் யாவரா லாகுமந் தோ
இந்தவிற் சபதம் வைத்ததென்ன விச்சனகன்செய் த
விந்தையென் சொலுவேன் சீதைமணமென்ன விதமாயா மோ.

(சாரணன்.) மஹாராஜ் அவளிடத்து அவ்வளவெண்ணமிருக்குமாயின் அவளை எவ்விதமும் அபகரித்துக்கொண்டு போகவேண்டியதுதான்.

[சதானந்தர் பிரவேசித்து]

## விருத்தம்.

பூபதி ஜனகமன்னா புகழ்மதிக் குலமாணிக் க
தீபனே செல்விமன்ற னிமித்தம்பாந்தய மாய்ச்சொற் ற
மாபெருங்கிரி நிகர்த்த மஹேச்சுர னருள்மகாப் ர
தாபவிச் சாபந்தன்னை சாற்றியபடி கொணர்ந்தே ன்.

[கௌசிகர்.] அட குழந்தாய் இராமபத்திரா இதனைப்பாராய்.

(இராமர்.) குரு வாக்கியப்படியே, எனக்குபீரெனவெழுந்து சராசனத்தினருகிற்.செல்கின்றனர்.

## (இராவணன்) விருத்தம்.

திடுக்கிடாதிவன் வின்னோக்கித் திரமாய்நடக் கின்றான்சொ ல்

(வித்திப்சிருவன்)

வெடுக்கெனக் கரத்திற்றாக்கி வில்லினைவளைப்பான் கொல் லோ

(சாரணன்)

குடக்குசச் சனகியாம் நற்கோகில வாணியந் த
மடக்கொடி ஜானகிதன்னை மணமுஞ்செய்திடுவான் கொல் லோ.

(அப்பால், அழைத்தசேவகன் முன்னால் கொஞ்சத்தூரத்தில் நடக்க சிவந்த பட்டாடைகட்டி பவிஷாய்நடக்கின்ற சீதை முதலிய கன்னியர் பிரவேசிக்கின்றனர்.)

(சீதை.) தங்கைகாள், மஹானுபாவரான கௌசிகமாமுனிவர் வந்திருக்கிறதினால் நாம் வந்தனஞ்செய்யவேண்டியது.

(இராமர்.) இதுவென்சொல், தன்னுள்,

## விருத்தம்.

ஓங்கமுத விரதங்கா தூற்றமொரு சாரிகையி ன்
யிங்கினிய வாலாபம் இதுமுன் னனுபவித் த

தாங்கெழின் மாயாமயமாம் ஜானகிதன் வாய்மொழியைப்
பாங்குட னினைப்பிக்கின்ற பான்மையிது வென்பகர்வேன்.

(ஊர்மிளை.) நங்கைகல்லீர், அக்கா ஜானகியின் வசனம்கேட்டீர்களா.

(இராமர்.) பார்த்து (தன்னுள்) ஓ இவள் ஸாக்ஷாத் ஜானகியோ.

## விருத்தம்.

தென்றலிற்சீதந் திங்களிற்றிருக்கின் சீர்களிப்புட னறுங்காவின்
நன்றளவிழைவு நள்ளிருளகற்றும் நற்சுகங்குயினி ளுதத்தின்
ஒன்றியவின்பமோ தனத்துருசி ஓங்கிவை திருடியமின்றுள்
என்றனுக்கெதிர்முன் காண்கிலாதவ ளவ்வேந்திழையின்று காண்டனனே.

(அடடா, இவளை இந்த இரண்டுபுயங்களாலு மிருகத்தழுவி குளிரும்படி ஆலிங்கனஞ்செய்யவேண்டும்.)

(சற்றுலோசித்து.)

## விருத்தம்.

ஆத்திர மடைதலாலென் அரன்றனு வளைத்தாலன்றோ
ஸேத்திரா நந்திதன்னை நிமிடம் நீங்காதவண்ணம்
கோத்திரத் தனமென்மார்பிற் குத்திடத் தழுவல்செய்யப்
பாத்திரமாவே னந்தப்ரதிபந் தந்தனைத் திர்ப்பேனே.

(என வீணைவில் நடந்து வில்லைநோக்கின்றனர்.)

இராகம் பியாகு. ரூபகதாளம்.

## பல்லவி.

ஈதொன்று சேதி என்னடிமானே.

## அநுபல்லவி.

மாதரசேயென் காதில்வீழ்ந்ததடி. (ஈதொன்று)

## சரணம்.

கோசிகருடன்வந்த இராஜமைந்தரிருவர்
கோடிமன்மதனினை யாவாராம். (ஈதொன்று)

(சீதை) ஆம், ஆம்.

(மாண்டவி) ௨-ஆ சரணம்.

அவரிலொருவனொரு அரிவைதன்மனந்தனை
அபகரித்திட்டவ னுவாளும். (ஈதொன்று)

(சீதை.) அழுக்காறுடன், ஆ மாண்டவி என்னடிபுலப்பம் சும்மா வாயடக்கிக்கொண்டுவா.

(என்று கையிலிருந்த லீலாகளினத்தாலடித்தனள்.

(ஊர்மிளா.) சிரித்துக்கொண்டு.

விருத்தம்.

மாண்டவி வசனத்தாலே மனஞ்சகியாத தென் ஞே
எண்டியுன்றனைச் சொன்னேன்கொ லேந்திளமுலையினு ளே
வேண்டியபடி தனக்கு மேற்போட்டுத் தாங்கிக்கொண் டு
தாண்டிவந்த தட்டுகின்றாய் ஜானகியுனக்கேன் கோப ம்.

(சீதை) விருத்தம்.

விரித்திடவேண்டாங் கண்டாய் விஸ்தாரக் காரிநீ யே
தரித்தபேர் ஊர்மிளைதான் சமத்திதான் சரிதான்போ போ
அரற்றிடேலுன் மதத்திற் காளல்ல வெதிருன் பா
லுரைத்திடல் தகுதியன்றே தூரத்தி லோடிடா யே.

(சுருதிகீர்த்தி.) ஹா, ஸகி, ஜானகி ஏதடி இத்தனைகோபம்.

இராகம் நாதநாமக்கிரியை. ஏகதாளம்.

பல்லவி

சுந்தராங்கியே கோபமேதம்மா.

அநுபல்லவி

மந்தரக்கனதனமைதிலியே அடி (சுந்த)

சரணங்கள்.

கந்தர்ப்பனைநேர் ராஜமைந்தனொருவனைத்த ன்
கனவினிற்கண்டு மிகமயற்கொண் டு
வந்தகோடைகாலத்து சந்ததம்நதிநீர்போ ல்
வற்றிமெலிந்ததேகமுற்றதாரோ அடி. (சுந்த)

க்ஷீராபிஷேக தாரைகொண்டிலகி டு
செய்யதனித்தங்கப் பதுமையைப்போ ல்
கோரவிரகவாதை மீறிடமெய்வெளுத் து
குளித்தவள்போற் கண்ணீர்வடித்தவளார டி. (சுந்த)

காமவேட்கடுங்கோவி மாமலர்க்கணையே வி
கருதியென்னங்கந் துளைத்தான்பா வி

சோமனுக்கென்காலும் வேமனலாச்சுதென் று
சொன்னவளாரிந்தக் கன்னியர்க்குள் அடி. (சுந்த)

விஸ்தாரரமணீய உத்தியானவனத்தி ல்
விளங்கிமொ துள மெருக்கத்தி லே
சுற்றிலாளிசேரஞ்சேர் மத்திமாதவீமண் ட
பத்திற்றளிர்ச்சயனத் திருந்ததார டி. (சுந்த)

செந்தளிர்ச்சயனத்திருந்த பூங்கொடியின்மே ல்
சந்தனக்குழம்பிட்டு சகியரா லே
தந்தநன்ஞளஆரம் மென்றனங்களின்றோ ம்
சாற்றிவைத்திடப் பெற்றதையலாரோ அடி. (சுந்த)

சீதநிழலுமந்த வாதமுமாயுகந் த
சிறந்தயிடத்திற் சகியர்சேவையுட ன்
ஏதடிநாதன்வா ராதிருப்பதென்னெ ன்
றிப்படியேநாட் கழித்ததாரோ அடி. (சுந்த)

(தவிரவும், உதயகாலத்தில் காமவிலச்சையுடன் ஒருவரும் இல்லாதயே காந்தஸ்தலத்தில் சகியினிடத்தில் இவ்விதம் இரகசியமாயுரைத்தவளாரோ.

(மாண்டவி.) அடி, அடி சுருதிகீர்த்தி அதெப்படி சொல்லு சொல்லு.

(சீதை.) சுருதிகீர்த்தி இப்படிச்செப்புவள்.

(சுருதிகீர்த்தி) ஆசிரியவிருத்தம்.

அரிதரிதுகண் சற்றுறங்கிவெ தொருவே ளை
அவசமாயிமை சாற்றிடி ல்
அப்போதுதிகழுமென் சொற்பனத்தினில் மிக் க
அபிராமவர சுந்தர ன்
இரவிகுலமதில்வந்த ஸரஸகுணசீலனு ம்
இரகுராமனெனு மெவ்வன ன்
எதிர்வந்திலங்கு மன்னவன் மெள்ளமெள்ள வே
என்பக்கல் வந்தெய்துமா ல்
தெரிவையர்க்கரசி நானுன்னடிமை யென்றிடு ஞ்
செப்புமுலை மேன்முந்தியா ஞ்
சேலையைக் கூசாதிழுத்திடும் புருவங்க ள்
சிறிச்சளிப்பதிலவ ன்

கரமெடுத்தஞ்சலிகள் செய்யும் யேமாற்றினி ற்
கனிபோற் சுவைத்துமுத்தி க்
களியொடு புறம்பினினைப்பன் றிடுக்கென க்
கண்விழித்திடிற் காண னே.

(என்றே)

(ஊர்மிளையும் மாண்டவியும்.) சீதையின் முகத்தை நோக்குகின்றனர்

(சீதை.) தன்னுள், இலச்சையுடன் ஓ, ஓ, இவர்களால் நமது விருத்தாந்தம் யாவும் அறிந்துகொள்ளப்பட்டது. இனியென்செய்வது கதியென்கொல்.

, (வெளிப்படை.) தங்கைகாள் நீவிர் அறியீர். இதுவெல்லாம் பரிகாஸவதியான வென்சகி சீலவதியின் கேலிக்கட்டுமானம். எங்ஙனமெனில்,

கொச்சகம்.

பாலருக்குமூத்தோர் பகர்கட்டுக் கதைகள்போ ல்
சீலவதி கன்னியென்றே சீதைமெய் வெளுத்திளைத்தா ள்
மாலடைந்தா ளிப்படியப்படி யானுமொன்று வந் து
கேலிசொல்லிக் கிண்டிவிட்டாள் சுருதிகீர்த்திக்கே வனிச ம்.

(மாண்டவி.) எதிரேநோக்கி.

ஆசிரியவிருத்தம்.

இதுவென்கொல் பாதலம்புகுகின்ற குகையெ ன
இலங்கயப்பெட்டி தன் னி
லேயிருப்பதில் நிதம்பூசைசெய் சுகந்தங் க
ளேற்றயிச்சிவசாபமெ வ்
விதமிங்குவந்ததோ அதன்பா லகோவ கோ
வினயமதிகுண சீலனு ய்
மிக்ககம்பீரனுப் குமரனுய்ச் சகலக லை
விக்ஞானனு யெவர்க்கு ம்
துதிபெற்றிலங்கு சிறுமதிபோற் சுணங் த
சொருபனுய் முகில்வண்ணனு ய்
தோற்றமிவ்வுடச பூமிக்கலங் காரனு ய்
சுந்தர விலாஸனு ஒ
அதிவிசாலம்பெற்று கர்னந்த மேவிடு ம்
அம்புயக்கண் கடைகளி ல்
அருணனுப் கரிகரபுயத்தனுய் நிற்கிரு ன்
ஆர்கொலிவனோ் தொலம் மா.

(சீதை.) நிதானித்து தன்னுள் (வசனம்.)

ஓ, இந்த சுந்தராகிருதியானது என்சொற்பனத்திற் காணப்பட்ட மனோ ரதவல்லவனிவன்றானென்று வழுத்தல்போலும், ஆகையால் இனியென்ம னோரதம் பலிக்குமென்பதிற் சந்தேகமில்லை.

இராகம் தனாசு. ரூபகதாளம்.

பல்லவி.

கண்ணாளனைக் கண்டேன்

அநுபல்லவி.

விண்ணாட்டரசனுங் கண்ணாயிரவனுங்
வேதனும்புகழாதித்தியகுல நாதனும்ப்ரக்யாதனை.

சரணங்கள்.

அங்கஜன்றன்பா ணங்களென்ற ன்
அங்கமெல்லாந்துளைக்கவும் தென்றல்
அடிக்கவும், யான்றுடிக்கவும் இந்த
திங்கட்சுடவும் யானோவதைக்கண் டு
தெய்வந்தான் தந்ததுவோ இவனையெ ன் (கண்)

ய
னைந்துமய்யலைத்தீர்க்கவோ யான்
என்செய்வேன், மதன்மிஞ்சுறான், என்
சிந்தையினினைவேமுடிந்த து
எந்தன்பாக்ய மிவ்வுருவாய்வந்த து. (கண்)

பங்கைதிகரெழி லென்றனங்க ளு
வந்துதினவுகள் தின்பதும் மதப்
பயல்செய்வீம் பதையுமே நான்
எந்தவிதத்திலு மொருகைபார்க்கிறே ன்
இனியென்ன மனக்கவலை தீர்க்கிறேன். (கண்)

(ஹ, ஹ, என்செய்யப்போகின்றேன் மதனவாதை சகிக்கவசமா இது தான் சமயமென்றே மன்மதன் என்னைக்கொல்கின்றனன்.

இராகம் காபி. ஆதிசாய்ப்புத்தாளம்.

பல்லவி.

இவனையணைந்துசுகம் பெறுவேன் இவனையணைந்துசுகம்

## அனுபல்லவி.

புவனாலங்காரனே புகழ்ரகுவீரனே
புயல்வண்ணன்கனவினிற் பொருந்துசெய்பீரனே
எவனாடாரனே யென்மனசோரனே (இவனே)

## சரணங்கள்.

கரும்புவின்னாணோ வண்டு மலர்கள்
கணைகளதனைக்கொண்டு
உருவிலியம்படைத் தோங்குமான் சேர்த்தி
ஓர்பெண்பெணே வருத்தநாளனபகீர்த் தி
வருமெய்ப்பூனைபாமல் வாட்டுகின்றானே. (இவனே)

சடவில்வயிதததாலே பழககம்
காளகூடதனைமேலே.
உடலிற்புனைந்து கொண்டொருவிதமா சு
உற்றதெனக்கபடதொடு நிலவீசு ம்
உடுபதிநகைக்கிறான் ஓகோவென்செய்வேன் (இவனே

தென்றிசை பொருந்தலாலே எமன்
சேர்க்கைமிகுதியாலே.
தென்றலெனுமனிலன் சிறுமான் பாவி
சிறிதுந்தயையில்லாமல் ஸ்திரீபழி மேவி
கொன்றிடத்திரிகினறான் குடிகேடுபுரிகின்றான். (இவனே)

### (என) பொதுவிருத்தம்.

வள்ளலிராமன்றன்னை வகைவகை நோக்கிக்காமந்
துள்ளவும்பரவசாழி தோகைஜானகி யாழ்ந்தென்றன்
உள்ளபுண்ணியங்களெல்லா முருக்கொண்டு வந்ததோவென்
றுள்ளத்திற் புகன்றுகொ ண்டாளோ வியம்போனின்றாளே.

(மற்றக்கன்னியரும் பார்த்துக்கொண்டு நிற்கின்றனர்.)
(சதானந்தர்.) தினகரகுல ரகுகுமாரனே பாருங்கள் பாருங்கள்.)

### (ஜனகர்) விருத்தம்.

சகடமோரெட்டில்ப் பஞ்சசதவல்லவீரராலே
மிகமிகவருத்தத்தோடு மேவியேயீர்த்துவந்த
மகசராசனத்தை லேசாய்மதித்து மிப்பாலன்கொஞ்சம்
அகமதிற்பயமில்லாம லதனையேநோக்கின்றானல்.

(கௌசிகர்) விருத்தம்.

அனைவரும்பாரீர் ராமனவ்வில்லை விளையாட்டா க
தனதுசெங்கரத்திற் றூக்கித்தரையினி னிருத்துகின்று ன்

(இலக்குமணன்.)

தனுவிதைகொடிவளைத்துச் சாற்றிநாணேற்றுகின்றார்.

(ஜனகர்) சந்தோஷவியப்புடன்.

எனதுளக்கவலையோடும் வளைத்திட்டான்.

(சதானந்தர்.)

இறுத்திட்டானால்.

(சனகர்.) ஆச்சரியத்துடன்.

விருத்தம்.

ஊழிகாலத்துறுமு முகிற்குலத்தோசை யாமெனவொப்பி லன்ராகவன்
பாழிசேர்பனை வில்லிறுத்திட்டவோர் பாரசத்தத்திலான பயத்தினால்
ஆழிசூழ்புவனங்கள் திகிலடைந் தந்தந்தப்படியே களைப்பெய்தி ன
கீழ்விழுந்து தெளிந்துபினுந் திடுக்கிட்டெழுந்தி தென்னென்றுவியந்தன.

(அகோ அகோ, சதானந்தர் இரகசியத்தில், ஓ மஹாராஜ ஜனகா, உற்ற சங்கதி முற்றுமறிந்தனம்.

விருத்தம்.

மாமுனி விசுவாமித்ர மாதவரிவ ரயோத்தி க்
கோமகனிவனையா னின்றோன் கோதண்டராம னின்றோ ன்
காமமுற் றுருவமாரிக் கபடமாய் முன்னர்வந்தோ ர்
தீமைசேர் அரக்கரென்றே தெளிந்திட வெளியாச்சன் றே.

(ஜனகர்.) இரகசியத்தில், ஆம் ஆம், நன்கறியலாயிற்று.

(சதானந்தர்.) இரகசியத்தில், நம் கவலைக்கடல் கடந்தவாறு கபடக்கடலினின்றுங் கறையேறியது தெய்வச்செயலேயாம்.

(கௌசிகர்.) ஓ, மதிகுலஜனக மகாராஜனே, கேட்கக்கடவீர்.

இராகம் காபி. ஆதிதாளம்.

பல்லவி.

வில்லொடிந்த வேடிக்கைபாரீர்.

அநுபல்லவி.

தொல்லைவினைகடந்து ஆதியாம்யேக ச்
சோதியையனுதினந் தொழுமன்பா க

தொல்லுலகெலாம் புகழும்விதே க
சூரியகுலோத்துங்கனால் நமக்குநேரா க. (வில்)

சரணங்கள்.

திரிபுவனத்திலுள வீரர்தன்னை லே
சித்தப்ரமணங்கொண்டு நிற்கும்படிமென்மே லே
பிரளயகாலத் திடியைப்போ லே
பெரியவோசைகொண்டே புவிமே லே. (வில்)

அயன்வாய்மூடினான் அரனிடப்பாகத் தை
அணைத்தான்வலக்கையா லாரப்பதைக்கத் தை
வியன்மார்பணிந்து மறைத்தான்மால்கத் தை
மென்குழற்பெண்களை ரக்ஷிக்கயிவ்விதத் தை. (வில்)

(ஜனகர்.) ஆம் ஆம், இது வாஸ்தவமே.

(வித்திச்சிருவன்.) ஒ, இந்த க்ஷத்திரியப்பயல் மகாபராக்கிரமசாலிதான் என் அங்ஙனமன்றோ.

விருத்தம்.

இந்தமகாராஜன் எமனூரில்முன்னமியற்றிடு வெஞ்சமரினிற்ற னினைந்தான, கந்தரமுங்கணகணைனக் கண்களிற்றீக்கண மெழும்பக்கனவிடிபோற் கர்ச்சித்தானால், சிந்துரங்கள் செவிடுபடத்திசையோ ரெட்டுந்திகிலடையச் செய்தனவச்சத்தமொப்பாம், விந்தையரன் வில்லொடிந்த ஓசையோரில் மிகப்பலவானிரவிகுலச் சிறுவனுமே.

(சாரணன்.) என்ன என்ன, வித்திச்சிருவனால் மிக மிக வர்ணிக்கப்படுகின்றாற்போலுமிருக்கின்றது. யாதொரு ஈசுரதனுர்ப்பங்கமானது நம் மகாராஜனுடைய மனோரதத்தை வேர்களைந்ததாயிருக்கின்றதோ, அப்பேர்க்கொத்த விஷயத்தில் மிக மிகப்புகழ்ச்சி விஸ்தரிக்கின்றவிதமென்னை.

(இராவணன்.) வித்திச்சிருவனைக்குறித்து, கோபகை செய்துகொண்டு.

விருத்தம்.

இந்துதரன் றனுவொடித்திப்பயல்வைதேகியினை மணஞ்செய்கின்றவனிச்சனகன்றானும், மந்திரங்கள்புகன்றிகின்றவனிதெல்லாம்மாமுனியிக்கோசிகன்சீர்நடப்பிக்கின்றேன், நிந்தையதாய்ப்பானுருவந்தரித்துவந்தும்கிர்ப்பலனுய்ச்சும்மாவிவ்விலங்கைவேந்தன், வந்தவழிபோந்துவருகின்றதென்றால்மகிமையென்கொல்நினைக்கும்வகையென்கொல்லோ.

(வித்திச்சிருவன் தன்னுள்.) ஓ, இவ்வரசனே கோபமடைகின்றான். ஹா ஹா, நன்று நன்று, ஆகையாலிவனை அனுசரித்தே பேசுகின்றேன்.

(வெளிப்படை.) யாதொருகாரியம் இக்காலோசிதமோ அதை இங்கி தந்தெரிந்த மகராஜனுக்கு யானெடுத்துரைப்பதென்னே.

(இராவணன்.) அங்ஙனமாயின், இதனைக் கேட்கக்கடவாய்.

## விருத்தம்.

நத்துமென்ற மனைக்கொன்ற நரனைமுன் கொல்லல்வேண்டும்
மித்திரனெனினும் பின்னர் விதேகனை வெட்டல்வேண்டும்
சித்திரப்பதுமை யன்ன சீதையைச் சேரவொட்டா
தித்திரங் கொடியவஞ்ச மியற்றிய விதத்தினாலே.

(சாரணன்.) இங்ஙனமாயின்.

## கட்டளைகலித்துறை.

கைக்கனதையா லந்தமானிடக் குட்டிவக்கத் தலத்தை
நொக்குநொக்காக நொறுக்கிக் கொழுப்பை நுகர்ந்து கொண்டே
அக்கணமே ஜனகன்றனை வாட்கொடறுத் திரத்தம்
மிக்கவுருஞ்சிக் குடிப்பன் விடைதரல் வேண்டுமின்றே.

(வித்திச்சிருவன்.) தன்னுள்,

## விருத்தம்.

இதுபுதுமை இதுபுதுமைவிடவராவை எதிர்த்திடவோர்மண்மேமிசை வதென்ன, அதிகருவத்துடனெழுந்தான்சாரணந்தோஆளில்லாவிடத்தசு வமேதஞ்செய்வான், விதவிதமந்திரங்கள்முனியருளப்பெற்றவிளங்குரகு வீரன்முன்வேந்தன்றானும், குதிகொளமர்செயநிமிடம்பொறுப்பான்கொல் லோகூத்தாடிச்சிலம்பம்பகைகொன்றிடாதே.

(வெளிப்படை.) அடடா, மூர்க்கா என்ன உளறுகின்றாய்.

ஓ, இராஜாதிராஜ மஹாராஜனே, சற்று தயைசெய்து கொஞ்சம் செவி கொடுக்கவேண்டுகின்றேன்.

(இராவணன்.) ஸரி ஸரி, இதத்தைச்சொல்கின்ற மந்திரிகளின் வார்த்தைகளை கேட்கவேண்டுவதுதானே கடமை (எனத்திரும்பினன்.

(வித்திச்சிருவன்.) ஆலோசிக்காத காரியம் அத்தனையுமபத்தமென்ற படி யோசியாததிலும் பிரவேசிக்கலாகாது. அத்தனை யோஜியாது அவசரத்தில் பிரவேசித்த ஒருகாரியம் முடிவுபெறாமல் மத்தியில் கெடுதலை அடை

யுமாயின் அக்காரியத்தையே திரும்பவும் மந்திரிகளுடன் நன்காலோசனை புரிந்து முடிவுக்கு கொண்டுவரவுங்கூடுமாகையால்.

## விருத்தம்.

தலங்களெலாம்பரவுகின்ற புகழ்ப்பிரதாப தசக்ரீவகாரணை வசாலமாகவுந் தப்பாம், பலங்களெலாந் தெரிந்ததுதான் விறுதாப்பீத்தல் படபடப்பாயுள றுகின்றுன்கேட்கொணுதே, இலங்கையிற்போ யமைச்சர்களாற்றெளிந்து நாமேஇன்னவளைஇணக்கவழிஇசைப்போம்சாமி, கலங்கவிடாதும்மனதைத்திருத்திக்கொள்வீர்கடுகெனச்செல்வோமிதுவென்கருத்தய்யாவே.

• (இராவணன்.) ஸரி ஸரி, வித்திச்சிகுவன் விளம்புவது ஸரியே, நன்று நன்று, இந்தச் சீதாதரிசன குதூகலத்தினுலென்னை திரும்ப விமானமேறி இலங்கைபோய்ச்சேருவோம், யாதொருத்தி பலாத்காரமாய் அபகரிக்கப்படவேண்டியவளோ அது விஷயமாய் யோசிக்கவேண்டும்.

என இராக்கதர்கள் எல்லவருஞ்சென்றனர்.

(ஜனகர்.) அத்தியானந்த பரிதனுய்,

இராகம் பியாகு. ரூபகதாளம்.

லோககுருவே சங்கரநாமதருவே என்றமெட்டு.

## பல்லவி.

மாதவரோ. மாமுனியே வந்தனமய்யா.

## அனுபல்லவி.

காதிவம்சோதநிமதியே அருள்க்
கௌசிகரோ கருணைநிதியே ஞானப்
பதியே நீரே கதியே. [மாதவ]

## சரணங்கள்.

கவலைக்காட்டமெறித்த கனலே அரக்கர்
கவடக்கனலவித்த புனலே தவச்
செனலே கிருபைத் துனலே. [மாதவ]

சிந்தித்ததுதவிடுங் தேனுவே மனச்
சந்தேகவிருணீக்கும் பானுவே தவப்ர
தானுவே காதி சூனுவே. [மாதவ]

மனவிசாரந்துலைத்தாய் வந்தனம் மகள்
நினைவின்படிமுடித்தாய் வந்தனம் அனேக
வந்தனம் அன்பாய்த் தந்தனம். [மாதவ]

(சதானந்தர்.) பகவன், கௌசிகரே.

விருத்தம்.

வெற்றிவேல் விழியாள் சீதைவீர னிராமனுக்கும்
பெற்ற ஊர்மிளைப்பெண்ணாளைப் பின்வரும் வள்ளலுக்கும்
மற்றநற் கனிஷ்டருக்கு மாண்டவி சுருதிகீர்த்தி
உற்றவிம் மணப்பொருத்தம் உமக்குஞ் சம்மதமதாமே.

(கௌசிகர்.) நன்று நன்று, அவ்விதமேயாகட்டும்.

(சீதை தன்னுள் தொடர்மொழி.) முக்கணன்றன் உக்கிறகோதண்டத்தை வெடுக்கென முறித்தெறிந்திட்ட மனோரதவல்லவன்றன் மிக்கமதவே தண்டசுண்டம்போல்நீண்ட வாகுபலத்தால் ஒருமன்மதன்றன் இக்குவில்லு முறிக்கத்தக்கதுவே.

அடுக்குமொழி.

கன்னமதச் சிறுவேழங், கன்னலைப்போல்
மன்னனிந்த வல்லவனால், துன்னுமரன் வில்லுமிகச், சின்னபின்னமானதுவே. ஆச்சரியமாச்சரியம்.

அடி ஊர்மிளாய், இதென்னடி.

(ஊர்மிளை வசனம்.) அக்கோவக்கோ, இந்த ரகுகுமாரன் மஹேச்சுவரன்றன் சராசனமிறுத்த பிரளயகால இடிநிகர்த்த பயங்கரமான பெருஞ்சப்தத்தால் கிடுகிடென நடுங்கினவர்களாய் ஒருவருக்கொருவர் கையொடுகை பற்றி காலொடுகால்பின்னி முகுளித நீலோற்பலலோசனை களாயிருக்கின்ற நமக்கு திக்ப்பிரமைகொண்டு ஒன்றுந் தோன்றாதிருக்கின்றதடி.

(மாண்டவி.) ஆகையால், நாம் கௌசிகர்தம் பாதவந்தனத்தைச் செய்துவிட்டு அந்தப்புரஞ்செல்வோமடி.

(சுருதிகீர்த்தி.) நன்று நன்று, அவ்விதமே செய்வோமடி.

(ஜனகர்.) ஆனந்தஸ்தோக வெகுமானத்துடன், வத்ஸ ராம, ராமமங்களராமா, மனோக்கியராமா வாராய் என்னருகில் வாராய்.

இராகம் கமாஸ். ஆதிதாளம்.

பல்லவி.

வா வா வா கண்மணியே
ரவிகுல மாமணியே. (வா)

அநுபல்லவி

மூவுலகிலும்நிகரில்லாத ரூபா
மூவருந்தேவரும் புகழும்ப்ரதாபா. (வா)

## சரணங்கள்.

கோசலதேசத்திராஜன் செய்தவமீடேற சேயாய்க்
குவலயத்தில்வந்தவதரித்த ஐயவீர
மோசநிசாசரியை நாசஞ்செய்தாயிஷ்ட
முனிபத்தினிக்கருள்செய்தவனே ஸ்ரீமானேகிட்ட. (வா)

ஐம்பதுபத்துக்கிங்கரர் கொணர்ந்திடுவில்லைச்சால லேசாய்
அரைக்கணத்தில்ரெண்டா யொடித்தெரிந்தசிறு பாலா
நம்புமுங்களைப் பொய்யென்றிருந்தேனே பாவி
ராக்ஷதரைமெய்யென்றிருந்தேனே மேவி. (வா)

பூவைஜானகிசெய் புண்ணியமென்னசொல்வே ேனா அவட்குப்
பொருந்துங்கணவனாக நீவரத்தவமென்செய்தே ேனா
ஆவலாயுந்தனைத் தழுவவேணும் ராமா
ஆகையாலென்னருகில் வாநயனுபிரா மா. (வா)

(இராமர்.) முகம் வணங்கினவராய் கௌசிகர் பக்கத்திலிருந்தனர்.

(வாயிற்காப்போன்.) கன்னியர்கள் வந்துவிட்டார்கள்.

(சீதை நோக்கி தன்னுள்.) அந்த அரன் வில்லொடித்த அதிவீரசிங்கம் அதோ இருக்கின்றது, என் கை கால்கள் பயத்தினால் விரைவாக நடைகொள்ளவில்லை.

(என மாண்டவியின் பார்ச்வத்தில் மறைந்து நடக்கின்றனள்.

### (இராமர்) தன்னுள் கட்டளைகலித்துறை.

மின்னனையா டனைக்காண மென்மேலும் விருப்பமுள் ள
என்னிருகண் கதிதன்னைத் தடுக்கின்ற தேற்றகு ரு
சன்னதி யென்பதினுண்டாம் வினயஞ் சரணணியி ன
கன்னயநாதச் சிரவணத்தால் நனிநான் றன்ய னே.

### (ஊர்மிளை) தன்னுள் விருத்தம்.

அரன்றனுவொடித்தஇவனுடைப்பக்கலாடகப்பேரொளியழக ன்
வரைநிகர்புயத்தன்மன்னவனிலக்குமணனிவனிருக்கின்றான்மகிழ்ந்தி த்
திருவுருவத்தைத்தெரிசித்தவென்றன்சிந்தையைச்சித்தஜன்லீ லா
மிருகமதாகவகித்தனனென்னைமிகமயக்கின்றதென்விந் தை.

(என ஜனகராஜன் பக்கத்தைச்சார்கின்றனள்.)

(இலக்குவன் தன்னுள்.) ஓ ஓ யென்ன சௌந்தரியம்.

இராகம் பியாகு. ரூபகதாளம்.

## பல்லவி

இவள்கடைக்கண் கயிற்றாலிழுத்திட்ட வென்
இதயந்திரும்பிவர வில்லையே.

## அநுபல்லவி.

நவநீலமுகிற்குழலால்மறைத்தா . ளோ
நங்கைநெற்றிற்றிலதமாய்வகித்தா ளோ
கவலையுண்டாக்குதே காதல்மயக்கு தே
காமன்கணைக்கு லக்காக்கு தே. (இவள்)

## சரணங்கள்.

கச்சுமென்றனத்திலோ கனசகனத்தி லோ
கனிவாயிதளமுதங் கமழுமெவ்வனத்தி லோ
இச்சையுடன்பொருந்தி யெனைமறந்திட்ட தே
இன்புறவே மயங்கிட்ட தே. (இவள்)

மாரன்கொலுமண்டப வாசலில்நாட்டி ய
வாழையாந்துடைகளிலோ வளைபூட்டி ய
ஆரமணையகையொய் யாரத்திலோமுங் கி
அயிக்கியமாயினவே மயங் கி. (இவள்)

கட்டுடையிலோதந்திடை யுந்திப்புடையி லோ
காரிகைஅஞ்சமென நடக்கின்றநடையி லோ
எட்டுணை யுமிவளை விட்டகலா து
இருந்துரமிக்கின்றதே இதுபொல்லா து. (இவள்)

(எனப் பராமுகமாயிருந்தனர்.)

(ஜனகர்.) குழந்தைகாள் இந்த பகவான் கௌசிகரை வந்தனஞ்செய்யுங்கள்.

(கன்னியர்கள்) விருத்தம்.

ஐயனேபோற்றி யெங்களாரிய போற்றி ஞான த்
துய்யனேபோற்றி கன்மத்துக ளறுத்திட்டோய் போற் றி
மெய்யனேபோற்றி விசுவாமித்திர முனியே போற் றி
மையிடைக் கன்னிமார்க ளுங்களேபோற்றி போற் றி.

(கௌசிகர்.) கன்னியர்காள், உங்கள் உங்கள் மனோரதம் நிறைவேறுக நித்தியகல்யாணமுண்டாகுக.

(கன்னியர்கள்.) கொஞ்சம் தூர ஒதுங்கி அதிரமணீயஸ்தலத்திலுட் கார்ந்திருக்கின்றனர்.

(கௌசிகர்.) சந்தோஷம் சந்தோஷம் குருஜாதா, நன்று நன்று, யானோ, இப்பொழுது யாகதீக்ஷையிற் பிரவேசிக்கின்றேன் ஓ ஓ மிதிலேசா, நும்சப தத்தைப் பூர்ணம்செய்மின்.

(ஜனகர்.) ஏ ஏ சேவகர்காள்! அமைச்சர்களை வரச்செய்வீர்.

(சேவகர்கள்.) உத்திரவுப்படியே.

[எனச்சென்று மந்திரியர்கள் சகிதம் திரும்பவந்து] மந்திரியர் வந்திட் டார்கள் மகாராஜனே.

(ஜனகர்.) ஓ ஓ மந்திரிகளே, கன்னிகைகளின் விவாகோற்சபம் ஆ கையால் வாசலிற் வாழைகளுட்டி பழவிதானங்கள் அதிசீக்கிரம் சிறப்புச் செய்யும்படி திட்டஞ்செய்யுங்கள்.

(மந்திரிகள்.) உத்திரவுப்படியே,

(என மற்றயேவலக்காரர்களைக்குறித்து,

இராகம் காம்போதி ஆதிதாளம்.

## கண்ணிகள்.

ஸ்ரீமன்மிதிலேசன் செல்வமகள் சீதாதேவிக்கும் ஸ்ரீராமன்றனக்கு ம்
திருமணமின்றென் றறிவியுங்க ளெல்லாத்தேசங்கடோறும்சேவக ரோ
மாமஞ்சட்காப்பிட்டு மங்களபத்ரிகை மன்னர்க்கெலா மனுப்பிடுங்க ள்
வாரணங்கண்மேற் சிங்காரித்து டம்மானவாத்தியங்கண் முழக்கிடுங்க ள்
வீதிகடோறும் பூப்பந்தல்விதானம் விசவிதமாக விதானித் து
மேற்கட்டிகள்கட்டி ரதனங்களால் ரஸக்கூண்டுகளாலும் நிதானித் து
தாளுர்த்தசதுரெனுநச்ச ணுக்குச்சாண் நல்லசொன்னப் பதுமையுண்டாக்கி
தோரணங்களகட்டி பன்னீர்தெளித்தெங்கும் ஸொம்புபெறத்தூளைப்போக்கி
வாழைகமுருகளுட்டி வரிசையாய் மாணிக்கத் தீபங்களேற்றி ப்
வானளவாய் திருக்கல்யாண மண்டபம்வான் றச்சனுற்செய்மின்நேத் தி

நல்லதப்படியே செய்கின்றோம்.

(எனச் சென்றனர்.

(——) திரை.

மிதிலைமாநகரா ளெங்கள் வெண்மதிக் குலத்தோய்நாளு ம்
துதிபெறு பொன்னுடாளுங் குலிசனைத் துயர்தீர்த்தாண் ட

பதியெனுந் தயரதேந்த்ரன் பாலரும் மனைவிமாரு   ம்
கதியுள படையுஞ்சூழக் களிப்பொடு வந்திட்டாரா   ல்.

(ஜனகர்.) பகவன் கௌசிகரோ இது தேவவிரத சமாசாரம் ஆகையால் எமது ஆசாரியசதானந்தர் இராம லெக்ஷுமணர் கன்னிமார்கள் இவகர்ளுடன் நாம் எதிர்சென் றுபசரித்து அழைத்துவரவேண்டும்.

(கௌசிகர்.) ஆம் ஆம், அப்படியே.

(ஜனகர்.) அடா தேவவிரதா வருகின்ற. கோசலேசுவரன்றன் அந்தப்புரஸ்திரீகளை உபசரிப்பதற்காக எமது அந்தப்புரஸ்திரீகளை அழைத்துவருவாயாக.

(என எல்லவர்களுஞ்சென்றனர்.)

விருத்தம்.

திருவெனும் சீதாதேவி சிந்தைக் கிசைந்தராம   ன்
திருமணக் கோலங்கொண்டான் சீதையுங்கோலங் கொண்டா   ள்
திருமண மண்டபத்திற் சீர்பெறக்களித்து வந்தா   ர்
திருமண முறையெசெய்தார் தேசத்தோர் மகிழ்ந்தார்மா   தோ.

நான்காவதங்கம் முற்றிற்று.

# ஐந்தாவதங்கம்.

## ஆரம்பம்.

(அப்பால் விராதன் பிரவேசிக்கின்றனன்.

### விராதன் விருத்தம்.

அடவியிற்சன்னியாசிகளுக்கபயமீந்தே அரக்கர்குலமறுப்பதெனச் சபதம்பூண்டு, மடமயிலாஞ்சனகியொடு மனுசனொடும் வயிக்கின்றான்ராமனெனக்கேள்வியாகி, சடுதியிலன்னவனை வதைத்திடுவாயென்றென் சகனுமக்கரன் விடுக்கத்தாவிவந்தேன், இடமுடையயானொருமித்திட்டபோதுஞ் சிறுமனிதனினியேது திண்ணந்தானே.

(கர்வபுன்னகையுடன்.)

விருத்தம்.

பலசாலிஇலங்கைவேந்தன் அவனினுங்கரன்பலிஷ்ட   ன்
தலைமையன்னவரிலும்அச் சதிலவன்சாற்றலாகு   ம்

நிலமிசையெவர்க்குமேலாம் நிகரற்றபலவான்னா னே
குலவிடும்வீரராமென் றெவரென்முன்குறித்துநிற்பா ர்

(வசனம.) அங்ஙனமாயின். தனக்குத்தாழ்மையான பல்வானுகிய இராவணனை இலங்கைக்கரசாக்கி வைத்ததெல்லாம் கேகசியின் சுதனென்று நமது சம்மதத்தினலல்லவோ) சற்றுலோசித்து ஆச்சரியமாச்சரியம்.

விருத்தம்.

நிரநிசாசரர்குலத்தைச் சிதைத்திடச்சபதம்பூண் ட
நரன்றயிரியமென்சொல்வேன் நகமிமாலயமேபோலரி ம்
கரனுளாயிலையென்றாலுங் கடிந்திவன்றனைவதைத்த ற்
சரிபெறுமவனுத்தாரந் தந்துந்தாமதந்தப்பா மே.

விருத்தம்.

முகுளங்கணிறைந்தாசையை மூட்டுங்கிழல்காட்டு ம்
வகுளங்களுயர்ந்தோங்கிடு வரையின்றடமதி லே
அகளங்கமைதிலியோடில கின்றானன்னரனை ப்
புகழுங்குயில்வடிவாய்ந்னி பொருந்தக்கண்டன னே.

விருத்தம்.

பலவானசந்தனவாடியின் பக்கல்வளமிக் க
இலையாலொளிர்குடிசிற்றலை எகிரிவிளையானு ம்
விலைவாளியைக்கீழ்வைத்துறை வெள்வாடமையுறு வி
துலையாறுகனேக்கின்றனன் தூய்விண்டலமதி லே.

(அகோவகோ, இவனுடையதீரமும் பராக்கிரமமும் என்னென்று சொல்வேன், அடட,

(கோழைத்தனத்துடன்)

இராகம் காம்போதி, ஆதிதாளம்.

பல்லவி.

இவனைச்செயிப்பார் திரிபுவனங்களிலு மில்லை
என்றாலாகுமோ ஆகாதே,

அநுபல்லவி

கவனமில்லாமலர்தக் காரனுப்பிடவந்தேன்
கண்டேன்மிகவும்வெ குண்டேன்மனம்நொந்தேன் (இவ)

## சரணங்கள்.

அரியை நரியுமத கரியைவெள்ளாடும்கல்
லரவைத்தவளையும்வென் றிட்டாலும் மேரு
கிரியைநிகர்ப்புயவன் னரனைவெல்லவோஎன்னுற்
கிட்டவாகிலும்போக எட்டுமோஎதொருக்காலும். (இவ)

தீரசெம்பீரரண வீரசுபாவத்தன்
சிவசிவசாலக படசித்தன், மிகத்
தூரத்திருந்துகாண இவளவுபயமானுல்
சொல்லவாவேணுமிவனை கொல்லவுநான்ருனே சக்த்தன் (இவ)

இவனுக்கிவளவாஞல் இவனினும்பெரியவன்
இராமனைச்செயிப்பதர்க் கிடமேது, இந்த
அவனியிலுயிர்மீ தாசையற்றவனுங்
கவன்முனெதிர்க்கவேண்டும் அவனேகொல்வான் றப்பாது. (இவ)

### விருத்தம்.

மனிதனொன்றனைக்கப்போமோ வலுத்தவரிவர்பாற்செல்லே ன்
இனியென்னசெய்வேனந்தோ இவனுயிர்த்தலைவியா ன
வனிதைஜானகியாமின்னுள் வனப்பினிலுயர்சிமாட் டி
அனநடைஇவளைநானே அணைந்திடஆவல்கொண்டே ன்.

### கைவிருத்தம்.

பைங்தொடிஇரதியுமிப் பாவையினெழிற்குநே ரோ
இந்தவல்லியைநீங்கா திருக்கின்ரூன்ராமனென்னு ஞ்
சுந்தரச்சுடிகைப்பார்த்த ளிடத்தினிற்றலங்காநின் ற
மந்தரத்தனைச்சேகிமணியை யெவ்விதம்யான்கொள்வே ன்.

இராகம், பியாகு. ரூபகதாளம்.

### பல்லவி.

வஞ்சியிவள் நெஞ்சிரங்கியே கொஞ்சவாராளோ
என் மிஞ்சுமையல் தீராளோ (வஞ்)

### அநுபல்லவி.

பஞ்சபாணன்றன் வெஞ்சரங்களும் பாயுதென்மேலே
கஞ்சமலர்க்கண்ணுற்பாராளோஎன்றன் காதல்தீராளோ
கட்டிமுத்தந்தாராளோ. (வஞ்)

## சரணங்கள்.

மங்கைஇவடன்செங்கமலம்சேர் வதனமுந்தனமும்
எங்கணும்புகழுங்கஜன் ரதசக்ரஜகனமும்
கண்டிழுக்குதென் மனமும். (வஞ்)

பாக்கியமென்செய்தேனோ இந்தப்பாவையைக்காண
பார்க்குள்யார்க்கும்கிலாக்யவதியாய் பார்க்கையிற்றோண
பகருதேஇவள் நாணம். (வஞ்)

மன்மதன்பாணம்பாயப்பாய வாடிநொந்தேனே
கன்முலைஇவளோரிட்டுப்பார்க்கக் கண்ணிற்காணேனே
கலந்தணைந்திட நானே. (வஞ்)

### விருத்தம்.

வனசமலர்மாலையொன்று கோவிலங்கின் வன்சரத்தில்விளங்க சிறுமானதன்மேல், அனவரதமாசைகொண்டா லாவதென்னை அவ்வாறுமென்னினும் யானவனைவிட்டு, வனிதையிவடனித்திருக்கும்வேளை நாடிமனிதனன்றோனுருவுதனை வகித்துக்கொண்டு, மனமுவந்தஇடத்திலவ்டனைச்சேர்ந்திஷ்டம் வந்தபடிமருவிநிதம் சுகிப்பேன்மன்றோ.

### ஷை விருத்தம்.

குவளையங்கண்ணி இக்கோதையைக் கொள்வனே ல்
இவளுடை வியோகத்தாலி ராமனிறப்பனே ல்
நுவலிளை யானுமன்னொடியிற் பொன்றுவ ன்
கவலைகொள்கரனுளைகாரிய மாகுமா ல்.

(வசனம்.) ஆகையால் ஜானகிதனித்து அவனைவிட்டு வெளியே வருகின்ற வரவை சமையம்பார்த்துக்கொண்டிதோ சமீபத்திற்றென்படுகின்ற கோவிதாரவனத்திற்றங்கியிருக்கின்றேன்.

நன்று நன்று இவ்விடத்தில் சடாயுவைக் காணப்படவில்லை, என் ஸரி ஸரி, நிச்சயமாய், தன்றமையன் ஸம்பாதியை வந்தனஞ்செய்துவரப் போயிருத்தல்வேண்டும்.

(எதிர்நோக்கி) ஓ ஓ இலங்கைத்தீவில் நின்றும் சூர்ப்பனகை வருகின்றனள்கொல்.

[எனநடக்கின்றனன்.]

[அப்பால்] சூர்ப்பனகி பிரவேசிக்கின்றனள்.

[சூர்ப்பனகி] வசனம். யானே பஞ்சவடியில் வந்திருக்கின்ற இராமன் மனையை என்னிமித்தம் கவர்ந்து வருவாயென்று மஹாராஜலங்கேசுவரனு லனுப்பப்பட்டு பஞ்சவடிதீரம் வந்துசேர்ந்தேன்.

கலிவிருத்தம்.

வந்துவஞ்சனன் வடிவம் புனைந் த
எந்தன் கண்ணினைக் கிலக்கதாயின ள்
அந்தமாளிட னண்டையீலேய தோ
சுந்தராங்கி நலங்கிரு ணோர்த்தியா ய்.

வசனம். நன்று நன்று, இவளை எவ்வாறபகரிப்பதென ஆலோசிக்கின்றேன் [இது நிற்க] கந்தர்ப்பசுந்தரனும் நீலோற்பலம்போல் சாமளகாத்திரனும் விளங்காநின்ற இவ்விராமன்பால் எனது நயனங்கள் செல்லவே காமனு லென்னிதயங்கவர்ந்து கொள்ளலாயிற்று.

கலிவிருத்தம்.

மதனையொத்தவம் மன்னவராமனெ ன்
னெதிரிற்றென்பட வென்மனக்கந்துக ம்
அதனிலேரி யென்னுசைகொடிக்கு ளே
சதிருடனவன் றன்னிடஞ்சார்ந்த தே

[ஆகையால்]

விருத்தம்.

ஒண்டியாயவனு லாற்றுமொரு சமையத்தில்நா னே
வண்டமர்க்குழலி யாமம்மைதிலி வடிவங்காட் டி
அண்டியேயேமகூட மதிலன்னே னுடனேசென் று
சண்டப்ரசண்டலீலை தான்புரிந்தினிது சேர்வே ன்.

[என] நடக்கின்றனள்.

[விராதன்] அடி சூர்ப்பனகாய் வா வா நல்வரவா.

[சூர்ப்பனகி] ஆ, விராதனு நன்றுயிருக்கின்றனைகொல்.

[விராதன்] அடி சூர்ப்பனகாய், இராஜாதிராஜ மஹாராஜலங்கேசுவரன் குசலன்கொல்.

[சூர்ப்பனகி]

கலிவிருத்தம்.

குவிபுயா சலக்கூற்ற விராத னே
கவலையற்றுக் களித்திடு காலமு ம்

அவனைவந்து பொருந்திடு மாகில்ந ற்
சுவமங்கெய்தும் விதிதுணை வேண்டுமால்.

[விராதன்] [தன்னுள்] இவனுக்கப்படிக்கு விசாரமென்கொலோ.

[வெளிப்படை]

கலிவிருத்தம்.

அந்தராம னரக்கர் குலத்தினை ச்
சிந்தமாய்ப்பதாய்ச் செப்புசபதமா ம்
இந்தச்சங்கதி யேற்றலங்கேசர்த ம்
ஐந்துநாலு செவியடைந்திட்ட தோ.

[சூர்ப்பனகி வசனம்] மஹாராஜன் கேள்வியுற்றதுந்தவிர மேனடக்கவேண்டியதைப்பற்றியும் அமைச்சர்களோடு ஆலோசனைசெய்து சாரனுகிய அகம்பனுல் பிறர் யாருமறியப்படாத யேதோ ஒருசமாசாரத்தை அக்கரனுக்கறிவித்துவிட்டு வேறுவிதங்களு முயர்ச்சித்துக்கொண்டிருக்கின்றனன்.

(விராதன்) [தன்னுள்] ஸரி ஸரி அதனுற்றான் அந்தக்கானுல் வெகு ஆத்தரத்துடனுபசரித்தழைத்திங்ஙனுப்பிடப்பெற்றேன்.

[வெளிப்படை] அங்ஙனமாயின், அரக்கர்களின் வதத்தின் பொருட்டாகத்தானிங்கு ஜனஸ்தானத்தில் இவ்வரசிளைஞர் எய்தினர்போலும்.

[சூர்ப்பனகி] ஓ ஓ விராதனே, கேட்கக்கடவாய், நமது மஹாராஜனி லங்கைச் சக்ரவர்த்தி தேடிக்கொண்ட சுயங்கிரதானர்த்தத்தைக் கேட்கக்கடவாய்.

[விராதன்] ஆதரத்துடன்] அஃதென்கொல், நன்ருய்க் கேட்கின்றேன் சொல்லக்கடவாய்.

[சூர்ப்பனகி]

இராகம் நாதநாமக்கிரியை, இந்துஸ்த்தான் கோட்டு.

பல்லவி

ஜனகரென்னும் இராஜரிஷி தானருக்கிறுர்.

அநுபல்லவி.

அனகமதிக்குலத்திலவ தரித்திருக்கிறுர் (ஜன)

(விராதன்) ஆம் ஆம் தெரிவேன் தெரிவேன்.

### அடுக்குமொழி.

ஈசபூசைவி லாசமிக்கவன்
ராஜனுக்கவன் நேசனல்லவா.

(தெரியேன் தெரியேன்.)

[சூர்ப்பனகி] ஆம் ஆம் அவர்தான்.

### விருத்தம்.

அன்னவன்றவகுமாரி ஆயிழையழகின் மிக்கா ள்
கன்னிகைசிதாதேவி கருதநெல்லாம் ராமன்மீ தி
லென்னவேதெரிந்துகொண் டிராமன்றனுருவம்பூண் டு
மன்னவனவளை நன்குமன்றலே புரியச்சென்ற ன்.

[விராதன்] தன்னுள், அடட என்னைப்போலவனும் இவளிடத்திலா சையை நாட்டியிருக்கின்றனன்.

### விருத்தம்

யானேஇப்போதவண்மேல் மையல்கொண்டேனிலங்கேசனதர்க்கு மு னமென்பெ ற்சொகி, பனோர்நன்மொழிபாடன் கருத்துக்கேர்க்கப் பரனு ருவந் தரித்தெ வ்வெருப யமாக, நாகாவிதங்களைலா முயர்ச்சைசெய்து நாடிநனியிருக்கின்றான் நன்று நன்றே, ஆனாலும்பெண்மயக்குப்பொல்லாதந் தோ ஆர்மயங்கார்முனிவர்களு மயங்கிடாரோ.

[வெளிப்படை] நன்று நன்று அப்பால் மேற்சொல்லடி.

### சூர்ப்பனகி விருத்தம்.

அதன்பிறகவ்விதேக னருமைப்பெண் கல்யாணத்தி ல்
இதுவொருசபதமென்று னென்னெனிற்றுதி கைலா ஸ
பதிசராசனத்தினோர் பணம்நனி முடித்தபேர்க் கு
வதுவைநடாத்தலாகு மெனவுரை வழுத்திட்டானு ல்.

(விராதன்) ஓ ஓ அது இராக்கதத்துவத்தினால் நமது மஹாராஜ ராவ ணேசுவரனால் முடிக்கப்படாத காரியமல்லவோ.

[சூர்ப்பனகி] ஆகையினாலேதான் அந்த இராமனென்பவனால் அந்தச் சானகி மணந்திடப்பெற்றாள்.

[விராதன்] அப்பால் மேனடபடிக்கை என்ன அதை விளம்படி சூர்ப்பனகாய்.

சூர்ப்பனகி விருத்தம்.

மனிதன்ஜனகியை மணந்துகொண்டானென்றே மனதிடிந்து தீராப்பொறாமைரோசம், அனுராகமிலச்சையுடனிலங்கை மீண்மேதிகபரவசனுகி அமைச்சரான, இனமானமாலியவான் முதல்வரோடு மேகாந்தத்தாலோசித்தெனது முன்னோன், கனிவுபெறப்பின்வருமாறுள்ளங்கொண்டான் கர்ச்சிதமாய்ச் சிலதுகிச்சியித்தான்மாதோ.

[விராதன்] எப்படி, மேல்ச்சொல்.

சூர்ப்பனகி விருத்தம்.

சிவசராசனமிறுத்த செய்கையை யெடுத்துரைத்துக்
குவிபுயாசலனுமந்தக் கோடாரி ராமன்றன்னை
தவவிலங்கேசன் மிக்கத்சணலெழக் கோபமூட்டி
அவனியில்ரகுவல்லோனை அதஞ்செய்யவனுப்பினனல்.

[விராதன்] ஓ அவனோ ஸமஸ்த்தமான க்ஷத்திரிய குலவதஞ் செய்தலென்ற சபதப்பெருங்கடலிற் கரைகண்டவன்.

நன்று நன்று மேற்சொல்லடி சூர்ப்பனகாய்.

சூர்ப்பனகி விருத்தம்.

பலமிகுத்தரகுராமன் மால்விலோடு பார்க்கவன்றன்மகன் பரசுராமன்றன்னை, கலங்கவுரைதந்து மதசக்தியெல்லாங் கவர்ந்துகொண்டு கடிந்துமிகக்கருதியன்னோன், நலம்பெறச்செய்திடு நித்யஜபதபாதி நற்கன்மபலனைத்துந்தடுத்துமிக்கச், சுலபமதாய்க்கொடிய வவமானஞ்செய்துந் துறத்தினன் வந்தவழி விரட்டினனல்.

[விராதன்,] நடுக்க வியப்புடன்.

விருத்தம்.

புலத்தியன்குலத்திற்றேன்றி புகழ்பெறமிலங்கேசன்றன்
பலத்தினையபகரித்த கார்த்தவீரியன்ப்ரதாபந்
துலைத்தவப்பரசுராமன் றயருடன்றேல்வியெய்தி
மலைத்திட அடித்தானென்றால் ராமனைவெல்வாருண்டோ.

(நன்று, நன்று, மேல் மேல், )

சூர்ப்பனகி விருத்தம்.

வினயவரசனனுமதியால் வித்திச்சிகுவன்முதலோர்கள்
கனிமந்திரஞ்செய்தேவல்செய கவிலுநாமமந்தலையாம்

மனதின்குடிலங்காட்டுமுடல் மாபிசாசங்கேகயன்ற ன்
றனையயாங்கைகேசியையுந் தயரதனையும்வளைந்தது வே.

(விராதன்.) எப்படி, மேல் மேல்,

(சூர்ப்பனகி). யாதொரு மந்தரைப்பிசாசு அயோத்தியாபுரியில் முத லில், கைகேசியென்ற பட்டமகிஷியினுடலில் பிரவேசித்து.

விருத்தம்.

கேகயராஜன்றனயாய் தசரதேந்த்ரன் கிளத்தும் வார்த்தியின்சொற் கேள்வியாலே, மோகமதாயவன்மக னிராமனுக்கு முடிசூட்டமுயன்றதுன் பால் மோசங்கண்டாய், ஆகையினாற்பரதனுச்கம் முடியைவைப்பாய் அரணி யவாசம்ராம னடையச்செய்வாய், வாகுபெறுமுன் வரங்களிரண்டும்நல்ல வாய்ப்படியோமகராசிவழியிதாமே.

வசனம். (எனக்கிண்டி மனம்பேதிக்கும்படி எடுத்துரைத்தமந்தரை யின் தந்திரத்தை யுட்கொண்டு அதற்கிசைந்தவளாய் ஆங்ஙனமே புரிகின் றேனென, கோபாகிரகத்தைச் சார்ந்த அக்கைகேயியின் பக்கல் தயரதன் வந் து, ஹா, ஹா, மின்னரசே, யிதேது புதுமை, என்னகஷ்டம் நேரிட்டது, ஹா, வேண்டாம், வேண்டாம், என்று தனனிரு கைகளாற்றழுவி ஆசுவாஸ ஞ்செய்ய, அம்மடநல்லாள்,

விருத்தம்.

மன்னவரேவெகுஞாயங் குறையொன்றில்லை மானம்வைத்துவரிசையு டனுண்டரிப்போ, தென்னவென்றுகேட்கவந்தீர் போம்போமென்ன இரு ந்ததயரதராஜன் மனங்கலங்கி, மின்னரசேயென்னகுறை விதனம்வேண்டா ம் வேண்டுவதெலாம் பெறுவைவிளம்பாயென்ன, முன்னமருள் வரமிர ண்டுங் கொடுப்பீரென்றாள் முனிவுதணித்திடுதி தந்தேன் முற்றுமென்றார்.

இவ்வுரைகேட்டெழுந்த கைகேசி.

விருத்தம்.

முன்னொரு வரம்பரதன் முடிபெற வேண்டுமெய் யா
பின்னொருவரமிராமன் பெருஞ்சடை முடிதரித் து
நன்னயக்கானகத்தில் நாடியே வாசஞ்செய் ய
மன்னவா அருள்வீரெண்டு வரங்களுமிதுவே என்று ன்.

(வசனம்.) இவ்விதம் மந்தரைப்பிசாசின், மயக்கத்தைக்கொண்ட கை கேசியின், கடினவார்த்தையைக்கேட்டதயரதன், அதிகசோபதாபங்களடைந் தவனாய் கீழ்வருமாறு புலம்பத்தொடுத்தான்.

(விராதன்.) எப்படி,

(சூர்ப்பனகி) ஆசிரியவிருத்தம்.

படியினில்மிகப் புதுமைகடினகற் குண்டாய்ப்படிப்ப தென்னிருகைமா னே
பதராதுநா விசைந்ததுவோ நின்மகனினும் பகர்கனவினுமன்புதா ன்
குடிகொண்டராமனைத்தாயினும் பெருமையாய்க்கொண்டானைமுடிதாங்கநற்
கோலமானவனை நன்னூல்வரில் முதல்வனைக் குளிர்காட்சிகாணவந்
துடிதுடிப்புடனுனையிகழ்ந்திடப்பழிதேடிதுர்க்கதிக்காளாகியே [தோர்
சுடுகானிலேகவருளென்றனையெனுவியைத்துறந்தெங்ஙனமுய்குவேன்
அடிபாவவுருவமே சுடிகையரவாய்க் கலையுமாகுமென் றறியனந் தோ
ஆனயில்லாளல்ல கருணையில்லாணீயுமல்லோஅரக்கிதா னே.

(இதுவுமது) விருத்தம்.

மானதனகேகயன்றன்றனையயாகிமாசிலிரவிக்குலத்தென்மனையாய்வா ய்த்து, தேனுெகிரம்போல்வாழ்ந்துவிடமாகிசெவ்வையென்றேனிருந்து செவியிழுத்தபான்மை, யானினிக்கிளர்த்துவதென்மாசண்டாளியெழிற்ப ரதனிதுகேட்கிலிசைவான்கொல்லோ, ஆனநன்னெறிதவறிமொழிந்திட் டாய்நீஅனியாயமனியாயமாகாதாகா.

(இதுவுமது) விருத்தம்.

நயனுவிராமனை இராமனைவிடேன்மற்றுநாடிடிலெதுவுநீவே ன்
அயனுனையரியானையென்மொழிமறுப்பையேலாருயிரிழப்பனதனு ல்
பயனுனக்கென்கொல்மாபாதகிதோதகிபாழ்நரகில்வீழ்வையந் தோ
கயனுவெடுத்தினியுரைத்திடேல்சுமுகமாய்க்காண்கைகைமகராசி யே.

(வசனம்.) இவ்விதமாய் சகிக்கொணுத சோகாக்கினியால் தகதகவெ ன்றெறிகின்ற இதையத்தொடு தயரதேந்திரன் தகித்துரைத்திடவே, செந்த ணற்பொரி கண்களிலெழச்சினங்கொண்டம் மந்தரைப்பிசாசம், அன்னவன் றனுடலிலும்புகுந்து, யன்றேஞன்சிந்தை குழம்பும்படி கலக்கிடவும், அப்போது கைகேசியென்னுங் கனிமொழியாள் அம்மன்னனுக்கு சுறுக்கென்றிட சாமூ ருவவிட்டதுபோலும் சிற்சில ஞாயத்தோடு கடினச்சொற்களால் அடியில் வருமாறு உத்தரித்தனள்.

(எங்ஙனமெனில்,)

இராகம் எதுகுலகாம்போதி. ஆதிதாளம்.

பல்லவி

மன்னவரேநீரும் அன்னியாயஞ்செய்திரோ மக்களிற்பக்கபாதமாமோ.

## அநுபல்லவி.

என்னயோஜனைசெய்தீர் தசரதராஜ னே
இளைமையல்லவேநீரும் யெந்தன்பிராணேசனே. [மன்ன]

## சரணங்கள்.

நேயமவளிடத்தில் நிஷ்டூரமென்னிடத்தி ல்
ஞாயமோஉமக்கீது ஞாலமென்னென்றோது ம்
நாயகநயத்தில், நீவிர்முனுரைத் த
வாய்மையைவிடுத்தீர், தீவினைதொடுத்தீ ர்
வண்ணமணிமகுடம் ராகவன்பூணு ம்
மகன்பரதனவர்க் கடிமையாய்நாணு ம்
எண்ணமிதுவோநல்ல திருக்கட்டுங்காணு ம்
எல்லாமறிவேனெனக் கிசைந்திடவேணு ம். [மன்ன]

சூதுசெய்யநினைத்தீர் தோதகிசக்களத் தி
போதனையோபூமி பொருக்குமோயென்சா மி
கோதில்நற்குலத்தி, லேதனுவெடுத்தீ ர்
சாதனைவிடுத்தென், மீதருள்பொருத்து ம்
சந்ததமும்பரதன் முடிதாங் க
சதிர்வனத்தில் ராமன்வசித்தோங் க
இந்தவரங்களளிப்பீர் மெய்வீங் க
யென்மனங்களிக்கு மிதுநல்லபாங்கா ம். [மன்ன]

(என்றே,)

(விராதன்.) ஸரி, ஸரி சூர்ப்பனகாய் மேலுளசங்கதி நன்சறியலாயிற்று.

### விருத்தம்

இனிச்சொல்வதென்னேயெல்லாமெடுத்துரைத்ததுபோற்ற னே
தனிச்சனைசூழ்விருத்தன்தயரதனெனினுங்கைகை க்
கனிச்சுவை வாயாள்சொல்லக் காமுகனுன தா லே
வனத்தினில் ராமன்றன்னை வரிசையா யனுப்பிவைத்தா ன்.

(சூர்ப்பனகி.) ஆம், ஆம், அவ்விதம் இராமன் வனத்திற்செல்லவே.

## விருத்தம்.

இலக்குமன் யெழில்வைதேகி யிவர்களும் ராமன்பின் னே
விலக்கொணு நிழல்போற்சார்ந்தார் வெவ்விராக்கதப் பேய்நீங் க
துலக்கமாய் மகன்பிரிந்த சொல்லதை யறிந்தமன்ன ன்
கலக்கமாயுயிரிறந்து காலனூர் சென்றான் மா தோ.

(விராதன்.) ஹா, ஹா, ஓ நம் அரக்கர்வேந்தனால் தயரதன் ஆவிபொன்றினன்கொல், நன்று நன்று, மேல் மேல்.

(சூர்ப்பனகை) வசனம். அப்பால், இதைத்தெரிந்த பரதன் மிகவும்வருத்தமடைந்து தந்தை கடன்முடித்து வனத்தில் இராமனையடைந்து துக்காக்லாந்தனாய் அடியில்வருமாறு புலம்பிப் பிரார்த்திக்கின்றனன்.

(எப்படியெனில்,)

இராகம் கௌளிபந்து. ஜம்பைதாளம்.

## பல்லவி.

இதற்கோ உடம்பெடுத்தேன், யென்பாவமேதோ ஸாமி
இப்பழிக்காளானேன், என்னமாயவாழ்வே னோ
இராகவா, இராகவா, இராகவா, ராகவா. [இதற்]

## அநுபல்லவி.

கதைகளிலாவதுண்டோ, கனிஷ்டாதிகார ம்
காணேனேயித்தூரம், கானில்வந்ததின்னேர ம்
கஷ்டமே, கஷ்டமே, கஷ்டமே, கஷ்ட மே. [இதற்]

## சரணங்கள்.

தமையனைக்காட்டிலோட்டி, தம்பியச்சொத்தைக்கட் டி
சதிசெய்தானென்றேசுட்டி, சாற்றிடுமேவையந்திட் டி
தர்மமோ, தர்மமோ, தர்மமோ, தர்மமோ. [இதற்]

நெஞ்சம்பதைக்குதையோ, நீபரதேசிபோ லே
நிற்கின்றாயென்முன்னாலே, நிந்தைக்கிடமாய்மே லே
நீதமோ, நீதமோ, நீதமோ, நீதமோ. [இதற்]

சொர்னமணிமகுடம், தூக்கசக்தனேசொல்லா ய்
துரையேநீயேயல்லாய், சூட்டியாள்ஜகமெல்லா ம்
சொல்லினேன், சொல்லினேன், சொல்லினேன், சொல்லினேன். [இதற்]

(என்றே கொய்யோ முறையோவென்றழுது கறைய.

## ஷெவிருத்தம்.

இப்படிவே ண்டிநின்ற யெழிற்பரதனுக் கிராம ன்
பற்பல புகன்றுதேற்றி பாதுகை தம்மையீந் தே
அப்புனல் வாவிசூழும் அயோத்திக்கே யனுப்பிவிட் டு
வெப்புறுங் கானகத்தில் மேவியுலாவு கின்று ன்.

(விராதன் வசனம்.) சரி, சரி, சூர்ப்பனகாய் சங்கதிகளெல்லாம்நன்கறிந்து கொள்ளலாயிற்று. ஆனால் இவ்வளவு விருத்தாந்தத்திலும் மஹாராஜனுக்க னர்த்த சம்பாதனம் ஒன்றுங்காணவில்லையே, முதன் முதலில் இராமனை வன த்திற்குவரும்படிசெய்து அவனது பிரபு சக்தியைக்கெடுத்துவிட்டான். அத னுல் மந்திரசக்தி உற்சாகசக்திகளும் தானேகெடுதலடைந்தது, ஆகவே அவ ன்செய்திருக்கிற மந்திராலோசனையும் நமது மஹாராஜனுடைய நடபடிக் கைகள் அதி நிபுணமாயிருக்கின்றது.

நன்று, நன்று சூர்ப்பனகாய் நிரம்பசந்தோஷம் நீ இங்குவந்த வரலாற் றை யெடுத்துரைப்பாயாக.

(சூர்ப்பனகி தன்னுள்) அடுக்குமொழி

வந்தனன்ராமனை, யெந்தவிதத்திலும்.
சிந்தைமகிழ்ந்துபு, ணர்ந்திடவேண்டியே.

(சூர்ப்பனகி.) விராதனிடம் வெளிப்படை.

ம.

என்வரலாற்றைக்கேளா யிராவணேச்சுரனுக்கா க
கன்மூலைச்சனகியென்னுங் கன்னியைக்கானினின்று ம்
என்பெருமாயையாலே யெடுத்துக்கொண்டேகவந்தே ன்
தன்மையாய்மன்னனென்பாற் சாற்றியேவிடுத்தான்கண்டா ய்.

(விராதன் தன்னுள்.) அவடானிவ்விராதனு லபகரிக்கப்படப்போகின் றனளே.

வெளிப்படை.

உனக்கிதசாத்தியமாகும்.

(சூர்ப்பனகி தன்னுள்) விருத்தம்.

என்னுடை விவசாயங்க ளிராமனை யுபாயமா க
மின்னவள் சனகமாதின் வேடத்தை யெடுத்துக்கொண் டு
தன்னமை யுடன்போய்க் கிட்டித்தழுவிட வாதலா லே
இன்னவன் றனக்கிணங்க யிப்படிப்புகல்வேன் மா தோ.

(வெளிப்படை.) அதனாற்றான் இலங்காபுரிக்குத் திரும்பச்செல்கின்

(விராதன்.) தன்னுள், சந்தோடத்துடன் என் உத்தேசகாரியத்தில் நேரிட்டிருந்த பெரிதான விகாதமானது விலகிற்று, நன்று நன்று நிரம்ப சந்தோஷம்.

(வெளிப்படை.) ஆம், ஆம், அவ்விதமேசெய்கிறது சூர்ப்பனகாய்.

(சூர்ப்பனகி.) ஓ, விராதா நீரெவணிருந்திவணி ராமாச்சிரமத்திற்கு வந்துசேர்ந்தீர்.

(விராதன்.) யானோ,

அடுக்குமொழி.

மாவனந்தனில், மேவுராமனை,
ஆவிமாய்த்திட, த்தாவிவந்தனன்.

இராமன் வதைசெய்யப்பட வேண்டியவனென கரனாலனுப்பப்பட்டேனடி சூர்ப்பனகாய்.

(சூர்ப்பனகி தன்னுள்) விருத்தம்.

கானில்ராகவ னைக்கண்டு கருத்தெலா மவன்பாற்செல் ல
மானமிலனங்கனென்னை வாட்டவுமிகமயங் கி
ஜானகியுருவங்கொண்டு தழுவிடத்தருமென்றோர்ந் து
காரென்றுமினைக்கததெய்வம்நண்ணியொன்றெண்ணிற்றின்றே.

ஷை கொச்சகக்கலிப்பா.

வல்லவனைக் கொல்லுதைக்கோ வந்தாய் மகபா வி
புல்லவெண்ணு மென்மனத்திற் பொன்னூசி யூடுவிட்டா ய்
நல்லமனப்பால் குடித்தாய் நன்றாநன் றிருந்திருந் தே
தொல்லைசெய் துட்டப்பயலே தூரத்திற் செல்லா யோ.

(வெளிப்படை.)

ஹா, விராதா, உன்னாலுமீதாகாத காரியந்தான்.

(விராதன்.) தன்னுள் இதனாலென்ன.

கொச்சகம்.

பைங்கிளி யைத்தங்கப் பதுமைத னைமாஜன க
மங்கையைக் கவர்ந்தவனை மருவி வினையா டி
பொங்குசுக மெய்திடவிப் போதிச்சை யானதினா ல்
இங்கிவட் கிணங்கவுனாத் திவளையனுப்பிடுவே ன்.

ஆகையாற்றான் சூர்ப்பனகாய் யென்னுலாகாதென்பதைத் தெரிவிப்ப தற்கு கரனிடமிதோ போகப்போகின்றேன்.

(சூர்ப்பனகி.) தன்னுள், யான்நினைத்தகாரியத்தில் தெய்வாதீனமாய் துரிதநிவாரணமாச்சுது.

வெளிப்படை.

ஆனலப்படியே செல்கிறது.
(என யிருவருஞ்சென்றனர்.)

[அப்பால், பஞ்சவடியில் பன்னகுடியில் வாசஞ்செய்கின்றவிதமாய் இராமனும் சீதையும் பிரவேசிக்கின்றார்கள்.

(இராமர்.) அடி, பிராணநாயகி, ஜானகி, என்னருகில்வா, பங்கஜலோசனி.

விருத்தம்.

சகிதரன் றன்சரா சனமென்னஅற்பமோசை லமொப்பாமலேதாக்கி
விசையுடனெனையு மினல்செயுந்துவச மீனவன்வில்லென்ன மிதமோ
இசைகொளும்பரசுராமன் றன் வீரமென்னசற்றெளியதோ எல்லாம்
விசயஞ்செய்துனை நான்மேவிடப்பெற்றாய் மிகவெளிதாகவே மின்னாய்.

(சீதை) புன்னகைகொண்ட வதனத்தினளாயிருந்தனள்.

(இராமர்) சிங்காரப்பதநியம்.

சொன்னவான்மின்னலே சுகபோகச்சென்ன லே
தோகைஜானகி தளிர்ச்சுந்தராங் கி
அன்னநன்னடையாளே அழகுள்ளதுடையா ளே
ஆருயிர்க்கண்ணாட்டி அருகில்வாரா ய்
துன்னுங்குயிற்பேடின் றொளியென்செவிகளு டி
துயருற்றதவைகள் சுகிப்பதற் கு
மன்னெவ்வனத்தாளே மதுரவசனத்தா ளே
வாய்திறந்தொரு வார்த்தைவழுத்துவா யே
பொன்னளினச்சோபை வகித்திருத்தல்சரிதா ன்
பூவைநின்முகமளித் தொனிசெய்கின் ற
நன்னளினச்சிறப்படைதல் நன்றேயாகு ம்
நங்கையேதங்கைமலேக் கொங்கையா ளே.

இராகம் நவரோஸ். ரூபகதாளம்.

கண்ணிகள்.

வாய்திறந்தோர் வார்த்தைசொல்ல மனமும்வல்லை யோ
வஞ்சியென்றன் பாலுன்கிருபை வரவுமில்லை யோ

நேயமுடன் நானயந்து நிகழ்த்துமேனை டி
நீயதையென் றாதுசும்மா நிர்க்கின்றாய டி
யேகாந்த வேளையிலும் யென்னமௌன மோ
என்னுடன்பே சாமலுனக் கெங்கேகவன மோ
தோகாயுன் இன்சொற்கேட்கத் துடிக்குதென்கா து
சொல்வதற்குப் பிரியமானால் சுருக்கில்நீயோ து.
(சீதை.) சிநேகத்துடன்.

இராகம் சஞ்சு. திரிபுடைதாளம்.

பல்லவி.

ஸாமீபொருத்தருள் சரணஞ்சரணம் மென்

அநுபல்லவி.

ஸ்ரீ மானுமதுபுகழ் சிந்தித்திருந்திட்டேன்.
சிறிதும்விகற்பமில்லை சீதைநான்கும்பிட்டேன். (ஸாமி)

சரணங்கள்.

பணபவில்லொடித்ததும் பரிந்தென்கைபிடித்தது ம்
குணபூஷணானந்தக் கொள்கைநினைவிற்கொண் டு
குறித்துத்திகைத்திருந்தேன் குற்றமிதனைக்கண் டு. (ஸாமி)

வலிகொண்டபார்க்கவன் மதங்கொண்டெதிர்க்கவு ம்
நலங்கொண்டபலன்யாவும் விடுத்தோடவுநான்கண்டே ன்
நாதாஉம்பலமுன்னி நான்றிகைப்புகொண்டே ன். (ஸாமி)

ஆகையால் அடியாள்மீது சற்றுப்பொருத்து தயைசெய்தருளல்வேண்டும்.

(இராமர்.) ஹா, பிராணகாந்தே இதுவென்சொல், தயைசெய்தருளல் வேண்டுமெனப் பிரார்த்திக்கின்றாய், ஒரு விதத்திலும் நீ குற்றஞ்செய்ததாய்க்காணப்படவுமில்லையே, எனக்கு கோபகாரணம் யாதொருவிதத்திலும் தோன்றவில்லை.

பின்னை, காந்தே கேட்கக்கடவாய்.

விருத்தம்.

கைபினிற்கிடைத்தஇராச்சியம் விடுத்துக்கருதியெங் குருமொழியாலே,
வெய்யகானகத்திலெய்தியவென்னை விரும்பியேசிந்தைநோய்கொண்டேன்,
அய்யர்விண்புகவும் அரக்கர்சஞ்சார அதிபயங்கரவனமிதிலே, தையலெந்துயர்கடவிர்ப்பதுன்சகசஞ்சரிப்பன்றோசந்திரமுகியே.

சீதை விருத்தம்.

மானத மெவன்மணாள மகராஜ ராமரா மா
தீனதயாளோ நின்றன் றிருச்சன்னிதானத்தா லே
கானிலம்புக ழயோத்தி நன்னகர் தனிலுமிந்த க்
கானகந்தனிலே மெற்குக் களிப்பதிகரிக்கு தைய் யா.

(இராமர்.) ஆம், ஆம், நீ சொல்லுவது ஸரி, இதோ இங்கே பார்க்கக் கடவாய்.

விருத்தம்.

எவ்வளவற்பமச் சிறுமியர் கானமிவ்வளி இசைத்திடுமிசைக் கே
இவ்வனக்கரியின்கன்னவாத்தியத்திற்கெதிரிலெப்பேரிகைமுழக்கம்
செவ்வையம்பலவச்சயனமிங்கிருக்கத்தேடுமோ தூவியினம ளி
திவ்வியமதுரக்கனியுணவிதுமயோத்தியைமறந்திடச்செய்யு ம்.

(சீதை.) (வசனம்) மகராஜ விசித்திரவிசித்திரமாய் மிருககணங்களென்ன பட்சிகணங்களென்ன இவைகளின் விளையாடலோடு விளங்காநின்ற இவ்வரணியப் பிரதேசமேஎன்மனதிற்கு மிகவும் திருப்திகரமாயிருக்கின்றது.

(இராமர். ஹா, பிராணநாயகி நன்றாய்ப்புகன்றாய்.)

விருத்தம்.

நீர்க்கடப்பதனிற்றோகையைவிரித்து நிர்க்கின்றமயிலினம்பாரா ய்
தீர்க்கமார்நயனமானினந் தழையைத்தின்று வாய்மென்றுகொ ண்டிருக்கும்
ஏர்க்குமத்தகத்தாலுயர் நெடுஞ்சினையை இபத்திரள்ம ண்டியிட்டிடிக்கு ம்
பார்க்குமிவ்வனம் யார்க்குநற்களிப்பாம் பங்கயமங்கையாம் நங்கா ய்.

[இன்னமும், அடி யென்னுயிர்த்தலைவி.]

(வசனம்) இதோ, இதோ மாமரக்கிளையில் மாந்தளிர் அருந்தி அழகிய குயில்கள் இனிமையாய் சப்திக்கின்ற கோலாகலத்தைப்பார்.

இக்கொடிகள் படர்ந்திருக்கும் விந்தையைப்பார்.
களிப்போடுளையாடுகின்ற கிளிப்பேடினைப்பார்.
நடையிலழகிய பிடியினைப்பார். அடி காதல் கண்ணாட்டி.

இராகம் கானடா. ஏகதாளம்.

## பல்லவி.

அடிகாதலி இந்தக்கானமே அதிசோபையாலுனக்குச் சமானமே. (அடி)

## அநுபல்லவி.

வடிவிற்சிறந்த மதிவாண்முகி
மங்கைஜானகி
சுமுகி
நாயகி. (அடி)

## சரணங்கள்.

என்மனோகரி நின்னளகபாரத்
தெழில்வகித்தே இலங்குதேமயூரம்
பொன்மானினநோக்கம் புகழுன்கண்ணின்சீராய்ப்
பொருந்துதே நேராய்
பூவையே நீபாராய். (அடி)

இபமஸ்த்தகம் இணை முலைபோலும்
இளந்தளிருன்கைக் கிணை யாகலாலும்
சுபநற்குணசுந்தரி எக்காலும்
சோபைமென்மேலும்
துலங்குவதினாலும். (அடி)

குறலோகுயில் கூவிக்காட்டுதே
கொடிநின்னிடைபோல் பாராட்டுதே
பிறைநுதலாயுன் பேச்சைநாட்டுதே
பெடையஞ்சுகம்
பிடிநடைகூட்டுதே. (அடி)

(சீதை.) ஆசையுடன், தன்னுள். (வசனம்)

எனது மாமனார் மகன் என்னை வர்ணிக்கத்துடங்குகின்றனர். ஆகையால் இவர் மனதை வேறுபக்கந்திருப்புகின்றேன்.

(வெளிப்படை.) மகராஜ் இங்கே இப்படித்திரும்பல்வேண்டும்.

இராகம் பந்துவராளி. ஏகதாளம்.

## கண்ணிகள்.

வெண்டாமரைத்தண்டென்ன நிர்ம்மலகோமளமாய்
விளங்குமிகத்துப்பற்கள் மின்ன இவை
கண்டால்யார்க்கும்பீதி கரமாய்விஸ்தீர்ன்னமாய்க்
காணுமுகங்களுடன் துன்ன

விளைகன்னிலவெனவே சரீரங்களுட ன்
விளையாடுகின்றதிதோ மன் று ென்
வளலேயென்பிராணநாதா யென்னமிருகங்களி வை
வழங்கும்பெயர்தானிவைக்கென் ன
க்ஷீரஸாகரத்தில்வெண்டிங்க ளொழுவெண்டி ரை
சேரவருநுரை போ லே மிக
சேர்பெருவெண்மையாய் அழகாய்விளங்குத ன்
நீண்டவால்வீசிக் கொண்டிப்பா லே
லோலவிழிகளுடன்நிற்கும் இவைகளை வை
லோகநாதனே சொல்லுவீ ரோ.

(இராமர்.) அடி, ஜனகநந்தனி, எனதாருயிர்க்கண்ணாட்டி.

இராகம் பூரிகல்யாணி.

கண்ணிகள்.

தாலர்புகழுமடி கோலமணிவிளக் கே
ஜானகியே இதைச்சொல்வே னே எழிற்
பாலசிங்கங்களைப் பார்த்துச்சவரிமான்க ள்
பதுங்கிநிற்கின்ற திவைதா னே
காதலியேஅரிகள் விளையாடுவதுங்கண் டு
கவரிமான்கள் பயந்தொளிப்பது ம் குகை
மீதுநின்றாய்ந்து கடுவாய்க்கிடாக்க ளை
விரட்டிக்கடித்துத்தின்று களிப்பது ம்
காட்டுப்பன்றிகளிதோ மேட்டுத்தலத்தைமூக்கா ல்
கடுந்தாவாய்ச்செய்வதுங் காண்டியா ல்
சேட்டையாய்க்கவிகள் தேன்கூட்டையிழுக்கவீக்க ள்
சிறிக்கடிப்பதும் நீகாண்டியா ல்.

(சீதை.) (வசனம்) நோக்கி, வாஸ்தவந்தான் இதோ இமிசவிருக்ஷத்தின் கிளைகளிற்றூங்குகின்ற தேன்கூட்டுகளில் ஒவ்வொன்றில் பதக்கு முக்குறுணி தேன் இருக்கலாம். அதில்வடிகிற தேன்களை வானரங்கள் குடிக்கமுயல, அக்கடந்தைகள் முகத்திற்கொட்டிவிட கீச்சுப்பீச்சென்று கத்திக்கொண்டு சிதறியதேனைக்குடித்து திரிகின்றன.

(இராமர்.) ஆம்.

(சீதை.) இதுவெல்லாம் அர்த்தபரன்களுடைய பிரகாரமாயிருக்கின்றது. எப்படியெனில், ஒருவன் சேர்த்துவைப்பதை மற்றொருவன் அனுபவிக்கின்றானன்றோ.

தேனீக்களால் தேடிவைத்தமதுவை பலவானுகிய மனிதன் பறித்தனுப விக்கின்றானல்லவா.

(இராமர்.) தன்னுள், இவர் அர்த்தபாவகை இல்லையென்றென்னிடத் திலிவளுக்கெண்ணம்.

(வெளிப்படை.) ஒருவன் சேர்த்துவைப்பதும், அதை மற்றொருவன் அனுபவிப்பதும் பாக்கியவசத்தினுலாகும்.

(இதோபார்.)

## விருத்தம்.

புத்தமுத னையதேனை பூவையே மாரன்றே டி
வைத்தனன் கின்னுதட்டில் மாதவஞ் செய்ததா லே
சித்தமதுவந்து பானஞ் செய்கின்ற இந்தநா னே
இத்தலமிருக் கின்றேனே இந்தவா ெறுக்குமா தோ.

(சீதை.) தன்னுள், வல்லவர்செய்யும் பரிகாஸம் வர வர மிஞ்சுகின் றது என்றிலச்சையுடன் தலை கவிழ்ந்திருந்தனள்.

(இராமர்.) தன்னுள், இப்பொழுது இந்த என்னுடைய வார்த்தையி ஞல் இவளடைகிற இலச்சை அதுவும் ஓரழகாய் ரமணீயமாயிருக்கின்றது.

(எங்ஙனமெனில்,)

## வெண்பா.

புளகக்க போலத்தின் பொற்பி னுெடுங்காதி
லுளகட் புரைவிழிக ளோடும்—வளமிக்கும்
தன்முகத்தை மட்டுமென் றிச் சற்றுந் தளருவென்
நன்மன த்தையும் வணக்கி னுள்.

நன்று, நன்று, ஆகையால் வேறு காண்பிக்கின்றேன்.

## அடுக்குமொழி.

(வெளிப்படை.) காவியங்கணி, ஆவியானவென், றேவிஜானகி, மே விநோக்குதி.

## விருத்தம்.

துப்புதல்நின்னுமிழ்நீரின்நனைவின்றித்தானுப்பூச்சொரியாநிற்கு ம்
ஒப்பில்வனப்பேந்திழைநீபுனைதற்காய்க்கேசரிசுகந்தமோங்கு ம்
அப்பரிசாலாங்கங்கேயிருந்துவந்தஅளிகணமொய்த்தழகாய்நிற்கு ம்
செப்பரியநிறையொழுங்குன்வேணிதனக்கிணையாகுஞ்சிறப்பைக்காண்பாய்.

(சீதை.) தன்னுள்,

### விருத்தம்.

என்கணுக்களிற் சங்கர்ப்புதெசையில் யெதிரிலிரகு வல்லோனிருந்து
புன்சிறிப்புட னின்பவின்பங்களாய்ப் புகல்வசனுதியாந்தொழிற்கள்
நன்கியற்றிடுமுன்றைகளெவ்விதஞ்சொல்ஙனவிலுமென்முனம்நன்ருய்
வன்புயத்தினரவ்விதஞ்செய்யவும் மகிழ்வுற்றேன்விர்தைமாவிந்தை.

### அடுக்குமொழி.

(வெளிப்படை.) மாமனுர்க்கு மனமகிழ்மைந்தரே, மாமனுளரே வரிசைநோக்குவீரே.

### விருத்தம்.

புகழ்மழைக்காலம் பொருந்திடுாளம் புயலெனச்சாமள வணமாய்
மிகரமணீய கோமளமாகி மேம்படுசீதல குணமாய்
திகழலர்ப் பூங்கொத்தினங்களோ டழகாய்ச்சீர்வனத்திவ் விடஞ்சிறக்க
பகரதசியாந் தருவிதுநோய்ப் பரிந்துவாழ்கின்றது பாரீர்.

(இராமர்.) தன்னுள், பலே பலே, இவள் என்வார்த்தைக்கு பதிற்சொல்லுகிறமுறையாய், நம்மை மிகச்சாதுரியமாய்க் கேலிபண்ணுகின்ருள் நன்று நன்று.

(வெளிப்படை.) அடிவனதரிசன குதூகலினீ, ஸர்வாபரண பூஷிதாலங்காரீ, அடி ஜானகி.

### இராமர் விருத்தம்.

பஞ்சவர்ன்னமாந்தாதுக்கள்பக்கல்ப்படர்ந்தொளிபரவிடப்பாய்ந்து
மிஞ்சுவேகத்திலுடல்வெடவெடர்த்துமேவிடுகிரிநதிபாராய்
கஞ்சப்போதினிலஞ்சங்களுடற்கலகத்தாலிளைச்சலிட்டெழும்பும்
அஞ்சத்தங்களோசினவதியுன்றனமைமணிச்சத்தம்போலாமே.

(சீதை.) விலக்ஷணபாவத்துடன் தன்னுள், (வசனம்) நன்று நன்று, அண்ணல் மாமனுர்க்கருமை மைந்தனுர் முன்னம் வனப்பிரயாணகாலத்தில் என்னுல் மிக மிகப்பிரார்த்திக்கப்பட்டிருந்தும் என் அனுகமனத்தைத் தடுத்துவிட்டாரென்று கோபங்கொண்டவளாய் புருவங்களைநெரித்து முகத்தைமாற வைத்துக்கொண்டு அதிவிரைவாய் ஙானந்தப்புரஞ்சென்ற எனது கமனத்தையும் அப்போது சப்தித்த யெனது மணிமேகலையின் சப்தத்தையும் நினைத்துக்கொண்டெனக்கு ஞாபகப்படுத்துகின்றனர், நல்லதிருக்கட்டும் யானிவ்வண்ணம் புகல்கின்றேன்,

(வெளிப்படை) விருத்தம்.

அரக்கர்சஞ் சரிக்குமிந்த அடவியில் முனிவர்தங்க ட்
குரத்திறு லபயமீந்த உமையடுத் திட்டவெற் கு
திரத்தொடு மப்யமாகச் சீர்வனத்தினி லெஃனென் ன
கருத்துக் குகந்தவைக ளவையெலாங் காண்கலா மே.

[இராமர்] கேட்டுக்கொண்டே, சற்றுதூரத்தில் நளினலோசனங்களை நாட்டினர்.

விருத்தம்.

மேவுயானைமுடி கோவையானஒரு வீரசூலமொடு மாவின ம்
சாவமாறுபொரு தீவியாக்கிரக சருமமான உடைதானுமா ய்
கோவையானவிழி ஆலமானஉட லானுமாகிவெகு கோரமா ய்
கோவிதாரவன மூடிலாவிவரு கொலையரக்க னிவனோர்கொ லொ.

ஓ, இது தப்பி இலக்குவன் அறிகின்றானில்லை.

[அப்பால்] இலக்குவன் பிரவேசிக்கின்றனன்.

[இலக்குவன்.] ஓ, ஓ, இவன் யாவனோ ஓரிராக்கதன்கோவிதாரவனத்திற் பிரவேசிக்கின்றனன், இவன் யார்கொலோ.

நல்லதிருக்கட்டும், இவனை இப்பொழுதே எமபுரிக்கேவிவிடுகின்றேன்.
[என] ஆயுதக்கிரகணத்தைச் செய்கின்றனன்.

[சீதை.] மற்றோர்பக்கம்வாய்ப்பொடு நோக்கி, ஓ மாமனுள என்மாமனார் மைந்தரே.

விருத்தம்.

மலையிலுப்பைத்தோப்பிதன்றாகன்னிகாரவனமாமிதோவருவ தரக்கனன்று, பலவிகற்றுப்பறகளோடார்க்குமிக்கப்பயங்கரமாயிலங்குகின்றமுகத்தினோடும், அலையுஞ்சுனைக்காய்களெனமூலைகளோடும்அதனினுமுன்னதங் காட்டுமுதரத்தோடும், நிலையிலுந்திக்கிடங்கொடும்விரூபமானநீலநிறக்கொடியநிசாசரியாமன்னே.

[இராமர்.] எங்கேபார்க்கின்றனை, யானிங்ஙனமன்றோ வடுத்துளைக்கின்றனன்.

(சீதை.) நோக்கி, அங்ஙனந்தோன்றுவதரக்கனன்றே, அண்ணல் செங்கமலக்கண்ணனேயான அழகுளநீவிர்தானன்றோ.

[இராமர்.] தன்னூள், ஓ இவனென்னை இராக்கதனாகவும் வர்ணித்துக் கொண்டு பரிஹஸிக்கின்றான் கொல்.

திரும்பவும் செங்கண்பரப்பி,

[வெளிப்படை.] ஆச்சரியமாச்சரியம் ஓ, ஓ, திரும்பப்பார்க்கையில் இராக்கதனேஎன்ரூபத்தைத்தரித்துக்கொண்டவனாய்க்காணப்படுகின்றனன்.

(சீதை.) முன்னோக்கிய திசையினிற் கண்மலர்பரப்பி, வியப்புடன் ஓ, ஓ, இதோ கன்னிகாரதோப்பிற் பிரவேசிக்கின்ற இவ்வரக்கியும், எனது ரூபத்தைத் தரித்துக்கொண்டிருக்கின்றனள்.

வாய்த்தமனாள மாமனார் கண்மணியே நோக்குக நோக்குக.

[இராமர்.] பார்த்து, ஆச்சரியத்துடன் அடட, இவர்களுக்கிவ்வுருவத்தால் யாது பயன் கொல்.

(சீதை.) இந்தக் கிரிசிகரத்தினின்றுங்கீழிறங்கி இவ்வேடிக்கையைக் காண்போம்.

[இராமர்.] அங்ஙனமன்று இங்கிருந்தே பார்க்கின்ற நமக்கு சுற்றி ஒருயோஜனை தூரமட்டுமுள்ள யாவையும் நன்கறியலாகும்.

[இலக்குமன்.] திரும்ப நோக்கி வியப்புடன் அந்தோஅந்தோ.

தோச்சகம்.

கொல்லவென்றே ஆயுதங்கள் கொண்டுவரு முன்னம்
வல்லரக்கனெங்கோ மறைந்திட்டான் மாயமதாய்
சொல்லுபிரதிசகினையால் துட்டனை வதைத்திடவே
வில்லினோடாகவனே மேவினன்கொல் மெய்யிதுவே

[அங்ஙனமன்றே.]

விருத்தம்.

தனுவிடக்கையிற் றங்கிடக்கூர்மைத் தங்கப்பட்டங்களோடெழிலாய்
கனகநன்னிறமாய் கங்கபத்திரமார் சரம்வலக்கையினிற் கலிக்க
நனிநடக்கின்றான் நாயகராமன் நவிலரக்கன் மறைந்திட்ட
தனியிடம் நாடலெனவங்குமிங்கும் தாமரைக்கண்ணொளிதழைக்கும்.

(சற்று நிதானித்து, அங்ஙனமாயின் ஜானகிப்பிராட்டி யெங்ஙனம்.

ஸீதாப்பிராட்டியும் ஸ்ரீ ராமச்சந்திரரும் இந்தப்பருப்பதச் சிகரத்திலன்றோ யேறினார்கள்.

எந்தாய் சீதாப்பிராட்டியைத்தனியாய்விட்டுவிட்டு ஆர்யஸ்ரீராகவர்தான் மாத்திரமாய் கீழிறங்கிவிட்டார்கொலோ.

என்று கிரிசிகரத்தை உயரநோக்கி ஆச்சரியத்துடன்.

இராகம் பியாகு. ஆதிதாளம்.

## பல்லவி.

அண்ணனிதோ மாயமலையில் வீற்றிருக்கிறான்.

## அநுபல்லவி.

வண்ணமணிஜானகியாம் மாதுடனன்பாகவே
கண்ணனுந்தின்னனுங் கார்நிறத்தவண்ணனும். (அண்)

## சரணங்கள்.

கங்சபத்திரம்புனை சரமுங்கார்முகமு ம்
கையழகும்மலர்ந்த அரவிந்தமுகமு
தங்குகெம்பீரமொளிர் மணிமார்புமென்சொ ல
லையியாம், பூமகள் ஜானகிமணாளனென்னு ம் (அண்)

வந்தஅரக்கன்அவனே ராமவேடம்பூண்டனை
வஞ்சகமாய்வருகின்றானென்றறிந்துகொண்டனை ன
பைந்தொடிஜனகியுடன் பாரமலையேறி யே
பங்கயக்கண்களால் யெங்கெங்கும்பார்த்துக்கொ ண் (டண்)

(வசனம்) நல்லதிருக்கட்டும், இதோ இந்த செடிகள் கொடிகள் படர்ந்தடர்ச்சியாய் நெறுங்கியிருக்கானின்ற வனமார்க்கத்தோடே மறைந்து மறைந்து பின் சென்றே இவ்விந்தையைப்பார்க்கின்றேன்.

என, மறைந்து மறைந்து நடக்கின்றான்.

(அப்பால்) இராமவேடம்பூண்ட விராதன் பிரவேசிக்கின்றான்.

(விராதன் எதிர்நோக்கி) ஓ, நன்று நன்று, அதோ கன்னிகாரவனத்தினின்றும் அந்த ஜானகி அடுத்த செண்பகாடவிக்குள் வருகின்றாள்கொல்.

நன்று நன்று, கொஞ்சம் கிட்டி நடந்துபார்க்கின்றேன்.

(அப்பால்) சீதாரூபதாரியான சூர்ப்பனகி பிரவேசிக்கின்றனள்.

(சூர்ப்பனகை.) யானிப்போது இந்தச் செண்பகாரண்யத்திற்றானே செண்பகமலர்களைக்கொய்கின்றேன், இரகுநந்தனனும் இங்கேயேவந்துசேர்வான்.

(என,ப்போது கொய்தலைப்புரிகின்றனள்.)

(விராதன்.) நோக்கி தன்னுள், ஹ ஹ, இந்த ஜானகி நிகரற்ற ரூபலாவண்ணியசாலினீ, அகோவகோ இந்தப் பிரமசிருஷ்டி அபூர்வமாயிருக்கின்றது.

விருத்தம்.

சனகிஇவடன்னழகைப்பார்க்கக்கண்கள்சதகோடிசங்கைவரம்பெற்றே னல்லேன், இனமுகில்மண்டலமேற்கிழிந்துபிம்பமிலங்கின்றதெழிற்சனை விண்இதற்குமேலே, கனகமயமாமலைகள்மணர்க்குன்றின்கீழ்சதலிமரமிர ண்டுதலைகீழாய்க்காணும், மனமகிழிச்சிருஷ்டியகோபுதுமைத்தாகும்மன்ம தன்செய்திட்டதென்றேமனத்தேர்கின்றேன்.

(ஆகையாலிவளை எவ்விதத்திலும்அபகரித் துக்கொண்டுபோய் ஸெ௱ச்ச ந்தமாய் விளையாடப்போகின்றேன், இராமலக்ஷமணர் வருவதற்குள் அபகரி த்துச்செல்கின்றேன்.

(சூர்ப்பனகை.) பார்த்து.

இராகம் எதுகுலகாம்போதி, ஆதிதாளம்.

பல்லவி.

இங்கேதான் நோக்குகின்றான் எந்தனிதயசோரன்.

அநுபல்லவி.

துங்கபாநுகுலத்தில்வந்த தோன்றல்ரகுவீரன் (இங்கே)

சரணங்கள்.

எனதெண்ணத்தின்படியே எங்கோசீதையைப்பிரிந்து<br>ஜனகிவடிவந்தரித்தவென்னைத் தானவளென்றறிந்து (இங்கே)

அதிருபமன்மதனுக்கும் ஆசையைத்தருங்காமன்<br>சதிராய்நான்றழுவநினைத்த ஸாமிஸரஸராமன் (இங்கே)

சாமளவண்ணனிற்குஞ் சாடையில்மையற்பெருக<br>தேமற்படர்முலைகள்விம்மிச் சேரவென்மனமுருக (இங்கே)

ஓ கன்று நன்று இதோ என்னிதயசோரன் இங்கெனக்கெதிர்ப்பிற் றானே வருகின்றாற்போற்றெரிகின்றது இவரோ.

விருத்தம்.

உத்தமவெழிற்றருணசீலர்பலவாயிரமுண்டாக்கிநான்முகன்றன் னைத்திரம்வெளிப்படுத்திட்டதெனசிருஷ்டித்தகட்டழகனிவனுங்கொ லோ நத்திமகிழ்சகலபுவனத்திரயணங்கள்செய்நற்புண்யராசியே யென் சித்தமுருகிடவிந்தவடிவஞ்சமைந்ததோதெரிகிலேன்தெரிகிலே னே,

ஆகையால் இவனைத் தந்திரமாயபகரித்துக்கொண்டு போகப்போகின்றேன், என, பார்த்துக்கொண்டே போதுகொய்தலைப் புரிகின்றனள்.

பொது. இராகம் காம்போதி. சாப்புதாளம்.

## பல்லவி.

சூர்ப்பனகை பூப்பறிக்கத்துணிந்தாள்.

## அநுபல்லவி

வாய்ப்புடன்சீதாதேவி வடிவோடுவந்த (சூர்ப்ப)

## சரணங்கள்.

ரகுகுமாரனிங்கென்னை நா டி இதோ
எதிர்வருகின்றானவனைக்கூடி விளையா டி
சுகம்பெறுவனென்று மனங்கூ டி எழிற்
சுகநாசிநேர்நகத்தாற் கொய்துமலர்சூ டி. (சூர்ப்ப)

தேட்டமுடன் செண்பகப்பூந்தோட்ட ம் தன்னிற்
சென்றிராமனென்று விராதன்மேற்கண்ணோட்டம்
போட்டுமிகமகிழ்வொடு கொண்டாட்ட ம் உடன்
பொல்லாதமையலைப் பூட்டிவுயிர்வாட் ட. (சூர்ப்ப)

(விராதன்.) கிட்டவணுகி, அடி ஜனகநந்தனி, ஆருயிர்ச்சானகி.

இராகம் நவரோசு ரூபகதாளம்.

## கண்ணிகள்.

கண்ணமுதே பெண்ணரசே காதல்நாய கி
காவலன்வி தேகன்மக ளானஜான கி
வண்ணமணி கிண்ணமுலை மானேயென்றே னே
மாவனத்தில் நீபிரிந்த வகையென்சொல்வே னே
அங்கப்பூசுந் தங்கமன்றோ அந்தோகோகு மே
ஆவியேநீ அலைந்தலா யாஸமாகு மே
பைங்கிளியே இங்கேயென்ன பார்க்கின்றாய டி
பரிந்தென்பா லுறைந்திடாதேன் வேர்க்கின்றாய டி
செண்பகப்பூ வேண்டுமென்றால் சாடையாயென்பா ல்
சற்றேசொன்னால் நான்பறித்துத் தாரேனோவன்பா ல்
தண்பெருலீ லாவிஷய தாசனிருக்கிறே ன்
ஜனகியுனக் கேன்சிரமம் நானேபறிக்கிறே ன்.

ஆகையாலிவளும் ஒராக்கியாய்த் தானிருத்தல்வேண்டும் (என) நோக்கிக்கொண்டிருக்கின்றனர்.

[சீதை.] எனதாசைநேசப்பிராணேசா, இங்ஙனம் நோக்குக நோக்குக.

விருத்தம்.

இளையவென்கொழுந்தன்நீவிரொன்றிராக்கதனையெண்ணி
பளபளவெனத்துலங்குபகர்பட்டாக்கத்தியோடும்
வளைவில்லினெடுந்தோணிதன்னையும்வகித்துக்கொண்டு
கிளைமிகுங்காவிற்பின்றேற்கிட்டியேநடக்கின்றானே.

(இராமர்) அடுக்குமொழி.

அடி, காமரஸவிலாஸமனோன்மணி
க்ஷேமவிலக்கணப்பூமகள்ஜானகி.

இங்ஙனம், நன்குநோக்குவை, என இளையான் மரங்களில் ஒளித்தொளித்துச் செல்கின்றான் பார் ஆகையால் இவன் அவனை இராக்கதனெனத் தெரிந்துகொண்டு தான் சொல்கின்றானென்றறிந்துகொள்.

[விராதன்.] தன்னுள் அடட, என் எதிர்ப்பில்நடக்கின்ற இந்தஜானகியின்பேரழகை யென்னென்றுசொல்ல.

கொச்சகம்.

கமனவெழிலோவியமாங்கல்யாணியின்சகனத்
தமர்மணிநன்மேகலையினூரவங்கடாளணியின்
ரமணியசத்தங்கண்மனத்தென்னவோசெய்கின்றதே
திமிநயனத்தாளிடத்திற்சிந்தையொப்பித்திட்டேனால்

[வெளிப்படை.] அடி, கந்தரக்குழல் மந்தரத்தன சுந்தரீ வனாந்தரத்திலெவ்வளவுதூரம் செல்கின்றாய்.

(சூர்ப்பனகை.) தன்னுள், எவ்விடம் விஜனமாய் என்னுன்னையபசரிக்க ஏற்ற இடமோ அதுவரைசெல்கின்றேன்.

[சூர்ப்பனகை.] வெளிப்படை, ஓ, என் வாழ்வளித்திடுமாமணவாளரோ, இதோ எதிரிற்காண்கின்றதே அவ்விடந்தான் சற்றுப்பொருத்தருளல்வேண்டும்.

(இராமர்.) ஓ, ஓ, அவ்வரக்கி அவ்விராக்கதனை தூரத்திலிழுத்தலைக்கின்றவிதமாய்க் காணப்படுகின்றது.

[சீதை.] என்கொழுந்தனிலக்குவனும் ஆங்கங்கேசெல்கின்றான்.

[விராதன்.] தன்னுள், அடட, என்னென்றுசொல்லஇந்தப்பேரழகை

வெண்பா.

அல்லோ அறலோ அலர்க்கூந்த லண்டுது ணை
வல்லோ வரையோ வளர்தனங்கள்—மல்லுல வு
பூங்கமுகோ பூணத்தோ பொன்மிடற்றிப் பூவையர்க்கு
மாங்கனியோ வானமுதோ வாக்கு.

விருத்தம்.

இன்னவடன்னைப்போல்நானெங்குமேகண்டதில் லை
அன்னம்போனடக்கின்றாளாலாபிக்கின்றாள்பிகம்போ ல்
வன்னமான்போனோக்கின்றாள்வான்மின்போற்சோபிக்கின்றா ள்
சின்னவான்றிங்கட்போநற்றிருக்கானந்தஞ்செய்கின்றா ள்.

விருத்தம்.

இவள்குழலிருட்குலந்தானெழின்முகமதிபிம்பந்தா ன்
பவழந்தானதரமீன்தான்பதுமவஞ்சனக்கண்கொங் கை
நவமதாய்ச்செய்நற்றங்கனிக்குடந்தானிங்கேதா ன்
கவர்ந்திடக்கருதுகின்றேன்கண்ணுட்டிதனையிப்போ தே.

நன்று, நன்று இவளை எவ்வாறு அபகரிக்கப்போகின்றேன். இராமனிருக்கின்ற இடத்திலிருந்து வெகுதூரம் வந்தாய்விட்டது.

வெளிப்படை.

இராகம் கமாஸ். தாளம் ரூபகம்.

எந்துகுவாடலகிநாடோ என்ற வர்ணமெட்டு.

பல்லவி.

பைங்கிளியே இங்கேவாராய் பாவையேநேராய்.

அனுபல்லவி.

மங்கையே யென்மைதிலியே மயிலேகுயிலே. [பைங்]

சரணங்கள்.

எட்டிஎட்டிமுன்னடந்து எகின்றாய்மானே என்
கட்டழகிஇவ்விடம்நல்ல கனிவுள்ளயிடந்தானே. [பைங்]

செண்பகப்பூவாடைகொண்டு தென்றல்நம்மையே இங்கு
பண்பொடிருக்கப்பகருமாறு பரவுதுண்மையே. [பைங்]

## விருத்தம்.

மெல்லியலிவணில்வாசமேவியசெண்பகத்தில்
அல்லியம்போதமோகமாகையால்நீயும்நானும்
சொல்லியபூக்கொய்வோம்வாருதுசேரக்கர்மேன்மேலச்
சல்லியமிருத்தகானிற்றையலெத்தூரம்வந்தாய்.

[இலக்குவன்.] அடே, அடே இந்த நிசாசரனிவளை சீதையென்று நினைத்துக்கொண்டு இராமவேடத்துடன் அபகரிக்க நினைக்கின்றான் கொல் நன்று நன்று.

[சூர்ப்பநகை.] தன்னுள், நானே நிசாசரிதானே, அன்னியில் வேறார்.

[வெளிப்படை] வசனம். ஓ, வீராதி வீர ஆரியபுத்திரா, யானெவ்வளவுதூரஞ்சென்றாலுமென்னை நிசாசரகுலவதப்பிரதிக்கினை செய்திருக்கின்ற தேவரீர் ஸன்னிதானத்தில் யெனககென்னபீதி.

[இலக்குமன்] தன்னுள், வசனம். இவ்வரக்கி இவனை இராமனென்றெண்ணிக்கொண்டு ஜானகி பிராட்டி, இராமனைட்போல், அனுசரித்துவெகு பொருத்தமாய்ப் பேசுகின்றனள்.

இவளுக்கிவ்வுருவத்தாற் பிரயோஜனம் யாதோ, ஆனால், சுந்தரராமனை ஆசைகொண்டு வஞ்சிக்க நினைத்து விளையாடுகின்றனள் கொல்.

[விராதன்.] தன்னுள், அங்ஙனமன்றே என் சபதம் அடிபேதே.

## வெண்பா.

என்சபதமீதன்றே இராக்கதனைவேரறப்பான்
முன்சபதஞ்செய்ராமன்முற்றுயிர்போல்—உன்றனையே
வவ்விக்கொடுபோகவல்லவோமாமதிபோற்
செவ்வித்திருமுகப்பேதே.

## வெளிப்படை.

## விருத்தம்.

வழுத்ததிலென்னஊனம்வசுதையின்மகளேஞானம்
பழுத்தமெய்த்தவத்தோர்க்கெல்லாம்பயம்பெறவிஞ்சைசெய்யும்
செழித்தசாகரம்போற்சூழுந்திரப்படைச்சேனையோடும்
கொழுத்தவக்கரனைநானேகொல்லாமல்விடுவதுண்டோ.

(இலக்குவன்.) புன்னகையுடன், அடட, இவ்விராக்கதன் எனதாரியரைப்போற் பேசுகின்றான்கொல்.

(சூர்ப்பனகை.) தன்னுள், மனோவேக்கத்துடன், இவன் என்றமயனை அவ்விதம் தீங்குசெய்யப்போகின்றானென்றென் மனந்தவிக்கின்றது.

(வெளிப்படை.) நாதா, இராவணனைக்காட்டிலும் அதிகப்பலவானன்றோ அக்கரன், அங்ஙனமிருக்க அத்தகைய கரனைக்கொல்ல சுலபமாய்ச் சபதஞ்செய்ததென்னையோ.

[இலக்குவன்.] அந்தோ அந்தோ, இவள் இவனை ஆரியனொன்ற பரமார்த்தபுத்தியுடன் இவன் மனதைச்சோதிக்க இப்படிப் பேசுகின்றாள், இவளரக்கிதான், அதற்கையமில்லை.

[சீதை.] மகராஜ் இவர்களொன்றுக்கொன்று என்னென்னவோ ஸம்பாஷித்துக்கொள்கின்றனர்போலும் காணப்படுகின்றனர்.

[இராமர்.] ஆம், ஆம்.

[விராதன்.] தன்னுள்.

கலிவிருத்தம்.

என்னகேள்வி இராமனைக்கேட்பதோ
அன்னசேள்வி அவளெனைக்கேட்கிறாள்
வின்னியாஸ மிருக்கட்டுமேவிநான்
இன்னவாறுரை இயம்புவேனன்றோ.

[வெளிப்படை.] அடி பேதாய் அறியாய்கொல் பரசுராமனைச்செயித்தவன் பராக்கிரமம் அறியாய்கொல்.

[இலக்குவன்.] ரெப்ப ஸரி, இவனுத்தரம் உசிதமாயிருக்கின்றது.

[சூர்ப்பனகை தன்னுள்.]

ஆகையால்த்தான் [illegible] னுடன் சஞ்சரிக்கின்ற என்னை என்சுய ஜனங்களாலுங்கூட பாதிக்க[illegible] நினைக்கின்றேன்.

[வெளிப்படை] [illegible] போது கொய்தலைப்புரிகின்றனள்.

[விராதன்] தன்னுள். அட இவள்

விருத்தம்.

அண்ணார்ந்தமுகமலரும் [illegible] நிற்கும்
கண்ணார்ந்தகுசத்து[illegible]காணும்
உண்ணோர்ந்தவெக்குண் முடிப்பூன்று கீழ்க்கானுனிகளுடன் பூக்கொய்யும்
தண்ணார்ந்தகுவளைவிழி இவளிருப்பென் மனப்பதித்த தன்மையாமே.

இராகம். பியாகு கோட்டு ஆதிதாளம்.

பல்லவி.

காதலி இந்தமாதுசெண்பகப்போது கொய்கின்றாள் சாதுரியமாய்.

அநுபல்லவி

பாதாங்குளிகளிம்மேதினிதொட்டுப்
பதுமமலர்! வதனமுத்தா! நிதமுடனே! இதமுட னே (காதலி)

சரணங்கள்.

செங்கமலக்கைகளுயரநீட் டி
சிறுகுடமுலைகணிமிர்த்திக்காட் டி
சங்கிலிபோல் மயிரொழுங்குகாட் டி
தந்திடைநி! மிர்ந்தெக்குள்! மென்றுகில! விழ்ந்திடவே. (காதலி)

கத்தைக்குழல்க ளவிழ்ந்துசரி ய
கருதியணிந்த மலர்கள்சொரி ய
நெற்றிற்றிலதம் நனைந்துதெரி ய
நேர்பெறவே! சீர்முகத்தில்! வேர்வையெனும்! நீர்திரள (காதலி)

வளர்மரமிதில் மலர்கள்கொய் ய
மணிக்கைநீட்டினு லெட்டுமோ ஐயோ
குளமொழியிவள் மேனிநொய் ய
கொங்கைகள்கு! லுங்கநுதிந்! திங்கெழிலாள்! பொங்கமுடன். (காதலி)

(வெளிப்படை.) (வசனம்) அடி, என் ஆவலுக்குரிய நாயகி, மலர்கொய்த லென்னும் ஸாகஸத்தில் நின்றும் நீங்குவாய், நீங்குவாய் போதுகொய்தது போதும் போதும், எனெனில் இதனால் மிகவும் இளைப்படைகின்றனே.

(ஆசையுடன்) (வசனம்)இல்லாமற்போனால் அடி மட நல்லாய் உன் புட்பம்பறிக்கின்ற வினியாஸத்தை திரும்ப ஓர்தரம் காண்பிப்பாய்.

எனெனில், உன் முகேந்துவானது ஒருவித சோபையை அடைகின்றதன்றோ.

விருத்தம்.

இங்கிதச்குண வொய்யாரி யெழிலுன்மு கேந்துதன்னி ல்
குங்குமக்கபோ லவன்னக் குறிகளிற்கொ ஞ்சங்கொஞ்ச ம்

மங்கிடவேர் வைசிந்தும் அதுவுமோர் வனப்பதாக
மங்களச்சோ பைசெய்யும் மலர்கொய்யும் வினியாளாந்தான்.

(சூர்ப்பனகை.) இலச்சையுடன் குருநகைகொண்டு, (தன்னுள்) என்மனோகர வல்லவ ரகுநந்தனனுடைய இந்த வசனமானது கிரீடைசெய்யும்படியென்னை ஏவுகின்றது, ஹ ஹ.

(வெளிப்படை.) பிராணேசா இந்தச் செண்பக புட்பங்களிடத்து எனக்கிருக்கும் ஆசைக்களவில்லை, பின்னை சிரமத்தினாலன்றி மற்றெவ்விதத் திற் கைக்கூடும்.

இலச்சுவன் விருத்தம்.

இவ்வரக்கியை அரக்கனெழிற் பெறுசீதை யென்றும்
இவ்வரக்கனை அரக்கி ரவிகுலரா மனென்றும்
ஒவ்வொரு வருமனத்தி லுண்மையாய் நினைத்துக்கொண்டே
ஒவ்வொருவரும் பேசிக்கொண் டாசையா லுலவுகின்றார்.

(விராதன்.) அங்ஙனமாயின் என்னாலேயே புட்பங்கள் பறித்துத்தரப் பெறுவாயாக.

என்று மலர்கள் கொய்கின்றனன்.

அடி, என்னாசைக்குகந்த வைதேகி.

விருத்தம்.

கொம்பினைவளைத் துக்கொண்டு குயின்மொழி நானேகொய்த
சம்பகமலர்க டம்மைச் சடையினிற் றரித்துக்கொள்வாய்.
கும்பல்சேர் குழல்முடிப்பை யுலையேற் சகோரக்கண்ணி
அம்புவிதனிற் புட்பங்க ளவளவுஞ் சிதறுமன்றோ.

(சூர்ப்பனகை.) களிப்பனுராகத்துடன் தன்னுள்.

விருத்தம்.

என்னைச்சானகி யென்றெண்ணி இந்தவென் னாசைநாதன்
தன்னமை யொடுநயந்து சதுரமாய்ச் சாற்றுகின்றான்
இன்னவன்றனை க்கொண்டேகி எனதிஷ்டப்படி யெவ்வாறோ
நன்னயக் கலவிசெய்து நான்சுகம் பெறுதல்மன்னே.

வெளிப்படை. இராகம் பியாகு. ரூபகதாளம்.

## பல்லவி.

மலர்கள்கொய்து தாரும்ஸாமி மாமனாளரே.

## அநுபல்லவி.

தலமகிழும் ரகுபதியென் றன்கணுளரே. (மலர்)

## சரணங்கள்.

உயர்செண்பகத்தாருவிங்கு ளேங்குதல்ல வோ
நயமிகுமோர்வசனமும்பால் நான்சொல்ல வோ. (மலர்)
என்கணவாநான்குனிவேன் யென்முதுகே றி
இந்தமரத்துயர்ந்தகொம்பின் இன்மலர்தாரீ ர். (மலர்)
எந்தமலர்கள் உகந்ததோவென் னிஷ்டமபோல வே
எந்தன்முதுகில்நின்று கொய்வீர்யிப்போசால வே. (மலர்)

(இலக்குமன்.) நகைத்துக்கொண்டு ஓ, இவ்வரக்கி இவ்விராக்கதனை ஆரிய ஸ்ரீராகவனென்றெண்ணி அபகரிக்க இச்சிக்கின்றனள்.

(விராதன்) தன்னுள், இது எனதபிப்பிராயத்திற்கிடங்கொடுக்கின்றது.

இராகம் நாதநாமக்கிரியை.

ஓரடிவைத்து மற்றோரடிவைக்குமுன் என்றமெட்டு.

ஜானகி இன்சொற்றேன் பானகி மதிமுகி தையலென்னுயிரே அடி
மானெனும்விழி மடமானே யெனக்குகந்த மாதுவைதேகி யே
மாங்குயில்நீயெனைத் தாங்கவும் வசமோவஞ்சி நுண்ணிடையன்றோ நான்
தேன்குழலுன்மேல் பாங்குடனேறுதல் தேவீ இதுநன் றோ
நீகுனிந்தாலுன மேகமுடிக்கனம் நின்னைக் கீழிருத்தாதோ கீழே
வேகமோடுனைத்தன பாரமுமிழுத்துனை வீழ்த்தி வருத்தா தோ
நானேகுனிந்திடுவேனடி நீயென் னன்முதுகேறிநின்று இந்தக்
கூனிலாவுயர் கொம்பில்பூநிறைந் திருப்பதைக் கொள்வாய்மிக நன்று.

எனை, உடலை வணக்கிக் குனிந்துகொண்டனன்.

(இலக்குவன் வசனம்.) அகோவகோ இவளை சீதாப்பிராட்டியென்று தீர்மானமாய்நினைத்து இவளை அபகரித்துக்கொண்டுபோக இவனெத்தனிக்கின்றான்.

அகோவகோ இதுவென்ன புதுமையாயிருக்கின்றது.

நல்லதிருக்கட்டும், மேலும் கிட்டவணுகி நடக்கின்ற விர்த்தையைப்பார்க்கின்றேன் (என நடக்கின்றார்.

(சூர்ப்பனகை.) தன்னுள், (வசனம்) இருக்கட்டும் அதனாலென்னபாதகம், இவன்முதுகிலேறி நின்றுகொண்டு மலர்கொய்யும் பாசாங்குகாட்டி கால்களாலிவனுடலை வளைத்துகொண்டந்தரத்திற்கிளம்பி ஆகாயமார்க்கமாய்க்கொண்டுபோய்விடுகின்றேன் (என்று அவன் முதுகிலேறுகின்றனள்.

(சீதை.) ஆ, ஆ, பிராணேசா, இதோ இவர் யார் இருபக்கங்களிலும் விசாலமான மேகராசிகளுடன் அத்யுன்னதபருவதம்போல் ஆகாயத்திற்றெ ன்படுகின்றார்.

(இராமர்) நோக்கி, அடி ஜானகி தனது முதல்வராகிய ஸம்பாதியை வந்தனஞ்செய்து சமதய்யா ஜடாயுவருகின்றார்.

(சீதை.) ஆசைநேசப்பிராணேசா இதோ இதோ பார்க்கவேண்டும். இவ்வரக்கி அவ்விராக்கதன்மேலேறி நிற்கின்றாள்.

(இராமர்.) ஆச்சரியத்துடன் இதுவென்கொல், அடி ஜானகீ இந்த விந்தையைப்பார்.

விருத்தம்.

பைங்கொடியுன்னுருவமைந்தாடன்னையிந்தப்பயலென் வடிவம்படைத் தோன்றாக்கிக்கொண்டு, விந்தையதாய்மகவேகத்தொடுசெல்கின்றவிதந்த னைப்பெங்கிருந்தேகண்ணுற்றார்போலும், தந்திரமாயென்னுருவோடேவ ளுடன்னைத்தான்சதிசெய்தானெனவோர்ந்திட்டார்போலும், வந்திடுஜடாயு மன்னனெதிரேநேர்ந்துவழிதடுப்பதெனவவர்முன்வருகின்றாரே.

(சீதை) நகைத்துக்கொண்டு, ஆச்சரியமாச்சரியம் இனிமேல் நடக்க ப்போகின்றதின்னதென்றறிகிலேன்.

(இலக்குமன்) ஹ ஹ, ஜானகிரூபராக்ஷஸியை இராமரூபராக்கதன் அபகரித்துக்கொண்டு அந்தரத்திற் கிளம்பிச்செல்கின்றான்கொல்.

என உயரநோக்கி, ஓ ஐயா ஜடாயுவருகின்றார்போலும், இவனைக்குறி த்து யேதேதோ புகல்கின்றார்போலும்.

விருத்தம்.

இராகவனுரு வந்தாங்கி யேந்திழைச் சனகிதன் னை
மோகமாய்த் தூக்கிக்கொண்டு முன்பின் கவனித்திடாம ற்
போகின்றாய் நில்லுநில்லு பொல்லாத பயல்நீயாவ ன்
சாகவுன்றனக் கிவ்வேளை தானிது சபதங்கண்டா ய்.

எனவே, எடுத்துரைக்கின்றனர்போலும்.

ஆகவே இவர் இவ்வரக்கியை வாஸ்தவசீதையென்று நினைக்கின்றனர்.

(சீதை) இவர்கள் ஆரியஜடாயுவைக்கண்டதும் பயத்தினுல் அவசரத் திற் கீழ்விழுந்தவர்கள்போலும்.

(இராமர்.) தம்பி இலக்குவனும் இவர்களெதிரில் கட்கபாணியாக கிட்டநெருங்குகின்றான்.

(சூர்ப்பனகை.) நடுக்கத்துடன் தன்னுள்,

## விருத்தம்.

வல்லரகுராமனல்ல னிவன்வேறுரோ மாராமன்வடிவத்தால்மயக்குகின்ருன், அல்லதிந்தமனிதனுக்குவான்கிளம்புமத்தனைக்கியதிவேகமதுவுமுண்டோ, மெல்லியலஞ்சானகியென்றன்மேல்மையல்மிக்கொண்டிவ்வுருவத்தோடொருவன்றூக்கிச், செல்லலெனத்தோற்றுகின்றதந்தோவென்னசெய்வதினிமோசமாமோசந்தானே.

(வெளிப்படை.) அடடா நீ யாவனடா, என்னையபகரித்துக்கொண்டு ஆகாயத்திற்கிளம்பினவன்.

(விராதன்.) தன்னுள்,

## விருத்தம்.

இணைமுலையாளிவளையபகரித்தலென்னுமென்சோலிக்கிடையூறிக் கழுகால்சேர்ந்த, தணைநீரைத்தடுத்தலெனவதுநிற்கட்டும்ஆயிழைச்சானகியல்ல இவடானுரோ, குணபுருவத்தாளவடன்னுருவங்கொண்டாள்கொண்டிவளோடுயர்கிளம்பிச்செல்லுமென்னை, துணைப்பதங்கொண்டிறுகப்பின்னித்தூக்கிக்கொண்டேதுரிதமாய்க்ககனமதிற்சென்றிட்டாளே.

(விராதன் வெளிப்படை.)

## விருத்தம்.

வேலெனும்விழியினுளே மேவியென்றனை நீயுன்றன்
காவினிலிடுக்கிக்கொண்டு கடுகவான் செல்வதென்னை
மேலவர்கன்னிதானோ வித்தியாதரர் தம்பெண்ணோ
நீலிராக்ஷஸியோநீயும் ஆரடி நிகழ்த்துவாயே.

(இலக்குவன்.) கிட்டநெருங்கி நீங்களிருவரும் அரக்கனு மரக்கியுமேயாம். ஒருவருக்கொருவர் வஞ்சிக்கப்பட்டீர்கள்.

(சூர்ப்பனகை) ஞாபகம் ஓர்ந்து ஓ நீ விராதன்கொல்.

(விராதன்) சற்றுலோசித்து அடி நீ சூர்ப்பணகையா என்ன.

(இலக்குவன்) அடடா பரதார சோரப் பாவிப்பயலே நீ இதோ மடிந்தாய் மடிந்தாய். (என விராதனைக்கரத்தாலெட்டிப் பிடித்தனன்.

(விராதன்) கோபத்துடன் விடுவிடென்று கையைத்திமிரிக்கொண்டு நிஜருபத்துடன் சூலத்தைக்கொண்டு சுழற்றினன்.

(சூர்ப்பனகை.) நிஜரூபத்துடன் பிரவேசித்து வேகத்துடன்) அகோ பிரமாதம், பிரமாதம், கூ கூ இவ்விராதன் அகப்பட்டுக்கொண்டான், இலக்கு மனாதகன், பக்ஷிராஜன், இவர்களிடத்திற் சிக்கிக்கொண்டான்.

(எனக்கூக்கரலிட்டழுகின்றாள்.)

ஜடாயு பிரவேசித்து (தனனுள்.) அடட இவள் சூர்ப்பனகையா.

ஹ ஹ ஜானகியினுருவத்தைத் தரித்துக்கொண்டிருந்தனள்.

[வெளிப்படை.] வஸ்ஸ இலக்ஷ்மணா இவ்இரஷிரண்ட கவிராதனை விட்டு விடாதே.

[சீதை] ஓ இவ்வரக்கி தன்வடிவத்துடன் அகப்பட்டுககொண்டாள். அவ் வரக்கனும் நிஜரூபத்துடன் கொழுந்தனாலும் ஜடாயுமாமனாலும் தகை யப்பட்டான்.

[இராமர்] ஆவியன்னவென் தேவிஜானகி! தெய்வாதீனமாய் வர்த்தி க்கின்றோம்.

(எங்ஙனமெனில்)

## விருத்தம்.

இலக்குவனவ்வரக்கன் கைச்சூலந்தன்னை இரண்டுதுண்டாய்ச் செய்தனனே ரேவுனாலே, துலக்கமுள்ளகத்தியினாற் புயங்கடம்மை துணுக்கிட்டான் பின் னுமந்தத்துட்டன்றன்னை, பலக்கயத்தை வீழ்த்தலென அந்தோ பாராய்ப் படு குழியில் வீழ்த்திமிகப்படபடப்பாய், இலைக்கழிகள் குழைதழைகள் கற்கள் மண்களிவைகளினால் மூடிவிட்டானிளை யான்றனே.

(சீதை) எனக்கு மிகத்திருப்தி நிரம்பஸந்தோஷம் நிரம்பஸந்தோஷம்.

(சூர்ப்பனகை) சோகவேகத்துடன். ஹ ஹ அந்தோ அந்தோ அனி யாயம் அனியாயம்.

## (சூர்ப்பனகை) விருத்தம்.

எஞ்சகோதரகரசினேகிதா ஏபலம்படைத்திட்ட விராத னே
வஞ்சராமவதஞ்செயவந்தநீ வல்லசியமொர் மானிறப்பட்டாலெ ன
கொஞ்சலகருமனால் மடிந்தாயடா கோதையைககொடுவாயென்றுகோவுனால்
நெஞ்சுவந்துவிசேத்திடவந்தனன் கிந்தனைக்கிடமாகி நொந்தேன டா.

அந்தோ அந்தோ அனியாயமே(வசனம்)இலங்கேசன்உத்திரவுப்படி சீதையை அபகரிக்க வென்னால்முடியாமற்போனாலும் இராமன்மேல்மையல் கொண்ட படிஜானகியின் உருவத்தைப் புனைந்தேனே அப்படியாவது எதேச்சையாய் இராமனை அபகரித்தேமகூடஞ்சென்று கட்டிப்புணர்ந்துசுகமனுபவித்தேனோ,

அதுவுமில்லை. பின்னையோ என்ன அனுபவித்தேனெனில், ஐயையோ விராதா நின் வதத்தைக்கண்டு சோகநீரிற்குளித்து துக்கமே கதியாய் நிற்கின்றேனே அதுதான் (என்றழுதலறுகின்றாள்.

(ஜடாயு) அட குழந்தாய் இலக்ஷ்மணா இவ்வரக்கியின் வார்த்தைகளைக் கேட்டனையோ.

## விருத்தம்.

இவள்மொழிசெவிபுக்கிற்றோ இராமனைக்கொல்லவென்றே
அவனிங்குவந்திட்டானும் அவ்விராதனைமடித்தாய்.

## (இலக்குவன்.)

கடலங்கேசனே வச்சணங்கையைக் கவருதற்கே
இவளிங்குவந்திட்டாளாம் இவளையும்விரூபஞ்செய்வேன்.

(எனக்கத்தியைப்பிடித்தனன்.

(இராமர்.) பார் மடந்தை நீ, பார் மடந்தையே.

## விருத்தம்.

திரத்தவென்றம்பிஇலக்குவன் சிறித்திகழ்கத்தியாலறுத்திடவும்
அரக்கிதன்மூக்குச்செவிமலைமுலை களறப்புண்டிரத்தமோராறாய்ப்
பெருக்கிவிண்ணெலிவளிடத்து திருதிரபிந்துக்களிந்திரகோபத்
திரட்டனைமேயும்விதமெனவீழ்ந்து செவேலெனப்பூதலஞ்சிறக்கும்.

வசனம். ஸந்தோஷம் ஸந்தோஷம் அடி நங்கையர்க்கரசி இனி நாம் இந்தக்கிரி சிகரத்தினின்றும் கிழிறங்குவோம். ஐயா ஜடாயுவை வந்தனை செய்யவும்சத்துருசம்காரத்தம்பி இலக்குவனை வெகுமானிக்கவும் வேண்டும் சீக்கிறமிறங்குவோம்.

[சீதை] மாமணர் மதலைக்கி மனமுகந்தபடியே)
என்று இருவரும் இறங்குகின்றனர்.

[இலக்குவன்] ஆரிய ஜடாயு ராஜனே இதோ இந்தக்கிரிசிகரத்தினின்றும் சீதாப்பிராட்டியுடன் என்றமயன் இராகவர் இறங்குகின்றனர். ஆகையால் நாமும் பன்னசாலை போய்ச்சேருவோம்.

(ஜடாயு.) நல்லதப்படியே செய்வோம் (என, இருவரும்நடக்கின்றனர்.

(இராமர்.) அடி, இன்பந்தருமேர்திளமுலையாய், ஜானகி,

விருத்தம்.

கனகாங்கிநின்கரத்தாலென்கைப்பற்றிக்கொளவுஞ்சங்கைவகிக்கா துவாராய், வனமார்க்கமிதுகொடிதுபள்ளமிங்கேவன்கற்களிவைகளிற்கால்வருடிடாதே தனக்ராடின்னியக்குமரிமெள்ளமெள்ளச்சலுக்குப்பிலுக்கினைவிட்டுத்தளுக்காய்வாராய், இனமானமுட்கடமைட்பார்த்துப்பார்த்துன்எழிற்பதங்களெடுத்துவைப்பாயென்கண்ணேட்டி.

(சீதை.) பிராணேசா ஆர்யஜடாயு மாமனும் கொழுந்தனிலக்குவனும் அதோ பன்னசாலையின் வாயிலே அடைகின்றனர்.

(இராமர்.) நல்லதிருக்கட்டும், நீ அங்குமிங்கும் பாராதே, எங்ஙனம் பார்க்கின்றாய்.

விருத்தம்.

சேறுகொண்டதிவ் வழியினடக்கொணுது சிற்றடமவ்வழிகோணலெனினுஞ்செல்வோம், ஆறுகொண்டநீர்கடக்கின்றேங்காற்சேலையதுமுழங்கான்மீதுகொஞ்சமகற்றிக்கொள்வாய், மாறுகொண்டமரக்கொம்பில்வருடிடாமல்வாண்மதிநேர்முகம்வணங்கிவருவாய்மாதே, தூறுகொண்டமாதுளையில்மாட்டிக்கொண்டதுகின்முந்திவிடுவிப்பாய்தோகைநல்லாய்.

(சீதை.) அவ்வண்ணமே இராமனைத் தொடர்ந்துவருகின்றனள்.

(ஜடாயு) இங்கிங்கே மெத்தசந்தோஷம்.

விருத்தம்.

சலசலோசனியாள்ஜானகிவளர்த்தசதிர்மயிலினங்கண்மானினங்கள்
குலவிவாழ்ந்திடவும்மலர்களிப்போதுகொய்திடுபொன்மையாய்க்குளிராய்
கலசமாங்குயத்தாள்கலசநீர்வார்த்துக்கமழ்தரவளர்த்ததாய்க்காணும்
பலதருவினம்சூழ்பர்ன்னவாச்சிரமம்பகர்நமக்குக்களிப்பாகும்.

(இராமர்.) அடி மனோகரி.

விருத்தம்.

மலைமுடியினின்றென்னேடிறங்கிவந்தமாதேமிகச்சிரமம்வகிக்கின்றாய் நீ, சலசமுகம்வியாவைநீர்க்கணங்களோடுதழைத்திடுகபோலங்களுடையதாகி, கலைவழுதபிந்துவினைதாற்றானின்றநன்னிலவார்சசிமண்டலத்தேபொப்பாம், நிலையையடைகின்றதகோகுளிர்கந்தஞ்சேர்நிழற்சோலையிதிற்சற்றுநின்றிடாயே.

அடி, வைத்யலர்க்கரசே சிரமவிமோசன நிமித்தம், இதில் சற்றுத்தங்கி இருந்துபோகலாம்.

(சீதை.) பிராணகாந்தா மெள்ளமெள்ள ஆச்சிரமம்போய்ச்சேருவோம் இலக்குவனும், ஆரியஜடாயுவும் வரவை யெதிர்பார்த்திருப்பார்கள்.

(இராமர்.) அப்படியானல் இவ்வழியாய்ச்செல்வோம் இங்கோ.

## விருத்தம்.

நீர்த்துளிக் கணங்களோடு நிகழ்த்து கல்லாரவா டை
சேர்த்து நற்கந்தமாகி சீதளமாகி நன்றாய் ப்
பார்த்து காரண்டவங்கள் பரிந்தவ்வி யக்தமா க
ஆர்த்திடும் படிபராவி அனில னுலாவுதிங் கே.

(என்று, நடந்துகொண்டே பார்த்து, ஐயா ஜடாயுராஜனே.

## விருத்தம்.

எந்தைநின் வரவுகண்டேன் யான்றசரத குமார ன்
வந்தஜடாயு மன்னு மலர்ப்பதம் போற்றிபோற் றி

(ஜடாயு.) வஸ்ஸ ராமபத்திரா சிரஞ்சீவியாக வாழக்கடவை.

## சீதை ஷ௸ விருத்தம்.

சந்ததம் புகழ்ச்சிமிக்கத் தங்கிடு மாமனு ரோ
பைந்தொடி சீதைநானே பதமலர் பணிகின்றே னே.

(ஜடாயு.) குழந்தாய், ஜானகி, வீரப்பிரஜவையாக பவிக்கக்கடவாய்.

(இராமர்.) இலக்குவனை இருகத்தழுவிக்கொண்டு, தம்பி தெய்வாதீன மாய் ஜயம்பெற்றவனாய் நின்னைக்காண்கின்றேன்.

(இலக்குவன்.) எல்லாம் ஆரியஜடாயுவின் அனுக்கிரகத்தினலேதான்

(ஜடாயு.) வஸ்ஸ ராமபத்திரா, இளையான் வெற்றியுணர்ந்தனைபோ லும்.

(இராமர்.) சைலசிகரத்தினின்றும் எல்லாம் எங்களால் நன்கறியலா யிற்று.

(சீதை.) ஆனல், மற்றதெல்லாமறிவோம். அவ்வரக்கனரக்கியின் பே ரும் ஊருமட்டுமறிகிலேம்.

(ஜடாயு.) அவன் ஜனஸ்தானத்தில் சஞ்சரிக்கின்ற விராதனென்னு ம் அரக்கன்.

## விருத்தம்.

கனத்தசதைக் கொழுப்பினருன் மத்தர்தியர்கண்டகர் பொல்லாமனத்தர் காலரான, • சனத்தானத்தி ரேழாயிரமரக்கர் தமக்கதிபன்கொடியகா னென்

போனோர்பால், அனர்த்தவினைக்கா ரன்விராதனோர்பா லரியதவத்தினர்க் கல்லலதுவேசெய்வோர், தனத்தையிழந்தவளந்தக்கரன் றன்றங்கைசதியா க்கிசூர்ப்பணகி அவடன்பேரோ.

(இராமர்.) ஓ, அவ்விராதன்றானோ இப்பொழுது தம்பி இலக்குவனாலி றந்தவன்,

என சினேக வெகுமானத்துட னிலக்குவனைநோக்கின்றனர்.

(இலக்குவன்.) வணங்கின முகத்தினனாய் விளங்குகின்றான்.

(ஜடாயு.) ஆம் ஆம்.

(இராமர்.) மற்றெல்லார்களுடைய வதங்கள் என்னுடைய பாகங்கள் எனத் தீர்மானிக்கப்படுகின்றதுகளல்லவா.

(ஜடாயு வசனம்.) ஆம், விரூபையான தன் தங்கை சூர்ப்பனகையைப் பார்த்தக்ஷணமே ஒருமுகூர்த்தப்பொழுதில் உக்கிரகோபாக்கிரகனானவன் தனது சேனாசமுத்திரங்களோடு உயுத்தஸன்னாஹனாய் நின்னை வந்து வளை ந்துகொள்வான், இப்பொழுதே வரலாச்சுதே.

(இராமர்.) உற்ஸாகத்துடன், நன்று நன்று வந்தாலென்ன, வரட்டும் வரட்டும்.

(ஜடாயு.) ஸரி, ஸரி சிரமபரிகாரநிமித்தம், குஞ்சங்களடர்ந்த சிகரக்கு ன்றமடைய இச்சிக்கின்றேன்.

## விருத்தம்.

பகலவன் குலத்தில்வந்த பாலக ராமசந்தி ரா
சுகநிகர் மொழியாடன்னை சூக்ஷித்துக் காக்கத்தம் பி
அகல்வுற் றிடாமற்பாரா யரக்கரை மடிப்பாய்நா னே
சிகரவான் குன்றஞ்செல்வேன் செலவுதந் தனுப்பும்பிள்ளா ய்.

(இராமர்.) அங்ஙனமாகட்டும், அப்படியே செய்கின்றது.

(ஜடாயு.) குழந்தாய் இனிமேல் ஸாவதானமாயிருத்தல்வேண்டும். என்று சென்றனர்.

## (——) திரை.

## விருத்தம்.

துட்டநிசாசரகரன் றனடியில்வீழ்ந்து சூர்ப்பனகைமூக்குமுலையிழந்தே னென்று, முட்டிவிழுந்தலறினாளவளைத் தேற்றிமுதிர்கோபத்துடனரக்க னனையிக்கோலம், இட்டதுயாருரையெனத்தாசரதியென்னயிசைந்தவனோ டியுத்தமகுதியற்றச்சேனைக், கட்டுகளோடெழுந்தன னிவ்வுயுத்தம்பார்க்கக் கருத்துளதேலென்போற்கேசரோவாரீர்.

(இலக்குவன்.) ஹா அண்ணா, வீணாவிநோதராய் பிரமபுத்திரராய் கலகப்பிரியராயிருக்கின்ற நாரதமுனியின் சப்தம்போலும் கேட்கின்றது.

ஆகையால் நாம் ஸன்னத்தமாயிருத்தல்வேண்டியது.

(இராமர்.) யான் தயாராய்த்தானிருக்கின்றேன். தந்தை ஜடாயுவின் ஸன்னிதானத்தில் இனிவருகின்ற தளங்களோடுகூட அக்கரனை ஸம்ஹரிக்கவேண்டிய தென்னுடைய பாகங்களென்று தீர்மானிக்கப்பட்டபடி ஜாகரூகனாகவேயிருக்கின்றேன்.

தம்பி இலக்ஷுமணா ஆகையால்,

### கலிவிருத்தம்.

சாவதானமதாய்ப்பன்னசாலையில்
தேவிஜானகி தன்னுடன்சென்று நீ
காவலாயிரு தம்பிகராதியை
மேவியான்கொன்று மீண்டிடுவேனரோ.

(சீதை.) பிராணகாந்தா, அஜாக்கிறதையாயிருந்துவிடக்கூடாது ஸாவதானமாயிருத்தல்வேண்டும்.

(இராமர்.) என்ன சந்தேகம்.

(இலக்குவன்.) அப்படியே செய்கின்றது, என, சீதாப்பிராட்டியுடன் சென்றனர்.

### (——) திரை.

வசனம். ஹோ ஹோ, கூரம்புகள் கைக்கொண்டாரவாரஞ்செய்கின்ற கோரசொரூபங்களான என் வீரப்படைகாள், இங்ஙனம் தாரத்தொடு தம்பியொடு தாபஸவேடங்கொண்டு கெம்பீரத்துடன் வசிக்கின்ற இக்ஷுவாகுகுல இராஜகுமரனைவந்து வளைந்துகொள்ளுங்கள், வளைந்துகொள்ளுங்கள்.

(இராமர்.) ஆனந்தச்சிரிப்புடன், ஓ கரன்தான் வந்திப்படி கோஷிக்கின்றான்கொல்.

### விருத்தம்.

அடடதுன்மார்க்கா மூர்க்கா அக்ரமஞ் செல்லாதிங்கே
படபடப்பா யென்னென்ன பரிவுடனார்க்கு கின்றாய்
வடிகணையொன்றாற்சேனை வகையுடனுனையுமின்று
திடம்பெறு மேமனுக்கு விருந்துசெய்கின்றேனிண்ணம்.

என்று கவசமணிந்து சரசாபஹஸ்தனாய் அம்பறாத்தூணியொடு குபீரெனவெழுந்து நடந்துகொண்டு,

விருத்தம்.

கவளமாயருந்த கரநின்றுலிறந்தார் யாவரோஅவர் கடத்தெலும் பு
தவளமாய் விளங்குகின்றதே யாவர்தங்கடந் தவத்தினைக்காப் ப
அவர்களாற் பொருக்கப்பெற்றனை கொல்லோஆமுனைப் படையுடனறுத் து
நவவிருந்தளித்துப் பறவைகட்கவர்க்கு நல்குவன் களிப்பினோநா னே.

ஐந்தாவதங்கம் முற்றிற்று.

# ஆறுவதங்கம்

## ஆரம்பம்.

(அப்பால்) அனலை பிரவேசிக்கின்றனள்.

(அனலை.) எதிர்நோக்கி, ஓ நம் தந்தை விபீஷருடைய அமாத்தியரான ஸம்பாதியோ, இங்கேயே வருகின்றார்போலும்.

(அப்பால்) ஸம்பாதி பிரவேசிக்கின்றார்.

ஓ, இவள் நமது விபீஷண இராஜகுமாரி அனலையோ, ஆம், கிட்டவணுகி, அடி குழந்தாய் அனலாய் எவணிருந்து வருகின்றாய்.

[அனலை.] வித்திச்சிருவன்றன் வீட்டிலிருந்து,

[சம்பாதி] அங்குனக்கு யாது காரியம்.

(அனலை.) அமாத்தியவரரே கேட்கக்கடவீர், இருக்கின்றாளன்றே, மஹாராஜலங்கேசுவரரின்றங்கை சூர்ப்பனகையென்பவள்.

(சம்பாதி கலகலென நகைத்துக்கொண்டு, வசனம்.) அத்தையென்றறையத்தக்கது யாதாமொருததி, இராமனையிச்சித்து, இலக்குமனால், விரூபத்தையடைந்தனளோ, யாதாமொருத்தியினிரக்கமான சொற்களினால் தனது அனுசாரரோடு கராதியர் இராமபுஜப்பிரதாபப் பெருந்தணலிற்வீழ் யீசர்க்கணமாகப்பவித்தார்களோ, அப்பேர்க்கொத்தவளை அத்தையெனச் செப்பிடலாகாதோ.

(அனலை.) அவள் வித்திச்சிருவன்றன், மனைவி மாயாவதியிடம்.

விருத்தம்.

வினயமாயா வதிப்பெண் மேவுமென் னெதிரன்று ளே
உனதுமூக்க ருந்ததான காரணமுறைத் தியென் ன

வினவிட விளம்பாநின்ற வித்தையக் கதையினா டே
னனியவள் ராமரூபமிது வதுவென நவின்றா ள்.

(சம்பாதி.) மேல், மேல்.

## ஜ்ஜீ (அனலை) விருத்தம்.

ரகுராமனுருவெழுதியிலங்கானின்ற விசைத்திடுமோவியப்படமுன்வித்திச்சிருவன், வெகுகாவலாய்க்கொணர்ந்தானது விம்மட்டும்மேவியென்கணமர்ந்திருந்ததைவிரும்பிப், புகழ்மாயாவதிராமனெழிற்றுன்காணப்பொருந்திடுமெப்படந்திரும்பவீயென்றாளால்,

(சம்பாதி.) மேல் மேல்.

(அனலை) ஜ்ஜீ

திகழ்தருமப்படந்தனையன்னாள்கைக்கீய்ந்து திரும்பவருகின்றேனென் செய்தியீதே.

(சம்பாதி.) அந்தச்சித்திரப்படம் உன்னிடமிருக்கவேண்டியதென்னையோ.

## (அனலை) விருத்தம்.

சேர்க்குமாமணத்தின்முன்னஞ்சீதையால்மையல்கொண் டு
ஏர்க்கவேவரைந்ததானயெழிற்பெருபடமீதிங் கே
தீர்க்கமாம்பிரிவாற்றுமைஅவடனைச்சேர்ந்ததா லே
பார்க்கவப்படத்தைக்காட்டிப்பரிதாபந்தீர்த்துவைப்பே ன்.

(சம்பாதி.) சற்றுலோசித்து, ஆச்சரியமாச்சரியம்.

## விருத்தம்.

சீதையை அபகரித்திடுவதி லரசனுற்சென் றிறந்தனன்மாரீச ப்
பாதகன்பொன்மயமானெனமாயையாற்பரிவொடுலாவியேநின் றும்
கோதிலக்கலுழன் றமையனார்புதல்வன்குறித்திடுகெழுகரசானே ன்
வேதையைவகித்துமடிந்தனனுகும்வீரஜடாயுவென்போ னே.

வசனம். நல்லதிருக்கட்டும், அப்பால் அடி பெண்ணே அனலாய் இனிமேல் அந்த ஜானகியின் ஸந்தாபம் எவ்வாறு தணிவிப்பாய், யாதாமொருத்தி மிகப்பழக்கத்தினுலே உன்னிடத்திலேயே ஆப்தசகிஸ்னேகானுபந்தத்தை வைத்துக்கொண்டிருக்கின்றாள்கொல், அத்தகைய அவடுயரம் எப்படிமாற்றுவைக்கப்போகின்றாய்.

(அனலை.) இனி, என்செய்வது.

இராகம் பியாகு. ரூபகதாளம்.

## பல்லவி.

அவள்விரகமெப்படியாகுமோ அறியேனே

## அநுபல்லவி.

தவமிகுசுந், தரத்தனியா, டயங்கின்று, டனியாய் இந்தத்
தாலமகிழ், கோலநயனத், தையற் சனகியா ம். (அவள்)

## சரணங்கள்.

பர்த்தாவைப்பிறிந், தேழுமாதம், பரந்துபோச்சுதே இதுவோர்
பாக்காமினித், தோப்பாந்துயர், படுவதாச்சு தே. (அவள்)

காவல்மட, லோவியமுங், கைகடர்ந்து தே எதைக்
காட்டித்துய, ரோட்டிவைப்பேன், கவலைபடர்ந்து தே. (அவள்)

சிறையகப்பட், டுருகுவதென், செப்புவேனய்யா அவன்
தேகமுய்யு, மோரவதுஞ்சந், தேகந்தானய் யா. (அவள்)

## விருத்தம்.

தந்தருந் துதிர்ந்திடு முத்தங்களொத்த கண்ணினீ ர்
தனைவடித்தச் சனகியா டனங்களை நனைக்கிறு ள்
சிந்தைநொந்து சுவாஸம்விட்டு சீர்மையி லழுக்கட ர்
சேலைமுந் தியாலேகண் கடிகழுறத் துடைக்கிறு ள்
சந்தமாப டத்திலங்கும் தன்பிராண நேய னை
தாமரைக்கணால் விரும்பிச் சந்ததமும் நோக்குறு ள்
இந்தவாறுசிம் சிபாதருத் தலத்திருந்து கொ ண்
டேங்குறுள் கண்டேங்கிலா ளொரேழு மாதமாச்சு தே.

## (சம்பாதி) விருத்தம்.

வாலியின் வதத்திற்கிப்பால் வள்ளல் விபீடணர்க்கு ம்
மாலியவான் முதலாம் மந்திரிமார்கட் கெல்லா ம்
மேலினி ஜனகிதன்னை வீரகோத ண்டராம ன்
பாலினி லொப்புவிக்கும் படிமனோ பீஷ்டமம் மா.

அவ்விதம் ஒப்புவித்தால்த்தான் நமக்கு நன்மையுண்டென்று அபிப்பிராயம்.

(அனலை.) ஆ, மகராஜலங்கேசுவரனைச்செயித்த அந்த வீரவாலியும் இராமனால் மடிந்தான்கொல்.

(சம்பாதி.) ஆம், ஆம்.

(அனலை.) ஆனால் மகாராஜலங்கேசுவரன் என்னென்றுநினைக்கின்றார்.

(சம்பாதி.) அடி பெண்ணே அனலாய், இந்தச்செய்தியை மஹாராஜனுக்குத் தெரிவிக்க மந்திரியர்கட்குள் வல்லவர் யாவர்.

## இப்போது விருத்தம்.

குளிரநிலன்கொணர்ந்திடுநந்தனவனப் பூவமளிதனைக்கொண்டோனுகி
நளினநயநாளமணிவருணனல்கத்தரித்தவனுய்நாளும்நீங் கா
தளிவருநற்குழற்சனகியவள்பாலற்பிதமனனுயவ்வுள்விட் டு
வெளிவருதலறிந்திலமால்யிப்படியாய்க்கழிக்கின்றானரக்கர்வேந்த ன்.

வசனம். ஆகையால் அனலாய், தனக்கு நாசத்தைக்கொடுக்கக்கூடிய தான பருக்கிரமப் பிரபலசத்துருவின் பகை கிட்டியதை அறியாதவனும், மந்திராலோசனை செய்யாதவனும், முக்கியமாய்ச் செய்யவேண்டியவைகளைச் செய்யாதவனுமிருக்கிற, இராவணனுக்கு, வாகுபனியாஸத்தால் வாலிவதத்தைத்தெரிவிக்கிறதற்கு அசக்தர்களான மந்திரிகளால் ஒருவித யேற்பாடுசெய்யப்பட்டிருக்கிறது. என்னெனில், சுக்கிராசாரியரால் இராமகதையைக் கவியாய்ச்சேர்க்கச்செய்து இராவணனுக்கு நாடகரூபமாய்க் காண்பிக்கவேண்டுமென்றே.

(அனலை.) ஓ, அது எதிலிருந்தாரம்பம் எதில் முடிவு, எவ்விதமாய்ச் செய்யப்பட்டிருக்கிறது.

(சம்பாதி.) இராமன் சீதையைத்தேட வாரம்பித்தது முதல், வாலிவதைபரியந்தம்,

(அனலை.) மேல், மேல்.

(சம்பாதி வசனம்.) அதையும், அவசியம் பார்க்கவேண்டியதென்று அந்தப்புர பரிஜனங்களால் அரசனுக்கு அறிவித்திருக்கின்றது. அப்ஸரஸ்களால் நடத்தப்பட்டதென்று ஆவலுடன் பார்க்க விரும்பி மஹாபார்சனென்னும் விநோதமந்திரியுடன் மஹாராஜன் தெய்வவசத்தால் ஸங்கீதசாலையில் விஜயமாயிருக்கின்றார்.

(அனலை.) அது சரியே, நீர் எதை உத்தேசித்துப் புறப்பட்டீர்.

## (சம்பாதி) விருத்தம்.

மந்திரிவர்க்கத்தோடு மன்னன் விபீடணன்று ன்
சந்தத மனனேய்கொண்ட தசானன் சதசிலன்பா ய்
கந்தர்வ நாட்டியக்காரர் தம்மையங் கழைத்துவாரீ ர்
இந்தநேரத்தி லென்று னென்வறலா றீதாமா ல்.

(அனலே வசனம்.) அப்படியானல், ஒரு காரியமனுகூலமாச்சுது, என்னெனில், இதுபரியந்தம் தனது நாயகனுருவத்தை எழுதியிருந்த சித்திரப் படத்தைப்பார்த்து துக்கநிவர்த்தி செய்துகொண்டிருந்த என்சகி ஜானகியும் இனி இந்த நாடகத்தில் பிரத்தியக்ஷத்தில் இராமவேடத்தையும், கதையையும் பார்க்கின்றதுனல் சந்தோடத்தை அடைவளன்றே.

(சம்பாதி.) அதுசரியே, திரஸ்கரிணீ மகத்துவத்தினல் மறைந்திருந்துகொண்டு பார்த்தல்வேண்டும். அதற்கு யாதுபாயமோ.

(அனலே.) அதற்கு உபாயமிருக்கின்றீது.

(சம்பாதி.) அஃதெப்படி.

(அனலே) விருத்தம்.

காரிகைமாயாவதி இராக்ஷஸாந்தங்கரணமணிக்கங்கணங்களிரண்டிந்தாண்முன், சீரியவவ்விரண்டிலொன்றையென்கைக்கிட்டுசீதையின்கைக்கொன்றிட்டுச்சிறப்பதாக, நேரிலன்றுடகச்சாலேக்கெய்தியோர்பானின்றுகொண்டவ்வேடமுதலெல்லாங்காண்போம், ஆரியசம்பாதியையாயீதுபாயமன்றிவேறென்றுளதோஅதுநன்றுமால்.

(சம்பாதி வசனம்.) ஓ, ஸரி ஸரி முன்னமே இது கேட்கப்பட்டிருக்கின்றது. எப்படியெனில், பூர்வத்தில் கௌசிகரால் ஜானகிக்குக்கொடுத்து அப்பால் அவளிடத்தில் சாரணன் வெகுமதியாகப்பெற்று இலங்கேசனிடங் கொடுக்க அவனுல் வித்திச்சிகுவனிடம் வைக்கப்பட்டிருக்கின்றதென்றே.

(அனலே) ஆம் ஆம், நன்று நன்று, அமாத்தியவரரோ இராஜாக்ஞையை ஜல்தியாய் பூர்த்திசெய்வீராக, யானே தபித்துக்கொண்டிருக்கிற ஜானகியை மனேவிநோதன நிமித்தம் சங்கீதசாலேக் கழைத்துக்கொண்டுவருகின்றேன்.

(நல்லதென்றிருவருஞ்சென்றனர்.)

(அப்பால் மஹாபாரசனுடன் இராவணன் சங்கீத சாலாமத்தியில், பிரவேசிக்கின்றனன்.

## இராவணன் கொலு.

இராகம் கமாஸ். ஆதிதாளம்.

### பல்லவி.

கொலுவீற்றிருந்தானே இராவணன் கொலுவீற்றிருந்தானே.

### அனுபல்லவி.

பலவகைரத்ன சிங்காசனமேலே பலமுளமைநாக மலேதனேப்போலே,

## சாங்ணகள்.

கங்குலகற்றும் பத்துக்கதிர்களென் ன
கனகமகுடம்பத்துத் தலைகளிலும்பிரசன் ன
தங்குபுயங்களில் வீரலக்ஷுமிதுன் ன
தடக்கைகாலைந்திலும் வீரவாளொளிமின் ன. [கொ]
மருத்துகந்தமிகு மலர்போ ட
வருணன்பனிநீர் தெளித்தோ ட
திருத்தியவாரங்கள் மார்பா ட
சீதையையெண்ணி மனம்மிகவா ட. [கொ]
தேவர்கள்வந்தனு தினம்பணிகேட் க
சேடனொளிமணிகள் செவ்வடிகளிற்சேர்க் க
காவலர்கள்வந்து முடிதாழ்க்க க்
கட்டியஞ்சொல்லோசை திசையெட்டிலும்போயார்க் க. [கொ]

### (கட்டியம்) விருத்தம்.

பைன்னாக மென்னப் படையோடு சீறு ம்
ஒன்னார்க டம்மை யுடைவாட் கைகொண் டு
சின்னாபி ன்னஞ்செய் தேவா பரா க்
மைன்னாகத் தோளாய் மன்னா பரா கு.

பராக்கு பராக்கு பராக்கு.

### எச்சரிகைப்பெண்கள் கண்ணிகள்.

இராஜராஜ மகாராஜனே பிரகாசனே எச்சறிக் கை
யீசன்கைலைதனை வீசியெறிந்திடு லங்கேசனே எச்சறிகை
வீரனே ரணசூரனே ஒய்யாரனே எச்சறிகை
மேருகிரிநேர் கெம்பீரபுய விஸ்த்தாரனே எச்சறிகை
பூபவனி தைலல்லாபவகிலப்ர தாபனே எச்சறிகை
தாபதர் சுரர்யாவரும் நடுங்குங்கோபனே எச்சரிகை
அட்டதிக்குஞ் செயித்திட்ட வீரப்ரக்கியாதனே எச்சரிகை
அஷ்டைசுவரியம் நிறைந்திட்ட இலங்கைக்கரசே எச்சறிகை

### மஹா பார்சவன் விருத்தம்.

தனபதிதனைச் செயித்துப் புட்பகந்த னைப்பறித் து
கனம்பெருதிக் கயங்கள் கொம்பையும் மார்பிற்காட் டி
மனங்கொண்ட தலங்களெல்லாங் கைக்கொண்டு புவனமூன்றும்
தனியரயோர் குடையிலாளுந் தசானனா போற்றிபோற் றி.

[இராவணன்.] மஹாபார்சா நாடகதரிசனத்தின்பொருட்டு மந்திரி ஜனங்களால் கட்டாயஞ்செய்யப்பெற்றோம் அஃதென்னை.

[மகாபார்சன்.] ஆம், மகாராஜா சானகிநிமித்தம் அனங்கதாபத்தாலே வருந்துகின்ற இருதயத்துடன் வருத்தமடைகின்ற மகாராஜாவின் மனோற்சாகநிமித்தம் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது.

(இராவணன்.] ஆ ஆ, அப்படியா அங்ஙனமாயின் அன்னாடகக்காரர்களால் ஆரம்பஞ்செய்யப்படட்டும்.

[அப்பால்.] அந்தரநாடிகை ஆரம்பம்.

[அப்பால்.] நாடகக்காரரிலொருவன் பிரவேசிக்கின்றனன்.

## விருத்தம்.

எவன்விடு பகழிக்காற்றா தெழிற்கலா தரனுமந்த ச்
சிவனுந்தன் னங்கத்தோர்பாற் றேவியைப் புனைந்திட்டா னோ
எவனைதாம் பதியர்க்கின்பன் யாவனோ வியோகியர்க் கு
தவனவின்னுச் செயச்சித்தசன் மிகத்தழை க்கின்றானா ல்.

[இராவணன்.] இது எதார்த்தம் எதார்த்தம்.

(நாந்தியந்தே சூத்திரதார்.)

## விருத்தம்.

மயிலொன் றிருதுசரத்து வந்திடமே கந்தன் னை
இயல்பதாய் மாகந்தன்னிற் காணும லேங்கியேங் கி
உயிருயிர்த் துடலுங்கூசி ஒகோவென் றழுதுகானி ல்
நயம்பெரு மேனிவாடி நாடிசஞ் சறிக்குதந் தோ.

[இராவணன்.] ஓ என்னாலபகரிக்கப்பட்ட ஜானகியை காணக்கிடையாமல் அலைகின்ற க்ஷத்திரியப்பயலின் வியாபாரம்போல் சூசிக்கப்படுகின்றது.

(மகாபார்சவன்.) யானுமவ்வண்ணம் நினைக்கின்றேன்.

அப்பால் நடி இஷ்டதேவதாவந்தனமாக கானஞ்செய்கின்ற விதங்காண்க.

இராகம் முகாரி. ஆதிதாளம்.

## பல்லவி.

ஆதிமுகுந்தா அபயவரந்தா.

## அனுபல்லவி.

வேதவேதாந்த விமலசச்சிதானந்த
மாதவகோவிந்த மணக்கும்பாதாரவிந்த. (ஆதி)

## சரணங்கள்.

எங்கும்நிறைந்த நிதியே எங்குலதெய்வ
வெங்கடாசல பதியே ஐயாயென்
சங்கட அவதி யே
சாற்றர்க்கனவதி யே
இங்கெனக்கார்கதி யே
என்னைரக்ஷிப்பாய் ததி யே. (ஆதி)

மலையைக்குடையாய்ப் பிடித்தாய் கோவலர்க்காக
மழைப்பிரளயத்தைத் தடுத்தாய் பாஞ்சாலிக்கன்று
கலைகொடுத் தாதரித்தாய் க்
கரியினிடர் தவிர்த்தா ய்
கலவமுதங் கொடுத்தா ய்
நனிசுரர்தமைக் காத்தா ய். [ஆதி]

தேவசகாயனே முத்துசுப்பன்நின்
காவலாண்டருள்மாயனே காயாம்புநிறம்
மேவுமெழிற் காய னே
வெண்ணெ யுண்ட வாய னே
யாவுமான தூய னே
இலக்குமி நேய னே. [ஆதி]

(——) திரை.

ஹா ஹா, தம்பி லக்ஷ்மணா சீதையைத்தேடுகின்ற என்னால் பன்னசாலை சூனியமாக்காணப்படுகின்றது.

(சூத்திரதாரன் வசனம்.) மகராஜலங்கேசுவரா இதோ நாடகாரம்பஞ் செய்கின்றேன், கவனமாயிருந்து பார்த்து சந்தோஷிக்க வேண்டுகின்றேன். இப்பொழுது பிரவேசம் யாரெனில், இலக்குவனுருப்புனைந்திருக்கின்ற கிருதாசியுடன் இராமவேடந்தரித்த புஞ்சிகஸ்த்தலையென்ற கந்தருவஸ்திரி, பிரவேசிக்கின்றனள்.

எனச்சென்றனன்.

பிரஸ்த்தாவனை.

(இராவணன்.) ஹ ஹ நன்று நன்று, இன்னாடகாரம்பம் நன்று நன்று, இதில் எந்தக்காரணத்தால் சீதையைக்காணாமல் இராமனென்னசெய்கின்றானென்பதை அறியவிரும்புகின்றேனே, அதனாற்றான்.

அப்பால், ஒருகைக்கங்கணம்பூண்ட சீதை பிரவேசிக்கின்றனள்.

(சீதை.) சகி அனலாய்,

## அந்தர நாடிகை.

### விருத்தம்.

கற்புள பெண்கள்கொண்ட கணவனைப் பிரிந்தயல்வீட்
டிற்புகுந் திருப்பதுண்டோ வென்னைப்போற் பாவியுண்டோ
சற்பனையாய்க் கொணர்ந்த தசானனன் றனக்கெதிர்ப்பில்
எப்படியிருப் பேனம்மா நாடகமெனக்கு முண்டோ.

### கொச்சகவிருத்தம்.

அந்தப்புரத் தலத்திலரக்கர்பதிக் கெதிர்ப்பில்
இந்தப்பெருங் கொடியாளெய் நவதோ நிர்க்கதியாள்
சிந்தைக் கொடுஞ்சோகத் தீயினாலாலும்
எந்தன் கொழுனன்கதை யென்றுவந்தே யான்வந்தேன்.

(அனலை) பிரவேசித்து, வாஸ்த்தவம் சகி ஜானகி ஆகையாலிங்கு சங்கீத சாலாமத்தியிலுட்கார்ந்து பார்ப்போம்.

(சீதை.) நடுக்கத்துடன்) அடி அனலாய் இந்தப்பரதாரக்கிரகண பரமசண்டாளப்பதிதராக்ஷஸபதி, இதோ சமீபத்திற்றென்படுகின்றான், என்செய்வேனடி.

[அனலை வசனம்.] அதனாலென்ன, அரக்கர்களின் கட்புலனடைக்கும் மணிக்கடகங்களணிந்திருக்கின்ற நாம் சங்கையற்றிங்கிருந்தே யாவுங்கண்டுகளிக்கலாம்.

அவனிருக்குந்தூரம் ஸமீபமாயிருந்தாலும் நாம் சொல்லிக்கொள்ளும் வார்த்தைகள் ஒருவருக்கொருவர் கேள்க்கக்கூடியதன்று, ஆகையாலிதுவே யோக்கியம்.

[சீதை வசனம்.] ஸரி, முன் அயோத்திவாசிபோல் முனிவேடந்தரித்துவந்த இராக்கதனுக்கு என்னால் சம்மானமாய்க்கொடுக்கப்பட்டதான இராக்ஷசாந்தங் கரணமணிக்கங்கணங்களிப்போ தெனக்குத்தானுதவியாயிற்று.

[அனலை வசனம்] ஆச்சரியமாச்சரியம், மாமுனிவரின் மகத்துவம் என்னென்றுசொல்ல, யாதாமொரு கங்கணதாரணத்தினாலிப்போது நீ என்னாலேயுங் காணப்படுகின்றாயில்லை, கேவலம் குருடானவள்போலிருக்கின்றேன். நின்னை ஸ்பரிசமாத்திரத்திலறிகின்றேனென்றறிந்துகொள்.

[சீதை.] நீயும் மற்ற அரக்கர்களால் காணமுடியாதவளாகவே விளங்குகின்றாய், எனெனில் உன்கையிலும் அதிலோர் கங்கணமணிந்திருப்பதால் தான்.

[அனலை.] அப்படியுரைப்பதேன், உன்னாலேயே உன்னையுங்காணமுடியாதென்றுறைத்தல்வேண்டும், என் என்னை எதனால் யானே அறியவில்லையோ, அதனால்த்தான்.

[சீதை.] அது நிற்க, அடி அனலாய், அரக்கர்களுக்குத்தான் காணெண்ணுதவர்களாயினும், இன்னுடைக வேடதாரியர்களான அப்ஸரஸாரிகட்கெப்படியாகின்றோம்.

[அனலை.] இவர்கள் பார்ப்பதனுலென்னகுற்றம்.

அப்பால், இலக்குவனுடன் இராமன் பிரவேசிக்கின்றனன்.

[இராமர்.] பரபரப்புடன்.

விருத்தம்.

இல்லாதயிலைக்குடிசிற்றனைக்கணுற்றென்னிதயமதைத்துக்கவனலெறிக்குதந்தோ.

[இராவணன்.] ஸந்தோஷத்துடன், எறிக்கட்டுமெறிக்கட்டும்.

[சீதை.] கண்ணீர் பெருக்குடன்.

கொச்சகம்.

என்வலவ னென்மீ திருத்திடுஞ் சினேகமி தோ
தன்மனங் கொதிக்கின்றான் சாமி அவன்கண்ணு லே
நன்மைபெறக் காணுதற்கு நானின்றி சூனியமா ம்
இன்மையி லிலைக்குடிசி லேர்க்குநல்ல பாத்திர மோ.

[இலக்குவன்.] ஆயாஸப்படவேண்டாமண்ணு.

முன்விருத்தத்தொடர்ச்சி.

நல்லோரயிம்மலைக்கருகில் மயினின்றுடும்நற்றலமா நிகுஞ்சமதில்நாடலாகும்

[இராவணன்.] கலீரென நகைத்து, இவன் என்றும் சீதை அபகரிக்கப்பட்டாளென்பதை யுணர்ந்திலன்.

[சீதை.] என் கொழுந்தன் நடப்பில்லா அபிப்பிராயம் நவில்கின்றனன், ஆனல் நாயகர்க்கு சோகமாற்றமுபாயமாகும்.

இராமர் முன்விருத்தத்தொடர்ச்சி.

எல்லாரும்போ விவனுமின்றியெங்கு மேகமாய்ப்போக வடியெடுத்திடானே

[இராவணன்.] ஆம், ஏற்பட்ட கோழைத்தனத்தாலன்றி இவன்மீதுள்ள ஆசைநேச விசுவாசத்தால்மட்டுமென்று.

[சீதை.] இது வாஸ்த்தவம், என்னெனில் எனது மாமனர் திருமகன் வளர்ஸன்னிதானமன்றி மற்றெவ்விடத்திலும் எனக்குப்பிரியம் வருகின்றதில்லை,

## அந்தரநாடிகை.

இலக்குவன் முன்விருத்தத்தொடர்ச்சி. ☞

வல்லோய்தெய்வரர்ச்சனைக்கிமலர்கள்கொய்யமனங்கொண்டு புன்னாகவாடிக் கேகும்

[இராமர்.] அங்ஙனமாயின், அடா லக்ஷ்மணா அவளைத் தேடிப்பார்க்க வேண்டும்.

[இலக்குவன்.] அங்ஙனமாகட்டும்.

என நடக்கின்றனன்.

[இராவணன்.] அடட, அவள் புன்னாக வாடிகையிலன்று, பின்னையோ அவள் அசோகவனத்தை அலங்காரஞ்செய்கின்றனள்.

[சீதை.] அந்தோ அந்தோ, அந்தத்தினத்திலிது முந்தியே ஆச்சுது, சகி அனலாய் அவ்வவஸ்தையை நினைத்து சோகத்தினாற் பரவசத்தை அடைகின்றேனடி.

### விருத்தம்.

அன்னமே யனலாயந்த அவஸ்த்தையை யெண்ணியெண் ணி
என்னுரு சோகத்தாலே யரன்பர வசமானே னே
மன்னவன் றனைக்காணாது வல்லரக்கனைக் கண்ணுற் று
சன்னமில் வளிக்குட்பட்ட கதலியாய்ச் சலித்தேன்மன் னோ.

இராகம் நாதநாமக்கிரியை. ரூபகதாளம்.

### பல்லவி.

அன்னாளிலென் அவஸ்த்தைசொல்ல அடங்காதடி அனலாய்.

### அநுபல்லவி

மன்னவனுஞ்சின்னவனும் மானின்பின்னே போனபோதினில். [அன்]

### சரணங்கள்

நட்டநடுக்காட்டில் தானாய் நானிருந்தவீட்டி ல்
மொட்டைத்தலைச்சன்யாசிபோல் முன்வந்தரக்கனின்றிடு ம். [அன்]

வாய்புழுக்கயிவ்வரக்கன் வம்பாய்ச்சிலதியம்ப தியில்
காயவைத்தயீயம்போல்நான் கறைந்தேனங்கம்பரந்தே ன். [அன்]

சிரமீரைந்துங்கரம்நாலைந்தும் திக்கண்களுளுங்கும் உடைய
கருமலைபோலுருவத்தோடிக் கண்டகனென்னண்டைவந் து. [அன்]

கம்பத்தினைக்கண்டேனுடற் றம்பித்துநான்நின்றேன் மிக்க
வெம்புமனத்துன்பங்கொண்டு வீழ்ந்தேன்மண்ணிற்சாய்ந்தேன். [அன்]

பாரோடெனைத்தேரில்வைத்து பத்துத்தலைப்பாவி வெகு
தீரத்துடன்சோரத்தனஞ் செய்துவரும்போதி ல். [அன்]

[அனலை.] ஸகி ஜானகி, ஆனாலும் நீ நல்ல க்ஷத்திரியகுலப்பெண்ணுகையால் அத்தருணம் மனத்தைரியசாலியாகத்தானிருந்தாய்.

[சீதை.] அன்றன்று, அத்திரிமுனிவரின் பத்தினி அனசூயையால் கொடுக்கப்பெற்ற திவியாங்கராகமென்ன வெண்பட்டென்ன இதுகளின் மகத்துவத்தினாலென்றறிந்துகொள்,

[அனலை.] ஸரி ஸரி.

[இராமர்.] ஹா, பிராணகாந்தே, ஜானகி, எங்ஙனமகன்றாய்கொலோ.

[சீதை.] வேகத்துடன் ஹா, அந்தோ அந்தோ அச்சமயத்தில் எனது பிராணேசன் இவ்விதமாய்த்தான் அங்கலாய்த்தலறியிருத்தல்வேண்டும், ஹா ஹா கஷ்டங்கஷ்டம்.

[இராமர்.] அந்தோ அந்தோ.

இராகம் சங்கராபரணம். ரூபகதாளம்.

## பல்லவி.

எங்கேதான் சென்றிட்டாளோ, என்னாயகி.

## அனுபல்லவி.

பங்கயவிலோசனத்தாள் பண்ணெழில்யாழ்வசனத்தாள்
தங்கவரையாந்தனத்தாள் ஜானகிதூயமனத்தாள். (எங்)

## சரணங்கள்.

எந்தனைவிட்டொருபோதும் யேகிடாளெங்குமீதேது
பைந்தொடியவளோசாது பாரவனத்தின்மீது. (எங்)

போதுகொய்யச்சென்றிட்டாளோ பூவையெங்கேநின்றிட்டாளோ
ஏதெதுபுகன்றிட்டாளோ யிதைவிட்டேனகன்றிட்டாளோ. (எங்)

ஹா ஹா கஷ்டங்கஷ்டம்.

## கொச்சகம்.

காதலியென் றேவிதனைக் காணமற் சோகமிகுந்
தாதரமொன் றில்லா தறற்றி விளையாடுசுகம்
கோதிலினிய குறற்கொண்டு பஞ்சரத் துழல
மாதவன் வனத்திருவோ டெங்கு மறைந்தனளோ.

## அந்தா நாடிகை.

(இராவண்ணன்.) ஆம், இருக்கலாம்.

(சீதை.) கருணையுடன், கையொடு கைபிசைந்துகொண்டு, ஹா சகி, அனலாய் யான்வளர்த்த சுபுத்தியென்ற பெயருடைய அச்சுகப்பேடானது என்னைக்காணுமல் சற்றுநேரங்கதறி அப்பொழுதே ஆவி சோர்ந்திருத்தல் வேண்டும், இனி இதற்கென்செய்வேனடி ஸகி.

(அனலை.) ஆ சகி, வேண்டாம் வேண்டாம் இத்தகைய தெய்வவிபரீதத்திற்கு யாம் செய்வதென்னை அழுதாலாவதுண்டோ.

(இராமர்.) ஹ ஹ, கஷ்டத்தின்மேற்கஷ்டம்,

### விருத்தம்.

குகையெனவாய்திறக்கவைத்துக் குளிர்பலவநாளமதைக்கொடுக்கானின்ற, தகையுடைப்புன்னகையாளைத்தேடலெனவிலைக்குடிசிற்றலங்களெல்லாம், மிகவிழைவாயலைதுதிக்கைச்சிருவேழமுழல்கின்றவிதமென்சொல்வேன், சுகமொழியாண்மதிவதனசுந்தரியென்பைந்தொடியெங்குற்ருள்கொல்லோ.

(இராவணன்.) அடட, இதனுல் ஜானகிக்கென்ன குறைந்துவிட்டது, அவள் விரும்பினுலிப்படி ஆயிரம் விதங்களாய் நம்பாலிருக்கின்றன, இதுவென்ன ஆச்சரியம்.

(சீதை.) அனுகம்பத்துடன், ஹா என்னருமைச்சுதனே காளமேகா; யானிங்ஙனமன்ருே, என்றனைவார்த்தையிலேயே.

அடி சகி, அனலாய் இது நாடகமன்ருே எதிப்படி வாய்விட்டுப் புலம்பினேனடி.

[அனலை.] ஸகி ஜானகி, நீ வைத்திருந்த ஆசையினுல் அந்த யானைக்குட்டி உனக்குப் பிரத்தியக்ஷம்போலவே தோற்றுகின்றது.

### இராமர் கொச்சகம்.

கோலவிளையாட்டுமெயில்குறித் துடசத்துண்ணுழைந்து
சாலவிறைவாய்வெளியில்ச்சார்வதும்அடிக்கடி யே
நாலுபுறம்நோக்குவதும்நாடிடிலென்ணுயகியாம்
சேலெனுங்கட்சானகியைத்தேடலெனக்காண்கின்றேன்.

[இராவணன்] அடட, இது மற்றென்செய்யும், என்னுலபகரிக்கப்பட்டிருக்கின்ற ஜானகியின் விஷயமாய் யென்செய்யக்கூடும்,

### சீதை விருத்தம்.

நேசத்துடனே யெனைநினைத்துநினைத்துச்சோகமுற்றழலு ம்
ஆசைக்கிளியேயான்வளர்த்தஅருமைக்கிளியேஐந்துவன் த்
தேசுக்கிளியேவிளையாடுஞ்சின்னக்கிளியேதித்திக்க ப்
பேசுங்கிளியேசுபுத்தியெனப்பேர்வாய்ந்திட்டபெண்கிளி யே.

ஹா ஹா, கஷ்டங்கஷ்டம், அன்றனைக்குணவருந்தித் திருமுன், பாவி அரக்கனாலபகரிக்கப்பட்டேனே, ஹா சுடு சுடு அப்பால் அனேகநாள் யென்னைத்தேடிக் காணுமல் நிச்சியமாய் நீ வாயும்பிளந்து காலும்பிளந்து மாய்ந்திருப்பாயென்பதிற் சந்தேகமில்லை, (எனப்புலம்பி.

இராகம் முகாரி. சாப்பு.

### பல்லவி.

பாவிநானேன் பிறந்தேன் பொல்லாப் பழிபடவோசிறந்தேன்.

### அனுபல்லவி.

பூவுலகிலுள்ள யாவருந்தேவரும் புகழுவையன்பாக எனை
மேவியிருந்தயென் புருடனைவிட்டுப் பிரியவோ பெண்ணுகப் [பாவி]

### சரணங்கள்.

புருடனைப்பிரிந்துநான் அரியஇச்சிறையினிற்புலம்பிநாவிப்பதற்கோ புண்ய
புரவலனு நிதிலேசன்கீர்த்தியைப்பொருந்தியழிப்பதற் கோ. [பாவி]

என்னுடைநாயகனென்னைநினைத்துளமேங்கிமயங்கிடவோ அதை
உன்னிஉன்னிநானும்தன்னந்தனியேஉருகித்தயங்கிடவோ. [பாவி]

அய்யோவிதியேமயிலுங்கிளியுமென்னுனையும்போச்சலவோ பாவி
தெய்வமேநீயெனைக்கைவிடலாகுமாசிறமையிங்காச்சலவோ. [பாவி]

என்றழுது புலம்பி களைப்புற்றனள்.

(அனலை.) ஆ, சங்கையுடன் கரங்களாற்றழுவிக்கொண்டு, தன்னுள், ஓ ஓ, இவள் மூர்ச்சை அடைந்தனள் கொல்,

(வெளிப்படை.) அடி அடி சகி, இதேதடி ஆசுவாஸங்கொள்ளடி, ஆயாஸந்தீரடி, ஆரணங்கே.

(சீதை.) சற்று தெளிந்து, அடி அனலாய் இப்படிப்பட்ட மகத்தான துர்த்தெசைகளை அனுபவிக்கவென்றே பாவி தெய்வம் என்னைச்சிருஷ்டித்ததடி, இதற்கென்செய்வேனடி.

## அந்தரநாடிகை.

இராமர். நினைத்து நினைத்து, அடி காரொத்தகருங்குழற் காதல் கண்ணாட்டி.

(வசனம்.) ஹா ஹா, கஷ்டங்கஷ்டம், எனது இளையான் எங்கெல்லாந் தேடி அலைந்திளைக்கின்றானோ, அங்ஙனம் அலைந்திட்டாலும், காட்டிற்பிரிந்தவளைக் கண்டேனென்றென்பாற் கழறப்பெறுவேனோ, ஏதேது, எங்ஙனம் நின்று பரிதவிக்கின்றானோ, இனிக்காண்பதேது, கஷ்டங்கஷ்டம்.

இராகம் நாதநாமக்கிரியை. திசிர சாப்புத்தாளம்.

### பல்லவி.

காண்பதேது, ஏயோயினிக், காண்பதேது இந்தக்
கான, கத்திற், சானகிபட, மானை, பிப்போ து. [காண்]

### அனுபல்லவி.

வாண்மதி முகத்தினாளை மாண்பெறு தனத்தினா ளை
வஞ்சியை அபரஞ்சியை, வாளை, வேலை, நேரும்விழி, யாளையினிமேலே. [கா]

### சரணங்கள்.

என்னுயிரா யென்கண் ணை
மன்னன்ஜனக ன்பெண் ணை
கன்னியை யென்றன் பன்னி யை
கால, கதி, யாலே, பிரிந்த, காரணத்தா லே. (காண்)

தனியாய்விட் டேனகன்றே ன்
அனியாயந் தவிக்கின்றே ன்
எனைநாடி யவள் சென் றே
எங்கா, கிலும், நின்றுகொண் டேடென்றாளோ அறியே ன். (காண்)

தேடிவரப்போன தம் பி
காடெலாமலைந்துவெம் பி
வாடுகின்றானோ காணும ல்
வந்தேன், கண்டேன், என்ற, பாலென், வயிற்றில் வார்ப்பனோ. (காண்)

புனற்குளித்தயீரமது புலர்த்தவேண்டி பொற்கொடிமின்நின்கொங்கைப் பொருப்பின்மீதே, கனக்கருங்குழலைவிரித்துன்கரங்களாலேகமழ்தரவடிக்க டிக்கோதிடுங்காலத்தில், முனைக்கிரிகடமிலினத்தோடிறங்கிவந்தமுகிற்கு லமென்றெண்ணியுனமுன்பிற்கேகா, நனிக்குறலின்விளையாட்டுமெயினின் றூடும்நற்றோகைவிரித்துமனங்களித்துநாளும்.

(இராவணன்.) இது வாஸ்தவம், எங்ஙனமெனில்,

## விருத்தம்.

ஏந்திளமுலையாளான யிரதிநேர் சீதாதே வி
கூந்தலைக் காரென்றெண்ணி குதித்திடு கின்றதந் தோ
வாய்ந்த வெள்ளிதய மாமயூரம்போல் வாய்மையென்பா ற்
சார்ந்தவன் ஞானோனே தழுவியே சுகிப்பதென் றோ.

(சீதை.) அடி அனலாய், யான்வளர்த்த சித்திரதெரிசனனென்ற பே ருடைய அம்மயூரத்தின் சிறப்பான அவ்விளையாடலை என்னையகரால் நன்கு ணர்த்தப்பெற்றேன்.

(என்று, சோகநீரைச் சொறியாநின்றனள்.

(அனலை.) ஆ சகி, இப்பொழுது அம்மயிலோ கதாசேஷமாய் முடிந் திருக்கின்றது, அங்ஙனமிருக்க, அதன் விளையாடலை, நினைத்தாவதென்னே, அதனாலென்பயன்.

(இராமர் அடுக்குமொழி.) அடி, ஆவியன்ன, சீதாதேவி, பூவமர்ந்த, காவடர்ந்த, மாவனத்தினில், மேவியெங்ஙனர் தாவிச்சென்றாய் கொலோ, ஹா, பிராணகாந்தே.

இராகம் நாதநாமக்கிரியை. ரூபகதாளம்.

## பல்லவி.

மாமயிலே யிவ்வனந்தனில் எனைப்பிரிந்த மாயமேதடி.

## அநுபல்லவி.

கோமளவாணி, சாமளவே ணி
தாமரைப்பாணி, க்ஷேமகல்யா ணி. (மாமயி)

## அந்தரநாடிகை

### சரணங்கள்.

அனமே, நீ, எங்கேசென்ருயடி, அனமே
ஆருமில்லாத, கான, கந்தனில், அனமே

தனியரசையும் விட்டு
அனைமுதலோரை விட்டு

வனமதில்வந்து புகுந்தேனே துணையாய்
உனையே நம்பியிருந்தேனே அடியுள்

மௌனமயநிறமான
அனுசுறமுதலான
கனஅயர்தருகானத்
தினிலெவணீபோனுய். (மாமயி)

கட்டழகி உனைப்பிரிந்து நான்
கணமுயிர் தரிப்பேனே சகிப்பேனே கட்ட

இட்டமோடென்தையின் சொற்
றட்டிடாதிங்ஙன் வந்தேன்

சட்டமிது பெறத்தானே, வீட்டுவிளக்கை
வெட்டவெளி கவிழ்ப்பேனே, ஐயய்யோபாவம்
இட்டனெல் மெழுகானேன், பட்டுதிர்சருகானேன்
நட்டுகால் மூடமானேன், கொட்டுகண் குருடானேன். (மாமயி)

(எனப்புலம்பி, மோகத்தை அடைந்தனர்.)

(இராவணன்.) ஸந்தோஷ உற்சாகத்துடன் ஆ, (வசனம்) இவனுக்கிப்பொழுது நேர்ந்த சொக்குதலான தளர்ச்சியானது தெளிவுருமலே பலிக்க வேண்டும். அங்ஙனமாயின், இந்தச்சானகி இவனிட ஆசையற்றதனுலுடனே இந்த என்னுடைய மனியில் உல்லாசமாய் வந்துசேர்வளன்றே.

### சீதை கொச்சகம்.

சகியனலா யெந்தன் சாமிரகு நாயகனுர்
மிகவுமயங் கிட்டனரால் வேதையடைந் தெல்பொருட்டே
தகையிலராய் வச்சிரயிதயத் தினளாய்க் கொடும்பாவி
சகதலமெ லாமிகழத் தானிருக் கின்றேனடியோ.

(அனலை.) ஹா சகி ஜானகி, நீயுமிவனிமித்தத்தில், க்ஷணே க்ஷணே மோகப்பெருங்கடலில் மூங்குகின்றாய், அதினின்றுமுன்னை உஜ்ஜீவிக்கும்படி கரையேற்றுதல் மிகப்பாடாய் முடிகின்றது. அங்ஙனமிருக்க வச்சிர யிதயத்தினளாய்ப் பவிக்கின்றதெங்ஙனம்.

(இலக்குவன்.) கிட்டவணுகி, ஆ, அண்ணா ஆய்ாஸந்தீர்ந்தாசுவாஸம் பெறுவீராக.

(இராவணன்.) அடட, கேடுகெட்ட இவ்விலக்குவன், இவனை ஜீவிக்கும்படி ஆசுவாஸஞ்செய்கின்றனன்.

(சீதை.) ஆ தெய்வாதீனமா யிலக்குவன் வந்தென்றதனை உய்யுமாறு களைப்பாற்றிவைக்கின்ற விதமாய்க்காணப்படுகின்றது.

(இராமர்.) தெளிவுற்று, அடா லக்ஷ்மணா,

(அடுக்குமொழி.) புன்னாகவாடியில், மின்னாளிருக்தனள்கொல், பொன்னார்சுணங்குமுலை, யென்னாருயிர்க்கணவி.

(இலக்குவன்) தன்னுள், அடுக்குவசனம். தனிநின்றழற்றி, மனமும் அறற்றி, முனவன்றுடித்து, வினவுமிதற்கிங், கனம்யானெடுத்து, நனியாதுரைப்பன், கஷ்டங்கஷ்டம்.

(இருக்கட்டும்.)

(வெளிப்படை.) அண்ணா, அரையக்கேண்மோ.

இராகம் முகாரி. ஆதிதாளம்.

பாவிம்பவம்மா யென்றமெட்டு.

## பல்லவி.

தேடினேனெங்குஞ் சென்றங்குமிங்குக். (தேடி)

## அநுபல்லவி.

பாடுமிசைப்பிரசம் ஆடுமலர்க்குழலாள்
பாவையை எழிற்சீதா தேவியை மனுநீதா. (தேடி)

## சரணங்கள்.

வளர்புன்னாக வாடி மீதோங்கும்
வனமெலாமிக நாடி அண்ணாநான்
குளிரும்பூஞ்சோலை கூடி
குயில்களுடன் கொண்டாடி
கோதையாள் விளையாடிக்
கொண்டிருப்பா ளென்றேடித் (தேடி)

## அந்தாதிநாடிகை.

மதுகரமுரணி ... சை ... ரீங்கார
மாகந்தவன ... மிசை ... கிரிநதியின்
சதிர்மணற்குன்றத்தி ... சை
சக்கரவாகம்நடந்தி ... சை
சரணடையாளந ... சை
தானதினூறு ... விசை. (தேடி)

(இராமர்.) உத்வேகத்துடன், ஹா ஜானகி, காணப்படவில்லையா. (பெருமூச்செறிந்து.)

இராகம் கமாஸ். ரூபகதாளம்.

### பல்லவி.

பைங்கிளியே, தங்கமேநீ, பாரவனத்தெங்கோ போய்பதுங்கினையடி.

### அநுபல்லவி.

இங்கெனைத்தவிக்கவிட் ... டு
எங்கினையோ, பாகுமொழித், தோகையேவை தேகியேயென். (பைங்)

### சரணங்கள்.

வெம்புமனத் துன்பமெல்லா ... ம்
மெல்லியலுன்றாலே நான்விலக்கினன ... டி
கொம்பிழந்த மந்தியைப்போ ... ல்
குலைகுலைந்து நிலைகலைந்து அலையுமன மலைவடைந்தேதன். (பைங்

ஆசையைச் சோதிப்பதற் ... கே
அப்பாலேபோ யொளித்தாயோஅடியே ... ன்
யோசியாதெங் கோசென்றாய் ... நீ
ஒண்டியதாய்ச்சென்றிடலே திண்டபின் ஒண்டொடியென். (பைங்)

ஹா பிராணகாந்தே, இனியென்செய்வேனடி, என் ஆசை மனோகரி, நீ எங்ஙனஞ்சென்றாய் கொலோ.

### கட்டளைக்கலித்துறை.

சோகானலம் வளர்ந்தென் மனத்தூடு சொலிக்குதந் ... தோ
வேகாமல் வேகுது சந்திபந்தங்களை வெட்டுதே ... ரே

தோகாயென் கண்ணேயிர் தோற்றிடக்காண்கிலே சுந்தரியே
பாகார்மொழிச்சியென்செய்குவனென்னுயிர்ப்பைங்கிளியே.

(இராவணன்.) ஆம், உத்தமஸ்திரீ வியோகனுக்கும் இவ்விலங்கேச னுடைய மனோபீஷ்டத்திற்கும் யாதுசிதமோ, அதையேசெய்யத்தக்கது.

(சீதை.) அந்தோ அந்தோ, அடி அனலாய்.

இராகம் காம்போதி. சாப்புத்தாளம்.

## பல்லவி.

செய்வதின்ன தென்றறியேன், ஐயய்யோ நான்
ஐயய்யோ, நானொரு, பெண், பிறந்தேன். (செய்)

## அநுபல்லவி

வையகம்புகழுமென் மணவாளனைவிட்டு
வன்சிறையகப்பட்டு, வாடுகின்றேன்
வாடுகின்றேன் சகியே அனலாய். (செய்)

## சரணங்கள்.

என்னைப்பிரிந்ததுயர், தன்றாலென்நாயகர்
இன்றுயிர்பொருப்பாரோ, பொருத்திடாரோ
பொருத்திடாரோ, எப்படியாகுமோ. (செய்)

செல்வத்திற்பிறந்துநான், சீராடியேவளர்ந்து
தீஞ்சிறைபுகுந்தேனடி, நான்பாவி
நான்பாவி, ஆவி, துடிக்குதே. (செய்)

(சகி, அனலாய் இதற்கென்செய்வேனடி.

### கட்டளைக்கலித்துறை.

எனைக்கண்ணுறுமலென்றேன் றலுமிக்கவிறங்கவவன்
றனைக்கண்ணுறுதுதமியாடயங்கச்சகியனலாய்
வினைப்பயனுஇவ்விரண்டுமென்னுங்கொல்மென்மேலுமம்மா
மனக்கலல்மூளுதுசெய்வதென்னேவடிமாதரசே.

(என்று, சோகமுற்று மோகித்தனள்.)

## அந்தா நாடிகை.

(அனலை.) வசனம். ஆ, ஸகி ஆயாசப்படவேண்டாம், ஆசுவாசம் பெருவாயாக, மிகச்சமீபகாலத்துள் திரிபுவனங்களிலும் நிகரற்றவீரனுகிய நின் மணவாளரகுராமச்சந்திரன் வந்துசேர்ந்திடப் பெறுவாயம்மா ஜானகி இலேசம்வேண்டாம்.

(சீதை.) சற்றுதெளிந்து, ஆ ஆ அடி சகி அனலாய்.

### விருத்தம்.

மாதெழில னலாயென்றன் மணவாள ராமச்சந்திர ன்
வேதனை கொண்டுகானில் அலைந்துமென் மேலும்வா டி
யேதிருவ னையுந்தானே இறந்தான் கொலிருக்கின்றான்கொ ல்
யீதுசந் தேகஞ்சேர்வா யென்றனை தந்தாயென் னே.

(அனலை) ஆ அம்மா, அந்த சந்தேகமும் இந்த நாடகத்தில் அகற்றுவையம்மணி.

(இலக்குவன்.) அண்ணு தைரியத்தைக் கடைப்பிடிக்கவேண்டும். குறைவனப் பிரதேசங்களெல்லாம் சென்றலைந்து பார்த்தல்வேண்டும், அழுதுகொண்டிருப்பதிற் காரியமாகுமா.

(இராமர்) இராகம் இந்துஸ்தான் காபி. ஆதிதாளம்.

### பல்லவி.

ஐயோ இனிமேல்நான் என்செய்வேன்.

### அனுபல்லவி

மைய்யவனத்திலென் றையலைக்கைவிட்டேனே இந்த
மா, பா, தகத்துட், பட்டே னே. (ஐயோ)

### சரணங்கள்

எங்கென்றுதேடுவேன், யெங்கவளைக்கூடுவேன் இவளை
எண்ணி, யெத்தனை, போதுவாடுவே ன். (ஐயோ)
காட்டானைவந்ததோ, கோட்டாற்பிளந்த தோ அவளைக்
கடித்துத், தின்று, கடர்ந்த தோ. (ஐயோ)

(எனப்புலம்பி எதிர்நோக்கி)

## விருத்தம்.

மந்தமாருத முலிவிடக்கந்த மலர்கண்மாமாரி போல்வழங்கு ம்
சந்ததங்கு ளிர்தங்கிடநிழலைத் தருகின்றகிளை யொடுதழைக்கு ம்
எந்தகோர் வளரிளந்தருவ குளமீதுவைதேகிக்கு மெனக்கு ம்
அந்தரங்கமாம் சங்கதியெல்லா மறிந்ததோர் சாக்ஷியாமன் றோ.

(இராவணன்.) அதனாலென்ன.

(சீதை.) ஓ இது எனது மர்மத்தைப் பேதிப்பிக்கின்ற பூர்வவிருத்தாந் தத்தை உணர்த்துகின்றது.

## இராமர் விருத்தம்.

கிட்டியேவினை வல்செய்வேன் கிருபைசெய் வகுளமேயெ ன்
இஷ்டநாய கியைநீயு மிவ்வழி வரக்கண்டா யோ
எட்டியெங்ஙன ஞ்சென்றாள்கொ லென்னெனக்ன புகன்றிட்டாள்கொ ல்
திட்டமாயுரை செய்யென்பால் செப்புவ துருதிமீ தே.

(இராவணன்.) கோபத்துடன், அடா அடா குட்டிமரமே, மட்டித்த னமாயுளறுதே.

## (இராவணன்) விருத்தம்.

ஆவலாய் மனிதன்கேட்க அகந்தையால் மரமேநீயு ந்
தேவனாகி லங்கேசன்றான் சீதையைக்கொ ணர்ந்தானென் று
நாவெடுத்து ரைத்தாலுன்னை நறுக்கியே இரண்டுமூன்றாய்ச்
சிவிகைநெறி வேனிந்தச் சிர்சந்த்ர காசத்தா லே.

[மகாபார்சவன்.] தன்னுள், ஹ ஹ.

## கலிவிருத்தம்.

குத்துமா முலைக்கோ தைவைதேகி மேல்
வைத்த ஆசையில் ராமனு மாமுக ம்
பத்துளா னுமனோ தப்பாங் குற ல்
மத்தர் போல மயங்கி விட்டார ரோ.

[வெளிப்படை.] இராஜாதிராஜ மஹாராஜலங்கேசுவரா இதேதிப்படி மயங்குவது, இத்தரு, அசேதனமன்றோ, தவிரவும் இது நாடகமன்றோ.

[இராவணன்.] ஓ ஓ, மந்தபுத்தியுடைய என்னால் யீதறியவசமில்லா மற்போயிற்று.

[சீதை.] ஹ ஹ, என்னகஷ்டம் என் மாமனார் தம் வரிசை மகனார்

## அந்தநாடிகை.

கேவலம் உன்மத்தனைப்போல் அசேதனமாகிய மரத்தையுங்கேட்கலாயினர். ஆகவே, என்மீதுள்ள சினேகானுபந்தமே அவர்க்கபருதியாக ஆகின்றது.

[இராமர்.] அட்ட, இது கொஞ்சங்கூடக் கணித்தெதிருனைக்கா திருக்கின்றதே, என்ன விபரீதம் இருக்கட்டும் இதனுலென்ன.

### விருத்தம்.

பூதரவுனைத்தி சீதையெத்திசையிற் போயினட் புகன்றிடா திருந்தால்
மேதகுபகழியாலுனையடித்துமிகமிகப்பொடிப்பொடி செய்வேன்
மோதிமுற்பகையைச்சாதிக்கவிருக்கும்மூர்த்தநின்வைரியஞ்சண்ட
வாதமப்பொழுதேமீதுனைக்கிளப்பிவாருதிகளிற்புகுத்திடுமோல்.

### (இராவணன்) கலிவிருத்தம்.

இத்தரா தரமேர் திழையின் செய்தி
சித்தமே நாணிச் தெப்படிச் செப்பிடும்
ஒத்ததாம் வச்சிரா யுதமென் னுமென்
கைத்த லத்தினடி கண்டிருந்துமே.

### (சீதை) விருத்தம்.

மட்டையே மரமே வனத்துயர் வனையே
இட்ட நாயகியை இயம்புவீ ரென்றல்
சட்டை செய்திடுங் கொலசே தனமன்றோ
கட்டமா மிதனைக் காணவும் விதியோ.

[இராமர்.] ஹ ஹ, இது கொஞ்சமும் சலிக்கிறதில்லையே.
[இருக்கட்டும், இந்த கிரிநதியைக் கேட்கின்றேன்.]

### விருத்தம்.

மலைமடிவயிக்கும் நின்னைப்போலென் றன் மடிவிளையாடு மென்மனையாள், தொலையெங்குற்றுள் கொல்சொல்லுந் நின்னைப்போற்றூங்கிடாப் பங்கயக்கண்ணுள், நிலைநறுக்கவரு மதுகரநெருக்க நீலமாங்குழலி னணின்போல், நலவெழிற்கோகத் தனத்தினுடனே நீநல்குவ ணெடனை கொலோநதியே.

[இராவணன்.] ஆ இதுவுஞ் சொல்லப்போகின்றதா, என்னிடமிருக்கின்ற பயத்தினுலிப்பயம் உடலெல்லாம் நடுங்கிக்கொண்டே போகின்றதே இது எப்படிச்செப்பும் ஒருக்காலுமுறைக்காது.

[இராமர்.] ஓ இதுவும் சலரூபத்தால் நின்று நிலைத்துப்பேசுகின்றதா, யில்லையே, ஹா ஹா, கஷ்டங்கஷ்டம்.

இராகம் உசேனி. சாப்புதாளம்.

## பல்லவி.

எளிமையடைந்தேனென் றிவ்வனமுமறிந்த தென்செய்வேனடா
லக்ஷ்மணா, அட லக்ஷ்மணா. [எளி]

## அநுபல்லவி

களிகொண்டென் கையில்வந்த கனராச்சியமப்போதே
வெளியில்விட்டிங்குதவ வேடமாய்வந்தபோ தே. [எளி]

## சரணங்கள்

அரசும்பவிசும்போ யருங்கானத்தினில்வந்தே ன்
அல்லாமலாஅலைந் தங்கமெலாம்நொந்தே ன்
வரிசையென்காதலியால் மனமகிழ்ந்திருந்தே ன்
மனையாட்டியவளையும் மாயமதாய்ப்பிறிந்தே ன்
வனந்தானவளையும் மறைத்துக்கொண்டெ னோ
மயங்கச்செய்வதோ அதற்கென்றண்ட னோ. [எளி]

பெண்டைப்பறிகொடுத்துப் பேய்கொண்டுழல்கின்றே னே
பேசவாயுண்டோவென் பெருமையிழந்தே னே
கண்டேனென்றொருவார்த்தை மரமும்மலையுந்தா னே
காணுறும்விளம்பிடா தேனோவினவினே னே
கர்மமோமிக வர்மஞ்செய்யு தே
காலமோவெனைக் கேலிசெய்யு தே. [எளி]

[சீதை.] ஒருவிதநினைப்புப் பெருமூச்சுடன்.

கொச்சகவிருத்தம்.

அடியனலா யென்கணவ ரசலந்தரு நீர்பற வை
செடிகளிடங் கேட்டலைந்து திரிகின்றா ரென்செய் தி
அடிமுதலா யவர்க்குறைப் பாராரம்மா சோக க்
கடலைவிட்டுநீக்குவரார்கண்படைத்தோர்காண்பா ரோ.

[அனலை.] ஆஸகி, எல்லாங்கண்டறிவோமடி ஜானகி துக்கப்படவேண்டாம்.

[இலக்குவன்.] தனனுள், ஆ ஆ, எனது முன்னவன் அதிசோகத்தி

## அந்தரநாடிகை.

ஞல் மோகத்தை அடைந்தனன், என்செய்வது இனியென்ஞரியனுக்கு யா துகதிசம்பவிக்குமோவே.

[வெளிப்பண்ட.] அண்ணு, இதுவென்சொல், குடிகெடுக்கின்ற துயரத்தை அடிக்கடிவகிக்கலாகுமோ, தேவரீர், ஸஹஜதைரியத்துடன், ஆத்மாவை ஸ்தம்பனஞ்செய்யவேண்டும்.

இன்னமும், இதோ இப்படி தென்மார்க்கத்துடன் சென்று பார்த்தல் வேண்டும். இதோ,

### விருத்தம்.

சந்தரமிளம் புல்லோடுந் தண்ணீருங்கொடுத்தபான் மை
சிந்தையிலெலண் ணிக்கண்ணீர் சிந்திடத் தெற்கேநோக் கி
இந்தமானி னம்நிற்கின்ற திவ்வழிசெ ன்ருளென் றே
அந்தரங் கத்திஞேடு மறையுமா றறையுதண் ணு.

[இராவணன் கோபத்துடன், அடுக்குவசனம்.] இந்தக், குட்டிமான்களை, வெட்டிடவேண்டுமோல், என, கத்திகைக்கொண்டனன்.

[மஹாபார்சவன்.] ஓ, இராஜாதிராஜ மஹாராஜலங்கேசுவரா.

[அடுக்குமொழி.] கேடுபுரிந்திடேல், நாடகம்நாடகம், வேடமான்குட்டிவி, சேடங்களல்லவோ.

ஆகையால் படபடப்புக்கூடாது.

[சீதை] கண்ணீர்ப் பிரவாகத்துடன், சினேகவாற் சல்லியத்துடன், ஹ ஹ, என்மக்களான இந்தமான்குட்டிகள் தாம், எனது நாயகருக்கு என் செய்திபை முதன்முதலிலுணர்த்துயதோ!

[இராமர்.] அங்ஙனமாயின், தம்பி தென்மார்க்கத்தே தேடிச்செல்வோம்,

என்று நடந்துகொண்டே.

இராகம் எதுகுலகாம்போதி. ரூபகதாளம்.

### கண்ணிகள்.

மானினங்கா ளிவ்வழியே வந்ததுண்டோ என்மடமா ன்
தேனெனுஞ்சொல் சீதைபுற்கள் தேடிப்போட்டு நாடிவளர்த் த (மா)
மயிலினங்காள் காணீரோ மாதரசி சென்றவ ழி
குயிலினங்காள் கூறிரோ கோபமெனமே லேதுமுண் டோ (மயி)
அஞ்சுகங்காள் அறியீரோ அறைந்திட்டா லாகா தோ
பஞ்சரங்காள் நீவிரேனும் பகர்ந்திடில்மா பாவமுண் டோ (அஞ்)

[எனப்புலம்பி நடந்துகொண்டே, அட்டா, தம்பி லக்ஷ்மணா, இதோ இங்ஙனம்பார்க்கக்கடவாய்.]

## விருத்தம்.

ஜானகிகூந்த றன்னிற்றம்பி நான் சூட்டிவைத் த
தேனுகரளி கண்மொய்க்குந் திவ்விய சுகந்தமா ன
பூனிறை எழிலாரங்கள் பொருந்தி இப்போதுதா னே
கானில்வீழ்ந் திருத்தலந்தோ காண்டியால் கண்முன்னா லே.

[இலக்குவன் வசனம்.] ஆம் ஆம், அண்ணா, இதையோஜிக்கின்றபொழுதுயாரோ ஒருவன் ஜானகிப்பிராட்டியை வஞ்சித்தபகரித்துக் கொண்டுபோயிருக்கின்றானென்பதிற் சந்தேகமில்லை, அப்போதவள் கூந்தலினின்றும் நழுவியிருத்தல்வேண்டு மிப்பூங்கொத்து.

[இராவணன் வசனம்.] ஆ அந்தோ, அந்தோ, யானவளை அபகரித்துவரும்பொழுது பரபரப்பன்னியில் சாவதானமாய்வந்தேனல்லேன்அதுதானிதில் அஜாக்கிறதை எற்பட்டது.

(சீதை வசனம்) சற்று தெளிந்தாசுவாஸமுற்று, ஆம் ஆம், பாவியரக்கன் என்னையபகரித்துத் தாவிவருகின்ற வழியில் எனது கூந்தலினின்றும் கீழ்நழுவினதன்றோ?

ஓ, இது அரக்கன் அபகரித்துக்கொண்டு சென்றமார்க்கத்தைக் காண்பிக்கின்ற முக்கிய அடையாளமன்றோ?

[இராமர்.] கொஞ்சம் பத்தடிதூரம் நடந்து,
தம்பி லக்ஷ்மணா இதுவென்கொல்?

## ஆசிரியவிருத்தம்.

தலைசாய்ந்து முயிர்வீய்ந்து தாரணிகிடக்கின் ற
சாரதி யிதார்கொலட டா
சதிர்கொண்ட தேர்பூண்டகலின முறுவாயொடு பி
சாசவ தனங்களோடு ம்
வலிகொண்ட குந்தத்தினடிகொண்ட புண்ணவொ டு
மாண்டெதிர் கிடக்கின்றயி வ்
வன்கரவினத் தொடுநொறுங்கிக் கிடக்கின் ற
மாவிரத மெவருடைய தோ
விலையொண்டுதுண் டாயொடித்தெறிந் திட்டதா ர்
மேவுமீது டையரார்கொ ல்
மேலானமகுட மணிசிதறிக் கிடக்கின் ற
விந்தையீ துடையரார்கொ ல்

## அந்தரநாடிகை.

மலைபோன்ற வன்புயங்களில் வசிக்கின்றதோ ள்
வளைகளிரைந்து சொன் ன
மயமாய் விளங்கின்றநிலை யிங்ஙனுற்றதோ
வகையென் கொலுடையரா ரோ.

[இலக்குவன்.] வசனம். ஆ, அண்ணா ஆச்சரியம் ஆச்சரியம், யானி வ்விதம் தீர்மானிக்கின்றேன்.

எங்ஙனமெனின், ஜானகிநிமித்தத்தில் இரண்டுவீரர்கள் உயுத்தஞ்செய் திருக்கின்ற கோலங்களென்றே.

(இராவணன்.) கோபத்துடன்.

### விருத்தம்.

சீதையை யபகரித்துத் திரும்பியேவரும் போதெற்கு த்
தீதுசெய்த திவிகாதஞ் செய்தவன் யாவனந்த ப்
பாதகச் சடாயுதன்னைப் பலிவெலா மிகக்கெடுத் து
மேதகு சிகைஷயன்றே விளைவித்தேம் நன்றானன் றே.

[சீதை.] ஹா தாத பக்ஷிராஜா இவ்வற்பபாக்கியவதியை இப்படிப்பிர யாசப்பட்டிரக்ஷிக்கமுயன்றும் அந்தத் தர்மபலத்தை யடையாமற்போயினீரே கஷ்டங்கஷ்டம்.

[அனலை.] ஆ ஜானகி, அந்தத்தசகண்டன் மகாபலசாலியென்று முப் புவனங்களும் முறை இடுக்கின்றதல்லவோ ஆகையாலென்செய்யலாமம்மா.

[இராமர்.] தம்பி லக்ஷ்மணா வில் வில்,

என்றே விரைந்துநடக்கின்றனர்.

[இலக்குவன்.] இதுவென்கொல், அகாரணமாயிப்படிக் கேட்கின்ற னனென்னை,

எனப் பின்தொடர்ந்தனன்.

### மஹா பார்சவன் விருத்தம்.

இவனைச்சிறுவ னென்றிருந்தேம் யிருகணுந்தீப் பொறியெழும் ப
அவனித்தலத்தை விழுங்குகின்ற அன்றேக்குகளு மானனமு ம்
நுவலுங்கா ரகந்தரமு நுதலுமுதடும் பார்க்கத்தி ரி
புவனங்களையுஞ் சுட்டெரித்துப் பொடியாக்கிடுவான் போன்றனனால்.

[இராவணன்.] பரபரப்புடன்,

## கட்டளைக்கலிப்பா.

இன்ன வன்முன் னிருக்கவி சைந்தி டா
தேகுவோ மடாமற் றேரிடத் தினி ல்
சின்னவன் றனைப்போ ரிற்செயி ப்பதி ற்
சேருமெ ன்றேயெ னக்கபகீ ர்த்தி யே.

[என்றெழுந்தனன்.

(மகாபார்சவன்) ஆ மகராஜ், அடுக்குவசனம். ஆடுகின்ற, வேடஜால, நாடகமிது, நாடகம், ஆகையால் உட்கார்ந்து பார்த்தல்வேண்டும்.

[சீதை.] எதைக்கண்டென் கணவர்க்கிப்படிப் பரபரப்பெழுந்ததோ.

## (இராமர்) விருத்தம்.

கோத்திரம்நிகர்த்த காத்திரமுடையான் கோரரத்தங்களாற் சிவப்ப ன்
நேத்திரத்திமைகள் சாத்தியுச்சுவாச நிச்சுவாசமிக மிகநீட் டி
காத்திரமதனிற் சனகியைச்சுவைத்து நாளத்தைச்ச ரியெனவருந் தி
ஆத்திரமடங்கிக் கிடக்கின்றான் வழியிலக்கழுகுருவ மாமரக்க ன்.

ஆகையாலிங்ஙனமிவனை யதஞ்செய்யப்போகின்றேன்.

[இராவணன்.] சின மிகப்பொங்கி,

## விருத்தம்.

என்மனைப் பிரியாளான சீதையையெவன் கொன்றான்கொ ல்
வன்மமாயெவன் தின்றான்கொல் வலுத்தவவ் வரக்கனார்கொ ல்
கன்மனத்தவனை யிங்கென்கதிர் கொண்டகற வாளத்தா ற்
றின்மைசெய் கழுத்தைவெட்டிச் சீக்கிரமருந் துவே னே.

[மகாபார்சன்.] ஆ ஆ, மகராஜ், மறதிவந்ததென்கொல், அவளை அசோகவனத்தில் காவலில் வைத்திருக்கிறதன்றோ.

## (சீதை) கொச்சகம்.

ஐய்யய்யோ யென்னையுமோர் அரக்கனுமற் றுருங்கொன் று
மெய்யை அருந்திடவில்லை வேதைகொண்டென் வியோகத்தால்
நைய்யகொடுஞ் சோகமுற்று நாயகர்வருந்தயின்ன ம்
உய்யுகின்றே னென்றனைப் போலுண்டோ ஒருநீ லி.

[இலக்குவன்.] எதிர்நோக்கி, பரபரப்புடன், ஆ அண்ணா, (அடுக்கு மொழி) தடாபுடாவென்றாசினம், எடாதருள்வீர்சரம், விடாதிருப்பீரிவர், சடாயுசடாயுவே,

## அந்தரநாடிகை.

(——) திரை.

குழந்தாய் இராமபத்திர, இராமபத்ரா.

வெண்பா.

சீதைதனை வவ்வித்திரு ட்டரக்கன் சென்றிடுங்கா ல்
மாதைவிடு வித்திட நான்வந்தெய்தி—பாதகனு ல்
வெட்டுண்டேன்நீயுமெனைமேலும்வதைபுரியே ல்
ஒட்டுயிர்ச்சடாயு வென் றுண ர்.

[இராவணன்.] கேட்டு ஓ, (வசனம்.) இக்கிழட்டுக்கழுகு இவ்விரண்டு இராஜகுமாரர்வருமளவும் உயிரகொண்டிருந்தனவா, என்னுலிழந்த ஜீவனையுடையஇக்கழுகு இவர்கட்கென்செய்தியை இயம்பமாட்டாதென்று நம்பிக்கையுடன் விட்டுவிட்டு வந்தேனே.

[சீதை.] ஸந்தோஷத்துடன் சிங்காரக்கவி.

ஈவிறக்கமுமிலாதபஞ்சமா, பாவிராக்கதன் பண்ணியதீமையை
ஆவிவைத்திருந்தன்பனுக்குறைத்தார், தேவதேவனென் சடாயுமாமனே.
[அங்ஙனமாயின்இவ்வளவுகாலபரியந்தம் என்னைமீட்காது தாமதம் யாதோ!

(அனலை.) எல்லாம் இன்றுடகமூலமாய் அறியலாமம்மா.

(இலக்குவன்.) அவசரத்திற் கிட்டவணுகி, ஹா தாத சகுந்தராசனே உமக்குமிவ்வவஸ்தைநேரிட்டதா.

சீதை விருத்தம்.

ஆரியவிஹங்க மன்று உமக்குமிவ் வவஸ்தையா மோ
வீரனுமுமக் கிப்போது விளம்பவுஞ் சக்தியுண் டோ
காரிருட் குழலிதன்னைக் கவர்ந்ததார் பலமென்யே னே
ஊரென்ன பெயர்தானென்ன யார்மகனு னைசெய்வீ ரே.

(இராவணன்.) தைரியத்துடன், (வசனம்) ஓ இக்கெட்டகழுகு இவர்களுக்கு சர்வவிர்த்தாந்தத்தையுந்தெரிவித்தாலுந்தெரிவிக்கட்டும், அதனுலிவ்விலங்கேசனுக்கென்னபாதகம், அதிலிவ்விலங்கேசுவரன்ப யப்படுவான்கொல்.

(சீதை.) ஆசையுடன், பாவிதசகண்டனது பாணங்களால் புளக்கப்பட்டிருக்கின்ற காயத்தையுடைய இச்சடாயுமாமன் என்னென்றுரைப்பனொன்று மனங்கலங்குகின்றேனடி அனலாய்.

(திரை) ——

ஆ, குழந்தாய் ராமபத்திரா.

☞ விருத்தம்.

மனமயங்குது கண்கள் சுழலுது வார்த்தை தள்ளாடுதடா.

(இராவணன்.) எனக்கு மிகச்சந்தோஷம் மிகச்சந்தோஷம்.

(சீதை.) கருணையுடன், ஆரிய சகுந்த ராஜாவே என்னிமித்தம் இப்படிப்பட்ட மகத்தான துர்த்தெசையை அனுபவிக்கின்றீர்கொல், கஷ்டம் கஷ்டம்.

(இராமர்) ஐயா, ஐயா, கொஞ்சம் தைரியத்தைக் கடைப்பிடித்துக் கொண்டு பரிசொலலவேண்டும்.

இராகம். சங்கராபரணம், ரூபகதாளம்.

பல்லவி.

சொல்லுவீர் அய்யனே, சொல்லுவீர்.

அனுபல்லவி

தொல்லுலகெல்லாம்புகழ் வல்லவரே நல்லசெய்தி (சொ)

சரணங்கள்.

தைரியத்தைக்கடைப்பிடித்து சாங்கோபாங்கமாய்த்தொடுத்து
வைரியை இனம்பிடித்து (சொ)

நாடிநாமில்லாவேளையிலே நாய்போனுழைந்தான் சாலையிலே
பேடிப்பயலெயிக காலையிலே (சொ)

குலமென்னபலமென்ன குறித்திடும்பேர் நலமென்ன
நிலையமாமவன் றலமென்ன (சொ)

ஈரமில்லாநெஞ்சகத்தான் இக்குலையுமையுஞ் செய்தான்
சோரனைஇன்னுனென்று தான் (சொ)

(திரை) ——

என்னசொல்லப்போகின்றேன்.

☞ [முன் விருத்தத்துடர்ச்சி.]

ஜனகியைக் கனமாயை களியற்றித் தானபகரித்தானுல்.

(இராவணன் கருவத்துடன்) ஞாதிவததோபியாகிய இவ்விலங்கேசுவரன் எளிதில் விட்டு விடுவான் கொல்.?

## அந்தரநாடிகை.

(சிதை.) ஆ, பிராணேசா! அடா என்வள்ளற் கிளையாய் இன்னம் எனது செய்தி அறிந்திலரா, நிற்கதியாளான இந்தச்சானகியை பாவி இராக்கதன் (என்றைச்சொல்லிலேயே.

அடி சகி அனலாய் இதுவென்னடி பைத்தியம், இன்னுடகத்தைப்பார்த்துக்கொண்டிருக்கின்ற என்னால் பயநடுக்கங்கொண்டு முன்சொல்லிய சமாசாரத்தை எடுத்துப்புலம்பலாயிற்று, என்செய்வனடி.

[அனலே] ஆம், ஆம், வாஸ்தவம் போற்றேற்றலால் அப்படி உண்டாகின்றது.

[இராமர்.] அட்ட, அந்தப்பதித இராக்கதப்பயல் இவ்விராமசமூகத்தில் வந்தபகரித்தானில்லை என்செய்வது.

[இலக்குவன்] கோபசீலனாய்.

கட்டளைக்கலித்துறை.

காரிகைசீதையைக் கைக்கொண்டரக்கன் கடர்ந்தனனென்
ருரியர்மெய்யறுபட்ட ஜடாயு வறைந்தனரால்
சோரனைப்போல்வந்து தூக்காவிடிலவன் றுண்டுதுண்டாய்
வீரவென்வாட்கொ டறுத்திடமாண்டு விழுவனன்றே.

[இராவணன்.] புன்னகையுடன்.

வெண்பா.

மன்மமறுக்கின்ற மாவிதனமொன்றூர்க்காம்
தன்மனதிர்க்கிஷ்டத்தின் சாதகமாம்———கன்மத்தில்
எச்சதுரராயினு மற்றென்செய்வரீதறியா
மற்சினப்பயர்க் கென்னவாய்.

[இராமர்.] ஐயா மேற்சொல்லவேண்டும்.

(——) திரை.

☞ [முன்விருத்தத்துடர்ச்சி.]

வினயமைந்தனேவிந்துவேளையில் வீய்ந்திடுபொருண்மீளும்.

[இராவணன்.] பரபரப்புடன் (வசனம்) அடடா எல்லாங்கற்றறிந்த என்னுலேயும் அந்த விந்து முகூர்த்தமகத்துவம் யெண்ணி யோசிக்கப்படாமற்போயிற்று, நல்லதிருக்கட்டும் தெய்வபலம், யெனக்கில்லாமற்போனாலும் புருடப்பிரயத்தினத்தால் ஆனமட்டிலும் நன்ருய்ச்சரிப்படுத்திக் கொள்கின்றனன்.

சீதை அடுக்குமொழி.

கட்டுபொடுமோமன், செப்பிடுவிதமிவ்
வற்பபாக்கியவதிக், கெப்படிக்கிடைக்கும்.

வசனம். இப்பாவியின் கொடுமையை நினைக்க நினைக்க
நெஞ்சில் சோகவன்னி பற்றியெறிக்கின்றதடி.
இந்தசோகத்திற்கவஸானமுமுண்டோ.

இராகம் கேதாரம் ரூபகதாளம்.

## பல்லவி.

எனதுசோகவனுபோகம் யெப்போபோகுமோ,

## அநுபல்லவி.

வினையின்கெடுதி தனையென்சொல்வேன்
சனகிநான் இனியென்செய்வேன் [எனது]

## சரணங்கள்.

பூமியிற்செனிப்பதுவே பொல்லாததோஷம்
பொருந்தவே அதிலும் பெண்ணாய்ப்பிறந்ததேமோசம் [அதிலும்]
மாமணாளனைப் பிரியவும்விதி
வசமாநான்செய் பூசாவிசேஷம் [எனது]

என்கைத்தொட்டகாலமுதலாய் யென்கணவர்க்கும்.
எடுத்ததெல்லாம்துயராய் விளைந்ததென்செய்வேனிதற்கு (பிரிந்து)
இங்கரக்கன் எதிர்ப்பிலிருந்து
இறந்திடாமல் கறைந்துதவிக்கும் [எனது]

என்னைத்தேடி உருகுமிவர்க்கு இலங்கைச்சிறையிலே
இருக்கின்றேனென்றெடுத்துச் சொல்வார்யாருமங்கில்லை [ஜடாயு]
மன்னனுஞ்சொல்லாமுனெங்கே
வாணாள்விட்டிடுவானோ அறிகிலேன் [எனது]

[இலக்குவன்.] அவ்வரக்கனின்னானென்றே தெரியவில்லையே, அங்ஙனமிருக்க நஷ்டமானபொருள் திரும்பக்கிடைப்பதெங்ஙனம்.

[சீதை] ஹா கஷ்டம் கஷ்டம். இன்னமும் இவர் சமாசாரக்குறையை முடித்தாரில்லையே,

# சுவது அங்கம்.

## அந்தரநாடிகை.

ஆ, தெய்வமே.

### விருத்தம்.

ஐயய்யோ அதிர்ஷ்டமில்லா அனுதையாயாஙோன் பாவி
தெய்வமே இனியென்செய்வேன் திக்குவேரில்லைக்கண்டாய்
பைய்யவாறுலுமாமன் பார்த்திபன்றனக்கெனெல்லாச்
செய்தியுஞ்சொல்லுமட்டுஞ் சீவனேடிருக்கச்செய்வாய்.

[இராமர்] ஐயா என் வினவிலுக்குத்திரம் விளம்பல் வேண்டும்.

### (——) திரை.

குழந்தாய் யாவுமுறைக்கின்றேன் கேட்கக்கடவை.

ஜடா (முன்விருத்தத்தொடர்ச்சி)

முனிவிச்சிரவன் மகனிராவணன் மூவுலகினிலு மாமூர்க்கன்.

[இராவணன்] ஓ இந்தக்கெட்ட கிழட்டுக்கழுகு, க்ஷத்திரியகுலப்பதிதனை இவனுக்கென்னை யியம்பிட்டதுகொல்.?

[பெருமூச்செரிந்து.]

### விருத்தம்.

மட்டிலாவனப்பினுளைக் கவர்ந்துநான் வரும்போதங்கே
கிட்டினுன் தடுத்தான்வந்த கிழக்கழுகி தனைவாளால்
சுட்டிஅச்சிறைகள் கால்கள் துணித்திட்டே னெனினுமாள
வெட்டினேனல்லேன் அன்னேன்விளம்பு மக்கழுத்தைத்தானே.

[சீதை] உள்ளங்தெளிந்தா சுவாஸத்துடன்) இப்படிப் பேரைமட்டுங் குறித்துச்சொன்ன இந்தச்சமாசாரத்தினுல் தீபாந்தரத்தில் இவ்விலங்கைத் தீவிலிருக்கிற என்னை எவ்வாறரியப்போகின்றனர் என்னுயகர்.

[இராமர்] ஐயா குறையுஞ் சொல்லிமுடிக்கவேண்டும்.

[இலக்குவன்] சோகநீரால் தொண்டை தத்தலிட்டு.

அந்தோ அந்தோ.

### விருத்தம்.

ஐயய்யோ அங்கமெல்லாமயர்ந்து மூக்காற்றுலாவி
பையவே கண்சுழன்று பஞ்சடைந்திமையாடாது
வைய்யமீதடித்து வீழ்ந்தார் மாண்டனர்போலுமந்தோ
செய்யவாய்பிளந்தார் நாவுந்தள்ளினர் சிறைக்காலற்றூர்.

[இராமர்] ஆதங்கத்துடன்] ஹா தம்பி குறைச்சமாசாரமுங் கூறுமு ன்னர் நம் தாதா ஜடாயு உயிர் ஒழிந்தனர்கொல், ஹ ஹ கஷ்டங் கஷ்டம். (கிட்டவணுகி தலையில் முகத்திலடித்துக்கொண்டு.

## விருத்தம்

தசரதர்க்கன் புள்ளவரே தாதாவே மாண்டீ ரோ
இசைகருடர்க் கண்ணாவே இங்ஙனமிறந்தீ ரோ
திசைபுகழும் பஞ்சவடி தீர்த்தமர்ந்தேர்க் கு
நசையொடு சகாயகரே நல்லுயிரொழிந்தீ ரோ.

இராகம் சங்கராபரணம் சாப்புதாளம்.

## பல்லவி.

மையவனத்தில்நீர் மாளநான் சகிப்பேனோ.

## அநுபல்லவி.

மெய்யாயிந்த்ரர்க்குதவி செய்யுந்தசரதர்க்கு
கையாய்க்கண்ணனவரே ஐயோஜடாயு நீரே [மைய]

## சரணங்கள்.

தந்தைஇறந்ததுயர் தமிலுமீததிகமாய்
செந்தணலாய்வயிற்றைத் தெகிக்குதென்செய்வேன் [மைய]

துறந்தரசைவனத்தில் பறந்தலைந்தும்பாரியை
பிரிந்துமுனையிழந்தும் பேருயிர்தரிப்பேனோ [மைய]

எங்குநானிருக்கினும் இவ்வனத்திற்றுணையாய்
அங்கங்குதிப்பீரே ஆருண்டினிமேலையா. [மைய]

## விருத்தம்.

ஒங்கரசைவிட்டதிலும் ஓர்தந்தைமாண்டதிலு ம்
தீங்கானத்தினிநடந்து திரிவதிலும்வருதுயர ம்
பாங்காருமதுநட்பால்ப் பரிந்தொழிக்கயிருந்தே ன
யீங்காருயிரிழந்தீர் யீததினும்பெரிதாமா ல்.

[மஹாபார்சன்.] மஹாராஜ் இவனது வன்றுயர் அனைத்திற்கும் தாங்களே காரணமன்றோ?.

[இராவணன்.] அடட, அமார்த்தியவரனே அறியாய்போலும்.

[மஹாபார்சன்.] அஃதெப்படி? அருளல்வேண்டும் மஹாராஜனே.

(இராவணன்) விருத்தம்.

கோவமுச்சிரன்கரன் கரானன்சுபா குவொமொரீசனுங் குலேகூ ர்
எவிலங்குகை ராமனுற்பட்டனர் இன்னம்நம் மவர்களென்றுலு ம்
பாவிலக்குவனென் னுடைத்தங்கை சூர்ப்பனகையை மூளியாய்ச்செய்தான்
ஆவிவைத்தினி திருககவோஇத்துயர் அதனினுமதிகமா மன் •றே.

[பரபரப்புடன்.] ஆகையாலிப்பொழுது.

விருத்தம்.

இனத்தைவீண் போக்கடித்தே னிருந்தென்ன லாபமிந்த ச்
சினத்தையாரிடத்தில் வைப்பேன்திசழ்கத்தியா லென்றங் கை
தனத்தைச்சேதித்தோன் கண்டந்தனையிப்போ துண்டுசெய்தி த்
தினத்திற்சூர்ப்பனகையாலு திரத்தைமண்டிடச் செய்வேனு ல்.

(எனக்கட்கப்பாணியாய் குபீரென எழுந்தனன்.

மாகாபார்சன் அடுக்குமொழி.

கோடிமாமன்னர்கள், தேடிவந்தேத்திடும்,
மோடிலங்கேசுவரா, நாடகம்நாடகம்.

எனத்தகைந்தனன்.

[சீதை சோகத்துடன்.]

இராகம் முகாரி. சாப்புதாளம்.

பல்லவி.

என்னுமொழிப்பேனிந்தத்தோஷம் அய்யோ
என்னிமித்தஞ்சடாயு மன்னனிறந்தகிலேசம் [என்னு.]

அநுபல்லவி.

முன்னாள்ச்செய்திட்டபாவமோ அல்லால்.
அன்யாயமாரிட்டசாபமோ [என்னு]

## சரணங்கள்.

அழுதாலிப்பழியென்னபோமோ தெய்வத்தை
தொழுதாலுமனுபவித்தாலன்றி ஆமோ [என்னன்]
நானேஇதற்கெல்லாம் பாத்ரம் அய்யோ நான்
யேனேபிறந்தேன்வீண் யீசனுடையசூத்ரம் [என்னன்]
ஹா ஹா கஷ்டங் கஷ்டம்.

## விருத்தம்.

என்பொருட்டினில் வந்துயிரிறந்த இவரெனையபகரித்தோன்
வன்புயத்தவன் ராவணனெனப்பேர்மட்டிலு முறைத்துவிட்டதலால்
இன்பமுற்றவன்வாழிட மிலங்கையெனஉறைத்தாரில்லை இறைவன்
துன்பமுற்றழலெனைத் தெரிவார்கொலோ சொற்பபாக்கியவதிமாதோ

அந்தோ அந்தோ இனி யென்செய்வது ஆ தெய்வமே நிற்கதியாளான யென்னை நீயும் முட்டச்சோதிக்கலாகுமா தெய்வமே.

இராகம் நாரயணி (கரமே கஜிமேரே) என்றமெட்டு. சாப்புதாளம்.

## பல்லவி

விதியே இக்கடுந்துயர் விளைவிக்கலாமா
விபரீதமாமிக மிகமனம்நோமா (விதி)

## அனுபல்லவி.

மிதிலேசன்றவு மதில்வந்துபிறந்தேனே
மிகமிகச்சீராடி மேவிவளர்ந்தேனே
அதிமோகனைமணந் தடவியில்வந்தேனே. (விதி)

## சரணங்கள்.

காட்டில்வந்திருந்தாலும் கணவன்சன்னிதானத்தால்
கவலையற்றிருந்தேனே கன்மவசத்தால்
தாட்டீகராக்கதன் சதிசெய்விதத்தால் (விதி)

அரசும்பவிசும்போ யங்கம்நொந்திடத்தீதாய்
அருங்கானத்தினிலலை வதுவும்போதாதா
புருடனைப்பிறிவது போலுண்டோகேதம் (விதி)

## அந்தரநாடிகை.

பறையனூரினிற் சிறைப்பட்டிருப்பே னோ
பாருள்ளவும்வசை யாம்சகிப்பே னோ
துறையையெப்போகாண்பேனோ துக்கந்தவிர்ப்பேனோ (விதி)

நாதனெனைநினைந்து நலிந்துமெலிந்துதே டி
நானோவன்சிறைப்பட்டு நலங்குன்றிவா டி
பேதப்படுத்திவைத்தாய் பிறந்ததேமிகப்பாடா ம் (விதி)

(இலக்குவன் வசனம்.) ஆ ஆ, அண்ணா இதுவென்சொல், தைரியங்கொள்ள வேண்டும், சும்மாவிதனத்தையடைய இதுசமையமன்று அதிசிக்கிறத்தில் சத்துருவின்வாஸ ஸ்தலத்தை விசாரித்தரியவேண்டும். சும்மா துன்பப்படுவதிலாவதென்னை.

இராகம். தோடி. ஆதிதாளம்.

### பல்லவி.

ராமவிபுவேமிக நீமயங்கிவருந்தலாமா
இதுதருணமா, வீரகோதண்ட (ராம)

### அனுபல்லவி.

பூமா இரவிகுல சோமா பலவீமா
புலம்பிப்புலம்பிக்கண்ணீ ரலம்பிப்பொழுதுபோமா (ராம)

### சரணங்கள்

எத்தனைபோதுதானழுதாலும், இனிச்
செத்தார்வருவாரோ ஒருக்காலும், இன்னம்
மெத்தவும்அவஸ்த்தைகள் வந்தாலும், தைரி
யத்தைவிட்டுவிடலாமோ மேலும், நம்மள்
உத்தமிதனைக்கவர்ந்த இத்தனைதுன்பமுந்தந்த
சத்துருவைக்கொன்றுந்தன் சித்தமகிழாமலெந்தன் (ராம)

அன்னவன்வயிப்பதெந்தத் தலமோ, புயம்
மன்னிமெவனுடைய பலமோ, மற்றும்
பன்னுமவனுடைய உட்ப்புலமோ, எல்லாம்
இன்னமறியாதிருத்தல் நலமோ, இதுகளை
முன்னர்விசாரித்தரிந்து துன்னுமரியைப்பரிந்து
சின்னபின்னமாயறிந்து இன்னலொழிக்காமல்கொர்ந்து (ராம)

எங்குகொண்டொளித்தானோ பாவி அவளையென்ன
சங்கடஞ்செய்கின்றானோ மேவி அவனுக்கவள்
தங்குயிர்பரிக்கும்பச்சை நாவி என்றாலுமெங்கே
அங்கலாய்க்கின்றாளோ தேவி அதையெண்ணாமல்
இங்ஙனம்நீ துயர்கொண்டால் சங்கதியென்ஞ்மோகண்டாய்
துங்கனேவிஜயோத்தண்ட சிங்கனேவீரகோதண் ட (ராம)

(இராமர்) கோபத்துடன்.

இராகம் பியாகு ஆதிதாளம்.

## பல்லவி,

என்னநினைத்தாயடா அடா என்பலமறியாயோ.

## அனுபல்லவி,

என்னசொல்வேன்நமது முன்னேமடிந்தஇவர்
தன்னை நினைந்துசோகந் துன்னிக்கொண்டிருக்கையில் (என்)

## சரணங்கள்.

பாவியரக்கனெங்கே தாவிச்சென்றாலுமென்ன
பூவுலகமுழுதும் எவொன்றிலழியாதோ (என்)

ஆயிரங்கண்ணனால காயினுஅயனால
காயினும்பாதல மாயினும்விடுவேனோ (என்)

முக்கணனுடலிலே புக்கியிருந்தாலும்
இக்கணமேரெத்தங் கக்கிடச்செய்யேனோ (என்)

உரகம்பதுங்கினாலுங் கருடன்விடுவதுண்டோ
சரமொன்றவ்வரக்கன்றன் சிரங்கொன்றிடாதோகண்டாய் (என்)

[இராவணன்] அழுக்காறுகொண்டு) அடே அடே க்ஷத்திரியப்பயலே

## விருத்தம்.

சேட்டையடாபீதுனக்குத் தகுதியன்றுசிறுவிரலத்தனைகாணு நீயிதென்ன, மேட்டிமையோ குலக்கொழுப்போ விருதாச்சொற்கள் விளம்புகின்றாயுனை யெளிதில் விடுவதில்லை, மூட்டையென நசுக்கிடுவேன்பதனமிந்த மூவுலகும் ஜெயித்தயென்றன் றுணிவும்வீர, ராஷ்டிகப்ரதாபமும் நீயறியாய்நன்று க்ஷமைவந்ததினிச்சொல்லிற் சரியாகாதே,

## அந்தரநாடிகை.

[சீதை] சந்தோஷத்துடன்) வசனம், என்னுயகர்ச்கிவ்வளவு கால பரியந்தம்தாமதம் யாதோ.

(சோகத்துடன்) அடிஸகி அனலே இது நாடகமன்றோ, ஆகையால் யான் நினைக்கின்றேன். நிஷ்கபடரான அம்மஹா புருடனிடத்தில் மஹாமாயாவியான அரக்கனால் ஏதேனும் வஞ்சகமாய் பயங்கரமான மாயை களிய ற்றப்பட்டிருக்குமென்றே.

(அனலை) ஸகி, ஜானகி, கொஞ்சம் சகித்துக்கொள், எல்லாமின்னுட கமூல்மாய் வெளியாகும்.

(இலக்குவன்) ஆ அண்ணு தயவுசெய்யவேண்டும் தயவுசெய்யவேண் டும்.

### கட்டளைக்கலித்துறை.

இங்கிருந்தேசரம் விட்டிடில்ராவண னென்பவ     னை
எங்கிருந்தாலுந்தொடர்ந்துயிர் மாய்க்குமிதிலென்ன கா     ண்
தங்குடியோடவன் றனையுங்கொன்று தகர்த்திடல     ா
தங்கம்அகற்றுமிது வைரசாந்தியதாய் விடு     மே.

### இன்னமும் கட்டளைக்கலித்துறை.

உலகிலராக்கத மென்றொருபாணம் உகுப்பையென்று     ல்
கலகவிழிச்சியர் கன்னியர்பாலர் களங்கமற்று     ர்
இலகும்விருத்தரு முண்டலவோமாய்த் திடுதனன்     றோ
உலேமனத்தின சரணியயீதுனக் கொத்ததன்     றே.

(இராவணன்.) ஆ அடா அமைச்சர் நாயகமே இம்மூடவசனம் நின் செவிபுக்கிற்றோ.

(மஹாபார்சன்.) அடட இவனிவ்வண்ணம் நினைக்கின்றான் அதனு லென்னகெடுதல்.

(இராவணன்). இவன் நமது பலந்தெரியாமல் இலேசாய் நினைத்து வாயில்வந்தபடி உளறுகின்றனன். கொள்ளிகொண்டு யானையைச்சுடுவது போல் சராக்கினியாலிவன்களைப் பொசுக்குகின்றேன்.

(சீதை.) ஓ, என் வள்ளர்க்கிளையாய், என்பிள்ளை இலட்சுமணு, நன்றாயுரைத்தனை, மகா அபராதியான இக்கொடிய இராக்கதனுக்குச் சரியா னதண்டனைமுறை சாற்றினை, நன்று நன்று.

(இராமர்.) அங்ஙனமாயின் அதற்கென்னதான் செய்யவேண்டுமெ ன்றாய்.

## (இலக்குவன்) விருத்தம்

ஏதுக்கண்ணா தெரியாதவர்போலென்ன செய்வமென்றீ ர்
காதுக்குங்கண்ணுக்குங் காதமுண்டோ நங்கருதலன்ற ன்
தீதுக்குடன்பட்ட தென்றிசைசென்று செறுக்கறிவோ ம்
போதுக்குப்போது புலம்பிடலாவதென் பூவல னே.

## (இராமர்) விருத்தம்

நல்லதப்படியேசெல்வோம் நந்தந்தை ஜடாயுவுக் கு
மெல்லஇம்மலைசீர்கொண்டு மேவியேவளர்ந்த தெர்ப்பை ப்
புல்லொடேவிதிவத்தாகப் பொருந்தவக் கடன்முடித் தே.
ஒல்லையில்வருவாயென்முன் ஓங்குநற்குண ஒப்பில்லா ய்.

(இலக்குவன்.) தேவரீர் கட்டளையிட்டருளிய வண்ணம் சீக்கிறம் மு டித்துவருகின்றேன்.

என்றுசென்றனன்.

(இராமர்.) நினைத்து நினைத்து.

இராகம் பியாகு சாப்புதாளம், கின்னடபாசி என்றமெட்டு.

## பல்லவி

என்னசெய்வேனோ எதுசெய்வேனோ என்
றன்னைமறந்தேன் மிகத்தாழ்ந்தேனடோ (என்ன)

## அநுபல்லவி.

அன்னியாயமோஇது யார்செய்தசூதோ
அரிவையைப்பிரியென்றே அயன்வகுத்ததுவோ
ஆனாலும்பாவி, நானேஇப்பூவில், என்னைத்
தானெண்ணியுருகுவ னென்றேவி (என்ன)

## சரணங்கள்.

அரசிழந்தேனருமைத் தந்தையைத்துறந்தே ன்
அரணியத்தினில்வந்தேன் அரிவையைப்பிரிந்தே ன்
அதுவும்போதாதோ, உதவிசெய்பற வை
அதுக்குமபழிகாரனாய் ஆனேனய்யோ [என்ன]

## அந்தரநாடிகை.

கோவிழந்தகுருடனுனேனே நா னே
கொல்லேயில்வைத்திடும் புல்லாளானே னே
காலெல்லாமசந்தேன், சாலமெலிந்தேன் எக்
காலத்திற், காண்பேனே, காதலி யை [என்ன]

ஆசைநட்போடவள் பேசியரளங்க ளோ
அடவியிலெனேயனேந்திட்ட சரஸங்க ளோ
அதைநினைத்தாலே, அக்கினிபோலே, என்
அந்தரங், கந்தனே, த்தீய்க்குத டா [என்ன]

தந்தைதசரதரும் ஜடாயுவுமறித்தது ம்
ஜானகியைநடுக் கானத்திற்பிறிந்தது ம்
இந்தசோகாக்கினி, என்றன் சிந்தைதனி ல்
எறிகிது, கருகின்ற, தென்னசெய்வே ன் (என்ன)

இவ்விதம் இடைவிடாது புலம்பிக்கொண்டே வலே பவருகின்றனர்.

(திரை) ——

### விருத்தம்.

தந்தைஜடாயுவுக்குச் சைலநீர் தருப்பைகொண் டு
மந்திரக்கடன்முடித்து வருகின்ற என்னேயந் தோ
விந்தைஇவ்விபரீதத்தை யென்னென்று விளம்பல்செய்வே ன்
இந்தமாவனத்தலத்தோ டீர்க்கின்றதிவணிதென் னே.

(இராமர்.) ஆ, என்ன, தம்பி லட்சுமண சப்தமா? வியப்புடன்.

அடட தம்பி லட்சுமணு? உன்னேயுமிழுக்கின்றதாரடா.

(மஹாபார்சன்.) மஹாராஜ், அடுக்குமொழி, தென்னிலங்கேசரீ, முன்னமனுப்பிய, துன்னுங்கபந்தனென், றென்னினேப்பையனே.

(இராவணன்.) ஆம் ஆம் இருக்கலாம் (களிப்புடன்) யீர்க்கட்டு மீர்க்கட்டும், பிச்சுப்பிடுங்கித்தின்று களிக்கட்டும் களிக்கட்டும்.

(சீதை) உத்வேகத்துடன்] ஆ என்னிளேயவோவை இழுக்கின்றது யாவன்,

(——) திரை.

### விருத்தம்.

கடல்கடைந்தமந்தரம்போல் மிகப்பருத்துக்காதமட்டும் நீண்டில்குகைக ளோடும், புடையெனத்துவாரங்களொடு வளர்ந்ததானபுத்தென ஓங்கிடோ கிபொருந்தும்வட்ட, மடுவெனவாய் கண்கள்பயம்வருவிக்கின்ற மாதிரியா ய்விளங்குகின்றமாமுகத்தை, நடுவயற்றிலுளதாகிக் கோரமாகிஙாடுகின் ற தோர் கபந்தவடிவமீதே.

(இராமர்.) அகோ பிரமாதமே ஆகையால் யான்விரைவிற் செல்கின் றேன்.

### (——) திரை.

[வசனம்.] ஆ ஆ அடா நீயாவனடா இராஜகுமாரன்போல் காண்கின்றா ய், நின்னது விதியின் முடிவினால் என்னதாகாரத்திற்கு பலியாய்வந்து வா ய்த்தாய், தெய்வாதீனமே, என்பாக்கியமே பாக்கியம்.

(இராமர்.) கேட்டு அதிவிரைவில் நடந்து, நோக்கி] ஆ நந்தம்பி இல க்குவனால் அவ்வரக்கன் நமனுலகுற்றனன்கொல்? என்னென்றுசொல்ல.

### இதோ விருத்தம்

வந்ததோர்கவந்தவடிவ னமரக்கன்வாளினால் யோசனையளவாய்
விந்தையாய்வளர்ந்தவன் கரத்துணையும்வெட்டுண்டு வீழ்ந்துயிரிறந்தான்
முந்தவந்தணைந்தவிஜயசுந்தரியின் முலைக்குங்குமங்களோவென்ன
சிந்தியஉதிரக்குறியுளனாகி த்திகழிலக்குவன் வருகின்றான்.

(இராவணன்.) சோகாச்சரியத்துடன்.

### விருத்தம்.

யீதென்னபுதுமையைய்யோ இவர்களைஅதஞ் செய்தற்கு
தீதுசெய்கபந்தன்றன்னைச் செப்பியங்கிருத்தி வைத்தேம்
காதகச்சிறுவன்வாளால்க் கணத்தினிற் கரங்கடம்மைச்
சேதித்தான்றனுபந்தன் செத்தானிதென்கொறீதே.

(சீதை) சந்தோஷத்துடன்.

அட அப்பா, யென்பிள்ளை இலட்சுமணா! கூற்றுவனது வாயினின்றும் உயிருடன்மீண்டனை கொல், தெய்வாதீனமப்பா.

(இலக்குவன்.) பிரவேசித்து விண்ணிலக்குவைத்து.

### கலிவிருத்தம்.

ஆரியரைக்குறித் தந்தரவாணி
சீரியநன்மொழி செப்பல்போலுமே

## அந்தர நாடிகை.

ஒருவரைகிளம்பின தொழுங்கதாக வே
கேரிலென்னென்று கின்றுகேள்ப்பனு ல்.

## (அசரீரி) அடுக்குமொழி.

ஜயஜயபூமா, நயகுணஸ்ரீமா
புயபலவீமா, இபல்புகேள்ராமா.

ஓ ராமச்சந்திரா, யான் புகல்கின்றேன் ஜானகி லாபசத்துரு விஜயோபாயம், ஓ ரகுகுலதிலகா, கேட்கக்கடவாய் எனவே.

(இராமர்.) ஆதரத்துடன்) காதுகொடுக்கின்றனர்.

(இலக்குவன்.) திரும்பவும் இயம்புகின்றதென்கொல்.

## (அசரிரீ) விருத்தம்.

இரவிகுலமாமணியேஜனகிதன்னை இனிபடைவாயரிகடமை எளிதில் மாய்ப்பாய், ஒருமொழிகேள்கவிவரன் சுக்கிரீவனென்போன் ஒருநான்கமைச்சர்களோடுகேந்திருப்பான், கிரிரிசியமூகமதில்விரைவாய்ச்சென்று கிட்டியவனோடுநட்பாய்க் கிட்க்கிந்தைக்கி, திரமுடையவாலியைக் கொன்றிவனே ஆளச்செய்துவைத்தால் நின்காரியம்ஜயமசொன்னேனே.

## (இன்னமும்) விருத்தம்.

சாமிராகவனே தீனதயாளனே கமலக்கண் ணா
வீமனும்வாலிதன்னை விஜயமேசெய்து நீயு ம்
கோமகன்சுக்கிரீவர்க்குக் குறித்தகிஷ்க்கிந்தை தன்னை
மாமுடிசூட்டிவைத்தால் மங்களமுனக்குண்டா மே.

## (இன்னமும்) விருத்தம்.

தூலசிரமாமுனிவரளித்த சாபந்துலைந்ததுன்னூற்றனுகபந்த வடிவந்தானே, மேலவனுமென்வடிவந்தனை யடைந்தேன்மென்மேலும் புகழுடனே வாழிவாழி, சாலஉன்றனுதவிக்கோரு தவிகாணேன்சாற்றிடு மிவ்வாக்குதவிதந்தேன்சாமி, சீலகுணபூடணனேயானிப்போது செப்பியமுறைப்படிசெய் செயமுண்டாமே.

(இலக்குவன்.) ஆ இங்ஙனமிறந்த கபந்தன்றான் திவ்வியதேகத்தைப் பெற்றிவ்வண்ணம் சாற்றுகின்றனன் கொல்.

(இராவணன்.) அழுங்காறுடன்) ஹ ஹ தனுகபந்தனுங்கூட.

சிங்காரக்கவி.

சிறைசெய்யெதிரி, கஷியிற்சேர்ந்தனன்
இஷணம்நமது, பக்ஷந்துறந்தனன்.

(மஹாபார்சன்.) ஆ மகராஜ் எடுத்ததேகம் மிற்றுவிழுமட்டும் நமது பக்ஷம் மறந்தவனல்லன்.

(சிறை) சிங்காரக்கவி.

காயந்துறந்தா, காயமடைந்தார்
ஞாயஞ்சொலிச்ச காயங்கள்செய்தார்.

(இராவணன்.) அடட, மஹாபார்சவா, இதுநடக்கத்தக்கதன்று, ஏனெனின் வாலிவீரனது இராச்சியத்தில் சுக்கிரீவனை நாட்டலென்பதேயாம்.

அடா என்னென்று நினைக்கின்றாய்.

விருத்தம்.

மந்திரிபெருமபக்கசேன் மாபலசாலி வாலி
வந்தமானிடனும் சென்மவைரிசுக்கிரீ வன்றனை
அந்தராச்சியத்தில் நாட்டலாகுமா இதையோஜிக்க
விர்தையாயிவரைக்கொல்ல வினயமேசெய்திட்டானல்.

விருத்தம்.

திரிசிரன்றன்னைக்கொன்றான் செய்யபார்க்கவனை வென்றான்
கரனையுங்கொன்றான் ராமனென்னினும் கவிக்குலத்து
நிருபனைஅதிசெம்பீர நீள்பயோனிதியை நோம்பிற்
வரமிகுவாலிதன்னை மாய்த்திடவலியனல்லன்

(ஆகையால்த்தான்) இந்தகோக்குலக்குமாரர்களை வதஞ்செய்யும்பொருட்டு மஹாபலவாலி வீரனையே அனுப்பிவைக்கவேண்டுமென்று அமைச்சர்களால் சித்தாந்தஞ்செய்யலாயிற்று.

பார் பார். விருத்தம்.

திரிகாலம்வாலிவீரன் செய்யனுட்டானத்திற்கும்
ஒருகாலைக்கடன்கழிப்ப தொருகோடிக்குன் மூன்றர்க்கியம்
இருகாதுசிந்துமூன்றிற் றினகரப்பிரீதிசெய்வோன்
கிரிபோற்றுந்துபியைக்கொன்று கிடத்தினேன் மிகக்கெம்பீரன்.

(அத்தகைய வாலிவீரனுக்கு நிகர் அகிலவுலகிலுங்கிடையாது.

## அந்தாநாடிகை.

(மஹாபார்சன்.) தன்னுள்.

### விருத்தம்.

மூடனிவ்விலங்கை வேந்தன்முற்றிலும் வாலியைக்கொ ண்
டாடுகின்றான்பிரதாபம் அடிக்கடியுறைக் கின்றானு ல்
கேடடைந்திறந்தான்வாலி யென்றினிக்கேட்ட தப்பி ன்
நாடிஇன்னவனென்செய்வான் நானொன்றுமறிகிலே னே.

(வெளிப்படை.) ஆம், ஆம், அப்படியே மகராஜனே.

[இராமர்.] வான்முகத்துடன். (வசனம்) தேவரீரால் நன்றாயனுக்கிர கிக்கப்பட்டோம்.

தேவரீர் கட்டளையிட்டருளியபடியே நடக்கின்றோம்.

தேவரீர், யதேச்சையாய் திவ்வியபதத்தை அடைவீராக.

(தேவரீர் மருபடி அருள்வதென்கொல்.?

இந்தபம்பானதிக்கறை மார்க்கமாக ரிசியமூககிரிக்கிச்செல்லவேண்டு மென்றோ. அங்ஙனமாகட்டும் அதுவேஸரி.

என்றிருவரும் நடக்கின்றனர்.

இராவணன். ஆசங்கையுடன், இந்தக்கபட தாபதனுக்கு அந்தச்சுக்கிரீ னது சிநேகம் எங்ஙனம் கிட்டும்.

(மஹாபார்சன்.) மகராஜ் இதுநடக்கக்கூடியதன்று.

இராவணன். ஹட வீரத்துடன்.

### விருத்தம்.

திகழு:மாயிரம்சுக்கிரீவர் ராகவர்சேர்ந் திட்டாலு ம்
மகபலச்சலதியான வாலிமுனெதிர்க்கப் போ மோ
பகாசமார்ச்சாலங்கள் பதினெய்யாயிர மானாலு ம்
புகல்மதக்கரிமுன்னின்று பொருந்துமோ புதுமைமாதோ

[மஹாபார்சன் தன்னுள்.] உட்பலனறியாதிப்படி, மன்னர் மன்னவ ன் உளறுவானுகில் உபஜீவனஞ் செய்கின்ற மந்திரியரென்செய்வார்.

[வெளிப்படை.] எல்லாம் இன்னுடகமூலமாய் வெளியாகும்.

[சீதை] நினைத்து நினைத்து.

(வசனம்) ஆ, என்னைப் பாவியரக்கனபகரித்துக் கொண்டந்தரத்திற்கிளம்பி அதிவேகமாய் வருங்காலத்தில் அங்கொரு மலைச்சிகரத்தில் ஐந்துசாகாமிருகங்கள் இருக்ககண்டனன், அவைகளில் ஒன்றுதான் சுக்ரீவனென்னும் பெயர்கொண்ட குரங்காயிருத்தல்வேண்டும்.

(அனலை) ஆ, அப்படியா, அவரிலொருவரேனும் உன்னுடைய ரக்ஷணையின்பொருட்டு நின்னால் பிரார்த்திக்கப் பெற்றாரில்லைகொல்.

(சீதை) அஃதெங்ஙனம் நடக்கும், பாவி அரக்கனென்னை அபகரித்துக்கொண்டு வாயுவைப்பழிக்கும் வேகத்தோடு தாவிவருகின்றதில் எங்ஙனம் கூடும்.

(இலக்குவன்) எதிர்ப்பில் நின்றகொண்டு, அண்ணா இதுதானன்றோ பம்பாநதி.

கலிவிருத்தம்.

கொந்துமாமலர்ச் சோலையும் சாலவு ம்
மந்தவாதம் மகிழ்ந்தெதிர் வீசலு ம்
சந்தணுதித் தருக்களு மேவி ய
இந்தமாநதி யின்கறை யென்சொல்வே ன்.

இன்னமும் கலிவிருத்தம்.

குட்டிமான்கள் குதித்துத் தடம்பதி ந்
திட்டபள்ளம் நிறம்பிமந் தாரையி ன்
மட்டிலாது மலர்மதுத் தங்கிடு ம்
சட்டமா மின்னதித் தடம்சாமி யே.

ஆகையாலிம்மார்க்கத்தோடு செல்வோம்.

(இராவணன்.) ஆம், அந்தப்பம்பாநதிக்கறை வனப்பிரதேசங்கள் அதிரமணீயமாகத்தானிருக்கும்.

(சீதை) உத்வேகத்துடன்) அடிஸகி அனலாய் அந்தரமணீயமான பம்பாநதிக்கறை வனத்தைக்கண்ணுற்று என்னுசை நேசப்பிராணேசர் என்னினைப்பரோ, யாது புகல்வரோ ஒன்றுமறிகிலனடி.

(அனலை) எல்லா மின்னுடகமூலமாயறியலாமம்மா.

(இராமர்.) ஹா ஹா இந்தப்பம்பாநதியில்,

## அந்தரநாடிகை.

### விருத்தம்.

குஞ்சரங்களிகொண்டு நன்னுளங்குலவுதன் பிடிதனக்கூட் டி
நெஞ்சுவந்ததுநின்ற பின்வாயில்நீரினை யருள்கின்றதந் தோ

(எண்ணி, எண்ணி, ஆ கஷ்டங் கஷ்டம், என் கருத்திர்க்குகந்த காதல் கண்ணாட்டி, அந்தச்சானகி என்னைவிட்டெங்ஙனம் எப்படியிருக்கின்றாளோ (என்று கண்ணீரைப்பெருக்குகின்றனர்.

(இராவணன்.) அடட இவ்விலங்கேசுவரன்றன் தயை உள்ளமட்டும் அந்தச்சானகி அரக்கியரால் நன்றாய் இரக்ஷிக்கப்பட்டுக்கொண்டிருக்கின்றன ள்.

[சீதை] கண்ணீர்ப்பெருக்குடன்.

### கலிவிருத்தம்.

ஆவியன்னவென் அன்பனைவிட்டு மே
பாவியேனிப் பறையறிஞாரி லே
காவலோடுங் கடுஞ்சிறைப்பட்டு மே
ஜீவனோடு மிருப்பது நீத லோ

[இராமர்.] கண்ணீரைத்துடைத்துக்கொண்டு,

### விருத்தம்.

அஞ்சம்பேடினைத்தழுவிட ஆவலாயஞ்சிறை யடிப்ப வண்டினங்கள்
மிஞ்சுசததமிட்டெழுந்திட நளினமிகவலைந்திடக் களிமேவு ம்

(ஹா பிராணகாந்தே அதிஜானகி (என்று தங்கத்துடன்றுககததிற் சொ ககிகோப்புறறனர்.

(இராவணன்) ஐயமுற்று, இவன் மூர்ச்சைகெட்டு விழுந்திட்டானு யினும், திருமபத் தெளிந்தெழுந்திடுவனகொல, அலலது தீர்க்கநித்திரையே எய்துவன் கொல்.

(சீதை) வசனம். ஹா, சுடு, சுடு இனிபென்ன யிருப்பு, எனதாசை நேசப்பிராணேசனுடைய இடமஹா விரக அவஸ்தாந்தரத்தில் என்னை பாவி தெய்வம் அகற்றி வைத்ததே இதாகென் செய்வது, அந்தோவந்தோ.

இராகம் காபி ஆதிதாளம மாயாகானி மோசமியுடு என்றமெட்டு

### பல்லவி.

அய்யோபாவம், அய்யோபாவம், அய்யோ தெய்வமே,

## அநுபல்லவி.

ஐயோமென்றே நானிருந்தேனே
நடுச்சட்டி இரக்கினாய் நீதானே. (அய்)

## சரணங்கள்.

என்மனத்தினில்முன் னெத்தனைவிவாத ம்
இஷ்டப்படிமுடிந்ததேப் பிரமாத ம்
கன்மனக்கைகேசி விளைவித்தபேத ம்
கறையிலாக்கடலாச்சே கேத ம் (அய்)

நாட்டிலிருக்கொணாமல் காட்டிலடித்தா ய்
நாதனைப்பிரிந்திட நீமருட்கொடுத்தா ய்
தாஷ்டிகவரக்கர் வன்சிறையிலெனைமடுத்தா ய்
சற்பனைதொடுத்தாய் கெடுத்தா ய். (அய்)

அடிக்கடியெனைநினைத் தாவிசொக்கிட வே
அவஸ்தைப்படுமென் கணவர்க்குத்தென்பட வே
முடியாமலெனைமறைத் தொளித்தாயொர்கட வே
மோசந்தவிர்த்திடாய் கும்பிடுவே ன். (அய்)

அதிவிரகத்திற் களைப்பானவென்னேசர் க்
கண்டையில்நானிருக்கலாகாதோ மோச ம்
இதுவுங்கெடுதலல்லாற் பிறிதில்லைலவலேச ம்
இனிநான்சகிப்பேனோ பிறயாச ம். (அய்)

(என்றுதங்கத்துடன் புலம்பிக்கொண் டிருக்கின்றனள்.)

(இலக்குவன்) ஆ, அண்ணா ஆயாசந்தெளிவீராக ஆசுவாஸங்கொள்வீராக.

## விருத்தம்.

நிந்தைப்பாதக வரக்கன்றன் பேரையும் நேரா ய்
அந்தச்சோரனைச் சயிக்கு முபாயமு மறிந்தோ ம்
சொந்தச்சோலியை முடிப்பது மிகமிகச் சுலப ம்
இந்தச்சோகமுற் றிறங்கிட லேனினி யண் ணா.

(இராமர்) களைப்பகன்று, அடா லக்ஷுமணா அந்த ரிசியமூககிரி இன்னம் எவ்வளவு தூரமிருக்கின்றதோ.

(இலக்குவன்) அண்ணா இதோ, (அடுக்குமொளி) தெக்ஷிணத்தெதிர்ப்பினில, பிக்ஷுபோற்காண்குறார், இக்ஷணமவரிடம், பக்ஷமாய்க்கேட்கிறேன்.

அந்தராநாடிகை.

(அப்பால்) யதீசுவரர் பிரவேசிக்கின்றனர்.

(யதி) யானோ இந்த யதி வேடத்துடன் இவ்விராஜ குமாரனை வந்தடைந்தனன்.

(இராவணன்) ஆ,

கலிவிருத்தம்.

எஞ்சொற்கொண்டங் கெழுந்திடுவாலிதா ன்
விஞ்சைகற்றசன் யாசியின்வேடமா ய்
செஞ்சிலைக்கைச் சிறுவனைச்செற்றி ட
வஞ்சமுற்றெதிர் வந்தவனுகுமா ல்.

மெத்த சந்தோஷம், மெத்த சந்தோஷம்.

(சீதை) அடி அனலே, ஆ குடிகெட்டது குடிகெட்டது.

(அனலே) அதென்னடி சகி அகாரணமாய் எதிப்படி நடுங்குகின்றாய்.

(சீதை) கலிவிருத்தம்.

என்னைவஞ்ச மியற்றிய பான்மைபோ ல்
பின்னும்ராமனைப் பேதமை செய்தி ட
அன்னராக்கதனே வந்திட்டான் கொ லோ
சன்னியாசியென்றாலே தவிக்கின்றே ன்

(வசனம்) (ஏதடிசகி) என்னமோசம் சம்பவிக்கப்போகின்றதோவே, இந்த சன்னியாசிவேடத்தால் யென்னைமோசஞ்செய்ததுபோல் என்னுயகனையும் மோசஞ்செய்ய அவ்வரக்கனே இவ்வடிவத்துடன் வந்தனனென்று நினைக்கின்றேனடி.

(அனலே) அடி சகி ஏதடி இது நாடகமன்றோ, ஆகையால் எல்லாங் கண்டறிவோம் அதற்குளேன் பதறுகின்றாய், பயப்படவேண்டாம்.

(இலக்குவன்) ஓ, பகவன் யதீசுவரரே தெரிவீர்கொலோ. யீரிரண்டமைச்சரோடு சுகண்டன் வயிக்கின்றதான கிரிரிசியமூகம் எங்ஙனந்திகழ்கின்றதோ, எங்கட்கியம்புமின்.

(யதி தன்னுள்)வசனம். ஓ ஓ தன்னால் யேறத்தகாத இந்தரிசியமுககிரியில் சுக்கிரீவனை வதைசெய்யும்பொருட்டு அவ்வாலிவீரனுலேவப்பட்டு இவர்கள் வந்தவர்கள்போலும் (ஆகையால்) இந்த ஐய்யங்கொண்ட உளத்தனுை அந்தச்சுக்கிரீவனால் தெளிந்துவரும்படியே விடப்பெற்றேனல்லவோ, ஆனுலிவர் களாவ்விதந்தோற்றப்படவில்லை,

எனெனில் அந்தராத்மாவானது கிரப்புறப்படாடு கூடுகின்றது.

(ஆகையால்த்தான்.)

வெளிப்படை விருத்தம்.

திகழ்சோதம்பினியுருமால்சிகையிற் பூட்டிச்செடிகள் கொடிகள்படர்ந்து செழித்துக்காணும், மகவாரணியத்தலமாம் அங்கிதன்னைவரிசையொடு தன தங்கமரைத்துமாட்டி, புகழ்மேவும்பொன்னருவி யுடைவாடன்னைப் பொருந்தவே பளபளெனப்பிடித்துக்கொண்டு, மிகவீரத்தன்மையுடனெதிரில் சேராய்விளங்குகின்றான் ரிசியமூகவெற்புவேந்தன்.

• (இதனைக்கேட்டரிந்துகொண்டது சரியே.

நீவிர் யாவர்கொலோ, அதனைத்தெரிய விரும்புகின்றேன்.

(இராவணன் தன்னுள்) ஓ, ஓ, இவன் வாலியன்று.

(வெளிப்படை.) அடா மஹாபார்சா நீ அறியவில்லையா இவ்விருவரில் ஒருவன் கரவதக்கொடியன் மற்றவனோ சூர்ப்பனகையை முகபங்கஞ்செய்த துஷ்டவிரோதி என்றறியாய்கொல்.

(சீதை தன்னுள் ) இந்தச்சன்னியாசி அரக்கனாகத்தோன்றவில்லை.

(வெளிப்படை) அடியனலே யீதிவரறிகின்றாறில்லை இவ்வற்பபாக்கியவதியின் அன்பனது திருவேடத்தைப்புனைந்த ஒரு அப்ஸரமடந்தையும் என் கொழுந்தனது வடிவந்தரித்த மற்றொரு கந்தருவப் பெண்ணுமென்பதையே.

(இலக்குவன்)

கலிவிருத்தம்.

ஆரெனவினவும் ஆரியஇவ ரே.
பேரிராமனென் றுரைக்கப்பெற்றவ ர்
கூரும்யானிவர்க்கனுசன் லக்குவ ன்
பாரியாளிவர்க்கென்ன பகர்வனு ல்.

(யதீசுவரர்) போதும் போதும் மேலறிவோம் கேள்வியுற்றனம். இராவணனு லபகரிக்கப்பட்டாள் சீதையென்றே.

(இலக்குவன்) பகவன் யதீசுவரரே, இங்ஙனமெங்கட்குக்கதி சுக்கிரீவனைத்தவிற மற்றுண்டோ.

(யதீசுவரர்) ஸரி, ஸரி, ரகுவீரர்காள் யானோஅனுமான் யென்னும் நாமத்தைப்பெற்றவன் அந்தச் சுக்கிரீவனுக்கு நானே முக்கிய மந்திரி ஆகையாலிப்போது கேட்கக்கடவீர்.

## அந்தர நாடிகை.

### விருத்தம்.

தினகரகுல தீபசுக்கிரீவன் றேவியை வாலிகைக்கொண்டான்
முனமவன் றன்னை வதைத்தவன்மனையை முக்திடவளிப்பை யேலிவனும்
இனமுடன்பாவி ராவணன்றன்னை இடிக்தடித்தெம புரத்தேற்றி
சனகியாங்கனியை நினக்குகந்தாளைத் தருகுவனுடன் கையிற்றனே

(என்னனில்) வசனம் தன்றமையனாகிய யாதொரு வாலிராஜனிடத்தில் அனேககோடி ஆயிரக்கணக்கான சேனைத்திரள்கட்கும் இவனதிபதியாகப் போகின்றானே அதனால்த்தான் முதன்முதலில் அன்யாய சரனுன அவ்வாலியைக கொன்றுவிடவேண்டுமென் றறிவித்துக்கொண்டேன்.

(இராவணன்) கோபத்துடன், என்னென்ன பிதற்றுகின்றனிச் சன்னியாசிப்பயல் எடடா என் சந்திரகாசத்தை

### விருத்தம்.

முன்னமிச்சன்னியாசி தன்னுயிர் முடித்துவிட்டு
உன்னதகிரியிலோங்கும் உற்றவவ் வமைச்சரோடும்
பன்னும்சுக்கிரீவனென்ற பயலையுமொருகணத்தில்
இன்னல்வன் குலையியற்றி யெமபுரிக்கேவுவேனல்.

(சற்றாலோசித்து) யெனக்கிதனை படபடப்பேன் அந்த க்ஷத்திரியபாலனை வதைசெய்யும்படி யென்னாலேவப்பெற்ற அவ்வாலிவீரனே இவரையுமடியாமல் விடுவன்கொல், அவ்வாலி மாய்ப்பதுறுதியே.

[மஹாபார்சன்] நன்குரைத்தருளினீர் இராஜாதிராஜனே.

[சீதை] சந்தோடத்துடன், நல்லமாதிரிதான் இவர் ஒருவர்க்கொருவர் செய்துகொள்ளும் ஒப்பந்தம்.

[இராமர்] ஆ அங்ஙனமாகட்டும் ரிசியமூகத்தை அடைவோம் (என்றெல்லவரும் நடக்கின்றனர்.

[இராமர்] இதுவென்கொல்.

### ☞ விருத்தம்.

யீதென்கொல் என்புக்கும் பலிமையமா மலைபோலிங்கே
பாதையை அடைத்துக்கொண்டு பாதையாய்க் கிடப்பதேனோ.

### ☞ அநுமார் விருத்தம்.

தீது செய்வாலிபாலே சீவனற்றிறந்துவீழ்ந்த
தோதகஅவுணனான துந்துபி உடலதென்பிலேதே.

[இராமர்] ஆ, அங்ஙனமாயின் போக்குவரவுக் கிடைஞ்சலன்னியிவிலைதை அப்பா லெற்றிவிடுகின்றேன். (என காலிட்டெற்றுகின்றனர்.

[இலக்குவன்] வியப்புடன்.

☞ கொச்சகம்.

என்றமையன் கால்விரலா லெற்றிட மகாகிரிபோல்
நின்றவத்தி யின்கணமே நீள் யோசனைத்தசமே.

சென்றுவிழுந்திட்டதகோ.

[அனுமார் தன்னுள்] ☞ தீரனிவன் மா வீரன்.

[வெளிப்படை] தேவ அன்று யுத்தசமையத்தில்,

☞ அன்றுதைத் தோர்யோசனைக்கு ளகற்றினன் போர்வாலி.

[இராமர்] எதிரே நோக்கி.

சிங்காரங்கவி.

தாலத்தின் மூளைத்தசத்த, சாலங்கள் சரங்கவெய்து
வாலங்கள் வடுக்களான, கோலங்களிதுவென் சொல் லோ.

[அனுமார்.] இவை மராமரங்கள் வாலியாலெய்தெய்து புண்படுத்தப்பட்டிருக்கின்றதுகள்.

[இலக்குவன்] அகோவகோ.

விருத்தம்.

புரவலனெனது முன்னோன்புங்கவ ராமச்சந்திரன்
பருவிரலூன்றிப்பூமி பாகத்தைநேர் நிமிர்த்தி
திரமிகுவாலியாலுஞ் சிதைக்க வொண்ணாததான
தருவொருமூன்றும்நான்கும் சரமொன்றில் விழவெய்தானால்.

[அனுமார்.] களிப்புடன் ஓ தேவ தேவ ரகுகுலோத்தமா இங்ஙனம் நோக்குக நோக்குக.

அவ்வாலியின்றம்பியாகிய எமது சுக்கிரீவராஜன் இதோ கிரிசிகரத்தினின்றும் மந்திரவரருடன் இறங்குகின்றனன்.

அதனை இவ்வண்ணம் நினைக்கின்றேன் ஓ புவனநாயகா.

ஆசிரியவிருத்தம்.

மகமேருவென்னக் கிடந்ததுந்துபியென் பைவண்மையில் மணுக்கட்டி போல், வானிலோர்யோசனை கிளம்பியோசனைபத்துமட்டும் விழவெற்றி விட்டாய், மிகவல்லசத்ததரு வீழ்த்திட்டகின்சரம் வெற்படிதுளைத்திட்டதால், வீரா இவீரனுய்மேவுகுணசாலியாய் விளங்குகின்றாயாதலால்,

## அந்தாநாடிகை.

சகமிதில்த்தீனஜனபந்துவாம் நின்னேயேசாணு கதம்அடைந் து
தன்மைமெபாழிகம்பினல் நின்னுதவியால்சென்மசத்துரு தனைச்செயிக்கத்
தருமென்றும்வானராதிபனுகவுங்கருதி சாமிசுக்கிரீவராஜ ன்
தனைகொண்டுவருகின்ற விதமாய்த்துலங்குமூன் சந்நதங்காத்தருள்வை

[இராவணன்] மிஞ்சுவியப்புடன். ஓ ஓ இதுவென்கொல். [யே

### விருத்தம்.

துந்துபிஎலும்பைப் பத்துயோசனைதூரம் வீ ழ
உந்தினன்மரங்களேழும் ஓர்சரத்தாலறுத்தா ன்
சிந்தையுற்றிரவிச்செல்வன் ஆசைநட்பதனிற் சேர்ந்தா ன்
அந்தவாலியையுமந்தோ அவன்மடித்திடுவன் மா தோ

[சற்ருலோசிதது] அதேது ஒருக்காலும் நடக்காது. சத்துருவுக்குச் சத்துரு எமனுககெமன் அவ்வாலிவீரன் இரணக்களத்தில் சிலாவருஷிபன் ரே அவனைச்ஜெயிக்க யாவரால்முடியும். ஒருவராலும் ஆகாதகாரியம்.

(சீதை) நன்று நன்று இக்காடாந்திரத்திலும்.

### அடுக்குமொழி.

கர்த்தனுரிய புத்திரர்க்குயர்
மித்திரலாபம்வந் துற்றதுண்மையே.

[இராமர்] ஆம் அவன் அவ்வண்ணமே இங்ஙனம் வருகின்றனன்.

[அப்பால] அனுசருடன் சுக்கிரீவன் பிரவேசிக்கின்றனன்.

[சுக்கிரீவன்] வியப்புடன்.

### விருத்தம்.

எவர்களைக்கண்டுவாலி யேவலால் வந்தாரென்றுட் க்
கவலையும்பயமுங்கொண்டேன் கருதியே அனுமனா லே
அவர்களைநண்பாக்க அழைத்துவந்திடப் பெற்றேனா ல்
குவலயத்திவரைச்சேர்ந்தால் குற்றமொன்றில்லைமா தோ

[அனுமார்] ஓ பானுகுல மானுபாவ தீனபந்துவே, தேவ தேவ ஸ்ரீரா மச்சந்திரனே, மிக்கவுன்னுவல், உட்கொண்டுவந்த சுக்கிரீவராஜன் நமக்கரி க்கின்றனன்.

## இராமர் அடுக்குமொழி.

துட்டராலென்றுமே கட்டங்கள்வாராமல்
நட்டங்களணுகாமல் இட்டநீவாழியால்
(நண்பனுக்குயர் நன்மையுண்டாகுக..

எனத் தழுவிக்கொண்டனர்.

(சுக்கிரீவன்) தேவ தேவ ஸ்ரீ ராமச்சந்திரா, தேவரீர் திருவாக்கினால் நண்பனென்றெனை நவின்றபோதே எல்லாக்கஷ்ட நஷ்டங்களும் யென்னை விட்டு நீங்கின தமியேனுக்கு சுகமல்லாத சுகமினியேது.

இதைவிடவும் வேறுநன்மையென்பதென்ன யிருக்கின்றது.

(இராமர்) ஓ உத்தம மித்திர ரத்தின சுக்கிரீவா நன்கறிவாய்கொல். விச்சிரவன் மகன் இராவணனென்பவனை, விள்ளுவை அவனதூர் உள்ளசங் கதியெல்லாம்.

(இராவணன்) இந்தச்சுகண்டன் யாதுத்தரமோதுவான். (எனகாது கொடுத்துக் கேட்கின்றனன்.

(சுக்கிரீவன்) ஓ தீனஜனபந்துவே யாதொன்றுமறிகிலன்.

(மஹோதரன்.) இதுவென்கொல், இராஜாதிராஜ இலங்கேசுவரன் றன்னிருப்பை இந்தச்சுக்கிரீவனுமறியான் கொலோ.

(இராவணன் நகைப்புடன்) சசிவேந்திரா கேட்கக்கடவாய்.

### விருத்தம்.

குடக்குச்சசனகியம்மடக் கொடியைத்தூக்கிக்கொண்டுவந்து குளிர் சோலைக்குள்ளிருத்தி, சடைக்கடவுடனைக்குறித்துத் தவஞ்செய்தக்கால் றலைவாசர் மகேந்தரமட்டும்யாவரேனும், அடக்கமுளயென திருப்பைஅறிந்திட்டாலுமதை மறக்கவரமடைந்தேன் அதில்த்தன்னூகங், கடச்கவிட்டான் எனைத்தெரிந்தோனெனினும் வாலி கனிஷ்டனிந்தச் சுக்கிரீவன்மறந்தான் கண்டாய்.

(சீதை) ஆ ஆ அடி அனலாய் இனியென்செய்வதடி.

### விருத்தம்.

அவ்வரிச்கிறையும் ராவணன்செய்தி அறிகிலனென்பதனாலே
இவ்விலங்கையினிற் கொடுஞ்சிறைஇடத்தி விகலரக்கியர்சூழாகவி ல
வெவ்வரவின்பல் வாய்த்தேரைபோல மேவுமென்விரிதுயர்ச்செய் தி
செவ்வையாயென்றன் நாயகர்க்கிறங்கிச் செப்புவர்யார்கொலோதெரி

என்றழுதுசோரநின்றனள். (யேன்

## அந்தரநாடிகை.

அனலே.

இராகம், கமாஸ், ஆதிதாளம்.

### பல்லவி.

சோகமேனம்மா இந்தத்துன்பமொழிந்துனக்
கின்பம்பொருந்துமடி, பெண்ணே கண்ணே (சோக)

### அனுபல்லவி.

பாகுமொழியினளே, அடி, பாணவிழியினளே
வாகுசேரும், மாஜனக, மகளுனக்குச், சுகம்வந்தெய்துமடி
பெண்ணே கண்ணே (சோக)

### சரணங்கள்.

இத்தனைநாளம்வந்தும்உன் னிருப்பறியாமனொந்து
இத்தகையசிறைமீட்காமல், யேகுவரோவென்று, சோகமுற்று
யடியோ பெண்ணே கண்ணே. (சோக

சுக்கிரீவன்சேவகரில் அடி தூதாயொருத்தன்வந்து
பக்கல்வந்துனிருப்பைத்தெரிந்து, பத்தியாய்ராமர்க்குரைத்தறி
விப்பானடி, பெண்ணே கண்ணே. (சோக)

(சுக்கிரீவன்) ஆனால் ஓ ரகுகுலோத்தம ராமச்சந்திரா.

### கட்டளைக்கலித்துறை.

தீயரக்கன் முனஞ் செந்திருப்போலொரு செல்வியொடு
போயினன்வான்வழி அப்போதுமிக்கப் புலம்பினளாய்
தாயவளிங்கனணிமுடிப் பொன்றினைத் தள்ளினளால்
நீயிதைநோக்குதி இந்தாதர்தேனிந்த நேரத்திலே.
என்று கொடுத்தனன்.

(இராமர்) நோக்கி ஓ யீதவளுடைய மேல்முந்தியிற் கிழிபட்ட உத்த
ரியந்தான்

எனக்கரத்தில் வாங்கினோர்.

(இராவணன்) ஆவேகத்துடன்) ஆ இதுவென்கொல் யானறியேனே
ஆகாயமார்க்கமாய் வாயுவேகத்தைதிக்காரஞ்செய்து யான்வருகையில் தனோ
த்திரியத்திலணிகளை முடிந்து அந்தச்சானகி யானறியாது நழுவவிட்டனள்
கொல், இதுவுமொரு புதுமைதான்.

(சீதை) தெய்வாதீனிந்தான்.

கட்டளைக்கலிப்பா.

நல்லவேளையென்னுயகர்கையிலே நான்விடுத்தநகைமுடிப்பீய்ந்தனன்
வல்லராமர்க்குமாவனந்தன்னிலே வானராதிபன்சிமேனகதினத்திலே
(இராமர்) சந்தோடசோகத்துடன் (தன்னுள்) யீதவளதுத்ரன்.

விருத்தம்.

கனதனக்கஸ்த்தூரிமணங் கமழானின்றகட்டழகி மேற்றுகிலாமிதைக்க ழற்றி, நனிபெருமத்யுன்னத காடின்னியமானநங்கைய வடங்கமலைக்கொங் கையின்மேல், கனிவொடியான்லீலை செய்யக்கருதிக்கையாற் காம்பினைத் தோட்டீர்க்கவவள்கண்ணுலெற்றி, சினமோடெனைநோக்கிடுவ ளுடனேயிந் தச்சீர்துகிலால் விசறிமிகச்சிறப்புச்செய்வாள்.

(இராவணன்) ஓ இவ்விராஜகுமாரனுக்கு ஆசையோ கணக்கில்லாமல் பெருகின்றது.

(வியப்புடன்) ஆனல் பிராணஹானி உண்டாகவுமில்லை.

(சீதை) உத்வேகத்துடன் ஆ என்பிராணேசர் யென்னையன்னியில் எனது த்தரீயத்தைமட்டுங்கண்டு அவஸ்தாந்தரத்தை எப்படிச்சகிப்பர்கொ லோ, ஆ, கஷ்டங்கஷ்டம்.

(இராமர்) வெளிப்படை.) நல்லதிருக்கட்டும் இந்தமுடிப்பை அவிழ்த்து என்னுபகியின் ஆபரணங்களைப்பார்க்கின்றேன் (என்றவிழ்த்து) கண்ணீர்ப் பெருக்குடன் நோக்கி,

(தன்னுள்)

இராகம் நாதநாமக்கிரியை, ஆதிதாளம்.

பல்லவி.

ஆபரணங்கள்கண்டேன் அணிபவளைக்காணேனே (ஆபர)

அனுபல்லவி.

சேரபைமிகத்துலங்கும் சொன்னமயமாயிலங்கும் (ஆபர)

சரணங்கள்.

செண்பகநாசியிற் திகழ்கின்றநத்தி தே
ஒண்பெருநவரத்ந உயர்ந்தபுல்லாக்கி தே (ஆபர)

(வெளிப்படை) ஆ லெட்சுமணா தாங்கடா வெனைத்தாங்கடா [எனத்த ளர்ந்து சொக்கிச் சாய்ந்தனர்.

(இராவணன்) ஸரி ஸரி இவனுக்கிதுதான் முடிவு. இதற்குமேலினி இவனுய்யும்வகை இல்லை (என) அத்தியானந்த பரிதனுயெழுந்தனன்.

(மஹாபார்சன்) இராஜாதி ராஜமஹா ராஜலங்கேசுவர இது நாடகம் நாடகம் (எனத்தகைந்தனன்,

(சீதை) ஆ அந்தோ அந்தோ.எனதருமை நேசப்பிராணேசருடைய இந்த மனோவியாபார உணர்ச்சியினுல் அந்தந்த அவஸ்தையை நினைத்து நினைத்து யென்சித்தத்தில் ஒருவித விகாரம் பற்றியது இனியென் செய்யப்போகின்றேன்.

இராகம் இந்துஸ்தான் பியாகு ஆதிதாளம்.

[அரிபரந்தாமாநினைத்துதித்தேன் யென்றமெட்டு]

## பல்லவி.

இனிநானிருக்காமலோ பூமியில் (இனி)

## அநுபல்லவி.

எனைநினைத்தென்னுபகர் யேங்கிக்களைகொள்ளவு ம்

தனியாய்நான்வலை மீன்போற்றுள்ளவு ம் (இனி)

## சரணங்கள்.

பாவியெனைநினைத்து பரதவித்துயிர் வல்லோ ன்

ஆவிசொக்கிவிழுந் தாரல் லோ (இனி)

குலமங்கையாய்பிறந்து கொழுநன் றனைப்பிரிந் து

நலங்கெட்டிருத்தல் நன்றோநலிந் து (இனி)

கர்த்தன் றனைப்பிரிந்து கடுஞ்சிறையில்விழுந் து

எத்தனைநா ளிருப்பேனிசைந் து (இனி)

எனச்சோகமுற்றிங்கிச் சொக்கிவிழுந்தனள்.

(அனலை) ஆ ஆ ஸகி ஜானகி ஆசுவாசங்கொள்வாயாக.

(இலக்குவன்) ஆ அண்ணா அண்ணா இதுவென்கொல். அடிக்கடி மூர்ச்சைகெட்டு அலுங்கோலப்படுகின்றீர், ஆயாசந்தெளிந்தா சுவாஸம் பெருவீராக.

## அந்தர நாடிகை.

[இராமர்]. களைப்புவிட்டெழுந்து.

### அடுக்குமொழி.

எப்பவுமென்றன் நட்பைவிடாதி
ருப்பையேற்கை யடிப்பாய் சுக்கிரீவா
(சுக்கிரீவன் களிப்புடன்) வலக்கைதொட்டடித்தனன்.

### (——) நிரை.

கெடிபெருமென் நண்பனிலங்கேசுவரன்றன் கிட்டியதாயாதியரைச் சமரி
ற்கீறி, அடமொடெவன்மாய்த்தனன்கொலெவனென் சென்மஅரியெனுஞ்
சுக்கிரீவனுக்கன்பானன் கொல்லோ, கெடவவனையுயிர் பறிக்கப்பருத்ததான
கிரியிதனைவேர்கிளப்பி எடுத்திட்டேனல், திடமுடையபார்க்கவனைச் செயி
த்தான்றன்னைச் செய்யிலக்கென் புகழறுக்குஞ்செய்கையாகா.

[சுக்கிரீவன்] ஓ ஓ தானகவே வாலிவந்தவ்விதம் வழுத்துகின்றான்
கொல்.

[அனுமான் தன்னுள் வசனம்.] ஆ ஆ பிரமாகமே சுக்கிரீவன் மறதி து
ன்பத்திற்கிடமே, யாதொருகாரணத்தால் வாலியாலேறத்தகாத மலையினி
ன்றும் கீழிறங்கி வனாந்தரத்திற்கு வந்தனனே. அதனல் யாதுசங்கடம் சம்
பவிக்குமோவே. [நல்லதிருக்கட்டும்] இராமசன்னிதானம் இவனைப்பாது
காக்கும் ஆகையால்ப்பயமில்லை.

[இராமர்.] இதுவென்கொல் சிங்ககாச்சனையா.

[இலக்குவன் கோபத்துடன்] அடே அடே கெட்டபயலே குரங்கு
டன் செய்யிலக்குத்தான் எங்கள் புகழ்க்குன்றத்தை அறுக்கின்றதடா.

### விருத்தம்.

தடிக்குரங்கேயென் புகன்றாய்நின்னொடு செய்யிலக்கெம்மைத் தகர்க்குதப்பா
படிக்கரசாய்த்தன் அனுசன்பரதனைவைத் தண்ணன்வந்த பரிசுகேளாய்
நடக்குமெக்கானத்தினும் பொல்லாருளரேற் கடிந்தறங்கணுட்டற் கன்றோ
துடுக்குளநீருமை யெனும்நின்சோதரபாரியை மருவுந்துஷ்டாவாடா

### விருத்தம்.

மாவலவ ராகவரால் வானரமே நீபடுவாய்
கேவலம்நீ யோர்திரணங் கெய்பிரமாய்ப் புகன்றாய்

மூவுலகமுந் திரண்டுமொய்த் துனைவந்தாண்டாலு ம்
சாவலதுனக் கேதுதப்பிப் பிழைத்தல டோ

இராவணன்.] ஆ

கலிவிருத்தம்.

அந்தராமகதை முடிவாக வே
வந்தனன்கொல் மகபலவாலி யே
சந்தரசூடனைத் தியானித்தயென்றவ ம்
இந்தவேளை சபலமிதாகு மே

ஆனல் அவ்வாலியின் வீரமறியாமல் அவனையுந்தண்டிக்கத் தகுமென்று மூடத்தனத்தினலிவ்விலக்குவன் நினைக்கின்றான்.

[சீதை] ஓ ஓ எனது பிராணேசரிடத்தில் மிகுந்தவழுக்காருடன் பிலவங்கராஜன் வந்தெய்தினன்கொல் அவனை என்வள்ளர்க்கிளைய இலக்குவனுல் தனது இயல்பானசெம்பீரதீர மதுரவாக்கியங்களாக பகரப்படுகின்றதுகள்.

(——) அநித்ததிரை.

அந்தோ வந்தோ.

கலிவிருத்தம்.

என்னையென்ன மதங்கொண் டியப்புரு ன்
கனனிசூர்ப்பனகை முகபங்க மா ம்
இன்னலொன்றங் கியற்றிய மட்டிலு ம்
துன்னும்வீரன் சுமித்திரைபாலக ன்

[தவிரவும்]

விருத்தம்.

நன்றிவன்பின்னுமந்த நவில்விராதனையும் போரி ல்
கொன்றனனுனலீது குணக்கூரனுயமாகு ம்
வென்றிசேர்பலமிருந்தால் மேவியென்றன்பாற் சற் றே
நின்றெதிர்காண்பிக்கட்டும் நிமிடத்திற் வெளிச்சமா மே
நல்லதிருக்கட்டும் சிறுபயல் இவனேடென்ன.
அடே அடே இராகுகுமாரா.

விருத்தம்.

கார்க்குரல்த்தாடகையை சுவாகுவையுமந்தக் கராளனையுமாரீசன் றனையுங்கொன்றோம், பார்க்கவனைத்தோர்க்கவைத்தோம் பின்னுமிக்கப்பலத்தகரா

## அந்தியநாடிகை.

தியவை உயிர்ப்பறித்தோமென்றே, மூர்க்கமுள்ளயெக்களிப்பேன் வேண்டாங் கண்டாய் மோசமடாநீயெனக்கோர் முருங்கைப்பிஞ்சாம், ஏர்க்குநல்லசகுனம் வாய்த்தாலுஞ்சோரம் இருளகன்றபருதிவந்த பினுமேறாதே.

### விருத்தம்.

கண்கெட்டபூனையொன்று விட்டம்பாய்ந்தகதைபோலாம் நீசெயித்தகாரணங்கள், வெண்பட்டணிந்த வெழிற்சனகிதன்னை விட்டகன்றவிரகத்தீ மென்மேலோங்கப், புண்பட்டுவாடி மனம்பொசுங்குகின்றாய் யோர்க்கனவேர்அசனினுமிப்போதுநானே, விண்டொட்டகிரி இதனைவிட்டெறிந்துன் மெய்யழித்துமிகக்கேடு விளைவிப்பேனால்.

[இராவணன்] பேஷ் பேஷ் ஓ அமரேசபுதல்வன் நன்குரைத்தனன்) ஸபாஸ் மெத்தசந்தோஷம்.

[சீதை ஆதங்கத்துடன்.] ஆ சகி அடி அனலாய் இதற்குமேல் யெப்படிஆகுமோவென்றென் மனந்தவிக்கின்றதடி.

[அனலை] ஆ ஆ சகி இராமகாரியமேஜயம் இரகுவீரரே ஜயம்பெருவார் அதைப்பற்றி கொஞ்சமும் நெஞ்சிற்சஞ்சலம் வேண்டாமடி ஜானகி.

[இராமர்.] ஆனால் இங்ஙனம் பொருதிட உசிதந்தான், வருக வருக எனச்சென்றனர்.

(——) திரை.

ஆ ஆ கெட்டேனே கெட்டேனே, அற்பபாக்கியவதியாயினேன். அந்தோ அந்தோ.

### கொச்சகம்.

தடஞாகமொன்றைத் தான்விடுக்கு முன்னம்
விடனாகம்போன்ற வெஞ்சரமிராமன் விட
உடனாகத்தூடுதைத் தாடுருவிச் சென்றிடவென்
னுடைநாதன் பட்டானென்றுரை காதிலுற்றதரோ.

இராகம், குல்ரேஸ் அரவாபரணனே அபிராமிநேசனே என்றமெட்டு.

இதுவோயென்புண்ணியம் யென்பிராணநேசனே யெப்படிநான்சகிப்பேன்
கதையோநாங்கூடிக் காலங்கழித்ததெல்லாம் கனவோநினைவோதான்
பொன்பூடணமற்றேன் புதுமஞ்சட்பூச்சற்றேன் புட்பங்கள்சூட்டலற்றேன்

என்பெருந்தாலிவ்வ இரும்பென்றிருந்தேனே இன்றதைத்தானுமற்றே ன்
கடல்மூன்றிறுந்தாவி கனத்திற்றிரும்புவீரே கனத்தவடம்பலம்போச் சே
திடமானிடனால் போரிடலாகாதென்றசொல் சிறிதும்யோமற்போச்சே
சாவாமருந்துமத்தேவர்க்குங் கொடுப்பாயுன்றனக்கில்லா வகையேதோ ஞ
மூவர்களாலுமநீ சாகாயென்றிருந்தேனேமுந்தும் வைவ்வினைதா னே

(சுக்கிரீவன்) ஆ, வாலிமடிந்தனன்கொல், அதனாற்றான் அதனைக் கேள்வியுற்று அவனைமனவிதாரை குகைநின்றும் வெளிவந்தவளாய் அடங்காத்துயரங்கொண்டு அங்கலாய்த்துக்கண்மாரி பொழிகின்றனள்.

## விருத்தம்.

ரகுவீரனம்பால் வாலிஇறந்தன னாதலா லே
குகைநின்றுவெளியேவந்து கொதிக்கின்றாள் தாரைதானு ம்
சுகபாசுமிகச்சந்தோடம் சத்துரு துலைந்தானப் பா
புகழிலக்குவகான் ராமன்பொற்பதம் வணங்குவேனா ல்.

எனதுபரிவாரசகிதம் இராமபாத வந்தனநிமித்தம் செல்கின்றேன் எனச்சென்றனன்.

(இராவணன்) வீரவாலி இராமனால்மடிந்தனன்கொல், யீதென்கொல், இதையெப்படி நம்பலாகும் ஒருக்காலுமில்லை, பலத்தவட்டப்பாறை தண்ணீரில்மிதக்குமா.

## விருத்தம்.

யீதெல்லாம் விறுதாப்பொய்யே இந்தமானிடனால் வா லி
காதகனிறந்தானென்றால் கதையேது கார்யமே து
எதடாவுலகில்விந்தை எரும்பூறக் கற்குழிந் து
சேதமாமெனுஞ்சொற் போலாம்சிறிதும் வாஸ்தவமிதாமோ.

## (——) திரை.

## ஆசிறியவிருத்தம்.

ஆரவாரஞ்செய்துந்துபியை யோரடியினிலடித்துடனெறுக்கிமலைபோ ல்
அத்திகளையெல்லாங்கிடத்தியதும் வலிமைசேரக் ரமவரக்கர்பதி யை
வீரவால்கொடுபிணை த தொருபக்கமதில்வைத்து விழிபிதுங்கிடநெறுக் கி
வெற்புநேர்தலைகளொடு மண்ணிற்றிடரென்று வீழ்த்தியதுமிகமணக்கு ம்
தாரைமார்பார்ந்த குசபாரத்தின்குங்குமச் சந்தம்பொருந்திடுதலு ம்
தங்கனினத்தார் துலங்குவதுமான இச்சநிர்பெற்ற பலவாலியி ன்
பாரபாருக்களினூடுறு விமருபுறம்பாய்க் துடல்வகிர்ந்தரா ம்
பாணமிதிவ்வடியேர்க்கு செயமங்களர்தந்து பாலிக்குமிதுசரத மே.

## அந்தர நாடகை.

### விருத்தம்.

ஆரணனேசரணஞ்சரணம் ஏனதாரியனே சரணஞ்சரண ம்
பூரணனேசரணஞ்சரணம் நற்புண்ணியனே சரணஞ்சரண ம்
காரணனேசரணஞ்சரணம் அக்ஙராவணனே சரணஞ்சரண ம்
நாரணனேசரணஞ்சரணம் ரகுநாயகனே சரணஞ்சரண ம்.

### சிங்காரக்கவி.

சத்துருவாலியைத்தான் வதைத்தென்னை, கஸ்த்திகணிக்கிக்காத்தனைசாமி முற்றிலுமெனையாள் முதல்வனேசரணம், உத்தமராமபத்ரனேசரணம்.

(மஹாபார்சன்) மஹாராஜ் வாலியின் வதஜனித ஸந்தோஷபர வசத்தனை சுக்கிரீவனது சுபசூசகமங்கள வாக்கியமிது.

(இராவணன்) கோபாவேசத்துடன் குபீரெனவெழுந்து.

### விருத்தம்.

அட்டதிக்கதிபர்தம்மை அலறிடவாகவத்தி ற்
கட்டமேபுரிந்துவென்ற கனத்தராவணனுமென்மு ன்
நட்டணையாகமெய்போல் நடித்தகந்தருவரா ன
துட்டநாரியர்தங்கேசந் துலேத்திடச்செய்கின்றேனு ல்.

(மஹாபார்சன்) அஞ்சலிசெய்துகொண்டு, ஓ இராஜாதிராஜ மஹாராஜ லங்கேசுவரா கிருபைசெய்யவேண்டும் கிருபைசெய்யவேண்டும்.

### விருத்தம்.

பெண்குலேபுரிந்திடாதீர் பெருமையீதுண்மை யய் யா
நண்பொடுசுகக்கிராசாரி நவின்றதிலனிசமா மோ
பண்புடன்படித்ததல்லாற் பாவைநல்லாரென் செய்வா ர்
திண்புயவிலங்கைவேந்தே சினமமர்க்திருததனன் றே.

(இராவணன் தன்னுள்) அங்ஙனமாயின் யீதுண்மையாய்த் தானிருத்தல்வேண்டும்.

(வெளிப்படை கருணையுடன்) ஆ யென்னருமை நண்பே, ஆ கவிக்குல சக்கிரவர்த்தி ஆ.

### விருத்தம்.

மூடிவிழிக்குமு னேடியருக்கிய மூன்றுசமுத்திர முந்தா வி
முனமல்தகர்தெழு தினகரவர்ப்பண முறையினடத்திடு முதல்வீ ரா

சாடிமதித்தெதிர் நாடிநெருங்குமி தானவனுக்கெம ளுனே
தனிநிகரற்றவ சிவபணிமிக்கவ சகவரமுக்கிய சதிர்வா லி
னுடணவக்கர னேறுமுச்சிர சூரவரக்கர்கள் சுவிராத ன்
சொலுமிவரிற்றதில் அதனினுமிக்கவெதுயரிதிலுற்றது சொலவாமோ
கேடுபெருத்தடி யோடிலங்கைப்பதி கேவலமுற்றது கெடலாச் சே
கிலிபுலியைக்கொலும் ஒருகதையொத்தது கெலுதெனுளத்துறுகிறதன்
[னே.

இதுவுமது (விருத்தம்.)

விராதனிறந்தான் கரனிறந்தானெனினு மிக்கப்பலம்படைத் த
இராமன்பகையைத் திடவாலி நின்றுற் செயிக்கவிருந்தே னே
பிராணனிழந்தாய்நீயுமெனிற் பின்னிலங்கையரக்கருட ன்
இராவணன்யானுய்வதெங் ஙனிராமசரத்திற்கிறைதா னே

(இலக்குவன் அடுத்குமொழி) அந்தவாலியைச், சிந்தவதைத்து, வந்தன ன் ராமச், சந்திரன்றானே.

(அப்பால்) இராமர் பிரவேசிக்கின்றனர்,

(இராமர்) விருத்தம்.

தம்பிகிஷ்கிந்தைதன்னைச் சாற்றிளையரசாயந் த
வம்புசேர்துஷ்டவாலி மகனங்கதனையோநாட் டி
நம்புசுக்கிரீவனுக்கு நன்மணிமகுடஞ்சூட் டி
அம்பரிசனசல்லாப ஞக்கிடவேண்டுங்கண்டா ய்.

(இலக்குவன்) ஆ, எனதாரியர் தீனஜன பாரவாரியன்றோ.

(சீதை) கலிவிருத்தம்.

சின்னவனிவன் செப்பியதுண்மை யே
யென்னில்யானென்ன தீனையல்ல வோ
என்னிமித்தமிறங் காததென்ன வோ
அன்னமேஅடி அனலைநங்கை யே.

(அனலை) ஆ, ஸகி ஜானகி,

விருத்தம்.

அரிவையர்க்கரசேயென்ற னுருயிர்ச்சனகமா தே
திரமுளகரனைக்கொன்றும் திரிசிரன்றனையுங்கொன்று ம்
உரமுளகோரவீரஉக்கிர வாலியையுங்கொன்று ம்
வருவதார்நிமித்தமம்மா வரிசையாய்வழுத்துவா யே.

## அந்தரநாடிகை.

(——) திரை.

விருத்தம்.

மடிந்திமெகவான் மகனுடையரசை வல்லராமன் னிடத்திருந்தும்
அடைந்தசுக்ரீவன் சீதையைத்தேட அரியினத்தை யனுப்பினனால்.

(இராமர்) நிரம்ப ஸந்தோஷம், நிரம்ப ஸந்தோஷம். தம்பி லக்ஷ்மணா பதில் சமாசாரந் தெரிகிறமட்டிலும் இந்த பிரஸிரவண கிரியில் தங்கியிருப்போம் (என்றிருவரும் யெழுந்துசென்றனர்.

(இராவணன் சற்றுலோசித்து) இனி நம்மாலென் செய்யத்தக்கது.

(சீதை களிப்புடன்) அடி ஆப்த்த ஸகி அனலாய் நீயே ஸத்திய பாஷிணீ,

(——) அடுத்ததிரை.

ஆ, சுகனே அதோ பார்க்கவில்லையா.

முன்விருத்தத் தொடர்ச்சி

தொடர்ந்தவானரங்கள் சடாயுவின்றமையன் சொற்படி சானகியிருக்கும்
இடந்தெரிந்தனுமா னென்பவனிலங்கைக் கெய்திடக் கடல்கடக்கின்றான்

(——) திரை. (வசனம்.)

அடடா சார்த்தூல இதுவெல்லாம் நாங்கண்டறிந்து கொண்டபடி மஹாராஜ இலங்கேச்சுவரனிடம் அறிவிக்கச் செல்வோம்.

(இராவணன்) ஓ, நம்மாலனுப்பப்பட் டிருக்கின்ற சுகசார்த்தூலர்களின் சல்லாபமோ,

அகோவகோ நாம் இராமனைக்குறித்தவர்களை அனுப்பி யிருக்கிறதுகூட மறந்துவிட்டேன்.

(சற்று திகைத்து) ஆ, ஜானகி விஷயகாமக் கலக்கத்தையுடைய யென்மனம் காரியவர்த்தமானந் தெரிந்து தெளியும்படி அமைச்சர்களால் கட்டிவிட்ட தந்திரோபாயமோ.

[மஹாபார்சன் புன்னகையுடன்] ஓ, இராஜாதிராஜ மஹாராஜா இன்னுடகம் வேறெதற்காகக் காண்பிக்கலாயிற்று.

[சீதை ஸந்தோஷ அதிசயத்துடன்] அடி ஸகி அனலாய் நாமும் இனி அசோகவனத்தை அடைவோமடி யெனெனில்,

என்னைக்குறித் திலங்கைக்கிவர அனுமானென்பவனால் போராழி கடக்கப்படுகின்றதென்று கேட்கப்படுகின்ற தன்றோ, ஆகையால்ச் சேல்வோம் (என்று சென்றனர்.

[இராவணன்] அங்கனமாயின் நமது பரிஜனங்கட்கிவ்விதம் ஆக்ஞாபனம் செய்கின்றேன். ஓ, ஓ பரிஜனங்காள் இவ்விதம் இலங்காதேவிக்கு எடுத்துரைக்க வேண்டும்.

### விருத்தம்.

எம்பரிசனங்காள் இலங்கணிக்குரைமி னேரிகள் மடுக்களிலெங்கு ம்
அம்பிணையொழித்து வற்றவைத்திடுமின் அருங்கனி காய்களோடடர்ந் த
கொம்புடைத்தருக் கடமையொடித்திடுமின் கொண்டலின் மண்டலம்வறு [டும்
நம்புரியரண்மேல் முட்களைப்பரப்பி நாட்டுமின்குரங்கு நாடாம ல்.

யானோ மேலும் அவ்வனுமான் பிரவேசித்துவிட்டாலும் அதற்கிடங்கொடாமலும் நமக்குஇதமானது ஏதேதோ அதுகளை மந்திரிகளிடம் ஆலோசிக்கப் போகின்றேன்.

என்று மஹாபார்சனுடன் யெழுந்து சென்றனன்.

ஆருவதங்கம் முற்றிற்று.



# ஏழாவது அங்கம் ஆரம்பம்.

(அப்பால்) சூர்ப்பணகி பிரவேசிக்கின்றனள்.

### விருத்தம்

வீரனிராமச்சந்திரன் வெற்றியேகொண்டானென்று ம்
போரினிலரக்கர்மாண்டு போயினரென்றுங்கண் டு
தேருதலற்றுக்கண்ணீர் சிதறிடத்தொண்டைதுத் து
மாரினிலடித்துக்கொண்டு மங்கைசூர்ப்பணகிவந்தா ள்

(சூர்ப்பணகி)

இராகம் ஆனந்தபைரவி, ஆதிதாளம்.

### பல்லவி.

என்செய்வேன் யென்செய்வேன் என்செய்வேனென்செய்வேன்
என்செய்வேனென்செய்வேன் இராவணேசுவரனேநான் (என்

## சரணங்கள்.

என்பிறப்பேயென்னண்ணு இராவணேசுவரனே. நீ
தன்புயவலிகெட்டுத் தவபலமெல்லாம்விட் டு
கும்பல்தளங்களோடங் குட்டிநாண்விடுத் த
அம்புபட்டிழிந்தாயே அய்யோதெய்வங்கெடுத் த (தென்

துணைகும்பகர்ணநீ தூக்கம்விட்டெழுந்தது ம்
அணைவிடைபெற்றுட னமர்க்களம்நடந்தது ம்
துணிவாய்மனிதன்கணை தொடுத்திடச்சடைந்தா யே
கணமதிலுயிர்விட்டுக் களத்திலேகிடந்தா யே (வென்)

வாகுபலத்துடுக்கும் வஞ்சரங்கள்தொடுக்கு ம்
வேகமும்மாயாஜால விளைவுமுடையபா லா
மேகநாதனேநாங்கள் விம்மியழுதரு க
சாகவுனக்கும் லபித்ததுவோடாமரு கா (என்)

கும்பநிகும்பர்காள் குமறிவிழுந்திட்ட ரோ
தெம்பாய்நமனுலகைச் சிறைக்கப்புறப்பட்ட ரோ
வம்பாய்நராந்தகதே வாந்தகரேஉம் மை
சம்பாக்கதிர்போலடித்தானோ வெகுசெம் மை (என்)

## விருத்தம்

எந்தனுருயிர்ப்பிறப்பே இலங்கேச கும்பகர் ணு
இந்திரஜித்தோடெல்லா இராக்கதவீரரோடு ம்
சொந்தமாம்பலங்கள் யாவுந்தோற்றவம் மனிதனம்பால்
பந்திபந்தியதாய் மாண்டுபெடுகளம் விழுந்திட்டரா ல்

ஆ ஆ இனியென்செய்வேன்.

## விருத்தம்

இலங்கையிலனுமானன்று விட்டதீயன்ன யிந்த ப்
பலங்கொளும்சோகவன்னி பற்றியேயெறிக்குதெந்த ன்
கலங்குறுநெஞ்சிலந்தோ கன்னிநானென்ன செய்வே ன்
கலங்கெடச்செய்தராம நானுக்கோர் தீங்குகாணே ன்

வசனம். ஆ அதிகாயதிரிசிரனே அக்ஷகுமாரனுடன் நீங்களும் கதாசேஷர்களாக முடிந்தீர்களே என்செய்வேன் இந்தநிர்ப்பாக்கியவதிநல்லதிருக்கட்டும் யானிப்போது அபலையாயிருந்தாலும் இராக்கத குலக்காளராத்திரியாயிருக்கி

ன்ற இவ்விராஜபுத்திரர்க் கென்றைக்குமோனவரை முயர்ச்சித்துப் பதிற்கெடுதல் வினவிக்கின்றேன்.

(எதிர்நோக்கி வசனம்) ஓ வீடணனமைச்சன்சம்பாதிகொல், புட்பகவிமானத்துடன் சுக்கிரீவனதுகூட்டத்தைச் சார்ந்திருக்கின்றனன். இவனோ, தம்பி வீடணர்க்கு பரபக்ஷத்தைச்சாரும்படி துர்ப்போதனைசெய்து இலங்கையை நாசஞ்செய்வனன்றோ அவ்வீடணர்க்கிவ்விராஜியங் கிடைத்ததில் எனக்குக்கொஞ்சமேனும் சந்தோடமென்பதேகிடையாது.

(ஏனெனில்) இராக்கத குலவிருத்தமே செய்துவந்ததனால்.

(அப்பால்) சம்பாதி பிரவேசிக்கின்றனன்.

(சம்பாதி) ஆச்சரியத்துடன்.

## விருத்தம்

என்சொலராமன் புயபலவீரமெழுதிரைக் கடலின்மேற்சேது
நன்கமைத்ததன் மேனடந்துவந்திலங்கை நகரடைந்திராவணேச்சுரனை
வன்படையோடு வதைபுரிந்தானென் வழுத்துவதவன் பெருங்கருணை
நம்பும்வீடணர்க் கிவ்விலங்கைராச்சியத்தை நாடெல்லாம்புகழ நல்கினனே

(பக்கத்திலெட்டிநோக்கி) ஓ இவள் சூர்ப்பனகியோ, வியாகுலங்கொண்டவள்போற் காண்கின்றனள்.

## விருத்தம்

புண்ணியவிபீஷணர்க்குப் பொன்முடி புனைந்ததில்தன்
எண்ணமதழுக்காறுள்ளாளிவள் பொல்லாஙதை நினைத்தே
கண்ணினீர்சொரிய உள்ளங்கலங்கியே கவலைகொண்டு
வண்ணமுமிழந்தாளிங்கே வருகின்றாள் கேட்கின்றேனால்

## அடீசூர்ப்பணகாய் (விருத்தம்)

தோகைசூர்ப்பனகாய் கண்ணீர்சொர நின்றழுதலேனோ
மேகமோவெற்போ வென்னவிளங்கிய உந்தன்மேனி
வாகெலாமிகக்குறைந்தாய் மனத்தினிற் கவலைகொண்டாய்
ஆகஇவ்விதம்நீ நொந்தவாறென்ன அறைகுவாயே

## (சூர்ப்பனகி தன்னுள்) விருத்தம்.

என்கிளைமடிந்ததானும் இன்னம்நீ இருத்தலானும்
வன்கணன்வீடணன்றான் மாமுடிபுனைந்ததானும்

சங்கடவேதனைத்தீ தகதகெனப்பெறியு தா  தோ
என்கருமேனிவாடி யிளைத்ததிவ் விதமற்றென்  னே.

(சூர்ப்பனகி) வெளிப்படை விருத்தம்.

வல்லரக்கர்பலருடன் மன்னனையுங்கொன்ற மணவாளராகவர்பால் வருத்தூதர், சொல்லவுளமகிழ்ந்துடலம் புளகித்தங்கச் சூடாரிச்சுந்தரியாஞ் சனகிமின்னாள், புல்லமனப்பிரியமுடன் திருச்சேவைக்கிப் பே கையில்யானெதிர்ப்படலு மங்குள்ளோரவர், தொல்லேயிலென் றனையருந்தமூக்கியென்றே உதைத்தோட்டிவிட்டனரா லுருகின்றேனே.

[சம்பாதி] ஆம் நீ மூக்கறுபட்டவளன்றோ ஆகையாற்றான் மூடிக்கப்பட்டாய். என், அங்ஙனமன்றோ சகுன நூல் வல்லோரால்ச் சாற்றப்படுகிறது. எங்ஙனமெனின்.

விருத்தம்.

மூக்குறைச்சிவிதவை யொற்றைப்பாப்பான் செக்கான்முட்டிவிழுந்தழு மோசைதும்மல்வேம்போர், தாக்குவண்மண்வெட்டி முசலாதியோடு சப்பாணிகூன்குருடு வேடக்காரன், தீக்குறிசேர்தூமம் கவபாண்டமின்னஞ் சிற்சிலதுமுன்காண்டல் திரைகடற்சூழ், பார்க்குளெந்தக் காரியவாரம்பத் திர்க்கும் பழுதுவரும்பெருந்துயரக் குறியாமென்றே.

ஆகையால் ஞாயமாயுன்னை விலக்கிய விஷயத்தில் உனக்கேன் விதனம் ஆனால் அனுபவமும் சரியாகத்தானே யிருக்கின்றது. என்னெனில்.

விருத்தம்.

உன்னையெதிர்கண்டது மட்டிலுமம்மின்னாள் ஒருமதியைச்சகோரமென ஆவலோடும், மன்னவராமனைநாடி வரவுமன்னான்வன் சொற்கவியம்பிடவும் வளர்த்தசெந்தீ, தன்னிலவள்மூழ்கினள் நீயெதிரேசேர்ந்தாற் சகுனமென்னமோவறியேன் தணலோன்றாங்கா, தன்னையிவன்மகத்துவம் நீ அறியாய்கொல்லோ அதிதூயாளெனராமர்க் கவனீந்தானே.

[சூர்ப்பனகி தன்னுள்] அடட, சகுன சாஸ்திரமிப்படியென்று முன்னமே தெரிந்திருந்தால் எவ்வளவு அடிமிதி அடைந்தாலும் அவன் யெதிர்ப்பிலேயே செல்வேனே.

[வெளிப்படை] நல்லதிருக்கட்டும் அவ்விராமபிரான் இனிமேல் யென்னயென்னகாரியத்தை இச்சிக்கின்றனர்.

(சம்பாதி) மற்றென்கொல்.

## விருத்தம்.

புலத்திபவங்கிஷத்த னிலங்கேசன்றன்னைப் போரினிற்சிங்கங் கரியைப்போற்பிளந்து. துலைத்துபுகழ்ஜயத்தொடு சீதையைத்தீனின்றுஞ் சொலித்திடுகாஞ்சன மென்னத்தூக்கிக்கொண்டு,

(சூர்பனகை தன்னுள்) ஆம் அவனுக்கனுகூலகாலம் இலங்கேசனுக்கோ பிரதிகூல காலம் என்செய்வது.

(வெளிப்படை) மேற்சொல்லும், மேற்சொல்லும்.

## சம்பாதி முன்விருத்தத் தொடர்ச்சி.

மலைத்தலிலாமனத்தனுமான் றனைத்தன்செய்தி வளர்த்தனலிற்குதித்திடுமுன் பரதன்முன்போய், சொலத்தகுமென் றனுப்புகின்றான் அயோத்திக்கேகத்தூயவிமானத்தேறத் துறைசெய்கின்றான்.

(எனஉறைத்தேகினன்)

(சூர்ப்பனகி வசனம்)ஆலோசித்து] நன்று நன்று இப்போது ஓர் யோசனை வந்தது என்னெனில், இவ்வனுமான் இராமனது சமாசாரத்தை பரதன் முன்போய்ப் பகருவதற்கு முன்னுடியே யான் தாபத ஸ்திரீ வேடத்துடன் சென்று ஏதேதோ சில அப்பிரியத்தைச்செப்பி அதைக்கேட்ட வுடனேயே அந்தப்பரத சத்துருக்கனர் இருவரும் மாளும்படி செய்யப்போகின்றேன். அங்ஙனமாயின் இராமனாற் கொல்லப்பட்ட என் இரண்டு சகோதரர்களுடைய வதத்திற்கும்பதிலாய் முடியும் நன்று,நன்று அவ்வண்ணமே செய்கின்றேன் (என்று சென்றனள்.

(அப்பால்) சத்துருக்கனுடன் பரதன் பிரவேசிக்கின்றனன்.

(பரதன்) தம்பி சத்துருக்து வம்ஸனே,

## விருத்தம்.

கானகத்திலாரியர்தங் களத்திரத்தைக் கவர்ந்திட்டகண்டகனைத் துண்டுசெய்ய, யானுரைத்தபடி மகதர்முதல்வரான இராஜரெலாங்கட்டிக்கொண்டு வந்தாலென்ன, சேனைகளோடின்னகர் வந்துற்றுண்டாய் சீக்கிரத்தில வரவர்க்குச் சிறப்பதாகத், தானமுதலானஉப சாரமெல்லாந்தக்க தக்கபடி செய்வாய் சரியாய்த்தானே.

யானும், அவ்வரசர்களாற் கொண்டு வரப்பட்டிருக்கின்ற காணிக்கைப் பொருள்களை ஆரிய ஸ்ரீராமபாதுகைகளுக்குத் தெரிவித்து பொக்கிஷத்திற் சேர்க்கின்றேன்.

[சத்ருக்கனன்] வசனம். ஆ, அண்ணா, இதுவென்கொல் தங்களுத்திரவுப்படி மன்னர் மன்னர்கட்கு முன்னமே உபசரித்தாய்விட்டதே தாங்களும் அவர்கள்கொண்டுவந்த காணிக்கைப்பொருள்களை ஆரிய ஸ்ரீ பாதுகைகளுக்கறிவித்து முன்னமே பொக்கிஷத்திற் சேர்த்து மாய்விட்டதே, அங்ஙனமிருக்க மறுபடியும் அதனையே எடுத்துரைத்த வகையென்கொல்.

[பரதன்] ஆ, ஞாபகம் வந்தது அடா,

## விருத்தம்.

தந்தைதாட்பணிதலை மறவாததனயனை நந்தமையன் றன்னை
எந்தவேளையிற் காண்பனோவென வேங்குறுசிந்தையேன் சித்தம்
நைய்ந்துமுன்பின் செய்கன்மம்யாவையும் கனிமறக்கின்றதே யந்தோ
சந்ததமினிமேலுள காரியந்தனைவிடா தியற்றுவாய் தம்பி.

[சத்ருக்னன்] நன்று, நன்று அவ்வண்ணம் நடந்துவருகின்றனன்.
[பரதன்] நினைத்து நினைத்து தீனத்துடன், தம்பி சத்ருக்னா.

## விருத்தம்.

சிரத்தில்நீலச்சடையு மரையினிற்சீர்பெரும் வெண்மையாம் புதுச்சீரையும், கரத்திலக்கமணியுந் தவத்தினால்கார்நிறத் திருமேனியோர் சோபையும், தரித்துமாவனந் தன்னிலுடசத்தில் சாமிவியாக்கிர சருமத்தன்னில்முன், இருத்தல்கண்டதோர் பான்மையென்கண்ணெதிர் இன்னமும்விட்டகன்றிடவில்லையே.

[சத்ருக்னன்] வசனம். சோகநீரால் தொண்டை தத்தலிட்டு ஆ, அண்ணா என்செய்யலாம் ஸார்வபௌமராயிருக்கின்ற நந் தந்தைக்கு முதல்ப்புதல்வராய் மஹானுபாவரா யிருக்கின்ற அவ்விராகவருக்கு தெய்வத்தாலியற்றப்பட்ட அத்தகைய தெசையை யார்தான் மறப்பார்கள்.

[பரதன்] சோகவேகத்துடன்.

இராகம் உசேனி (துதாகவே திவ்யபாதா தயாநிதே ராமா) என்றமெட்டு.

ரூபகதாளம்.

## பல்லவி.

எப்போதுநா னுன்னைக்காண்பேன் யென்னசெய்வேன்ராமா (ஓ, எப்போ)

## அநுபல்லவி

ஒப்பில்லாத உத்தமனே உயர்கதிர்க்குலசோமா
வெப்புறுங்கா னத்தில்நீபோய் மெய்வருந்திடலாமா. [எப்]

## சரணங்கள்.

கருணைக்கண்ணுங் கமலமுகமுங் கண்முன்னேநிற்கிற தே
குருகைகயும் பவளவாயும் குறித்தெனையுருக்கிற . தே. [எப்]

பானகமும் போனகமும் பாலுந்துறந்துநீ யோ
கானகத்திற் காய்கிழங்கே கதியாய்த்தின்றலைவா யோ. [எப்]

ஸார்வபௌம சக்ரவர்த்தி ஸாமிநீதனியா யே
வேர்வைபெருக வெயிலிலலைந்தால் மெத்தவருந்துவா யே. [எப்]

வருவேனென்று சொன்னவார்த்தை வந்ததின்றுதா னே
திருமுகத்தைதெரிசிக்கவத் திசைபார்த்திருக்கின்றே னே. [எப்]

## விருத்தம்.

சீர்மிகுக்கும்போதனைய வடிகணோகச் செடிகள்படர் கொடிகள்கெடு பள்ளம்மேடு, கூர்மைமுட்கனிறை கானிலிமங்கடுங்கால் குளிரிரவில் வெயிற்பகலிற்சஞ்சரிப்பு, நார்புளிப்புக்கைப்பு துவர்ப்புக்கடுப்பாம் நற்கனிகாய்பசிக்குணவு சருகுவீழ்ந்து, சோரமுகல்வீசுமடுச் சலமேபானம்திரட்ப் பரல்மேற்படுக்கை ஸர்வஜெகதீசர்க்கே.

ஆ, கஷ்டங், கஷ்டம் (என, சோகத்திற்சொக்கி களைப்புற்றனர்.

[சத்துருக்னன்] ஆ, ஆ அண்ணா ஆ, சுவாஸங் கொள்வீராக இப்படி மயங்கல் ஆருமா நமதாரிய ஸ்ரீ ராகவருடைய அத்தகைய தெசரபரிணமத்தை மறக்கல் வேண்டுமண்ணா.

[பரதன்] களைப்புவிடுத்து, அடடா அதைை எங்ஙன மறக்கக்கூடும்.

## விருத்தம்.

கதிர்மணிமகுடம் அணிகின்றசிரத்திற் கனத்தசடாமுடி வகித்தா ன்
சதிர்வெண்பட்டாடைக் கருகமாமிடையிற் றங்கிடவற்கலை தரித்தா ன்
விதுசனல்முகமாய் மேவிடுமுயர்வான் மேடையிலிருக்கின்ற ராம ன்
மதினிஜானகியோடு டசமத்தியில் வனந்தரத்திருக் கின்றான்மன் னே.

ஆ, கஷ்டங்கஷ்டம் அந்தோவந்தோ இன்னமும் வச்சிரமயமான யென்னிதயம் சுக்கல் சுக்சலாக வெடிக்கப்பட வில்லையே.

சோகநீரால் தொண்டை தத்தலிட்டு அந்தோ, அந்தோ.

# எ-வது அங்கம்.

## கட்டளைக்கலித்துறை.

சொல்லுங்கபட இராக்கதன் வவ்விடச் சுந்தரியா ள்
வல்லங்கமாய்த் தன்னுயி ரிறப்பாளன்றி வாழ்ந்திடி லோ
புல்லுந்தமர்தமைக் காணாது சீதையம் பொற்கொடியா ள்
அல்லும்பகலுங் கண்மூடாது சோகத் தழுந்துவ ளே.

[சத்துருக்னன்] ஆ, அண்ணா அதற்கென் செய்வது.

தெய்வத்தால் விளைந்ததிருட் கூத்திற்கென்செய்யலாம்
அழுதாலாவதென்னை வேண்டாம் வேண்டாமண்ணா

(பரதன்) ஹா ஹா கஷ்டங் கஷ்டம்.

## விருத்தம்.

அரக்கனா லபகரிக்க லாயினாள் சீதாதே வி
இருக்கட்டுங் குணவிசேட மெழிலவள் கற்சபாவ ப்
பொருக்கத்தை நினைத்திராம பிரான்தீரனெனினு மந்தோ
உருகிமிசோகத்தாலே உயிருய்வதைய யந்தா னே

(ஆகையால்) யானென்செய்வேன் நிர்ப்பாக்கியனானேனே.

இராகம் ஆனந்தபைரவி, ஆதிதாளம் மாதே சந்திரமதியே என்றமெட்டு.

## பல்லவி.

ஐயோ இனியென்செய்குவேன் அற்பபாக்கிய
னானே னெப்படி உய்குவேன்.

## அனுபல்லவி

கையையோர்பக்கம்விட்டு மெய்யுணர்வுங்கெட்டு
எய்யாத்துயர்க்கடல்வீழ்ந் துய்யா துய்கின்றேன்கை
கேசி, கெடுத்தாள்மகதோசி, சிறுவனனைப்பியாசி, அய்யனோபர
தேசியாவான் (ஐய்யோ)

## சரணங்கள்.

நான்குபுதல்வர் பிறந்தோம் வாஞ்சைமிகுத்து
நாடுகளிக்கச் சிறந்தோ ம்
ஓங்குமூத்தோனும்புகழ் தாங்குந்தம்பியுங்கா ர்
நீங்கிவனம்புகவும் பாங்காய்நானிருப்பது ம்
நேரோ, வனத்திலலைவாரோ, அவரென்னினைப்பாரோ, யார்தான்
சகிப்பாரோ, இந்தத்துயரம் (ஐய்)

காணிலலைவதேதிது அதிலும்பெண்டைக்
கைநழுவவிட்டதேது.
சானகியையரக்கன் றனென்னஇம்சைசெய்தின்
றனேஇனம்பிறிந்த மானனையாளென்செய்
வாளோ, கண்ணைநனைப்பாளோ, புலம்பித்தவிப்பாளோ, உயிர்
தானிறப்பாளோ, தெரிகிலேனே (ஐய)

அண்ணா அவளைநினைத்து நினைத்துருகி
அங்கமிகவுமிளைத்து
கண்ணாலேநீருதிர்த்து புண்ணாய்நெஞ்சப்பதைத்து
உண்ணாடிகாய்கிழங்கும் உண்ணாதுயிருயிர்த்
தோடி, எங்கெலாஞ்சென்றுதேடி, காணாமல்மிகவாடி, குப்புறம
ண்மேற் சாடிவிழுவாரன்றோ [ஐய]

[சத்துருக்கனன்] அண்ணா அண்ணா இதுவென்கொல் இதுவென்
கொல்.

(சத்துருக்கனன்) கலிவிருத்தம்.

இந்தமாதுய ரோனிதிலென் பயன்
வந்தராஜர்க்கு வரிசை செய்தனம்
தந்தந் தேயததிர்க்கவர்கள் சார்ந்திட
சிந்தைதேர்ந்து செலவுகொடுத் திடர்.

(பரதன் சற்றாலோசித்து) இதுவென்கொல் இவனதுபிரவிர்த்தி வே
றாயிருக்கின்றது.

ஆகையாலிப்பொழுது சத்துருசங்கார நிமித்தம் இவ்வரசர்களோடு ஆரி
யஸ்ரீராகவஸன்னிதானம் போகப்போகின்றேன்.

(சத்துருக்கனன்) ஓ ஆரியஸ்ரீராமபிரானுடைய சமாசாரம் கேட்கப்ப
டவில்லையோ.

(பரதன்) அஃதென்னை,

(சத்துருக்கனன்) அண்ணா வேடராஜனாகிய குகனால் கடிதம் ஒன்றனு
ப்பப்பட்டிருக்கினறது.

(பரதன்) ஓ ஆம் குகராஜனிடம் முன்னமே யான்மொழிந்திருக்கின்
றேனல்லவோ அவனதுவனசஞ்சாரிங்கரால் தண்டகாரணயத்தில் இராம
னது பிரவிர்த்தியை அடிக்கடிதெரிந்து வந்தறிவிக்கும்படி உரைத்திருக்கின்
றேன்.

(அவ்வுண்ணமே)

## விருத்தம்.

வன்னமாஞென்று மாயமாய் ரூபவசனத்தால் ராமனையக்      இ
சின்னவன் றனையும் மருண்டிடச்செய்து செலுத்திடத் தூரத்திற்சீதை
தன்னையோர்க்கன் சன்னியாசிபோல்ச் சார்ந்தபகரித்தனனென்      றே
மூன்னமேகுகன்தெரிந்து வந்தெனக்குமுன்னமெய் மொழிந்தனன்மு

நன்று நன்று இப்பொழுது வந்திருக்கின்ற நிருபத்தில் என் [றையே யென்ன வரையப்பட்டிருக்கின்றன அட்ா மூதன்முதலில் மேல்விலாசத்திற்கு சலங்காட்டி யிருக்கின்றதா.

(சத்துருக்கனன்.) ஆம் ஆம் அண்ணு குசலங்காட்டியிருக்கின்றது.

(பரதர்) ஆ, தம்பி, அங்ஙனமாயின் மேல்விலாசந்தொடுத்தே முறையே படிப்பாயாக.

(சத்துருக்கனன்) நன்று நன்று அங்ஙனமே ஆகட்டும்.

[மேல்விலாசம் வருமாறு]

## வெண்பா.

க்ஷேமமிவை ஸ்ரீராமன்செய்திகள் விளக்குமி      து
பூமியிலயோத்தியெனும் பொன்னகரில், க்ஷே      ம
மிகவரசுகாக்கின்ற மெய்ப்பரதர்க்கன் பாய்
குகன்வர விடுத்ததாகும்.

[பரதன்] நிரம்ப ஸந்தோடம், நிரம்ப ஸந்தோடம். தம்பி சத்துருத்துவம்ஸனு பத்திரிகையை விரித்துப் படிப்பாயாக.

[சத்துருக்னன்] உத்தரவுப்படி படிக்கின்றேனண்ணு.

கடித ஸமாசாரம் வருமாறு.

## கட்டளைக்கலித்துறை.

ஒருதம்பிமட்டிற் சகாயக ராமர்க் குதவியதா      ய்
நிருபர்கள்யாரும் வரத்தேவை யில்லைஇன் னேரத்தி      லே
கருதலர்தம் மையதஞ்செய்து தேவியைக் கைக்கொள      வே
பரவைபோற்று னையன்சுக்கிரீவ நட்ப்புப் பலித்தது      வே.

ஆகையால் அரசர்களை யதாஸ்த் தானத்தை அடையச் செய்வீர்கள் என்றே.

[பரதன்] ஆ, சுக்கிரீவனென்பவன் யாவன் அவனது சகாயம் எவ்வாறு கிடைத்ததோ.

[சத்துருக்னன் வசனம்.] அண்ணு, சுக்கிரீவனென்பவன் கிட்கிந்தைக்கதிபதியாயும் கவிக்குல சக்கிரவர்த்தியாயு மிருக்கின்ற வாலியென்பவனது

கனிஷ்டன், நமதாரிய ஸ்ரீராகவரால் அவ்வாலியைக்கொன்று அவ்விராஜியத்தி ல்சுக்கிரீவனை நாட்டிவைத்த விதத்தினுற் கிடைத்ததாம். அவனது ஸஹாய ம், அண்ணு கேட்கவேண்டும் அடியில் வரையப்பட்டிருக்கின்ற கடித ஸ மாசாரச் சுருக்கம்.

[பரதன்] அஃதெப்படி.

### சத்துருக்னன் விருத்தம்.

கொடியவாலியைச் சமரினிற்கடிந்து கோதண்டராம னவ்வர சை
அடிமைபூண்ட சுக்ரீவனுக்களித்து மவனுடைக்குரக்கு நற்படையா ல்
படியிற்றேவியி னிருப்பிடந்தெரிந்து படையொடும் வான்றிரைபரவு ம்
கடலிலோரணை இட்டதன்வழியாய் கருதலனுரை விடங்கண்டா ன்
என்றே.

[பரதன்] சற்றுலோசித்து ஆ, தம்பி சத்துருக்ன இது இப்படி சம்ப விக்கக்கூடும், எனெனில்.

யான்முன் ஒருக்கால் ஒருவர்க்கொருவர் அதிவியப்புடன் நெருங்கி உ றையாடிக்கொண்ட கேசரர்களின் வார்த்தை செவியரர்ந்தனன்.

(சத்துருக்னன்) அஃதென்ன சமாசாரம் அரைமின்.

### பரதன் விருத்தம்

ஆரியக்கூத்தினுங் காரியந்தனிற் கண்ணுமென வரைகுவாதுபோ ல்
காரியந்தனில்த தன்னிலைவுளான் நம்மள்காவலன் சதமகபதி யே
சீருடைஇராஜ குமாரனுல்வாலி சீவனற்றிறந்ததிற் சிறிது ம்
வீரியமிகுதன் செல்வனென்றுருகான் விதனத்தைமுழுவதும் விட்டான்,
[என்றே.

(சத்துருக்னன் வசனம்.) ஆ, அண்ணு அங்ஙனமாயின் இருக்கலாம். எனெனில், அவ்விந்திர குமாரனல்லவோ வாலி அதனுலிருக்கக்கூடும்ஆனுல் அந்தச் சுரேசன் யாதுகாரியத்தை அபேக்ஷித்துக்கொண் டிருக்கின்றுனே அ தை அறிந்திலம்.

(பரதன்.) தம்பி சத்துருக்ன அவர்களிடத்தில் இரும்பவும் ஓர் சமாசா ரங் கேட்கலாயிற்று.

(சத்துருக்னன்) அதுவென்கொல் அதையும் அருளல்வேண்டு மண்ணு

### பரதன் விருத்தம்.

காதினுற்கேட்டதில்லை கண்ணினுற்கண்டதில் லை
மேதலைஎழும்பிவிண்ணில் முட்டிவீழ்ந்திரைச்சல்செய் ய

காதசாகரத்திலொரு யோசனைதூரங்காட்டும்
சேதுபந்தனமாமென்ன செப்புவேம்விந்தைவிந்தை

என்றே.

(சத்துருக்னன்.) ஆ அண்ணு அங்ஙனமாயின் அப்பால் கவிக்குலங்கட்கும், இராக்கதர்கட்கும் கலகப்பிரவிர்த்தியும்நடக்குமென்று நினைக்கிறேன். ஏனெனில்.

விருத்தம்.

சண்டாணிலமன்றோர்தினம் தன்னிற்கிளம்பிடவே
கண்டேன்கெடுகுறியோவெனக் கனசாந்தியைக்கருதி
தண்டாமனைததாரான்ராம சகபிங்களன்றன்னை
விண்டாரியகுருவின்முனர் விடுத்தேனவருரைத்தார்.

(பரதர்) அவருரைத்த தெவ்விதம் அதை யெடுத்துரைப்பாய்.

சத்துருக்னன் விருத்தம்.

கடிமானகரிலங்கைதனிற் கவிராக்கதர்கலகம்
இடலாலதுகாண்பான்மிக இச்சைகொடுசெல்வான்
திடவேகவினதைசேயிரு சிறைக்காலெழுசிறப்பாம்
கெடுவாதமிதன்றுமுறைக் கின்றோர்முனியென்றன்.

ஆகையால் உத்பாதக சாந்திசெய்ய வேண்டுமென்ற பயத்தை ஒழித்துவிடச்சொல் என்றே.

(——) திறை.

கொச்சகம்.

நன்மனத்தார்பொன்றிடவும் நன்மைகடுகுமிலாத்
துன்மனத்தார்வென்றிடவுஞ் சோகஞ்சகிப்பேனே
என்மனத்தாதங்கம்விட இமவான்கிரியடைந்து
தன்மநற்றவம்புரிந்து தனிநாட்கழிப்பேனல்.

[பரதன்] கேட்டு ஆ உயித்தஞ்செய்பவருடைய செயாபஜயத்தைப்பற்றிச்சொல்லிக்கொண்டு இவளாரொருத்திவிருத்ததாபசிபோற் காணப்படுகின்றனள்.

[அப்பால்] விருத்ததாபசி வேடத்துடன் சூர்ப்பனகி பிரவேசிக்கின்றனள்.

[சூர்ப்பனகி] நன்மனத்தார் பொன்றிடவும்) என்ற கொச்சகம் திரும்பப்படிக்கின்றனள்.

[பரதர்]வசனம். நம்பி சத்துருக்னா இவன் யார், எங்கிருந்து வருகின்றனன், எனவினவுக. ஒருக்கால் இவன்மூலமாவழியாய் நம் ஆரிய ஸ்ரீராகவருடைய உயுத்தப்பிரவிர்த்தியைத் தெரிந்துகொள்ளவுங்கூடுமே.

[சத்துருக்கனன்] ஆம் ஆம் அண்ணா அவ்விதமே வினவுகின்றேன். சூர்ப்பனகியைக்குறித்து.

## அடுக்குமொழி.

ஓ தவமுடையர்ளே நுவலுதிநீயார்
எவணிருந்திப்போ திவண்வருகின்றாய்.

[சூர்ப்பனகி] சத்துருக்கனனை நோக்கி பீதியுடன்

## (தன்னுள்) வஞ்சி விருத்தம்.

இன்னமும் நடுங்கின்ற தென்றனத்தை க்
கர்ன்னநாசியைக் கண்டித்த காதக ன்
முன்னமென் வரவோர்ந்து முற்று மே
என்னமோசம திங்கும்வந் துற்றன ன்.

நன்றாய்க்கவனித்துப்பார்த்து. வசனம்.

ஓ இவனிலக்குவனன்று, பின்னையோவெனில் சரிசமான ரூபசம்பன்னனானா அவனது தம்பி சத்துருக்னனாகயிருத்தல் வேண்டும் [கரத்தால் நாசியைத் தடவிக்கொண்டு] யான் புனைந்துகொண்டிருக்கின்ற இந்த தாபசிவேடத்திற்குறிய நாசி திரமாயிருக்கின்றது.

## விருத்தம்.

கேட்குமிக்குமானுக்குக் கிளர்த்துமென் சொல்லிலெந் த
வாக்கியங்களிலுஞ் சோர்வுவந்திடா துறைப்பேனா ல்
மூக்கிலாவிகாரமந்த மொழிகளில் வருமோ வா ரா
யோக்கியமாகும் வண்ணம்உசிதமா யுறைப்பேன்மன் னே

## வெளிப்படை.

அப்பா நின்னால் யாதுநிகழ்த்தலாயிற்று.

[சத்துருக்கனன்] நீ யார் எங்கிருந்துவருகின்றாயெனக்கேட்கின்றேன் (ஏது காதானமுண்டோ.

[சூர்ப்பனகி தன்னுள்] காதையுந் தடவிக்கொண்டு) இது வேடத்தாலேறபட்ட காதெனத்தெரிந்து கொள்வானோ ஏதேது அது ஒருக்காலும் இல்லை (யானோ இராவணனுக்குத்தங்கை இலங்கைத்தீவிலிருந்து வருகின்றேன்.

(சூர்ப்பனகை வெளிப்படை.) பெருமூச்செறிந்து சோகபாசாங்குடன்)
யான், யாரோ ஒருத்தி எங்கிருந்தோ வருகின்றேனென்றறிந்துகொள்.

(பரதர்) தன்னுள்.

## விருத்தம்.

நிச்சியந்தவ மடந்தைஇவளேயாம் நிசாசரர்தம்
பக்ஷபாதினி யன்றன்றுபடுதுயர் மிகப்படர்ந்தே
இக்ஷணம்விளங்குகின்றாள் இதனாலென் றமயனுக்கோ
லச்சுமணனுக்கோ நன்மையீன மென்றெண்ணுகின்றேன்.

[இதுவன்றி, வேறுகாரணத்தால்த்தான் இவள்வருத்தமடைகின்றனளோ

(அடி தாபசி நின்னது திருநாமமென்னை.

(சூர்ப்பனகி) தன்னுள்.

## கலிவிருத்தம்.

காதுமூக்குங் கணத்தினிற் கத்தியார்
சேதமானதர்க் கெழிற்சிறந் தெவன்
எதுவானவனோ அவன் போலிவன்
ஒதுமல்ல உருவந் தழைக்கிறான்

ஆகையினாலிவன் பரதனாயிருக்தல் வேண்டும், இவனை சத்துருக்கனனும் அடுத்துக்கொண்டிருப்பதால்.

(வெளிப்படை) ஓ மன்னர்பிரானே என்னஉரைத்தீர்.

## சத்துருக்கனன் அடுக்குமொழி.

உன்னது நாமம், என்னென்று சவும், இன்னவென்றனுக்கு, முன்ன வன்றானே.

(சூர்ப்பனகி) தன்னுள்.

## விருத்தம்.

ஜெனமத்தால் வந்தபேரோ திகழ்சூர்ப்பனகி யென்பரென்
கன்மத்தால்வந்தபேரோ கவின்முகவிரூபி யென்பார்
தன்படைற்றவத்தேர் ரிஷியமூகமே ருசைலவாசர்
நன்மைப்பான்ஞதிகீ பென்றென்னையவர் நவில்வர்மாதோ

எப்படி, புலத்தியமுனியின் குலத்தில்வந்தவளொன் றென்னிடத்தில் மிகத்தயைபொடு யென்னையாவர் மனிக்கிறார்களோ அம்முனிவரால் பர்ணஞதியென அழைக்கப்படுவேன்.

(பரதர்) அங்ஙனமாயின் நின்வாய்மொழிப்படி, புலஸ்த்திய குலத்தி ற்பிறந்தவளென்றாலும் நின்னால் ரிசியமூககிரியினின்று மிங்ஙனம் அடைய லாச்சுது கொல்.

(சூர்ப்பனகி) ஆம், ஆம்,

(சத்துருக்கனன்.) அல்லது நீ அரக்கிகொல்.

(சூர்ப்பனகி தன்னுள்.) அடடா, இதைப்பற்றி ஒருவரிடங்கேட்கவே ண்டுமோ.

(வெளிப்படை) கோபத்துடன் புலத்தியகுலத்திலுதித்தால் அரக்கி யாகத் தானிருத்தல் வேண்டுமோ.

(பரதன்) தம்பி சத்துருக்ந இத்தாபசி கோபிக்கப்பட வேண்டியவள ன்று,எனெனில்,விச்சிரவணன் முதலானவர் அரக்கர்களாக இல்லையல்லவா.

ஆகையால்த்தான்,

[சூர்ப்பனகிதன்னுள் தொடர்மொழி.]

வீடணனென்ற விருதாப்பயலும் கூடமோரக்கர் குலத்தனன்று.

வெளிப்படை தொடர்மொழி.

வேந்தர்பிரானால் விளக்கிவோர்த்தை பாந்தமதாகும் பழுதொன்றின்றே.

பரதன் தொடர்மொழி.

மிக்காகுலத்தில் வெதும்பினள்போலும்
துக்காக்லாந்தையாய்த் துலங்குவதென்னே.

[சூர்ப்பனகி.] அங்ஙனமாயின் அறையக்கேண்மோ, சற்றே செவி சாற்றுக.

(நன்மனத்தார்பொன்றிடவும்) பென்றதோச்சகம் திருப்பஉறைத்தனள்.

(சத்துருக்கனன் வாக்கியம்) யாருனக்கு நன்மனத்தர் யாருனக்குத்து ன்மனத்தர்.

சூர்ப்பனகி தன்னுள் வாக்கியம்.

மாவரக்கர் நன்மனத்தார் வானரர்தாம் துன்மனத்தார்

வெளிப்படை வாக்கியம்.

வானரர்கணன்மனத்தார் வல்லரக்கர் துன்மனத்தர்.

(பாதர் தன்னுள் சந்தேகத்துடன்) நமது ஆரிய ஸ்ரீராமன் பக்கத்தைச் சார்ந்தவானரரொன்றினாலெல்லாம் வருந்தப்படுகின்றவள்போற் காணப்படு கின்றனள்.

(வெளிப்படை) அடி பாவ்னுஇனி ரிசியமூகஇரியில் வயிக்கின்றே னென்று வழுத்தினையல்லவோ, அங்ஙனமாயின் அவர்களின் கலகப்பிரவிர்த்தியும் அவ்விடத்திற்றானே.

(சூர்ப்பனகி.) அன்றன்று அது இலங்கைத்தீவிலேயே.

(பரதர்) சரி சரி இருக்கலாம்.

(சத்துருக்கனன்) அம்மணி அதனை எவ்வாறறிந்தனை.

(சூர்ப்பனகி.) அப்பா கிட்கிந்தையென்ற குகையொன்று கேள்வியுண்டோவோ.

(சத்துருக்கனன்.) ஆம், வாலியென்பவனுடைய ஆள்கைக்குட்பட்டிருக்கின்றது.

[சூர்ப்பனகி.) இப்போது வாலியென்பவனே இல்லையே.

## விருத்தம்.

ரகுகுலராமனாலே எமபுரத்தேவப் பட்டான்
மிகுபலவாலியென்போன் மேவியவ்விராச்சியத்தில்
புகழுடன்சுக்கிரீவன்றான் பொன்முடி சூடப்பெற்றான்
சுகமதாயவனே அத்தைத்துரைத்தனஞ் செய்கின்றானல்.

(சத்துருக்கனன்) ஆ இதுவும் அறிந்தவிஷயந்தான்.

## (சூர்ப்பனகி) விருத்தம்.

அக்குகையில் ருமையென்பாள் சக்களத்தியுடனலறி யழுதவிம்மி
அக்கினியில்விழுந்திறந்த விதந்தனைக்கண்ணுற்று துயராற்றாளாகி
துக்கமிகுவாஙி யென்சகிசங்கு கர்ணனியெனச் சொல்லும்போளன்
மிக்கவிதனத்தொடென்பாற் கிரிரிசியமூகமதின் மேவினளால்

(அவளேயெனக் கரிவித்தனள்.

[பரதன்] வேகத்துடன். ருமையென்பவள் யார்.

(சூர்ப்பனகி) பிலவங்கராஜனான சுக்கிரீவனது பட்ட மகிஷி.

(சத்துருக்னன்) பரபரப்புடன். ஆனல், சுக்கிரீவன்றான் அரக்கர்களால் அடிபடப்பட்டான்கொல்.

(சூர்ப்பனகி) சோகநீரால் தொண்டை தத்தலிட்டு. ஐயா, அவன்மட்டிலுமன்று.

## விருத்தம்.

அவனுடையமைச்சன் அனுமனென்பவன்
கவனவாலியின் காண்முளையங்க

யுவமன்னவனும் உற்றதளங்களு ம்
சவமதாகித் தரணிவீழ்ந்தன ர்.

சத்துருக்கனன் கலிவிருத்தம்.

மாதவத்தொளிர் மாமணிமங்கைபர் ன்
ஞதினீ அவண் நாடிடேஉத்தம ர்
கோதிலாரகு குலக்குமாரர்த ஞ்
சேதியென்ன தெரிந்ததுசெப்புவா ய்.

[சூர்ப்பனகி] அடடா எவருடைய செய்தியும் மற்றெவ்விதமாய் முடியும் மகாமாயாவிகளான கொடிய இராக்கதர்களினெதிர்ப்பில் எவர்தானுஜ்ஜீவிப்பார்கள்.

(சத்துருக்னன்) கண்ணீர்ப்பெருக்குடன். ஆனால், அவ்வரக்கர் வேந்தனால் அவர்களிடத்தும் அவ்விதமாயப் பிரயோகஞ்செய்யப் பட்டதுகொல்.

(சூர்ப்பனகி) ஆனால் கேட்கக்கடவீர்.

சூர்ப்பனகி விருத்தம.

மாவிலங்கையினிற் போனோதெரிந்த மகிபன்றாதரனுங் காங்கள்
எவிடப்பெற் றயோத்தியினின்று மிங்குனக் குதவிய பெழுந்து
மேவினமென்ன வஞ்சராக்கதர் நரவேடத்தார் விழிதுயிலும்வேளை
தாவிராமனை இளவலையப் படித்தான் செய்தார்.

(பரத சத்துருக்னன்) பரபரப்புடன். எப்படிச்செய்தார்கள், எப்படிச் செய்தார்கள்.

சூர்ப்பனகி தன்னுள் விருத்தம்.

என்னுடைத்தமையனான இராவணேச்சுவரனைக்கும் ப
கர்னனையவன் கொன்றான்கொல் அவனுடைக்கனிஷ்டரா ன
பன்னுமிப்பாலரான பரதசத்துருக்னர்தம் மை
துன்னுமென்வாசகத்தாலுயிரினைத் துலைக்கின்றேனு ல்.

(வெளிப்படை.) முன்விருத்தத்தொடர். ராமபிச்சமதாய்.

(பரதர்) ஆ, ஆ ராமச்சந்திரா, ஆ தம்பி லக்ஷ்மணா.

இராகம் நாதநாமக்கிரியை ஏகதாளம்.

## பல்லவி.

இதுவென்னமாபாதகம் அய்யோ எவ்வாறெழியுந்தோதகம்.

## அனுபல்லவி.

சதிரப்பெரும்ராகவரோ, அடா, தம்பிலக்ஷ்மணநீரோ
மதிமோசம்போயினீரோ, உமையும், வன்கொலைசெய்தனரோ. (இது)

## சரணங்கள்.

புலிகள்பசுத்தோல்போர்த்தி, வந்தாற், போலரக்கரேமாத்தி, உம்மை
கொலைசெய்தாரெனச்சாற்றில், என்ன, கூறுவேன்சேத்திரநேத்தி. (இது)

வீராதிவீரர்களே, உம்மை, வெல்வாருண்டோபாருளே, போரிலெவரும்
நேரினில்நில்லார்களே, அந்த, நீசரால்மாண்டீர்களே (இது)

தமர்போலுமையடுத்தார், தூங்குஞ், சமயத்துயிர்குடித்தார் அல்லால்
சமர்தொடுத்தாரெதிர்த்தார், உமையுஞ், சதிசெய்தவர்கெடுத்தார் (இது)

(என்றலறி துக்கக்கடலாழ்ந்து சொக்கி மயங்கினன்.

(சத்துருக்னன்) ஆ, ஆ தமயன்மீர் இராக்கதரின் வஞ்சனையால் இருவர்களும் மாண்டீர்கொல். அந்தோ, அந்தோ (என வெட்டிச்சாய்த்த மரம் போல் அலறிவிழுந்து அதிகளைப்புற்றனன்.

(சூர்ப்பனகி) ஆ, ஆ கஷ்டங்கஷ்டம் நீவிர் யாவர்கொலோ நுங்கட்கப் பிரியச்சொற்களோ இப்படிச் செப்பினேன் சற்று தெளியக்கடவீர், சற்று தெளியக்கடவீர்.

(பரதசத்துருக்னர்) களைப்புவிடுத்து ஆ, அவ்விருவர்க்கும் ஓர் யெழுத்தா யிசைந்ததுகொல்.

(சூர்ப்பனகி) ஆம், ஆம், அன்றியும் பந்தி பந்தி யடுக்கடுக்காய்த்தானே என் சுகிர்த்துக்களான சுக்கிரீவாதிகளும் சரபாணிகளான இராக்கதவீரரால் (என்ற சொன்னபடியே) சொல்லுகிறேன். நீவிர்யாவர்கொலோ அதை நிகழ்த்துமின்.

(பரதர்) மேலுள்ளது விளம்பல்வேண்டுமோ, யாருமறியத்தக்கதுதானே அவர்களும் அதஞ்செய்யப்பட்டார்கள் என்றே.

(சத்துருக்கனன்) அடி பர்ணதினீ,

## சிங்காரக்கவி.

மன்னிலவெனக்குமுன், வந்துதித்திட்டவர்
பன்னுமபிதானமும், பரதனெனபரால்

யானே, இவர்க்கனுசன் சத்துருக்கனனென்பவன்.

(சூர்ப்பனகி) கைகளைக் கைத்தலத்தில் கடிப்பித்துக்கொண்டு.

ஆ, ஆ, அப்படியா அவ்விராமலக்ஷ்மணர்க்கு சோதரர்களா, அந்தோ அந்தோ ஆ கெட்டேனே கெட்டேனே.

கொச்சகம்.

உள்ளதேயானாலும் மொருவருக்குச்சோகமொ ழி
விள்ளுவதனர்கமென்றே மேலோர்மொழி யறிந்து ம்
துள்ளித்துடிக்கவைக்குஞ் சொல்லைநும்பாற் சொல்லிமிக
நள்ளுநரகக்குழிக்கி நாற்றங்கலா வே னே

(எனக்கண்மாரி பொழிகின்றனள்.

(பரதர்) அடி உனக்கென்னடி பாதகம், நீ புகலாவிடினும் மற்றுயாரேனும் எங்கட்கியம் புவரன்றோ. இதற்கேன்றுக்கிக்கின்றாய்.

(சூர்ப்பனகி) கஷ்டங் கஷ்டம் சங்குகர்ணி சாற்றியமொழியை உங்கள் சம்பந்தம் உணராதுறைத்தேன்.

[சத்துருக்கனன்] அது நிற்க.

வாக்கியம்.

சீதாதேவி செய்தியெவ்வா றோ
ஓதாய்தவத்தி னொண்டொடியா ளே.

[சூர்ப்பனகி] அன்ன செய்தியை என்னென்றுரைப்பேன்.

விருத்தம்.

பொல்லாதநிசிசரனு லபகரித்துப்புன்சிறையிட்டென் புணர்மாதாவா பென்று, சொல்லாதவார்த்தை பலசொல்லப்பட்டாள் தூயவர்தந்தியவத்தை யுணர்த்தப்பட்டாள், நல்லாளச்சானகியாள் துடிதுடித்து நாதாவென்றலறினளாய் நான்றுகொண்டாள், கொல்லாதின்றிந்துயரோடு யிறைவிட்டாள் கொடும்பாவமிதுவும் நும்பாற்கூறினேனே.

(சத்துருக்னன்) சோகத்துடன். ஆ இதுவும் இப்படி முடிந்ததுகொல்.

இராகம் கமாஸ் ரூபகதாளம் (வந்துகுவாடலகிநாடோ) என்ற மெட்டு.

பல்லவி

இப்படியோ முடிவுகாலம் யீதென்னகோலம் [இப்]

அநுபல்லவி

ஒப்பில்லாத கதிர்க்குலத்திற்க் கோய்விலையென்னுஞாலம் [இப்]

## சரணங்கள்

தொசவீரர்கானகத்திற் சென்றுநடக்கவும் — அந்த
மகன்பிறிந்ததுயரைநினைத்து மன்னனிறக்கவும் — [இப்]
வனம்புகுந்தும்மனையைப்பிரிந்தும் வாடித்தவிக்கவும் — இங்கே
இனமும்நீங்காப்பெருந்துயரம் எம்மையவிக்கவும் — [இப்]

பெண்டைச்சதித்தகண்டகன்றன் பெருங்கபடத்தி — பற்றி
மண்டியெறிக்கராமலக்ஷ்மணர் மாளவஞ்சகத்தில் — [இப்]

அந்தோ, அந்தோ என்னன்னே ஜானகி நீயும் இறந்தனையா.
கஷ்டம், கஷ்டம்.

### விருத்தம்.

கானேநடப்பதற் கன்னுளிலாரியர் காண்பித்தபடி வற்க — லை
நானேவகித்து முன்னாலேகவேயுளம் நைந்திட்ட மாமிமுதலோ — ர்
நினைவைத்தைக டெறிந்தாற்சகிப்பரோ தோராவொனக் கருதி — நீ
தானேவிடுத்தனை கொல்வாளுளை வன்மையிற்றாயே இதென்னகஷ்ட — ம்.

(பரதன்) ஆ, ஜானகிப்பிராட்டி, நீ மா பாக்கியவதியாகின்றாய் யாதொரு குலோசிதமான காரியத்தை அனுசரித்தனை ஆதலால் பாக்கியவதியென்பதற்குச் சந்தேகம் யாது. யானோ இப்பொழு தின்னபடி செய்யவேணுமென்பதரியாது மயங்குகின்றேன்.

(சத்துருக்னன்) வசனம். ஏதண்ணா நீதறியாததா, கடும்போரினிற்கருதலரைக் கணத்தினிற் கண்டகண்ட துண்டதுண்டஞ் செய்து காலனூர்க்கனுப்பிவைத்து வைரசாந்தி செய்துகொள்ள வேண்டுவது தான் செய்யவேண்டிய காரியம்.

(அநுப்பனாகி) தன்னுள் இது முன்னமே முடிந்தாய்விட்டது.

(வெளிப்படை) விருத்தம்.

[illegible] லை உமக்கிதுமார்க்கமின் — றே
[illegible] ண்டாரின்ன விதமுயல்வதுவேயுக்த — ம்
[illegible] றதொவ்வா தென்றுகாண்பித்தல்போ — லே
[illegible] கொண்ட வழியனுசறித்தல்கன் — றே.

(பரதன்) ஹா, ஹா கஷ்டத்தின்மேற் கஷ்டம்.

### விருத்தம்.

வருடமொருபதினான்கும் நிறைவதாச்சு வழிபார்த்துநின்றனன் அன்னோனெல்லாம், ஒருகணமோருகமதுவாய்க் கழித்தேனந்த உத்தமராகவன்வரவுக் கவதியின்றே, புரவலராகவன்வருவா னவன்றன்றிவ்விய பொற்பதாம்புயந்தரிசிப் போமென்றெண்ணுட், டிராமுடனேக்கிமோசைத் தருவேறிற்றத்திடரொன வீழ்ந்திட்டதிப்போ தென்செய்வேனே.

(எனச் சோகமுற்றுச் சொக்கிவிழுந்தனர்.

(சூர்ப்பனகி தன்னுள்.) அடடா பரதா அது உனக்கு மட்டுமென்று. எனக்குமப்படியே மனதிற்குகந்த வனப்பினனென்றவன் மீதுள்ள எனதாசைத்தரு, அடியோடே வேறற்று வீழ்ந்தது அன்றியும் எனது மூக்கு முலைகளை வழித்துக்கொண்டு விழுந்தது.

(வெளிப்படை) ஆ பரதா வேண்டாம், வேண்டாம் ஆயாசமொழித் தாசுவாசங் கொள்ளக்கடவாய், இங்ஙன மயங்கிடுவதில் இராமனைக் காணவுமுண்டோ.

(சத்துருக்னன்) ஆசா சோகத்துடன்.

## விருத்தம்.

சரதருதுவிந்துவென அந்தமுகமுந்தண்ணளின மென்னவன் னயநங்களு ங்
கருடமணியாலொளிரு தம்பம்நிகராய்க்காணும் ரமணீயமுளபுய மலைகளு ங்
திருவினதுகரபதும மோங்குகமலச்சீ ரெழிலிலங்குமச் செவடிகளு ம்
பரிவொடுமெருபடிரகு பதியைக்காணப் பாவியோர்க்கினியேத பாவமன் றே.

இராகம் உசேனி ஆதிதாளம்.

## பல்லவி

இனிமேலெப்படிக்காண்பேன் ரகுபதியை
இனிமேலெப்படிக்காண்பேன்.

## அநுபல்லவி

வனம்போய்வருவேனென்று வாக்களித்தேகின ன்
வாராவழியிற் போகினனென்பதால் [இனி]

## சரணங்கள்

வருவான்வருவானென்று வழிபார்த்திருந்தே னே
வருடமோர்பதினன்கு மலைபோற்கடந்தே னே
திருமுகமிவனுக்குத் தெரிசிக்கப்பாக்கிய ஞ்
சிறிதுமில்லாமற்போச்சுதே யோக்கிய ம் [இனி]

கண்ணும்முகமுமவன் கனிவாயும்புன்னகையு ம்
கமனீயவார்த்தையும் மார்புமிருகையு ம்
எண்ணியெண்ணியுருகி யேங்கித்தவிக்கின்றே னே
எங்குபோய்ப்பார்ப்பேனே அவனைநா னே. (இனி)

மடமடென்றடவியில் வழிக்கொண்டுபோர்ப்பே ஞே
வருடம்பலசென்றாலும் வருவானென்றிருப்பே ஞே
உடல்விட்டுயிர்பறந் தொழிந்தாற்புவிமீ து
உண்டோஒருபோதுங் காண்பதே து (இனி)

(எனச்சோகத்திற்றுடித்து மோகத்தையடைந்தனன்.

[சூர்ப்பனகி தன்னுள்] அடட, யானவனது சர்வாங்கமுங் கண்டிருந் தும், என்மனோரதம் நிறைவேறிற்றில்லையே.

(வெளிப்படை) அடடா குழந்தாய் சத்துருக்ன எதிப்படி மயங்குகி ன்றாய், சற்றுசுவாஸம் பெற்றிவனையுந் தெளியச்செய்வாய், பின்னர் இந்தப் பெருஞ்சோகத்திற்கு பரிகாரவிஷயம் சிந்திக்கலாகும்.

(பரதர்) மூர்ச்சைதெளிந்து.

பாதுகையளித்தே னிதனைமுன்வைத்துப் பாரினையாளுதி பர தா
தாதைசொற்படிக்கிக் கானகத்திருப்பேன் சம்வச்சரம் பதினான்கு ம்
மீதுனக்காக மேதினிபுரப்பேன் விதனமேனென் றுலாளனைக ள்
போதனைசொலிக்கான் புகுந்திடுராமன் போந்திலனெனிலார் பொருப்பா ர்

(வசனம்.) ஹ ஹ இந்தப்பெருந்துயரம் எவ்வாறு சகிக்கலாம் மற்றெ திறற்றினிது தணியப்போகின்றது, இனிபொருத்தல்முடியாது. ஆகையால் யானிப்போதக்கினியிற் பிரவேசிக்கப்போகின்றேன்.

(சத்துருக்கன் மூர்ச்சைதெளிந்து) இந்தச்சோகத்தீ மாற்றப்பாவகமே வேண்டும்.

பரதனைக்குறித்தஞ்சலிசெய்துகொண்டு.

## வெண்பா.

எவ்விதமிலக்குவனூர் ராமபிரானைத் தொடர்ந்தார்
அவ்விதம்யானும் மையனுசரித்து —— செவ்வை
அனற்குளித் துமைத்தொடர்வேன் அண்ணாவிதனம்
இனிப்பொருக்க வொண்ணாதிசைந்து.

(சூர்ப்பனகை.) களிப்புடன் (தன்னுள்) மற்று யாது நிமித்தம் இத்த னை எனது பிரவிர்த்திகளும்.

(வெளிப்படை) பரதா, நன்குறைத்தனை, நின்னால்நன்றாகநிர்த்தாரணை செய்யலாயிற்று.

(சூர்ப்பனகை.) குழந்தாய் சத்துருக்ன நின்னது துக்கபரிகாரசிந்தனை மிக்கவும் நன்று நன்று,

யானுமே, இனி தவத்தை உத்தேசித்துச் செல்கின்றவனாயில்லை, பின்னையோவெனில்.

கலிவிருத்தம்.

சுக்கிரீவன் முதலினோர் துட்டரா ல்
ஒக்கமாண்டன ரென்பதி லுற்றிடு ந்
துக்கசாந்திக் குமைப்பின் றொடர்ந்துயா ன்
அக்கினிக்குளமுந்தி யிறப்பன ல்.

(பரதர்) ஆ ஆ அடா தம்பி லட்க்ஷமணா.

விருத்தம்.

மன்னவராகவரிதய மனுசரித்துவன் கண்மைத்தந்தையின்சொல் மனஞ்சகித்தும், என்னனையின்வாயடக்கிடாமலுந் தீங்கியற்றிடுமந் தனையை முடிக்காமலுந்தான், கன்னகர்விட்டரணியத்தில் ராமன்செல்ல நாடியவன் பின்றொடர்ந்தாயது போற்போரில், இன்னுயிர்போய்ச்சுவர்க்கமவனுடனே சென்றயிப்படியார் பக்திசெய்வாரெவர்குமுண்டோ.

(ஆகையால் தம்பிலெட்சுமணா நீ தன்னியனானாய்.

யானோ அப்படிக்கில்லாமற் போகினேன்.

இராகம் காம்போதி. ஆதிதாளம்.

## பல்லவி

தன்னியனானாய், தம்பீலெக்ஷ்மணாநீ தன்னியனானாய்.

## அநுபல்லவி

முன்னவனுக்கன்பாய் முக்கியபக்தனானா ய் (தன்)

## சரணங்கள்

பிறந்தாலாரியர்தம் பின்றொடர்வ தே
சிறந்ததாமென்றே தெரிந்தாய்செகமீ தே (தன்)

சிறுவனாயிருந்துந் தீங்கானஞ்சென்றா ய்
பரமன்ராகவர்க்குப் பணிவிடையில் நின்றா ய் (தன்)

எந்தக்காலத்தும் ராமானுசப்த ம்
சொந்தமாயடைந்தாய் துகள்தவிர்ந்தாய்நித ம் (தன்)

(ஆ அந்தோ, அந்தோ அடாதம்பிசத்துருக்ஞ.

## ஸ்ரீ விருத்தம்.

தனயரிலாக்குறைதவிர்த்துத் தழைக்கவைத்தார் சாந்தேசர் அசகுலத் தைத்தயவினலே, வினையினதுகெடுதியினற் புதல்வறற்றவெறுங் குலமா யாகாது மேலென்செய்வேன்,

(ஆ ஆ கஷ்டங் கஷ்டம் நிர்ப்பாக்கியனனேனே.)

ஸ்ரீ மனமுறுகிராமன்முதல் மூன்றுமைந்தர்வலிவிதியாற் பொன்றி னரால் சூரியனை, நனிமகனீயாவதுயிரோடிருந்து நம்பிதுர்க்குத்திருப்தி செய்தர்ப்பணநன்னீரால்.

இராகம் சாவேரி ஆதிதாளம்.

## பல்லவி

நீயாகிலுமிங்கே ஜீவனேடிருந்து நீர்க்கடன்தீர்ப்பாய்.

## அனுபல்லவி.

தாயார்கள்வருந் தாமலேமிகத்தேற்றி
தளர்ச்சியுறுமலி ராச்சியத்தையுங்காப்பாற்றி
தைரியம்விடாமல் சமர்முதுகிடாமல்
சத்துருத்துவம்சஞ நங்குலத்திற்கு வசைகொடாமல் (நீயாகி)

## சரணங்கள்

மாசுமருவிலாத சூரியகுலமி து
வரிசைமிகுத்துவளர்ந் தேமிவருகின்ற து
ராசன்தயரதர்க்கு நான்காமைந்தனென்ப து
நான்காமைந்தனென்றசொல் நவில்மட்டுமோவ து
நாட்டினில்விளங்க நனியிசையிலங் க
நன்றுபாலோகமதிற் சென்றதந்தைபேர்துலங் க (நீயாகி)

மூத்ததமயனேடுன் வாய்த்ததமயன்மாண் டு
மொய்குழற்சீதையும் மூடிந்தாளென்றுளேயீண்டு
ஏற்றதமையனானே இறக்கின்றேன் துயர்பூண்டு
இப்படிநீயும்நொந்தால் யெமக்குக்கதியெங்குண்டு
எண்ணிஎண்ணியழாமல் யென்சொலும்வழாம ல்
இங்கனமிறந்தவர்கள் பொங்குநரகில்விழாம ல் (நீயாகி)

(சூர்ப்பனகை தன்னுள்) ஓ ஓ சத்துருக்கனன் சாகானே இதுவென் கொல், என்மனோரதம் இவ்வளவில்த்தான் பலிக்குமோ.

[வெளிப்படை.] ஆ கண்மணி பரதா, நின்னிலும் இவனுக்குச் சோக பாரம் அதிகமாயிருக்கின்றது, ஆகையால் இந்த நின்னதுவார்த்தை வீணாய் பலிக்குமென்றே நினைக்கின்றேன்.

[சத்துருக்கனன் கண்ணீர்ப்பெருக்குடன்.] ஆ அந்தோ அந்தோ கஷ்டங் கஷ்டம் அண்ணா.

சத்துருக்கனன் விருத்தம்.

உகந்திடுமைந்தர்நீவிர் உயிரிறந்தொழிந்த பின்னர்
சகந்தனில்வல்லுயிராய்த் தழைப்பதும் யானேபோலன்
தருக்கதர்ப்பணந்தான் செய்யச்சக்தனே மாண்டவர்க்கும்
மிருந்தநற்றிருப்தியாங் கொலிம்மொழி விளம்பலாமோ

(ஹா ஹா கஷ்டங்கஷ்டம் பாவியேன் விதியையன்றி மற்றுயாரை நோவது.

இராகம் சகனு ஆதிதாளம்.

## பல்லவி.

இந்தப்பாதகத்திற்காளாவேனோ இதுவும்விதியோ யீஸ்வரா

## அநுபல்லவி.

இந்திரனைக்காத்த எந்தையிறக்கப்பின்னர்
இருவரிறக்கமுன்னர் ஒருவர்இறக்கவரும் (இந்த)

## சரணங்கள்.

மலையைமலையல்லாமல் மண்ணுங்கட்டிசுமக்க
மாட்டுமோகேட்டவர்க்கு வருமேமிககைக்க
சிலமேவுராமன்முதல் மூவருமேயிறக்க
சிறியனேஅரசாய் வீற்றிருப்பதய்யோமிக்க (இந்த)

அருந்ததிபுகழ்கின்ற கற்பலங்காரியான
அன்னைஜானகியோடி ராமலக்குவன்போன
திருந்துகதியையானுஞ் சென்றடையாமலீன
தீயனைப்போலுயிர் கொண்டிருக்கின்றபெரிதான (இந்த)

எழிலார்கதிர்க்குலத்தில் யான்பிறக்காம லே
இருந்தாலெந்தமூலை பாழாகும்புவிமே லே
பழியாம்புகீர்த்திக் காளானயெனைப்போ லே
பாவிகளாருமில்லை அய்யய்யோஆசையா லே (இந்த)

(வசனம்.) இனியென்னயிருப்பு யானிப்பொழுதே என்றமயனுருக்கு முன்னாலேயே அனற்பிரவேசஞ்செய்யப் போகின்றேன்.

[சூர்ப்பனகை] அங்ஙனமாயின் குழந்தாய் சத்துருக்னா காய்ந்த இந்தனங்களுடன் அக்கினிகுண்டந் தயார்செய்வாயாக, சீக்கிறம் சீக்கிறம்.

[பரதர்] ஹா ஹா கஷ்டத்தின்மேற் கஷ்டம்.

## விருத்தம்.

கோசலைத்தாயே கொதித்திடும்பெருஞ்சோ கோதநிரந்தரங் குளித்தா ய்
ஆசந்திரார்க்கமவயசப் பங்கத்தழுந்தினைக் கைகைமாபா வி
மாசிலிரண்டுமைந்தரைப்பெற்றும் நீமனத்துயர் சுமித்திரைவகித்தா ய்
நாசகாரணிநீ மச்தாயுனக்கு நரகமேநிலையமாம் நாளு ம்

அந்தோ அந்தோ ஆ ஆ ஐயா தசரதரே, சுரேசனுக்காப்த்த சிநேகிதரே வெகுகாலமாய் மெய்வருந்தித்தொடுத்த தபோஎத்தனங்களால்.

## கொச்சகம்.

குலத்தைவிருத்திசெய்தீர் குமாரர்களைப்பெற்றெடுத் து
நிலத்திற்புகழடைந்தீர் நிர்னிமித்தமாய்க்கானி ல்
பலத்தஒருராமனைநீர் பார்த்தனுப்பிவிட்டதனா ல்
துலைத்துவிட்டீரப்போதே தோதகத்திற்குள்ளானீ ர்.

[சத்துருக்கனன்] ஆ அண்ணா அழுதுபுலம்பினாலாவதென்சொல்.

## ☞ விருத்தம்.

துக்கமேனினியென்னண்ணா இந்தனச்சுமைகளோடு ம்
அக்கினிதயார்செய்திட்டேன் ஆசாரவாயிறன்னி ல்.

(எனச்சென்று மருபடியும் பிரவேசித்து.)

☞ உக்கிரசடசடாத்காரத்தொடும் ஓங்கிமிக்க ச்
சுகனைஉலர்ந்த காஷ்டத்தோடனற் சொலிக்குதந் தோ.

(பரதர்) திரம்பசந்தோஷம் நிரம்பசந்தோஷம்.

[சூர்ப்பனகை தன்னுள்] பின்னிலும் எனக்கதிகச்சந்தோஷம்.

[வெளிப்படை] அங்ஙனமாயின், கண்மணி பரதா, எழுந்திடலாம், கொழுந்தணற் குழிக்குள் விழுந்திடலாம்.

[பரதர்.] அடி தாபஸீ.

விருத்தம்.

தாபசீகளினகண்பன் சதிர்குலகுரு தீங்கின்றி க்
காவலாய்த்தொன்றுதொட்டுக் காத்தவன்காலமூன்று ம்
மேவிநன்குணர்வோரின் மேலோன்மெய்யருந்ததி சல்லாபன்
பாவனவசிஷ்டர்பாலிப் பரதவாக்கியம் பகர்வா ய்

[சூர்ப்பனகி தன்னுள்.] ஆனந்தத்துடன் ஸரி ஸரி இந்தக்காரணத்தால் எனக்கு தீய்க்குழிப்பாய்தலினின்றும் தப்பித்துக்கொள்ள வழியுண்டாச்சுது.

[வெளிப்படை] என்ன என்ன எப்படி அய்யா.

[பரதர்] அடி தாபசீ இதோ அடியில்வருமாறு யெடுத்துரைத்தல்வேண்டும்.

விருத்தம்.

இன்றுமுதல்மனுவெனத்தாய் முனியேநீவிர் எங்களிராச்சியத்தை இனிதாளவேண்டும், கன்றிழந்தபசுக்களெனக் கதறிடாமற்கண்பார்த் தெந்தாயர்களைக்காத்தல்வேண்டும், நன்றுபெருஞ் செந்தணலிற் மூழ்குவேற்கு நற்கதியுந்திருவாக்கால் நவிலல்வேண்டும், பின்றொடர்வேன்ராமனைச் சத்துருக்னனோடு பெருந்துயருக்காற்றாத பெற்றியாலே. [எல்றே]

[சூர்ப்பனகி தன்னுள்] என்மனோரதம் பலித்ததுப்போலாம்.

[வெளிப்படை] இதனைஅறிவிக்கவேண்டிய தென்னயிருக்கின்றது எல்லாம் அவரே அறிந்துகொள்ளத் தகாததா.

(என தீவலஞ் சுற்றுகின்றனள்.

[சத்துருக்கனன்.] ஆ பரஞ்ஞதினீ ஆரியஸ்ரீ பரதாக்ஞையை குருவிடம் அதிசீக்கிரம் போயறிவிக்கவேண்டும்.

[சூர்ப்பனகி தன்னுள்] இதில் இவர்களது விவசாயம் பெலப்படுத்திவிடப்பட்டது. இனி இதில் நின்றும்விலகார்கள், ஆகையால் யானிங்கிருந்து இது விஷயமாய் செய்யவேண்டுங்காரியம் யாதொன்றுமில்லை.

[வெளிப்படை] உங்களுத்திரவைக் கடக்கல்முடியுமா அதிலுமிப்பேர்க்கொத்த துர்த்தெசையில் உல்லிங்கனஞ் செய்தலுசிதமா.

நன்று நன்று அங்ஙனமே ஆகட்டும், (என்று சென்றனள்.

இருவரும் திவலஞ் சுற்றுகின்றனர்.

திரை (——) விருத்தம்.

தாதைசொற்படியே திவனத்தினிலே தாள்வலித்திட நடந்தேகும்
நாதனைத்தொடர்ந்த சீதையென்குமரி கவிதுயரெப்படிச் சகிப்பாள்
வேதையுற்றிடவெளனத்தவிக்கின்றேன் வெவ்விடிவீழ்ந்திட்டவிதமாய்
பேதையைஅரக்கன் கவர்ந்தனனெனவோர் பேச்சுமுண்டாகுது பெரிதாய்.

அடுத்ததிரை (——)

அடே அடே சிவபூசாதுரந்தர சிகேகிதசிகாமணே இலங்கேசுவரா.

விருத்தம்.

யீசபூசைவிலாசமிக்கவ ராவணேசுவராயாதுகொல் நிர்ச்சங்கையாய்
நேசனென்மகளான சீதையைநீயும் வவ்வினையென் சொல்வேன்
ஹ ஹ கஷ்டங் கஷ்டம் ஆ என்னருமைக்கண்மணியே,
ஆசையென் மகளாருமாற்றிட மவ்வனத்திற் றசமுக
நீசன்வவ்விட நீபுலம்புவைநீடு மென்மனம் நீறுதே.

சத்துருக்கனன் அகவல்.

மான்றிகழ்கண்ணெழில் வாய்ந்தஜானகி
நான்றுகொண்டா ருயிர்நசித்த செய்தியை
ஆன்றவரிவர்கேட் டறிந்திலர்கொல்லோ.

[பரதர்] இங்ஙனம் வந்த இந்தப்பெரியவரிடத்தில் சங்கதியொன்றுஞ் சொல்லாமல் அக்கினியில்ப் பிரவேசித்தலுசிதமன்று.

(என்று வரவையெதிர் பார்த்திருக்கின்றனர்.)

(பிரவேசித்த ஜனகர்.) அகோ அகோ இதுவென்கொல்.

விருத்தம்.

பம்பியபொறிச்சிகை படர்ந்ததீயிதே
தெம்பியினுடன்வல மெழுந்துசுற்றியே
வெம்பியமனத்தனுய் வீழ்பவன்போன்றனன்
நம்பியாம்பரதனும் நாட்டமென்னையே.

[என விறைந்து வந்தனர்]

இருவரும் ஆரிய ஜனகமாமனே வந்தனந்தனம்.

## வெண்பா.

வந்தனமீதை வருஞ்சரமத்திலிடும்
வந்தனமாய்க் கைக்கொள்க மாமனே—செந்தழலில்
யாமிறக்க வெண்ணமுற்றோம் இராக்கதர்வெம்மாயையினல்
ராமலக்குவர் முடிந்தாராம்.

(ஜனகர்) ஆ, கெட்டேன் கெட்டேன் குடிமோசம் போச்சுது அந்தோ அந்தோ நிர்பாக்கியனுனேனே, (என மயங்கி களைப்புற்றனர்)

(இருவரும்) ஆ ஆ, ஆசுவாஸம்பெருவீராக ஆரியரோ ஆசுவாசம் பெருவீராக.

(ஜனகராஜன்) ஆயாசந்தெளிந்து, ஹ ஹ கஷ்டங்கஷ்டம்,

இராகம் ஆனந்தபைரவி தாளம் திரிசிறசாப்பு
அம்பா-நினு-கோரனம்மி நீனி ஜனனீ கம்புகளனே துபதாம்புஜவுலன்
என்ற வர்னமெட்டு.

### பல்லவி.

கால விபரீத மிதோ கன்ம கதியோ
கட்டமிதெலாங் கான்காணவிதியோ

### அநுபல்லவி.

தாலமதிற் சாலவுமென் தன்மங்கள் தவமெலாம்
வேலையிற் காயங்கறைத்தாற் போலாச்சுதேபொல்லாக் (கால)

### சரணங்கள்.

என்னருமைப்பெண்மணிகள் கண்ணுன கண்மணிகள்
கன்னியர் சீதையூர் மிளைக ள்
பன்னுமவர் மங்கிலியப் பாக்கிய சிலாக்கிய ர்
என்னப் பெரியோர் வாக்கியம் யெல்லாம் பொய்யாச்சே யோக்கியம் (கால)

தீரஜய சூரர்களை தீர்க்கையுள் வீரர்க ளை
மாரனைநேர் குமாரர்க ளை
சீருடனிக்கன்னியர்கள் சேரப்பெருவனென் றே
ஆரியருறைத்ததும் அவத்தமாச்சுதே இன்றே (கால)
அந்தோ அந்தோ

### விருத்தம்.

முனிவரர்யாக்ஞவல்க்கர் மொழிந்தருளுபதேசத்தா ல்
மனவுபாதிகளடங்கி மாதிரத்துவம்பெற்றேன்யா ன்
எனினுமோர் பக்கலென்னை இத்துயர்வதைக்குதந் தோ
இனியென்ன அழுகையந்தோ எழுதிட்டபொறிக்கென்செய்வே ன்.

(சத்துருக்கள்) என்தாய் சீதாப்பிராட்டியும் (என்ற சொன்னவே, சோக நீரால் தொண்டை தத்தலிட்டு நின்றனன்).

(ஜனகர்) எப்படி அவளும், போய்விட்டனள் கொல், அங்ஙனமாயின் எனக்குச்சந்தோடந்தான், அங்ஙனமாயினும் என்னிதயம் தவிக்கின்றது,

(சத்துருக்கனன்) ஐயா,, அதிலும் அவள் நான்றுகொண்டுயிர் நசித்‌னளாம்,

(ஜனகர்) ஆ, அடட (கண்ணீர்ப்பெருக்குடன்) என்மகட்கோ இப்படிச்சம்பவித்தது ஆ, கஷ்டங்கஷ்டம்,

### விருத்தம்.

செல்வியென்கண்ணே திகழ்தளவத்தின் சீரரும்பினைநிகர்செவ்வாய்ப்,
பல்வரியொழுங்கும் குருநகையொளியும் பகர்மணிச்சுட்டியும் நுதலு ம்
அல்லெனுங்கூந்தலசைவதும் நின்வதனும்புயம் நினைத்திடில்மனதை க்
கொல்லுகின்றது சோகசந்தாபங்கூறுவதென் னினிக்கோதா ய்

ஆ ஆ கண்மணி என்னருமைப்பெண்மணி ஆ ஜானகி யீதென் கொல் இவ்விதம் நேர்ந்தது

இன்னமும்,

### விருத்தம்,

பணியேலெடுத்த புவிராசருக்கொர் பதியாமெனக்குமிருக ண்
மணிபோலுதித்த மயிலேவனத்து மணவாளனொப்ப நடைகொ ண்
டணிமேவுபத்ம பதம்ஞேவமெத்த வனியாயகிருத்திய நிருத ர்
தணியா திழைத்த துயராலினைத்து தனிநீயிறக்க விதி யோ

சாலேபிறந்தென் மார்பேவளர்ந்து தாழாதிருந்து நிதமு ம்
பாலேஅருந்து வாயாய்வளர்ந்த பாரோகடந்து வனமே ற்
காலேயுருந்த நீயோநடந்து கனிகாயருந்தி யமனை ப்
[illegible]லேவளைந்து நீயார்நெருங்கு போதாவிநீத்தல் விதி யே

மல்ர்மேனடக்க ஙணிஞேபதத்தின் வனமேனடக்க வமுத ம்
பலகால்சுவைத்த பண்வாயிலத்த பலமேசுவைக்க வமை யா
விலமேவுபட்டின் அணிகூர்நசிப்பின் விரிசீனாசுற்ற வம ளி
நிலமேலுறக்க மதுகூர்நிணக்கு நிலமேகிடக்க விதி யோ.

நம்பிக்கையுடன் ஷெ

## விருத்தம்.

சனியாமரக்கர் சிறைமேலிருக்குந் தனியாளறிந்து பரத ன்
பனியாழியொத்த படையோடெதிர்த்து பகையோனைவென்று வர வே
முனிவோடுசெல்ல முயல்வானறிந்து மூவாதுமேவுகளியா ல்
மனமேகுளிர்ந்த தநுவீண்முடிந்த வாரோ தெய்வ கதி யே.

## ஆகையாலிப்போது கலிவிருத்தம்.

தக்கவென்மகடான்பிறந்திட்டதில்
மிக்கவென்மனம் வேகுதென்செய்குவேன்
துக்கவெந்தழற் சூட்டிலுமூட்டுவிவ்
வக்கினிக்கிடங் கார்ந்திடவேண்டுமால்

(பரதர் வசனம்) நான்தான் முதன் முதலிற்றீப்பாயவேண்டியவன் எனெனில் ஜடாவற்கலதாரியாய் ஆரியஸ்ரீ ராகவருடைய ஆகமனத்தை யெதிர்பார்த்திருந்து மனோரதம் பலியாமல் வீணாய்முடிந்தவன் ஆகையால்தான்,

(ஜனகசத்துருக்கனர்) கண்ணீர்ப்பெருக்குடன் ஆ ஆ இவருடைய இம்மொழி அதிகருணமாய்க் கேட்கப்படுகின்றது.

(இசை)

இராகம் பியாகு நோ[illegible]டு ஏகதாளம்.

## பல்லவி

நில்லு நில்லு [illegible]தா நீ சத்திய விரதா

## அநுபல்லவி.

கொல்லுஞ் செந்தணலினி ம
குதிக்க முயன்றிடாதே (நில்லு)

## சரணங்கள்

கொடியதசமுகனை உயிர்ப்படக்கடைந் து
கோதைவைதேகியைத் தானடைந்து ராமன்

படிவர்கள் முனிவர்கள் புகழ்ந்திட ஒருக்காலே
பைம்பொன்விமானத்தேரி வந்தனனுகையாலே (நில்லு)

தெசமுகன் மகனுடல் மலையெனவீ ழ
செருச்செய்த இளவலுஞ் சேனையுஞ்சூழ ராமன்
வசையறுதேவர்கள் மலர்நிறைகொட் டு
மழையுடழிதோவந்தான் பரபரப்பினைவிட்டு (நில்லு)

கருணையில்முழுகிய ஒளிர்முகசோம ன்
கதிர்மறையவன்புகழ் ஆயிரநாமன் மிக
வரிசையாயெவர்களுந் துதிமொழிவின் ள
வந்தான்வந்தானிதோ ஆனந்தமேகொள்ள (நில்லு)

(சத்துருக்கனன்) நோக்கி ஓ இவனுர் கொல் ஓர் வன்னியன்பால் மூழ்குவோர்க்கு ஓர் வன்னியன்பால் மொழிகின்றனன்,

(ஜனகர்) களிப்புடன் அடா அடா குழந்தாய் பரதா அவசரப்படாதே அவசரப்படாதே மங்களவார்த்தை கேட்கப்படுகின்றதன்றே,

(பரதர்) நோக்கி ஆ ஆ இது நம்பத்தக்கதன்று,

## விருத்தம்.

விதனவார்த்தைமுன் புலனறியாது விளக்கினேனெனப்பரதவித்தா ன்
அதனைமாற்றிட வேண்டுமென்றிவ்விதம் அத்தவமடந்தையே நம்பா ல்
சதிர்கொள்வன்னியினுருவமே புனைந்து சார்ந்தனள்சாற்றுவதனிச ம்
இதனையான்நம்பி யிருக்கொணுதைய எனக்குமப்பாக்கியமே தே.

ஆசையாலிது நம்பத்தக்கதன்று என விறைவாய் அக்கினிவலஞ்சுற்றுகின்றனன்

(வெடுக்கென்று திண்ணையினை ஒதுக்கிக்கொண்டு) அவசரமாய் வன்னியுருவத்தனுன அனுமார் பிரவேசித்து [ஆ ஆ பரதா பரதா வேண்டாம் வேண்டாம் இதுவென்கொல் குடிகேட்டினைப் புரிகின்றுய் நில்லு நில்லென [விரைந்தோடிவந்திருகரங்களைப் பிடித்துத் தடுத்து நிறுத்திக்கொண்டு] பரதா கேட்கக்கடவாய்,

## விருத்தம்.

மாவலவரக்கர்படைத்தலைப்பிரகஸ்தன் மருவுயிர்நிலனைவதைத்தா ன்
தாவருமிந்த்ரஜித்தனுருடலைத் தரணியிலிலக்குவன்சதைத்தா ன்
ராவண தம்பகர்ன்னனைவதைத்த ராகவன்செயத்திருதன் னே
மேவியதென்னச்சனகிபை அடைந்து விரைவுடன்வந்தனன்மெய் யே.

[வசனம்] ஆகையால் பரதா சீதாலக்ஷ்மணஸமேதரான இராமபிரானு டைய நல்வரவில் நின்றுண்டாகின்ற திவ்வியானந்தப்பெருக்கை அனுபவீ க்கப்போகின்றாய் பரதா அவசரப்படாதே

(பரதர் வசனம்) ஆஆ அந்தோ அந்தோ இதுவென்கொல் அசம்பாவிதம் மகா மாயாரணஉயுத்தப் பிரசித்தர்களான இராக்கதக்கடலை வற்றடித்து இராமர் திரும்பவும் வருதலென்றால் எங்ஙனங்கூடும் ஏதேது

(அனுமார்) ஆ பரதா தெய்வபலங்கொண்ட இராமபிரானிடத்தில் அரக் களின் மாயாபலமென்செய்யும் [யெப்படியெனிற் செப்புகின்றேன் கேள்

## கட்டளைக்கலிப்பா.

கபடவஞ்சனையேயுருவானவன் கண்டம்பத்துளகண்டகன்றன்மக ன்
தவதனர்க்குச்சுரர்க்கினற்செய்பவன் சதிதருமிந்த்ரசித்தெனும்ராக்கத ன்
புவனவீரம்புங்கவர்தங்கள்பால் போரில்மிக்கமெலிந்துமுதற்சம ர்
றுவல்புஜங்கமயச்சரமேவிட நொடியிற்பொன்றினர்போலுமயங்கின ர்.

(சத்துருக்கனன்) ஆ ஸரி ஸரி இதனால்தான் பிறரார்க்கேள்விகொ ண்ட அந்தத்தாபசீ அடிமூலந்தெரியாமல் நம்பால்வந்தவ்விதம்உரைத்தனளெ ன்றே நினைக்கின்றேன்

(பரதர்) அப்பால்மேற்சொல்லுங்காணும்

## விருத்தம்.

அதன்பிறகுயுத்தந்தன்னி லவ்விருத்திரனைக்கொன் ற
சதமகனேவலாலேதார்க்ஷிகன் சடுதிசார்ந்தா ன்

(பரதர்) தம்பி சத்துருக்கனை குலகுருவசிஷ்டரால் கூறப்பட்டதென்று ரைத்தனையன்றோ அதற்கு ஒத்திருக்கின்றது

(அனுமார்) ஷை விருத்தத்துடர்

கதியுடன்வறவில்பாம்பின் கட்டொழிந்திடத்தெளிந் து
குதிகொண்டுசமரில்வென்றி கொண்டனர்ரகுகுலத்தா ர்

(சத்துருக்கனன்) ஸரி ஸரி பின்னே எப்படியாகும் ஸாக்ஷாத்கருட பகவானேவந்துவிட்டாரென்றால் ஸர்ப்பமயங்களானசரங்களுஜ்ஜீவிக்குமா,

(பரதர்) ஸந்தோஷத்துடன் அடே தம்பி சத்துருக்கனை

## கொச்சகம்.

இந்திரஜெனோர்காரியத்தை எண்ணியிருக்கின்றானெ ன்
றந்தாரசொற்கேட்ட தென்றேன்அக்காரியமரிந்தே ன்

சந்ததமுஞ்சொந்தனைசெய் தசகண்டன்றன்னுயிரை
சுந்தரவிராகவராற் சூறைகொள்ளவேண்டுமென்

(தம்பி சத்துருக்கனா அதனால்தான் ஆரியஸ்ரீ ராகவருடையராக்ஞையின் பொருட்டு இந்திரனால்·பக்ஷிராஜனை அதிவிரைவில் அனுப்பிவைக்கலாச்சுது

(ஜனகர்) அத்தியானந்தபரிதனாய்

விருத்தம்.

எமதுசோகம்மாற்றிவைத்தீர் இறந்தெங்கட்குயிரளித்தீர்
உமதுதிருப்பேரொடுத்துரைப்பீர் ஒளியாதோங்கும்வன்னிய

(அனுமார்)

சுமதிசுக்ரீவர்க்கமைச்சன் தூயவளியின்சுதனனுமா
அமர்செய்ராவணாந்தகன்றன் ஆக்ஞைப்படியிங்குற்றனன்யா

(ஜனகர்) சந்தோடத்துடன்.

அகவல்.

எற்குக்குருவரார் யாக்ஞியவல்க்கர்தாம்
நற்குருஅவற்கோர் ஞாயிருஅவனுழி
கற்றனையாகுமால் கருதுசற்குருவாய்
நற்றவனீயுமால் கான்றெழும்நண்பனே.

(சத்துருக்கனன்) வியப்புடன்] [வசனம்] இலங்கைச்சண்டையில் சேனைப்பெருக்குடனெல்லாமந்திரிகளுடனும் சுக்ரீவன் அரக்கராலதஞ்செய்யப்பெற்றானென்று பர்ணதினியென்னுந்தாபசி பகர்ந்தனளன்றோ அங்ஙனமிருக்க அனுமாரென்பவர் உயிரோடிருப்பதெங்ஙனம்.

(அனுமார்) அவளார்கொல்பர்ணதினியென்னுந்தாபசி, அவள்ஆர்கொல்

(சத்துருக்கனன்) யாதாமொருத்தி சுக்ரீவாதிகளுக்குச் சுகிர்த்தாய் ரிசியமூககிரியில் வசிக்கின்றவளோ, அவளேயாம்

(அனுமார்) தன்னுள்

அகவல்.

இப்படியொருத்தியு மில்லையங்ஙனமே
அப்படியிருக்கத் தப்புணர்த்தவரார். (சற்றேலோசித்து)
பாதகிஅரக்கிசூர்ப் பனகையாமிவளே
நீதிசம்பாதியும் நிகழ்த்தினான்றே

கொடியராவணனுங் கும்பகர்னனுமே
மடிந்ததிலிலங்கை மாராச்சியத்தை
வள்ளல்விபீஷணன் வகித்ததிலுந்தான்
துள்ளித்துடிக்கின்ற சோகமனத்தினள்
சகிக்கமாட்டாமற் றளம்புருளென்றார்
ஆதலாலவளே அழுக்காறுகொண்டு
சாதுவாந்தவசி போலெதிர்சார்ந்து
பரதசத்துருக்னரைப் பரிந்துயிர்மாய்க்க
கருதினளென்றே கருத்தோர்கின்றேன்.

* (வெளிப்படை) விருத்தம்.

அவடசக்கிரீவன்றங்கை அரக்கிசூர்ப்பனகையாகு ம்
குவிபுயவரக்கர்வேந்தைக் கொன்றிட்டரகுவீரர்மே ல்
தவிமனப்பொருண்மையோடும் தவமடநல்லாள்போலு ம்
கவடமாயுமைச்சதிக்கக் கருதிவந்தனளாங்கண்டீ ர்.

(பரதர்) ஆம் ஆம் அப்படியிருக்கலாம். அவளே தான் புலத்திய குலத்திற்சனித்தவளென்று புகன்றனளன்றோ ஆகையால் இவ்வுரை பொருத்தமாகத்தானிருக்கின்றது

(அனுமார்) தென்றிசையைநோக்கி] [வசனம்] ஓ பரதா சத்துருக்னா இங்ஙனம் நோக்குக, நோக்குக, கொடுங்கோலரக்கர் குலசக்ரவர்த்தியாம் இலங்கேசுரனைக் கூற்றுலகேற்றிவைத்த ஜயதுங்க சிங்க ஸ்ரீ ராமச்சந்திரன் சீதாலக்ஷ்மணசமேதராய் பரிஜனங்களுடன் புட்பகாரூடராய் மேகமண்டலமார்க்கமாய் இதோ சமீபத்திற்றென்படுகின்றனர்

ஓ பரதா இதோ திவ்வியதெரிசனம்காண்க.

இராகம் கல்யாணி ரூபகதாளம்.

பல்லவி

பாரும் பாரும் ராமதெரிசனம் ஸாமியிதோ (பாரும்)

அநுபல்லவி

சீருலாவுந் தெக்கணந்தனில்,
திரமையுற்ற-பெருமைபெற்ற
விரதசத்திய பரதஉற்றுப் (பாரும்)

சரணங்கள்

வாரிதிரண்டொரு வானதுவோ வல்ல
மரகதமோருடல் வாய்த்ததுவோ நல்ல
காரிருள்ம்மகடைங் காட்டியதோ மல்லல்
காயாவேகாயமெ டுத்ததுவோ சொல்லக்
கழியாவதி, அழகானது, விழைவ்வாயெதிர், யெழல்கூரிவர் (பாரும்)

ஆடவருமிக வாசைகொள் தோள்வரை
அகலிகைசாபமகற்றிய தாண்மலை
பீடுறுமார்பகம் பேசிடுநீள்தலை
பிசகிவர்க்கோரிணை மதனென்றகோளுரை
பிடியாமெனும், நடையாளொடு, அடல்கூர்படை யுடையார்வரல் (பாரும்)

[எல்லவரும் வியப்புடன் நோக்குகின்றனர்]

(அனுமார்) நன்று நன்று பரதா இதோ நந்திக்கிராமத்தின் உபவனத்தை நோக்குக

சந்தவிருத்தம்

பரதபாருனதமையனொ டெழுபடைகளாகிய வானரம்
கரடிமேலுயர் தருவிலேறியொர் தருவிலேகுதிகாடடலால்
தரையினேடியர் தொடுவதாகிய தளிர்கொள்கானின சாமியின்
வரவுகாணலும் மகிழ்வினேடவை நடனமாடுவ மானுமே

(ஜனகர்) சந்தோடத்துடன் [வசனம்] ஆ நந்திக்கிராமத்தில்சூழ்ந்தை சீதாதேவியினல் அலங்கிருதஞ்செய்யப்பெற்ற வாமபாகத்துடன் இலக்குவனுடன் பரிசனங்களுடன் கண்மணி இராமபத்திரன் விமானத்தினின்றும் இறங்குகின்றனன்

(பரதர்) நோக்கி அத்தியானந்த பரிதனாய்

சந்தவிருத்தம்

வடவரைவளைத்தபசு பதிவிழிபெறிக்கறிய் மதனனைநிகர்த்த மனைநேர்
தடமலியருட்கண்ணே கருமுகிலெனத்துதிகொ டனுவனைவிரித்தநரையோர்
அடைவொடுமிகப்புகழும் அருமைகொளெனக்கண்ணே அளவிலதிகூதத வெகுநாள்
இடைபிரிதலுற்றபின்ர் இதுததிகணுற்றநல இனியசுதைபுக்கினனரோ.

[சத்துருக்னன்] ஆனந்தத்துடன்.

வெண்பா.

இன்னதுறமென்றும் இன்னதுறவென்றும்வினைக்
கன்மபலன்யாரெங்கன் காண்பவரே—வன்மைமிகு
கொல்லனலிற்மூழ்கக் குறிகொண்டெழுந்துநின்றோம்
சல்லமுந்தமூழ்கின மின்னுன்.

[அப்பால்] மேற்குறித்தபடி சீதா லக்ஷ்மண பரிசன சமேதரான இராமர் பிரவேசிக்கின்றனர்.

[இராமர்] சகி பிராணசார்ந்தே அடி ஜானகி, நூறு யோஜனை சேதுவைத் தாண்டி மகேந்திரகிரி, பிரசிரவணகிரி இதுகளைத்தாண்டி, விஸ்தார விந்தியாடவியும் தாண்டி, அதியுன்னத சித்திரிகூடத்திற்கு மேல்வழியாய் அதிவேகமாய் இந்தப் புட்பகத்தால் நமது நந்திகிராமம் வந்து சேர்ந்தோம்.

இன்னமும்,

கொச்சகம்.

கோகிலமேகோமளமே கோதையேகொம்பரன்னாய்
சாகரத்தைப்போற்கவிரா கூதர்சண்டைதான்கடந்து
தாகமொடுஜானகியாய் தையலுனையடைந்து
வேகமொடுவொந்தகர் மேவிவந்தேன்மெல்லியலே.

(இலக்குவன்) அண்ணா, எதிர்நோக்குக நோக்குக ஆரியரான ஜனகராஜனென்ன தம்பி சத்துருக்கனென்ன இவர்களுடன் என் அண்ணா பரதர் இதோ எதிர்கொண்டு வருகின்றனர் இந்தப்பரதர்

விருத்தம்.

சிரத்தினிற்சடைவளர்த்து சிறப்பிலாச்சிரந்தன்னை
அரைத்தலந்தனில்வகித்தும் அருந்தவத்தாலிளைத்தும்
பருத்ததோளும்மைக்காணுப் பாரசோகஞ்சரீரந்
தரித்தெதிர்சார்ந்தாலென்னைத் தழைக்கின்றார்பரதர்சாமி.

(இராமர்) ஆம் ஆம் அப்படியே, ஆயினும்

விருத்தம்.

கொண்டானமொழிகண்டானைக் கொடியோனெனமுன்னம்
உண்டானவென்றுயர்தீர்ந்தன உசிதப்பலவினையால்

இண்டோள்பரதன்செல்வம நிகழ்ந்தென்னிமித்தத்தில்
புண்டான்கொளஅத்துக்கமிப் பொழுதேகழிந்ததுவே.

(பரதர்) கிட்டவணுகி

சந்தவிருத்தம்.

அனகசத்தியதசரதப்ரிய அதுலமுக்கிய ஜானகீ
மனவஅர்ப்புத விசயபத்தர்கள் வாதகிட்கள ராமனே
தினமளப்பறு வருடமெத்தனே தெரிசனத்தினி லாவலாய்
நனிகொளத்திசை அதில்விழிப்பனுன் நறுமலர்க்கு நமோநம.

(என ஆனந்தப்பெருக்குடன்) வணங்கினர்

(இராமர்) சினேகவானத்தத்துடன் கைகளினல் இருகத்தழுவிக்கொண்டார்

(இராமர் பரதர் இருவரும் தன்னுள்)

வெண்பா.

கர்ப்பூரவாவி கலந்துகுளித்தாற்போல்
இப்போதுடற்குளிர்ச்சி யெய்தியதே—செப்பியகை
யாலிங்கனங்கட்டி யாசையுடன்றழுவி
யாலிங்கனஞ்செய்ததால்.

(இராமர் வெளிப்படை) ஆ, ஆ என்னருமைப்பிறப்பே அடா கண்மணி பரதா தெய்வாதீனமாய்க் காணக்கிடைத்தனே.

(பரதர் வெளிப்படை) வசனம்.

அண்ணா இரகுகுலோத்துங்கராமவிபோ, அந்த தெய்வாதீனத்தாலே தான் பரதவித்துக்கொண்டிருந்த தமியேனைக் கிருதார்த்தனுய்ச்செய்யும்பொருட்டு இங்ஙனம் கருணை கூர்ந்து தேவரீர் பிராப்தமானதுவுமே.

இராமருக்கும் பரதருக்கும் இலக்குவனும் சத்துருக்கனனும் வந்தனம் சமர்ப்பித்து ஆசீர்வாதத்தைப்பெற்றிருந்தனர்.

(இராமர் ஜனகராஜனிடம் கிட்டவணுகி,

வெண்பா.

மதிகுலத்து மன்னவனே மாமனேவாகு
துதிமிகுந்தராசமுகத் தூயோய்—சதிர்படைத்த
செந்தேன்பெருகுமலர்ச் சீரடிக்கிறைஞ்சிடுவேன்
வந்தேன்தயரதராமன்.

## இலக்குவன் வெண்பா.

ஞானிகளுமன்பாக நாளும்புகழ்ந்திடவே
தானுற்றுணர்ந்த ஜனகேந்த்ரா—பாநு
குலக்குரிசில்பின்சென்று கூடத்திரும்பி
இலக்குவன்வந்தேன் பணிகின்றேன்.

(ஜானகி) தாதா உமதுதாட்டாமரைகளிற்ஜானகி நமஸ்கரிக்கின்றேன்

(ஜனகர்) உசிதப்படி ஆசிகளுரைத்து (பின்னர் இராமனைநோக்கி) அத்தியானந்தபரிதனுய் சந்தோஷப்பிரவாகத்திற் றெண்ணடை தத்தளித்து) அட கண்மணி இராமபத்திரா, திரிபுவன கண்டகனுன இலகேசுவரனைச் செயித்த வீரசூரப்பிரதாப இரகுகுலோத்துங்கஜயசிங்கஸ்ரீராமசந்திரா,

## விருத்தம்.

கந்தெசவரக்கர்ச்செற்றேய் காகுத்தராமாவீர ப்
பந்தயப்பொருளாய்நின்ற பாவையெக்காரணத்தி ற்
சந்தமாய்மணம்புரிந்தாய் சதிர்பெருமறுப்பின்வந் த
சந்ததியானுய்அலைதிற் றக்கதாய்நடந்துகொள் ளே.

(இராமர்) வினயத்தொடு, அஞ்சலிசெய்துகொண்டு.

இராகம் தருவார். சாப்புதாளம்.

## பல்லவி.

உமதுகிருபையுந் தேவ ருதவியுமல்லாமல் ஒன்றுமென்னுவில்லையே.

## அநுபல்லவி.

மமதையகந்தைமுதல் மனமாயையொழித்த
மானுபாவஜனக மாமனேபிரமவித்தாம் [உமது]

## சரணங்கள்.

வரமோ உரமோஅந்த வல்லரக்கன்றிற மோ
வரிசையாய்த்திரள் படைசமுத்திர மோ
வருதல்போதல்தெரியா தெண்ணற்றசர மோ
மாயாஜாலப்பிரதாபம் வழுத்தவுந்தர மோ
வானராதிபன் சிநேகங்கிடைத்தது ம்
நானரக்கரைத் தான்முடித்தது ம். [உமது]

அவ்வரக்கன்கொழுத்த அதிபலிவிட்டனனாலு ம்
அதர்மமேகுடிகொண் டக்கிரமஞ்செய்ததாலு ம்
செவ்வையாயென்னிடம் முனிவரர்மென்மேலு ம்
செய்யுமாசிர்வாதத் தின்பலத்தினாலு ம்
செயங்கிடைத்ததுஞ் சிறைவிடுத்தது ம்
நயமிகுத்தனன் னகரடுத்தது ம். [உமது]

[அப்பால்] கௌசிகர் பிரவேசிக்கின்றனர்.

[கௌசிகர்] தன்னுள். தேவர்களாலாக்ஞை செய்யப்பெற்ற காரியம் இன்றெனக்குச் சபலமாக முடிந்தது. அதாவது கொடிய ராக்கதன் இராவணனை, இரகுராமனாற் கொல்லுவிக்க வேண்டுமென்பதுவே.

[அங்ஙனமே, சமாதியில் ஞானத்திருக்குணால் கண்கறியலாயிற்று.]

அங்ஙனமன்றோ தேவர்களெனக் காக்ஞை கொடுத்திருக்கின்றனர்.

[எங்ஙனமெனில்]

விருத்தம்.

எப்படிராம னிடத்தில்வெம்பகைதன் னினசனத்தினை மடித்திட வே
மைப்படிவண்ண ராவணன்றனக்கு வருங்கொலெப்படிப் பொருதலி லே
செப்பிலங்கேசன் றனைக்கொல்லவல்ல திரமைபோதுங்கொல் ராமனுக் கே
அப்படிக்கனைத்த வத்திரமருளி யனுக்கிரகஞ் செய்யெனவன் றோ.

என நடக்கின்றனர்.

[இராமர்] கண்மலர்பரப்பி கிட்டவணுகி.

வெண்பா.

மாமந்திரமருளி வாளிகளுந்தந்துதவி
க்ஷேமம்அளித்தாண்ட தேசிகரே——ராமன்
தவமிகுத்தகௌசிகரே சாஷ்டாங்கமாகத்
துவநும்பதங்க டொழுவேன்.

[கௌசிகர்] கண்மணி ராமபத்திரா, ஜயாவிஜயீபவ, நீடூழி வாழ்க. நின்னது மனோபீஷ்டம் யாவும் நிர்விகாதமாய் நிறைவேறுக.

மற்றவரும் கௌசிகரை வணங்கினார்கள். அம்முனிவரும் அவர்கட்கெப்படியெப்படி யுசிதமோ, அப்படி அப்படி உபசரித்தனர்.

[கௌசிகர்] இராமனுக்குச் சொல் கண்மணி! ராயபத்திரா.

# ஜானகிபரிணய நாடகம்.

## வெண்பா.

உன்னைப்போலுத்தமனு முண்டோபுவிமீதே.
என்னைப்போல்மற்று மிருடியனா—முன்ன
விதிமுதல்வனைப்புரந்தாய் மேல்யாவுங்காத்தாய்
சதியரக்கனைக் கடிந்ததால்.

[இராமர்] பகவன்,

## வெண்பா.

பந்தயங்கெலித்ததுவும் பாரவனந்தனிலே
சந்ததஞ்சுக்ரீவநட்புச் சார்ந்ததுவும்—தொந்தரைசெய்
பொல்லாநிசிசரனைப் போரிற்செயித்ததுவும்
எல்லாமுமதருளே யாம்.

[பரதர்] பகவன் குசிகநந்தனரே தாங்கள் முதல்வரான மஹான்களா லே, இவ்விடத்திற்றானே ஆரிய ஸ்ரீ ராகவருக்கு மகுடாபிஷேகஞ் செய்து வைத்து அயோத்தியில் பட்டணப்பிரவேசஞ்செய்துவைக்கவேண்டுமென்று விரும்புகின்றனன்.

[ஜனகர்] அகோவகோ, இராமபட்டாபிடேகத்திலாதுரங் கொண்ட கண்மணி பரதனுக்கு சற்றேனுந் தாமதித்தலிற் சம்மதமில்லை, நன்று, நன்று

(அனுமார்) ஒ, பரதராஜனே இவர்கள் சுக்ரீவ விபூஷணுதியர், இவர்கள் நமது ஆரிய ஸ்ரீராமச்சந்திரர்க்கு அத்தியந்தம் ஆப்த சினேகிதர்களேயாம்

[பரதர் நன்று நன்று கிரம்பசந்தோஷம்]

[அனுமார்]யானே மூன்று வானர வீரருடன் நான்குசமுத்திரங்களினின்றும் புண்ணியதீர்த்தங்கொண்டுவரச் செல்கின்றேன் (எனச்சென்றனன்)

[ஜனகர்] அடாகுழந்தாய் சத்துருக்கனு இராமபட்டாபிஷேகமகோத்சபத்திற்காக ஸமஸ்த்தமான பிராமணார்களையும் நங்குலகுருவாகிய வசிஷ்டாமுதலிய முனீசுவரர்களையும் மந்திரிகள் முதலானஎல்லார்களையும் வரவழைத்தல்வேண்டும்.

[சத்துருக்கனர்] நல்லதென்று சென்றனன்.

[சீதை] தனஹுள் இலங்கேசுவரவிஜயியான என்வரிசைமணாளர்க்கு இவ்விராச்சியபட்டாபிஷேகம என்று அததியானந்தம் அடைகின்றதென் னிதையம்.

# எ-வது அங்கம்.

[இசை] ——

## ஆசிரியவிருத்தம்.

கண்டகமகாகொடிய தசகண்டனைச்சமர் கடிந்துலகனைத்துநித்தங்
காத்திடுரகோத்தம சிலாக்கியவானுனைஇக் காகுத்தராமனுக்கு
மண்டலமெலாம்புகழ் பட்டாபிடேகதினம் வந்திட்டதிந்தநேரம்
மன்னுமங்களவேதி மின்னுகின்றனபேரி வாத்தியமுழங்கின்றன
ஒண்டவளசாமரங் கொண்டிலங்கின்றன ரொண்டொடியரிருபாலினும்
ஒருகுடையுமங்குவந் தூற்றதுதகக்கலச மோங்குகின்றனவொழுங்காய்
தண்டுமுமஞ்சரிட் டதிகந்தபுட்பங்க டாமபூலமுந்தயார்தான்
சாற்றமு ... டமிட் டங்கயமிலங்குது சதிர்முகூர்த்தமும்வாய்த்ததே.

[... ] ... வசிஷ்டபாகவானது வாக்கியங்களோ, நன்று நன்று நிரப்ப சந்தோஷம்

[சத்துருக்கனன்] பிரவேசித்து இராமனைக்குறித்து ஸமஸ்த ஸாமக்கிரிகளுடன் எல்லவருமவந்திட்டார்கள்,

(அப்பால் வசிஷ்டர் பிரவேசிக்கின்றனர் [வசிஷ்டர்] ஓ ஓ கௌசிகரே இந்த இரத்தினசுசிதசிங்காதனத்தில் சீதாசமேதனான ஸ்ரீராமச்சந்திரனை வீற்றிருக்கச்செய்து மகான்களான மற்றமுள்ள முனிசிரேஷ்டர்களோடு இந்தசுபமுகூர்த்தத்திற் பட்டாபிஷேகஞ்செய்வோம் வாருங்கள் வாருங்கள் முனீச்சுவரர்களே.

[கௌசிகர் அப்படியேசெய்வோம் வாருங்கள் வாருங்கள்

[ஜனகர்] ஆ நன்று நன்று இராமபட்டாபிஷேகமகோற்சபம் நன்று நன்று நிரப்ப சந்தோஷம்.

## விருத்தம்.

என்மகளாம்ஜானகிமணாள னெழிலபிராமனிரவிகுலரகுராமனே
பொன்மகுடம்புனைந்திட்ட பட்டாபிடேகசுபம்பூர்ணமாகி
நன்மணியாரங்களொடு பட்டுப்பட்டாவளிக ளுட்டிலுள்ள
தன்மவந்தணர்முதல்வர் சகலருமபெற்றகமகிழ்ந்து தாஞ்செல்கின்றார்

ஆ ஆகாயத்தினின்றுந் தேவர்கள் துந்துபிவாத்திய கோஷிப்புடன்

# ஜானகிபரிணயநாடகம்

சுரநாரிகளின் நடன நாட்டிய விசேடங்களுடன் புட்பமாரி பொழிகின்ற னர் சொல், ஆ நன்று நன்று நிரம்ப சந்தோஷம் நிரம்பசந்தோஷம்,

[கௌசிகர்] கண்மணி இராமபத்திரா இன்னமும் நினக்கு எது எது அபீஷ்டங்களோ அவையெலாம்பெறக்கடவாய்

[இராமர்] சரணஞ்சரணம் முனிநாதரோ

## விருத்தம்.

பகவனுமதருளால் நிர்விக்கினமாகப் பார்புகழுஞ்ஜானகி பரிணய ந்தான், புகழொடுஸம்பூர்னமதாய்ப் பொருந்தப்பெற்றேன் பொருபடை யோடிராவணனைப் போரில்மாய்த்தே, அகமகிழ்வாய்க்காதலியைத் திரும் பக்கொண்டேன் அவ்வழிபார்த்திருந்த பரதனைக்கண்ணுற்றேன், மகுடா பிடேகமுடனரசும்பெற்றேன் மற்றென்கொலொருகுறையு மில்லைமாதோ.

[வசனம்] சரணஞ்சரணமுனிநாதரோ உமது அநுக்கிரக விசேஷத்தி னல் யாதொரு குறைவுமில்லாமல் மங்களகரமாக ஜானகிபரிணயத்தை ஸம் பூரணஞ்செய்யப்பெற்றேன் அன்றியும் மகத்தான சத்துருஜயமும் பெற்று அழியாதகீர்த்தியுடன் ஸகலபாக்கியங்களும் வரிசைகளும்பெற்று அத்தியா னந்த குதூகுலனய்க்களிப்புற்றிருக்கின்றேன், [கௌசிகர்] நன்று நன்று நிரம்பசந்தோஷம்.

[அப்பால்] பரதவாக்கியம் மங்களவாழ்த்து.

## ஆசிரியவிருத்தம்.

சதிருள்ளமட்டுமுடி பதியுள்ளமட்டிலுங்
காவலர்கள் வையகத்தைக்
கணமானமனுமொழி கடக்காதுகேளுறைகள்
காதினிற் கொள்ளாமலே
சதிருடன்காத்தினிது வாழ்கவின்னுடகத்
தமிழ்ஜானகி பரிணயம்
ஸரஸகவிவாணர்கள் புகழ்ந்துகொண்டாடிடச்
சந்ததம் வாழ்கவாழ்க

திருமகளுடன் மைந்தனைத் திருவவதரித்தந்த

சுருதிகட் கெட்டாத்தனிச்

சோதியாம்ஸ்ரீராம பக்திமறவாதமெய்த்

தொண்டருட் சிரேஷ்டராக

இதமுறச்சகலசம்பன்னராயிந் நூல்

இயற்றியருள் முத்துசப்ப

இன்னமுதகவிவலோ ரினியமொழிகேட்பவாக

எல்லாருமே வாழ்கவாழ்க.

ஏழாவதங்கம் முற்றிற்று.

---

ஜானகிபரிணைய நாடகம் முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ ராமஜெயம்